# திருவிளையாடற் புராணம்

## (மதுரைக் காண்டம்)



அருள்மிகு மீனாட்சி சுந்தரர் திருக்கோயில் வெளியீடு, மதுரை.

உ
சிவமயம்

# திருவிளையாடற் புராணம்

## மதுரைக் காண்டம்

ஆசிரியர் :

பரஞ்சோதி முனிவர்

பதிப்பாசிரியர் :

"தமிழ்க்கடல்" "சிவமணி" "சிவம்பெருக்கும் சீலர்"
"வண்கவி வள்ளல்"

இராய. சொ.

குறிப்புரையுடன்

வெளியீடு :

மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில்

மதுரை

பிரமாதீச மார்கழி 2

17—12—1973

# மீனாட்சி திருமணம்



அத்தலை நின்ற மாயோன்
ஆதி,செங் கரத்து நங்கை
கைத்தலம் கமலப் போது
பூத்ததோர் காந்தள் ஒப்ப
வைத்து,அரு மனுவாய் ஓத,
கரகநீர் மாரி பெய்தான்;
தொத்தலர் கண்ணி விண்ணோர்
தொழுது,பூ மாரி பெய்தார்.

# பொருளடக்கம்

உ

சிவமயம்

# திருவிளையாடற் புராணம்

## மதுரைக் காண்டம்

## பதிப்புரை

### தமிழ்க்கடல், சிவமணி. இராய. சொ.

அதிர்விடைக் கொடிஅம் கயல்கொடி யாக,
அராக்கலன் பொற்கலன் ஆக,
பொதிஅவிழ் கடுக்கை வேம்புஅலர் ஆக,
புலிஅதள் பொலந்துகில் ஆக,
மதிமுடி, வயிர மணிமுடி, ஆக,
மறைகிடந்து அலம்புமா மதுரைப்
பதியுறை சோம சுந்தரக் கடவுள்,
பாண்டியன் ஆகிவீற்று இருந்தான்.

திருவிளையாடற் புராணம் மதுரை நகரத்தின் சிறப்பைப் பற்றிக் கூறுவது. இறைவன் எழுந்தருளி இருக்கின்ற திருத்தலங்கள் பல வற்றிற்குத் தல புராணங்கள் உண்டு. அவை எல்லாம் அந்தந்தத் தலத்தின் பெயராலேயே விளங்கப் பெறுகின்றன. அம் முறையில் இதனை, மதுரைத் தல புராணம் என்றே வழங்குதல் வேண்டும். அவ்வாறின்றி, திருவிளையாடற் புராணம் என்ற பெயரால் இப் புராணம் விளங்குகின்றது.

சிவபெருமான் நிகழ்த்திய மதுரையோடு தொடர்பு கொண்ட அறுபத்து நான்கு திருவிளையாடல்களை இப் புராணம் பேசுகின்றது. ஏனைய தல புராணங்களோடு வைத்து எண்ணப்பெறுமல் இப் புராணத்தின் தனிச்சிறப்பை உணர்த்தவே இது இப்பெயர்பெற்றது. தல புராணங்கள் எண்ணற்றன இருக்கின்றன. திருவிளையாடலுக்கு இணையான தல புராணம் மற்றொன்று இல்லை என்பது தேற்றம்.

பெரிய புராணம் வரலாற்று நூல். அதற்குப் பெயர் புராணம் என்பதற்காக, அதைத் தல புராண வரிசையில் சேர்க்கக் கூடாது.

பெரிய புராணம் காவிய வரிசையில் சேர்க்கத் தக்கது. இவ்வுலகில் புகழொடு வாழ்ந்து செயற்கருஞ் செயல்செய்த சிவனடியார் வரலாறு கூறுவது பெரிய புராணம். பெரிய புராணம் அடியார்கள் திறங்கூறு வதில் ஈடுஇணை இல்லாதது. அந்நூல் முழுதும் தெய்வம் மணக்கும் செய்யுட்களால் ஆனது. எனவே, அதற்கு ஒப்பற்ற தனி இடத்தைக் கொடுத்துவிட்டுப் பார்க்கும்போது, திருவிளையாடல் முதல்இடம் பெறுகின்றது.

சிற்சில இடங்களில் திருவிளையாடல் ஆசிரியர் சேக்கிழார் அடி களையும் மீறிப்பாடுகின்றார் என்று சொல்லத் தோன்று கின்றது. திருவிளையாடலின் ஆசிரியர் பரஞ்சோதி முனிவர் என்னும் துறவி. அப்பெரியார் மறைக்காட்டிலே பிறந்தவர். மதுரைமா நகரில் பல காலம் வாழ்ந்து சொக்கலிங்கக் கடவுளையும் மீனாட்சி அம்மையையும் வாய்கொள்ளாமல் பாடிப் பேறு பெற்றார். அவர் வாழ்ந்த காலம் இற்றைக்கு முந்நூற்று ஐம்பது ஆண்டுகட்டு முன் என்று காலக் கணக்கர் கூறுவர்.

திருவிளையாடற் புராணத்தைத் தவிர இவ் ஆசிரியர் மதுரைப் பதிற்றுப் பத்தந்தாதி, திருவிளையாடல் போற்றிக் கலிவெண்பா முதலிய நூல்களும் செய்திருக்கின்றார். இப் புலவர் பெருமான் ஆலவாய் அண்ணலிடத்துக் கொண்ட ஈடுபாட்டைக் காட்டப் பதிற் றுப் பத்தந்தாதியில் ஒரு பாடலை இங்கே தருகின்றேன்.

சொக்கர் உண்டு துணைஎன்று இராய்,அவர்
பக்கல் அன்பு பழுத்ததுஎன்று ஓர்கிலாய்,
மக்கள் என்றும் மனைஎன்றும் வாழ்வென்றும்
ஒக்கல் என்றும் உருகும்என் நெஞ்சமே.

இது மனத்தைப் பார்த்து மொழியும் பாடல். "பக்கல் அன்பு" என்பது அங்கயற்கண்அம்மையை. இவ்வாசிரியரின் வேறு நூலினின்றும் ஓர் அரிய பாடலை இங்கு நினைவுப்படுத்தினேன்.

திருவிளையாடற் புராணம் மூன்று காண்டங்களை உடையது. மொத்தப் பாடல் 3363. இம் மதுரைக் காண்டத்தின் பாடல்தொகை 1306. மதுரைக் காண்டத்தில் 18 திருவிளையாடல்கள் வந்திருக்கின் றன. கடவுள் வாழ்த்து, நாடு, நகரம், தலம் முதலியவற்றின் சிறப்பு ஆகியவற்றைத் தித்திக்கும் செந்தமிழில் பாடிய பாக்கள் நூல் முகப்பை அலங்கரிக்கின்றன.

மதுரை மாநகர் தொன்று தொட்டுப் பெரும் சிறப்புடையது. திருஞான சம்பந்தப் பெருமான் மதுரைத் தலத்துக்கு ஒன்பது தேவாரப் பதிகங்கள் பாடினார். அவருடைய வரலாற்றோடு மதுரை நகரம் தொடர்பு கொண்டது. திருநாவுக்கரசு அடிகள் மதுரைத் திருத்தலத்துக்கு இரண்டு தேவாரப் பதிகங்கள் பாடியிருக்கிறார். சுந்தரமூர்த்தி சுவாமிகளும் மதுரைக்குத் தேவாரம் பாடிஇருக்கத் தான் வேண்டும். மதுரைக்குத் தென்மேற்கே நாலுகல் தொலைவி லுள்ள திருப்பரங்குன்றத்திற்கும், மதுரைக்குத் தென்கிழக்கே பன் னிரண்டுகல் தொலைவிலுள்ள திருப்பூவணத்திற்கும் தேவாரம்பாடிய சுந்தரமூர்த்தி சுவாமிகள், அவருக்கு முன்னே வாழ்ந்த தேவார ஆசிரியர் இருவராலும் போற்றப்பெற்ற மதுரை மாநகரத்திற்குப் பாடாமல் இருந்திருக்க முடியாது. வரலாற்றுப்படி அழிந்துபோன தேவாரங்களுள் அவை சேர்ந்திருத்தல் வேண்டும்.

திருவாசகம் அருளிய பெரியார் மதுரையைப் பற்றி மிகவும் சிறப்பித்துப் பாடிஇருக்கின்றார். அவருடைய வரலாறு மதுரையோடு பெரிதும் தொடர்பு உடையது. மதுரையை ஆண்ட பாண்டிய மன்ன னுக்கு மணிவாசகப் பெருமான் அமைச்சராக இருந்தார் என்று சரித்திரம் சாற்றுகின்றது. அவருக்காகவே சோமசுந்தரக் கடவுள் பிட்டுக்கு மண்சுமந்து பிரம்படி பட்டார்என்றும், நரிகளைக் குதிரைகள் ஆக்கினார் என்றும் புராணங்கள் புகல்கின்றன.

பின்னாளில் வாழ்ந்த குமரகுருபர அடிகள் மதுரை மீனாட்சிக்கு அருமையான பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தம் பாடினார். இவைகள் எல் லாம் நிற்க, முழுமுதல் கடவுள் சிவபெருமான் மதுரை நகரில், தமிழ்ச் சங்கத் தலைவராக அமர்ந்து, பெரும் புலவர்களோடு ஒன்றித் தமிழ் ஆராய்ந்தார் என்ற செய்தி மதுரையைத் தவிர வேறு எந்த நகருக்கும் இல்லை.

இந் நூலாசிரியராகிய பரஞ்சோதி முனிவர்,

> "கண்ணுதற்பெருங் கடவுளும் கழகமோடு அமர்ந்து
> பண்ணுறத்தெரிந்து ஆய்ந்தஇப் பசுந்தமிழ்"

என்று பெருமிதமாகப் பேசுவார். "கண்ணுதற் பெருங்கடவுள்" என்ற கம்பரின் சொற்றொடரை, இப்புலவர் பொன்னேபோல் போற்றியுள்ளார்.

சைவ சமய குரவர் நால்வருக்கும், சிவபெருமானைப்பற்றிய தலபுராண ஆசிரியர் அனைவரும் வணக்கம் பாடி இருக்கின்றார்.

எல்லாவற்றிற்கும் சிகரமாக அமைந்திருப்பன பரஞ்சோதி முனிவரின் பாடல்கள். "கடியவிழ் கடுக்கைவேணி" "அறப்பெரும் செல்வி பாகத்து" "அரவகல் அல்குலார் பால்" "எழுத அரும்மறைகள் தேரு' என்ற இந்நூலிலுள்ள நான்கு வணக்கப் பாடல்களும் மிகவும் அருமையானவை. மதுரை நகரத்தைப்பற்றி முனிவர் பாடிய பாடல்கள் அனைத்தும் தித்திக்கும் தெள்ளமுதம். இவற்றை எல்லாம் நூலினுள் படித்து, சுவைத்து மகிழ்க.

திருமணத்தில் திருநாண் பூட்டும் மரபை இந்நூல் ஆசிரியர் இக் காண்டத்தில் சிறப்பாக இரண்டு திருமணத்தில் பேசுகின்றார். மீனாட்சியைச் சுந்தரேசர் மணந்தபோது "மங்கலநாண் சாத்தி முழுதுலகு ஈன்றாள் செங்கை பற்றினன் பற்றிலார்க்கே வீடுஅருள் பரமயோகி"என்றும் உக்கிரபாண்டியன் திருமணத்தில்"காந்திமதியை மங்கல நாண்பூட்டி வரிவளைச் செங்கைபற்றி, விதிவழி ஏனைமன்றல் வினை எலாம் நிரம்பச்செய்தான்" என்றும் பேசுவர்.

இந் நூலாசிரியராகிய பரஞ்சோதி முனிவர் இலக்கண இலக்கியத்தில் கைவந்த புலவர் என்பதுமட்டுமல்ல; இவரைக் கலைப்பெருங்கடல் என்றே மொழியலாம். மாணிக்கம் விற்ற படலத்தில் நவமணிகளின் இலக்கணங்களையும், கால்மாறி ஆடிய படலத்தில் நடனக்கலையையும்,விறகுவிற்ற படலத்தில் இசை நுணுக்கங்களையும், நரிபரியாக்கிய படலத்தில் குதிரையின் இலக்கணங்களை யும் பரக்கக்கூறுவர். இடங்கள்தோறும் நீதிகளைப் புகுத்துவதில் இவர் தனிச்சிறப்புடன் விளங்குகின்றார்.

குண்டோதரன் வரைவிலாதன மிடாவொடு வாரிவாய் மடுத்தும் பசித்தீ கொளுத்துகின்றது என்று சொல்லும்போது, "இட்டு உணாதவர் வயிறுபோல் காந்துவது" என்பது எண்ணி இன்புறத்தக்கது.

இந்திரன் சபையில் அன்ன மென்னடையார் நடனமாடு கின்றனர். அப்பொழுது அங்கு வியாழப்புத்தேள் எழுந்தருளினார். அமரர்கோன் குருவுக்குச் செய்யவேண்டிய சிறப்பைச் செய்யவில்லை. "அந்தோ!தையலார் மயலிற்பட்டோர் தமக்கொரு மதியுண்டாமோ" என்று அங்கே பேசுவார். நகுடன் என்பவன் இந்திரப் பதவியை எய்தினான். அவன் இந்திராணியை விரைந்து எய்தும் எண்ணத்தால் மாதவரை மதித்தானல்லன். அதனால் அகத்தியனின் சாபத்திற்கு

ஆளானுன். அங்கே பேசுவார் இந்நூலாசிரியர், "அற்பரான வர்க்குச் செல்வம் அல்லது பகை வேறு உண்டோ?'' என்று. இறைவனின் திருமணக் கோலத்தைக்கண்டு மனிதரும் இமையா நாட்டம் பெற்றனராம். அங்கே பரஞ்சோதியார், மனிதர்கள் தேவர்களைப்போல் இமையா நாட்டம் பெற்றதில் என்ன வியப்பு! "எந்தை கனிதரு கருணை நாட்டம் பெற்றவர் கடவுளோரால் பனிதரு மலரிட்டு ஏத்தி வழிபடற் பாலரன்றே'' என்று பகர்வார். இவைகளை வேற்றுப் பொருள் வைப்பு அணி என்ப.

மீனாட்சி திக்கனைத்தும் வெற்றி கொள்வான் கருதிக் கயிலைக்குச் சென்ற போது இறைவனைக் கண்டாள் எனக் கூறும் பின் வரும் இணையற்ற பாடல். மயிர்க் கூச்சை உண்டாக்குவது.

ஒற்றை வார்கழல் சரணமும்
பாம்புஅசைத்து உடுத்தவெம் புலித்தோலும்,
கொற்ற வாள்மழுக் கரமும்வெண்
ணீறுஅணி கோலமும், நூல்மார்பும்,
கற்றை வேணியும், தன்னையே
நோக்கிய கருணைசெய் திருநோக்கும்,
பெற்ற தன்வலப் பாதியைத்
தடாதகைப் பிராட்டியும் எதிர்கண்டாள்.

திரு ஆலவாயுடையார் பாணபத்திரன் என்ற அடியானுக்குப் பொருள் கொடுக்குமாறு அறுபான் மும்மை நாயன்மார்களுள் ஒருவராகிய சேரமான் பெருமாளுக்கு ஓர் பாசுரம் பாடிக் கொடுத்தார். அதற்குத் திருமுகப் பாசுரம் என்று பெயர். அது பதினோராம் திருமுறையின் முதற் பாடல். அப் பாடலைப் பரஞ்சோதி முனிவர் கூடற் காண்டத்தில் மிக நயமாக எடுத்தாண்டிருக்கின்றார் என்ற சிறப்பைக் காட்ட இரண்டு பாடல்களையும் கீழே தருகின்றேன்.

## திரு ஆலவாயுடையார் திருமுகப் பாசுரம்

மதிமலி புரிசை மாடக் கூடல்
பதிமிசை நிலவு பால்நிற வரிச்சிறகு
அன்னம் பயில்பொழில் ஆல வாயில்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்;
பருவக் கொண்மூப் படிஎனப் பாவலர்க்கு
உரிமையின் ஒருமையின் உதவி ஒளிதிகழ்

குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா உகைக்கும் சேரலன் காண்க!
பண்பால் யாழ்பயில் பாண பத்திரன்
தன்போல் என்பால் அன்பன்; தன்பால்
காண்பது கருதிப் போந்தனன்;
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே.

### பரஞ்சோதியார் பாடல்

மின்அவிரும் செம்பொன்மணி மாடக் கூடல்
மேயசிவன் யாம்எழுதி விடுக்கும் மாற்றம்;
நன்னர்முகில் எனப்புலவர்க்கு உதவும் சேர
நரபாலன் காண்க! தன்போல் நம்பால் அன்பன்;
இன்னிசையாழ்ப் பத்திரன்தன் மாடே போந்தான்;
இருநிதியம் கொடுத்துவர விடுப்பது, என்னத்
தென்னர்பிரான் திருமுகத்தின் செய்தி நோக்கிச்
சேரர்பிரான் களிப்புளல்லை தெரியான் ஆகி,

திருமுகப்பாசுரத்தின் சொல்லும் பொருளும் பரஞ்சோதியார் பாடலில் பின்னிக்கலந்து உறவாடு கின்றன.

திரு ஆலவாய்க் காண்டத்தில் திருஞான சம்பந்தர் மதுரைக்கு வந்த போது அவரை ஒருமதயானையாக உருவகப் படுத்திய பின், வரும் பாடல் அற்புதமானது.

ஞானமா மதநீர் சோர, ஞானசம் பந்தர் என்னும்
மானமா யானை வந்து கடம்பமா வனத்தில் துன்னும்
ஊனமாம் சமணர் என்னும் தருக்களை ஒடித்து வெண்ணீறு
ஆனமாப் பூழி அள்ளித் தூற்றியது அவனி எங்கும்.

ஞானசம்பந்தர் என்ற யானை, அறிவு என்ற மதத்தைப் பொழிந்து கொண்டு கடம்ப வனத்துள் நுழைந்தது; கடம்பவனம் என்பது மதுரையின் மறுபெயர். வனத்துள் புகுந்த யானை அங்குள்ள மரங் களை எல்லாம் ஒடித்துத் தள்ளுமல்லவா? ஞானசம்பந்த மாயானை சமணர் என்னும் மரங்களை ஒடித்துத் தள்ளியது. யானை இன்னும் என்ன செய்யும்? புழுதியை அள்ளி எங்கும் தூற்றும். இந்த ஞான சம்பந்த யானை திருநீறு என்ற புழுதியை அள்ளி உலகுமுழுதும் தூவியது.

திருஆலவாய்க் காண்டத்தில் கடவுள் வணக்கமாகிய,

பாய்உடையார் விடுத்தபழி அழல்வழுதி
உடல்குளிப்பப் பதிகம் ஓதும்
சேய்உடை,ஆ ரணம்திளைக்கும் செவிஉடையார்;
அளவிறந்த திசைகள் எட்டும்
தோயுடையார்; பொன்இதழித் தொடைஉடையார்;
விடஅரவம் சுற்றும் ஆல
வாயுடையார், புகழ்பாடப் பெறுவேமேல்,
வேண்டுவதுஇம் மனித யாக்கை.

என்ற பாடல் ''குனித்த புருவமும்'' என்ற அப்பர் சுவாமிகள் தேவாரத்தை அடியொற்றியது; அதனை அடுத்த

வேதன்நெடு மால்ஆதி விண்ணுடர்
மண்ணுடர் விரத யோகர்
மாதவர்யா வரும்காண மணிமுறுவல்
சிறிதுஅரும்பி, மாடக் கூடல்
நாதன்இரு திருக்கரம்தொட்டு அம்மியின்மேல்
வைத்தகயல் நாட்டச் செல்வி
பாதமலர் எழுபிறவிக் கடல்நீந்தும்
புணைஎன்பர் பற்றி லாதோர்.

என்ற இந்நூலாசிரியரின் அரிய பாடல் மீனுட்சி அன்னையின் திருவடியில் இப்புலவர் பெருமான் இரண்டறக் கலந்த தன்மையைப் புலப்படுத்துகின்றது.

திருவிளையாடற் புராணத்தின் முதற்காண்டமாகிய மதுரைக் காண்டம் இன்று வெளிவருகின்றது. இந்நூல் வெளியீட்டிற்குப் பெருங் காரணராக இருந்தவர் அறநிலையத்துறையின் மதுரைத் துணை ஆணையர் என் அருமை மைந்தர் ம. அ. முருகேசன் ஆவர். அவருக்கு வாழ்த்து.

நூல் வெளியீட்டில் மிகவும் ஊக்கம்கொண்டு முன்னின்ற மதுரை அருள்மிகு மீனுட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில் அறங் காவலர் குழுவின் தலைவர்–கோவில் பணியைத் திறம்பட ஆற்றுபவர்–சரசுவதி நாராயணன் கல்லூரி கண்டு அறச்செயல் பலவற்றில்

ஈடுபடுபவர் – என் அருமை நண்பர் லெ. நாராயணன் செட்டியார் அவர்கட்குப் பாராட்டு. துணை நின்ற நிருவாக அலுவலர்கட்கு நன்றி.

இந்நூல் வெளியீட்டில் என்னுடன் இருந்து படி எழுதி அச்சு வேலைகளை எல்லாம் சிறப்பாகச்செய்த என் அருமை நண்பர் அழகப்பர் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் அ. விசுவநாதனுக்கு அன்பு.

இந்நூலை முழுதும் படித்து விரிவாக முன்னுரை எழுதி உதவிய வாகீச கலாநிதி கி. வா. ஜ. அவர்கட்கு கடப்பாடு.

காரைக்குடி தி சௌத் இந்திய அச்சக உரிமையாளர் அன்பர் வீர. சுப்பையா பி. எஸ்சி. இந்நூலை நல்லமுறையில் அச்சிட்டுத் தந்தமை குறித்து மகிழ்ச்சி.

இத் திருவிளையாடல் என்ற அரிய நூலை, மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் பயின்று பட்டம்பெற்ற பெரும் புலவர் பண்டித சிதம்பர ஐயர் அவர்களிடம் ஐம்பத்து ஆறு ஆண்டுகட்குமுன்னர் நான் பாடம் கேட்டபோது, நூலில் உள்ள அரிய பாடல்கள் பலவற்றை விரும்பி மனப்பாடம் செய்தேன். அன்றுமுதல் திருவிளையாடலில் மிகுந்த ஈடுபாடு எனக்கு ஏற்பட்டது. என்றாலும் இத்துணை ஆண்டுகட்குப்பிறகு அவ்வரிய நூலை அச்சிடும் பேறு எனக்குக் கிடைக்கும் என்று அன்று நான் கருதியதில்லை. அப் பேற்றை நல்கிய திருக்கோயிலாருக்கும் அதற்குத் தோன்றாத் துணையாக இருந்த ஆலவாய் அண்ணலுக்கும் அங்கயற்கண் அம்மைக்கும் வணக்கம்.

செழியர்பிரான் திருமகளாய்க் கலைபயின்று,
  முடிபுனைந்து, செங்கோல் ஓச்சி,
முழுதுஉலகும் சயம்கொண்டு, திறைகொண்டு,
  நந்திகணம் முனைப்போர் சாய்த்து,
தொழுகணவற்கு அணிமணமா லிகைசூட்டி,
  தன்மகுடம் சூட்டி, செல்வம்
தழைவுறுதன் அரசளித்த பெண்ணரசி
  அடிக்கமலம், தலைமேல் வைப்பாம்.

காரைக்குடி
17—12—1973

இராய. சொ.

முருகன் துணை

# முன்னுரை

## வாகீச கலாநிதி கி. வா. ஜகந்நாதன்

சிவபெருமானுடைய மூன்று கண்களைப் போலச் சைவர்களால் போற்றப் பெறும் புராணங்கள் மூன்று. அவை பெரிய புராணம், கந்த புராணம், திருவிளையாடற் புராணம் என்பவை. இந்த மூன்றும் மூன்று வேறு வகையானவை. பெரியபுராணம் தமிழில் தோன்றிய மூல நூல். கந்தபுராணம் மகா புராணங்கள் பதினெட்டில் ஒன்றன் பகுதி. திருவிளையாடற் புராணம் என்பது மதுரைத் தலத்தில் இறைவன் செய்த அறுபத்துநான்கு திருவிளையாடல்களை விரித்துச் சொல்வது. இது ஒருதலத்தின் புராணம். சைவத் திருமுறைகளில் ஒன்ருக அமைந்த பெரிய புராணத்தோடும், மகாபுராணங்களில் ஒன்ருகிய கந்த புராணத் தோடும் ஒரு நிரலாகவைத்து எண்ணப் பெறும் பெருமை ஒரு தல புரா ணத்துக்கு அமைந்ததற்கு, அப்புராணத்தின் சிறப்பே காரணம். சிவதலங்களிலெல்லாம் சிறந்ததாக முன்வைத்து எண்ணப்பெறுவதும், அடையின்றியே கோயில் என்று சொல்லப் பெறுவதுமாகிய தில்லைக்குரிய புராணத்துக்குக்கூட இத்தகையசிறப்பு இல்லை.

பாராயணம்செய்தல்,கயிறுசார்த்திப்பார்த்தல்ஆகிய பக்தர்களின் செயல்களுக்குஉரியதாக இருப்பதோடு, புலவர் பெருமக்களால்விரும் பிப் படிக்கப்படுவதனால் இப்புராணம் பக்திச் சுவையும், தமிழ்ச் சுவையும் ஒருசேர இணைந்து விளங்கும் நூல் என்பது புலனுகும். சிவ பெருமானைப் பாராட்டும் நூல்களில் மதுரைத் திருவிளையாடல்கள் விரவிவருவதைக் காணலாம். இதனால் இத் திருவிளையாடற் கதைகள் பலகாலமாகத் தமிழகத்தில் உலவிவந்தன என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

வடமொழியில் தல புராணங்களுக்கு இலக்கிய மதிப்புப் பெரும் பாலும் இருப்பதில்லை. ஆனால் தமிழில் பல புலவர்கள் இயற்றிய தல புராணங்கள் சொற்சுவை பொருட்சுவை நிரம்பியனவாய்ப் புலவர்கள் போற்றிப் படித்து இன்புறும் தகையனவாய் விளங்குகின்றன. திரிகூட ராசப்பக்கவிராயர், சைவ எல்லப்ப நாவலர், சிவப்பிரகாச சுவாமிகள், சிவஞான முனிவர், கச்சியப்ப முனிவர், பரஞ்சோதி முனிவர், திரிசிரபுரம் மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளை முதலியவர்கள் இயற்றிய தல புராணங்கள் தமிழ் இலக்கிய வரலாற்றில் சிறந்த இடத்தைப் பெற்று விளங்குகின்றன.

மதுரை பாண்டிநாட்டுக்குத் தலைநகராக இருந்த சிறப்பையுடையது. பாண்டி நாட்டில் தேவாரம் பெற்ற தலங்கள் பதினுன்கு.அவை

மதுரை, திருப்புனவாயில், திருக்குற்ருலம், திருவாப்பனூர், திருவேடகம், திருநெல்வேலி, இராமேச்சுரம், திருவாடாஃன, திருப்பரங்குன்றம். திருச்சுழியல், திருப்புத்தூர், திருக்கானப்பேர், திருக்கொடுங்குன்றம் (பிரான்மஃல) திருப்பூவணம், என்பன. இந்தப்பதினென்கிலும் தஃலமை பெறுவது மதுரை. திருஞான சம்பந்தப்பெருமான் சமணரோடு வாதிட்டு வென்று பரசமய கோளரியாவதற்கு இடமாக இருந்ததும், இறைவன் பிட்டுக்குமண்சுமந்து மாணிக்கவாசகரின் பெருமையை உலகுக்கு அறிவித்தற்கு இடமாக இருந்ததும் இந்தப் பெருந்தலமே. இந்த இரண்டு சமயாசாரியர்களின் வாழ்க்கையோடு மதுரை கலந்திருப்பதால் இந்தத் திருவிஃளயாடல்களில் மாணிக்கவாசகர் வரலாற்ருேடு தொடர்புடைய படலங்கள் நான்கும் திருஞான சம்பந்தப் பெருமானுடைய வரலாற்றுப் பகுதிகளாகப் படலங்கள் இரண்டும் அமைந்துள்ளன.

மதுரைத் தல சம்பந்தமான தேவாரப் பதிகங்கள் பதினென்று அவற்றில் ஒன்பது திருஞானசம்பந்தர் அருளியவை; இரண்டு திருநாவுக்கரசர் அருளியவை. மாணிக்கவாசகர் இத்தலத்திலிருந்து பாடிய திருப்பாடல்கள் பல. அருணகிரிநாதர் பாடிய திருப்புகழில் இத்தலத்திற்குரிய பாடல்கள் சில.

இத்தலத்தின் புகழைக்கூறும் வடமொழி தென்மொழி நூல்கள் பல. அவற்றில் புராணங்களும், பிரபந்தங்களும், துதி நூல்களுமாக வெவ்வேறு வகை உண்டு.

மதுரைத்தலத்துக்குரிய புராணங்கள் நான்கு.

**1. திருவாலவாயுடையார் திருவிஃளயாடற் புராணம்:**

இந்நூல் உத்தரமகா புராணம் என்னும் வடநூலில் ஒரு பகுதியாகிய சாரசமுச்சயம் என்பதிலிருந்து மொழிபெயர்க்கப் பெற்றது; இதஃன இயற்றியவர் செல்லி நகர்ப் பெரும்பற்றப்புலியூர் நம்பி. இதைப் பழைய திருவிஃளயாடல், வேம்பத்தூரார் திருவிஃளயாடல் என்றும் வழங்குவர். டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள் இந்நூஃல நல்லமுறையில் பதிப்பித்து வெளியிட்டிருக்கிருர்கள்.

**2. கடம்பவன புராணம்:**

இலம்பூர் வீமநாத பண்டிதர் என்னும் புலவர் வடமொழியில் உள்ள நீபாரண்ய மாகாத்மியம் என்பதிலிருந்து மொழிபெயர்த்தது. இந்நூலும் அச்சேறியுள்ளது.

**3, சுந்தரபாண்டியம்:**

வாயற்பதியில் இருந்த அனதாரி என்னும் புலவர்பெருமான் வடமொழியில் சுந்தரபாண்டியம் என்ற பெயரோடுள்ள நூஃல மொழிபெயர்த்தமைத்தது இந்த நூல். பதினருவது நூற்ருண்டில் தோன்றியது. அச்சில் வந்துள்ளது.

**4. திருவிளையாடற் புராணம்:**

பரஞ்சோதி முனிவர் இயற்றியது. இதுவே தமிழுலகமெங்கும் நன்கு பரவி வழங்கும் புராணம். மேலேசொன்ன நூல்களுக்கெல்லாம் பின்னே தோன்றியது இதுவென்று தோன்றுகின்றது. காலத்தினால் பிற்பட்டதாக இருந்தாலும், "முன்னே முளைத்த காதிலும் பின்னே முளைத்த கொம்பு வலிது'' என்றபடி பக்திச் சுவையிலும் தமிழ் நயத்திலும் மற்றவற்றைவிடச் சிறந்து நிற்கிறது.

பரஞ்சோதி முனிவர் இயற்றிய இந்தத் திருவிளையாடற்புராணம் மதுரைக்காண்டம், கூடற்காண்டம், திருவாலவாய்க் காண்டம் என்ற மூன்று பெரும் பகுதிகளையும், அறுபத்து நான்கு 'திருவிளையாடல் களைச்சொல்லும் படலங்கள் 64; அவற்றிற்கு முன் கடவுள் வாழ்த்து, பாயிரம், அவையடக்கம், நாட்டுச்சிறப்பு, நகரச்சிறப்பு, திருக்கயி லாயச்சிறப்பு, புராண வரலாறு, தலச்சிறப்பு, தீர்த்தச்சிறப்பு, மூர்த்தி சிறப்பு, பதிகம் என்னும் பகுதிகள், இறுதியில் அருச்சனைப் படலம் என்னும் பகுதி ஆகியவற்றையும், 3363 பாடல்களையும் கொண் டது. மூன்று காண்டங்களில் முதற் காண்டமாகிய மதுரைக் காண்டம் என்னும் முதற்பகுதி தனியே இப்போது வெளியிடப் பெறுகிறது.

**ஆசிரியர்**

இப்புராணத்தைப் பாடிய ஆசிரியர் பரஞ்சோதி முனிவர் திருமறைக் காட்டில் சைவ வேளாளர் மரபிலே தோன்றினவர். துறவு பூண்டவர். வேதாரணிய புராணம், திருவிளையாடற் போற்றிக்கலி வெண்பா முதலிய நூல்களையும் இயற்றியவர். இவர் மதுரை மா நகருக்கு வந்திருந்த போது இவருடைய பக்தியையும் புலமையை யும் நன்குணர்ந்த சான்றோர்பலர் இவரை இந்தப் புராணம் பாடும்படி வேண்டிக் கொண்டனர். வடமொழியில் உள்ள ஹாலாஸ்ய மகாத் மியம் என்ற நூலைத்தழுவி இயற்றலாம் என்று முனிவர் எண்ணினார். ஒருநாள் அவருடைய கனவில் அங்கயற் கண்ணம்மை இளம் பெண் உருவில் எழுந்தருளி வந்து, "இந்தப் புராணத்தை அருள் செய் வாயாக!'' என்று பணித்தருளினாளாம். அதனால் ஊக்கம் பெற்ற முனிவர் புராணத்தைப் பாடத் தொடங்கி, "சத்தியாய்'' என்று முதலில் அன்னையின் பெயரை வைத்தும் பாடினாராம்.

வடமொழியில் காந்த மகா புராணத்தில் உள்ள ஈச சங்கிதையில் ஆலவாய் மான்மியம் அமைந்திருக்கிறது என்று பரஞ்சோதி முனிவரே கூறுகின்றார் (24, 25)

"...... அந்தச்
*சிறந்திடும் வடநூல் தன்னைத் தென்சொலால் செய்தி என்றிங்கு*
*உறைந்திடும் பெரியோர் கூறக் கடைப்பிடித்து உறுதி இந்தப்*
*பிறந்திடும் பிறப்பில் எய்தப் பெறுதும்என்று உள்ளம் தேறு;''*

...... .....
"விரிமுறை விருத்தச் செய்யுள் வகைமையால் விளம்பல் உற்றேன்,"
(25, 26)

என்று இந்நூல் பாடியதற்குரிய காரணத்தை இவ்வாசிரியர் கூறுகிறார். இறைவன் சந்நிதியில் அறுகாற் பீடத்தில் இந்த நூல் அரங்கேற்றப் பெற்றது (31).

இவ்வாசிரியர் அங்கயற் கண்ணியின் அருளுக்குப் பாத்திரமானவர் என்பதை,

"இரும்புமனம் குழைத்தென்னை எடுத்தாண்ட
அங்கயற்கண் எம்பி ராட்டி" 5

எம் கருணைப் பெருமாட்டி" (557)

"யாவையும் ஈன்றஎம்பிராட்டி" (581)

"ஆதி எம் பரை" (589)

"வள்ளைவார் குழைஎம் அன்னை" (616)

"எங்கள் பிராட்டி" (635)

"மாசறுத் தெமையா ளந்த வாரிநீர் ஆட்டிப் பண்டைத்
தேசுரு விளக்க வல்ல சிவபரம் பரை" (753)

என்று இந்தக் காண்டத்தில் வரும் பகுதிகளாலே உணரலாம். இனி இந்தக் காண்டத்தினால் புலப்படும் கருத்துக்களையும், தமிழ் நயத்தையும் பார்க்கலாம்.

### பாண்டி நாட்டுச் சிறப்பு

பாண்டி நாட்டின் பெருமையையும் மதுரைத் தலத்தின் பெருமையையும் மிகவிரிவாகப்பல வகை நயம் அமைய எடுத்துச் சொல்கிறார். பாண்டிநாட்டுக்குக் கன்னிநாடு என்பது ஒருபெயர். அங்கயற் கண்ணம்மை கன்னியாம் பருவத்தில் அரசு செய்தமையால் அந்தப்பெயர் உண்டாயிற்று. (579)

ஒருநாட்டுக்குப் பெருமை அதனை ஆள்வோரால் அமைகிறது. நல்லமன்னர் ஆளும் நாடு வளம் பெற்று விளங்கும்; குடிமக்கள் பசி, பிணி, பகையின்றி வசியும் வளனும் சுரப்ப வாழ்வார்கள். பாண்டி நாடோ அங்கயற் கண்ணம்மை, சோமசுந்தரன், முருகன் என்ற மூன்று தெய்வங்களால் ஆட்சிபுரியப் பட்டதென்றால் அதற்கு ஈடு இவ்வுலகத்திலும் இல்லை; தேவருலகத்திலும் இல்லை. (91)

### பொதியமலை

இந்நாட்டிலுள்ள பொதியமலை அகத்திய முனிவர் விரும்பித் தங்கிய இடம்; அதனால் அதனை 'முனிதன் நீள்வரை' (35) என்று

பாராட்டுகிருர். அந்தமலையை ஒருமங்கையாக உருவகம் செய்கிருர். மேகம்என்னும் கச்சைப்பூண்டசிகரமாகிய நகிலிலிருந்து அருவியென்னும் பால் வழிய, சுனைஎன்னும் உந்தியையும், மூங்கிலாகிய தோளையும் உடைய பொதியமாம் சைவப்பாவை பொருநை என்னும் பெண் மகவைப் பெற்ருளாம்(38). சந்தனம் விளையும் மலையாதலின் அதனை சந்தவெற்பு (393) என்பார். "தவம்இருந்து அரசாள்வது தண்டமிழ்ப் பொதியம்" (43) என்று சிறப்பிப்பார்.

வேறு ஓர் உருவகம் நாட்டையும் மலையையும் இணைத்துப் பாராட்டும் வகையில் அமைக்கிருர்; இந்த உலகம் மாயவன் வடிவாக இருக்கிறது; அவன் உந்திக்கமலம் பாண்டிநாடு; அத்தாமரையின் பொகுட்டு, பொதியமலை; அதில் அமர்ந்திருக்கும் பிரமன் அகத்தியன்; அவன் வாயில் எழும் நான்மறை முத்தமிழ். (50)

பொதியமலை, அதில் தோன்றும் பொருநைநதி, அதன் கரையில் உள்ள பதிகள், அங்கே உறையும் மாந்தர் ஆகியவற்றை ஒன்றன்பின் ஒன்ருகத் தொடுத்து அவற்றின் சிறப்பை வெளியிடும் அழகு பல்காலும் படித்துச் சுவைப்பதற்குரியது.

*"பொதியி லேவிளை கின்றன சந்தனம்; பொதியில்*
*நதியி லேவிளை கின்றன முத்தம்;அந் நதிசூழ்*
*பதியி லேவிளை கின்றன தருமம்;அப் பதியோர்*
*மதியி லேவிளை கின்றன மறைமுதல் பத்தி"*

**மதுரையின் பெருமை**

மதுரை மாநகரின் பெருமையை உவமை, உருவகம் முதலிய அணிகளைப்பெய்து விரித்துரைக்கிருர். இறைவன் தன் திருமுடியில் உள்ள சந்திரகலையிலிருந்து அமுதைஉகுத்துப் பாண்டியன் அமைத்த நகரைப் புனிதமாக்கினுன். மதுரம் என்பது அமுதுக்கு ஒரு பெயர்; அதனுல் தூய்மை பெற்றதனுல் இப்பதிக்கு மதுரா நகரம் என்ற திருநாமம் வந்தது (513). இந்த நகரத்துக்குச் சிவபுரம் (சிவநகரம்), கடம்பவனம், சீவன்முக்திபுரம், கன்னிபுரம், திருவாலவாய், மதுரை, பூலோகசிவலோகம், சமட்டிவிச்சாபுரம், கூடல், துவாதசாந்தத்தலம் என்று பத்துப் பெயர்கள் சிறப்புடன் அமைந்துள்ளன (253). இவற்றையன்றி வேறு பெயர்களும் உண்டு. இந்த நகரின் நான்கு எல்லையிலும் நான்கு கடவுளர் காவல்புரிகின்றனர். கீழ்த்திசையில் சாத்தனும், தெற்கே சத்தமாதாக்களும், மேற்கே திருமாலும், வடக்கே துர்க்கையும் காவல் தெய்வங்களாக விளங்குகின்றன. (514)

இந்த நகரின் பெருமையைச் சொல்லவந்த முனிவர், 'இறைவன் பல வடிவங்களையெடுத்து எழுந்தருளியபோது அவனுடைய திருவடி மலர்களைச் சுமக்கத் தவம்செய்த தெருக்களை உடையதல்லவா?'

என்று பாடி உருகுகிறார்.

> "ஐய என்உரை வரம்பின ஆகுமோ? அடியர்
> உய்ய மாமணி வரிவளை விறகுவிற் றுழன்றோன்
> பொய்யில் வேதமும் சுமந்திடப் பொருநகன்று அரற்றும்
> செய்ய தாள்மலர் சுமந்திடத் தவஞ்செய்த தெருக்கள்!"

### மூலலிங்கம்

இத்திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் லிங்கமூர்த்தி உலகத்தில் வெவ்வேறு தலங்களில் உள்ள லிங்கங்களுக்கெல்லாம் முன்னே தோன்றினவர்; அதனால் சொக்கலிங்கத்துக்கு மூலலிங்கம் என்ற பெயர் உண்டாயிற்று (293). மற்ற எல்லா லிங்கங்களும் இதிலிருந்தே கப்பு விட்டனபோல எழுந்தன. அதனாலும் இதற்கு மூலலிங்கம் என்ற பெயர் வந்தது (294). மற்ற லிங்கங்கள் இந்த லிங்கத்தினின்றும் தனித்தனியே பிரிந்துசென்ற லிங்கங்கள்; ஆதலின் அவை வியஷ்டிலிங்கங்கள். எல்லாம் ஒருங்கே தொக்க லிங்கம் இது; ஆதலின் இது சமஷ்டி லிங்கம் (297).

### சோமசுந்தரன்

சொக்கலிங்கப் பெருமானுக்குச் சோமசுந்தரன் என்பது ஒரு திரு நாமம். உமையுடன் சேர்ந்த சுந்தரன் என்பது அத் திரு நாமத்தின் பொருள் (295). அப் பெருமானுக்குரிய நாமங்கள் அளவிறந்தன. கர்ப்பூர சுந்தரன், கடம்பவன சுந்தரன், கல்யாண சுந்தரன், அபிராம சுந்தரன், சண்பக சுந்தரன், மகுட சுந்தரன், மான்மத சுந்தரன், பழியஞ்சு சுந்தரன், ஆலவாய்ச் சுந்தரன், நான் மாடக் கூடல் நாயகன், மதுராபதி வேந்தன், சமட்டி விச்சாபுர நாதன், சீவன் முத்தி புர நாதன், பூவுலக சிவலோகாதிபன், கன்னிபுரேசன், மூல லிங்கம் என்பவற்றை அடுக்கிச் சொல்கிறார் இந்நூலாசிரியர் (324-6)

இங்கே எம்பெருமான் சுந்தரபாண்டியனாகக் கோலம்பூண்டு அரசாட்சி புரிந்தான். அதனால் அவனைச் சுந்தரன் (27, 30), சுந்தரக் கடவுள் (32), சுந்தரவிடங்கன் (432), சுந்தரசாமி (923), சுந்தரத் தென்னர் (979), சுந்தரச்சயம்புலிங்கம் (1180) என்றும், அங்கயற் கண்ணி பங்கன் (142) என்றும் குறித்து மகிழ்வார்.

### அங்கயற்கண்ணி

இங்கே எழுந்தருளியுள்ள மீனாட்சியம்மைக்குரிய அங்கயற்கண்ணி (142), அங்கயற்கண் மடமான் (597), அங்கயல் நோக்கி (619), கயலுண் கண்ணி(259), கயலி சைய கண்உமை(320), கயற்கணி (1197) சேற்கண் மடவரல்(432), சேற்கண் பூரணப் பரை(1067), மீனநோக்கின் மடவரல் (11), மீனநோக்கி (197, 1123), மீன்நெடுங் கண்ணி (1140) என்றும், கோமளவல்லி (993), சுந்தரவல்லி (927), மங்கை

நாயகி (646) என்றும் பல திருநாமங்களை எடுத்துரைப்பார்.

கூன்பாண்டியனுடைய மாதேவிக்கு மானி என்பது இயற்பெயர். ஆனால் மங்கையர்க்கரசி என்ற பெயரே பெருக வழங்கலாயிற்று. அங்கயற் கண்ணம்மையின் பெயராகிய மங்கை நாயகி என்பதன் வேறு உருவமே மங்கையர்க்கரசி என்று சொல்லலாம். அந்தத் திரு நாமம் பாண்டிமா தேவியாக வந்தபிறகு அப்பெருமாட்டிக்கு அமைந் திருக்கலாம் என்று தோன்றுகிறது.

**தலச்செய்திகள்**

இத் தலத்து விநாயகரில் முக்கிய மானவர் சித்தி விநாயகர். அவரைச்சித்தியானை (1) என்றும், சித்தி வேழம் (15) என்றும், வேழப் பிள்ளை (1064) என்றும் போற்றுவார்.

இந்தத் தலத்தில் முதலில் உண்டான தீர்த்தம் பொற்றாமரை. அதற்கு ஆதி தீர்த்தம், பரம தீர்த்தம் (11), சிவ தீர்த்தம், ஞான தீர்த்தம், முத்தி தீர்த்தம் (12), சிவகங்கை (33), தீர்த்த உத்தமம் (34), தர்ம தீர்த்தம், அர்த்த தீர்த்தம், காம தீர்த்தம் (35) என்று பலபெயர்கள் உண்டு. தடாதகைப் பிராட்டியின் திருமணத்துக்குப்பின் உண்டான தீர்த்தம் வையை நதி. அதற்கும் சிவகங்கை, சிவஞான தீர்த்தம், வேகதி, கிருத மாலை (875) என்ற பெயர்கள் வழங்கும்.

இந்தத் தலத்தின் விருட்சம் கடம்பு (185); அதன் கீழ்த் தோன்றிய சொக்கலிங்கப் பெருமானை, ''கடம்படி முளைத்த முக்கட் கரும்பு'' (563, 1063) என்று நயம் பெறச் சுட்டுவார்.

இங்கே எம்பெருமான் வெள்ளிமன்றத்திலே கால்மாறியாடினான். ஐந்து சபைகளிலே ஒன்று இந்த வெள்ளியம்பலம் (123, 806).

சிறந்த சைவராகிய இவ்வாசிரியர் சிவபெருமானையும், அன்னை யையும் பற்றிக்கூறும் கருத்துக்கள் பலப்பல. சைவ சாத்திர உண்மைகள் பல அங்கங்கே விரவி வருகின்றன. சிவனே பரம் பொருள் என்பதை உடம்பாட்டு முகத்தானும் எதிர்மறை வாயிலானும் இவர் புலப்படுத்தும் இடங்கள் பல.

**சிவபரத்துவம்**

எடுத்தவுடன் முதற்பாட்டிலேயே சிவபரஞ்சுடரை, "தனிப்பர முத்தியான முதல்'' என்று கூறிப்புகுகின்றார். தன்னுடைய ஆணை யினால் தன் சந்நிதியில் பிரம்ம விஷ்ணு ருத்திரர்கள் மூன்று தொழிலும் இயற்றத் தான் வாளாவிருக்கும் அண்ணல் என்பதை, "தன்வலி ஆணைதாங்கி, மூவண்ணல் தன் சந்நிதி முத்தொழில் இயற்ற வாளா மேவண்ணல்'' (6) என்று புலப்படுத்துவார். இறைவனை, "தெய்வ நாயகன்'' (33) என்பார். சூதபுராணிகரைச்

சொல்லுமிடத்து "உலகெலாம் பயந்த பேதை பாகனே பரம் எனத் தேர்ந்துணர் பெரிய மாதவ'' (215) என்று இக் கருத்தை அமைப்பார். பொருள்களில் உயர்ந்தவற்றை ஒருசேரச் சொல்கையில் "தேவர் தம்மில், பனிதரு திங்கள் வேணிப் பகவனே உயர்ந்தோன்'' (300) என்பார். இப்படியே கோதம முனிவரைப்பற்றிக் கூறும்போது "கரைகடந்த மறைச்சென்னி, உள்ள பொருள் பரசிவம் என்று உணர்ந்த பெருந்தகை அடிகேள்'' (879) என்பர். இறைவனிட மிருந்துவந்த நான்கு மேகமும் வருணன்விட்ட கடலை வற்ற அடித்தன. அந்தக் கடல் வற்றியதற்கு உவமை கூறவந்தவர், சிவப்பெரும் கடவுள் பார்க்கும் தேவு எனத் தெளிந்தோர் ஏழு பவப்பெரும் பௌவம்போலப் பசையற வறந்ததன்றே'' (1305) என்று சிவபரத்துவத்தை இணைத்துப் பாடுகிறார்.

எதிர் மறை வாயிலாகவும் சிவபரத்துவத்தை எடுத்து உரைக்கும் இடங்கள் சில உண்டு. பொருநையாகிய தாமிர வருணியை வருணிக் கிறார் இம் முனிவர். அதில் புதுவெள்ளம் வருகிறது; கலங்கியிருக் கிறது. அதற்கு உவமை சொல்ல முந்துகிறார்; "மறை முதல் கலைக ளெல்லாம் மணிமிடற் றவனே எங்கும், நிறைபரம் என்றும் பூதி சாதன நெறி வீடென்றும், அறைகுவ தறிந்தும் தேறார் அறிவெனக் கலங்கி'' (45) என்று சிவபரத்துவத்தை உணராதவருடைய அறிவுக்கலகத்தை உவமை கூறுகிறார். மதுரையைச் சூழ்ந்துள்ள அகழி மிக ஆழ முடையது. அதில் வீழ்ந்தவர் கரையேற முடியாது. யாரைப் போல? இதோ முனிவர் கூறும் உவமை:'' தெண்ணிலாமதி மிலைந்தவர்க்கு ஒப்பெனச் சிலரை, எண்ணினார் இருள் நரகம் நீத்து ஏறினும் ஏறார்'' (107) என்பதில் 'சிவபரஞ்சுடரின் முதன்மையை அறியாதவர்கள் நரகத்தினின்றும் கரை ஏறினாலும், இந்த அகழியில் வீழ்ந்தவர் கரையேறார்' என்கிறார். இறைவனுடைய கண்டம் கறுப்பு நிறமுடையது. அதற்கு உவமையாக சிவபரம்பொருளே முதல்வன் என்பதை அறியாதவருடைய அறியாமையை உவமை கூறுகிறார்; "மருண்ட தேவரைப் பரம்என மதிப்பவர் மையல்வல் இருள்மான இருண்ட கண்டம்'' (697).

## சிவபெருமான் இயல்பு

சிவபெருமானுடைய இயல்புகளைச் சுவைபட எடுத்துக் காட்டுவார். அவற்றிற் சிலவற்றைப் பார்க்கலாம். எம் பெருமான் சச்சிதானந்தத்திருவுருவுடையவன். பூவில் வடிவம்,வண்ணம், மணம் என்ற மூன்றும் எவ்வாறு பிரிவின்றி ஒன்றியிருக்கின்றனவோ அப்படியே என்றும் நிலைபேறாகிய சத்தும், பேரறிவாகிய சித்தும், சுகதுக்கத்துத்துக்கு அப்பாற் பட்ட ஆனந்தமும் இணைந்த திருவுருவ

முடையவன் அவன். இதை, "பூ, வண்ணம், பூவின் மணம் போல மெய் போத இன்ப, மாவண்ண மெய் கொண்டவன்'' (6) என்று அழகு பெறப் புலப்படுத்துவார். "உண்மை அறிவானந்த உருவாகி'' (10,241) என்று வேறு பரியாயங்களால் சச்சிதானந்தத்தை உணர்த்துவார். "மெய்யறிவானந்தம்'' (198,798), "மெய்யுணர் வானந்தம்'' (323) ''மெய்ஞ்ஞான போதம்'' (1166) "சத்திய ஞானனந்தம்,'' (1068) என வருவனவற்றைக் காண்க.

இறைவன் வேதத்தைத் தந்தவன். அவன் திருவாக்கே வேதம். "அளவில் வேதம் சாற்றிய தலைவன்'' (21); ஆதலால் அவனை, "விண்ணவர் தம்மின் மேலாம் வேதியன்'' (270) என்றும், "ஆதி வேதியன்'' (776) என்றும் பாராட்டுவார். வேதத்தின் பொருளாகவும் அதனுற் சொல்லப்படும் முதல்வனுகவும் இறைவன் விளங்குகிருன். அதனுல் அவனை "மறை முதல்'' (85) என்றும், "மறை முதல் அடிகள்'' (433) என்றும்,

*''சுருதி நாயகன்'' (853) என்றும்; ''அளவில் நான்மறையின் அந்தப் போதவடிவாகி நிறை பூரண புராணன்'' (1175) என்றும் போற்றுவர்.*

சிவபெருமானே ஆகமத்தை அருளினுன்; "அழிவிலான் உரை ஆகமம்'' (181) என்பதில் இக் கருத்தை உணர்த்துகிருர். அவனே வட மொழியிலக்கணத்தையும், தென் மொழியையும் இரு பெரு முனிவர்களுக்கு உபதேசம் செய்தான்; "விடை உகைத்தவன் பாணினிக் கிலக்கணம் மேனுள், வடமொழிக்குரைத் தாங்கு இயல் மலயமா முனிக்குத், திடமுறுத்தி அம் மொழிக் கெதிராக்கிய தென் சொல்'' (87) என்பதில் இதனைப் புலப்படுத்தினுர்.

அவனுடைய திருக்கோலத்தை இம் முனிவர் வருணிப்பது சிறந்த சொல்லோவியமாகத் திகழும். தடாதகைப் பிராட்டியின் முன் தோன்றும் சிவபிரானுடைய கோலம் இதோ:

*''ஒற்றை வார்கழற் சரணமும் பாம்பசைத்து*
*உடுத்தவெம் புலித்தோலும்*
*கொற்ற வாள்மழுக் கரமும்வெண் ணீறணி*
*கோலமும் நூல்மார்பும்*
*கற்றை வேணியும் தன்னையே நோக்கிய*
*கருணை செய்திரு நோக்கும்*
*பெற்ற தன்வலப் பாதியைத் தடாதகைப்*
*பிராட்டியும் எதிர்கண்டாள்.'' (641)*

தடாதகைப் பிராட்டியின் திருமணத்தின் போது அந்த மணத்தைக் காண வந்த பதஞ்சலி வியாக்கிரபாத முனிவர்களுக்காக

இறைவன் இங்கே திருக் கூத்தாடினுன். அந்த ஆனந்த நடனத்தைக் கண்டு முனிவர்கள் அளவிறந்த இன்பம் அடைந்தனர். அந்த அற்புத நடனக் கோலத்தை வாய் நிரம்ப, நம் செவி நிரம்ப, நம் உளம் நிரம்ப மூன்று அழகிய பாடல்களால் வனைந்து காட்டுகிருர்;

*"கொய்யும்செங் கமலப் போது குவிந்தென எடுத்துக் கூத்துச்*
*செய்யும்புண் டரிகத் தாளும், திசைகடந் துளஈ ரைந்து*
*கையும்,திண் படையும், தெய்வ மகளிர்மங் கலநாண் காத்த*
*மையுண்ட மிடறும், சங்க வார்குழை நுழைந்த காதும்;"* (812)

*"செக்கரஞ் சடையும், தேசார் வெண்டிரு நீறும் தெய்வ*
*முக்கணும், உரகக் கச்சும், முள்ளயி றிமைக்கும் மார்பும்,*
*மைக்கருங் கயற்கண் நங்கை வல்லியின் ஒதுங்கி நிற்கும்*
*பக்கமும், அவன்மேல் வைத்த பார்வையும், நகையும் தோன்ற"* (813)

*"கங்கையா றலம்பும் ஓசை, கடுக்கைவண் டிரங்கும் ஓசை,*
*மங்கல முழவின் ஓசை, மந்திர வேத ஓசை,*
*செங்கையா டெரியின் ஓசை, திருவடிச் சிலம்பின் ஓசை,*
*எங்கணும் நிரம்பி அன்பர் இருசெவிக் கமுதம் ஊற்ற"* (814)

" ஆடினுன் அமல மூர்த்தி " என்று காட்டுகிருர்.

மறைப் பொருள் உணர்த்துவதற்காகச் சிவபெருமான் தென் முகக் கடவுளாக எழுந்தருளுகிருன். அந்த மூர்த்தியின் வடிவத்தை,

*"சீதளப் பளிக்கு மேனியும், பளிக்குச் செழுமலே பதித்ததுப் பன்ன*
*பாதமும், செவ்வாய் மலரும்,முக் கண்ணும் பங்கயச் செங்கரம் நான்கும்,*
*வேதபுத் தகமும், அமுதகும் பமும்தன் விழிமணி வடமும்,மெய்ஞ் ஞான*
*போதமுத் திரையும் தரித்ததோர் தனிமைப் போதன்"* (1166)

என்று சொல்லில் எழுதிக் காட்டுவார்.

### அன்னையின் இயல்பு

சிவ பரம்பரையாகிய அம்பிகையைப் பற்றிப் பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய பாடல்கள் பல. அன்னையின் திருக் கோலத்தை வருணிக்கும் இடங்கள் பல.

அவள் திருவடியில் வேதங்களே சிலம்பாக இருந்து முழங்கு கின்றன; "ஆரண நூபுரம் சிலம்பும் அடிகள்"; (5) அவள் திரு இடையில் கலேகள் எல்லாம் மேகலேயாக விளங்குகின்றன; "மெய்ம் மறையார் கலேயனேத்தும் மேகலேயா மருங்கசைத்த விமலே"; (522); அவளுடைய திருக்கரங்களோ, "அறமெலாம் குடி கொண்டு ஏறும் அந்தளிர்ச் செங்கை" (764); அவள் திருக் கரத்தால் அறங்கள் ஏற்றம் பெற்றன. அவள் நகில்கள், "எண்ணிறந்த சராசரங்கள்

ஈன்றும் தாழாக் கொங்கை'' (9), ''வேளும் வாய்வைத் தருந்தாத இளமுலை'' (550) அம்பிகை திருவிழிகள் மீனைப் போல இருத்தலின் மீனாட்சி என்னும் திரு நாமம் வந்தது. வடிவால் மீனை ஒத்திருத் தலோடு பண்பாலும் அவை மீனை ஒத்திருப்பவை. மீன் முட்டைகளை யிட்டு அவற்றைப் பார்வையினாலே பொரியும்படி செய்யும் தன்மை யுடையது. அவ்வாறே எம்பிராட்டியும் தன் கண்பார்வையால் ஆன் மாக்களைப் பரிபக்குவப் படுத்தி நலம் செய்பவள். இதனை ''ஒளியால் உலகீன்று உயிரனைத்தும் மீன்போல் செவ்வி உற நோக்கி, அளியால் வளர்க்கும் அங்கயற்கண் அன்னே'' (594) என்பதில் புலப்படுத்து கிறார். இறைவி பரஞானமே தன் வடிவாகக் கொண்டவள் (541)

அன்னை அண்டங்களை உண்டாக்கியவள். இதை வெவ்வேறு வகையில் சுவைபடச் சொல்லுவார் இம் முனிவர். ''அண்டங்கள் ஈன்றாள்'' (7), ''உலகெலாம் பயந்த தையல்'' (584), ''அண்டங் கள் சராசரம் யாவையும் தானே ஆக்கிக், கொண்டெங்கும் நின்றாள்'' (637) என்றவர், அந்தச் செய்கையைச் சிறியபெண் சிற்றிலிழைத்து விளையாடும் விளையாட்டைப் போலச் செய்பவள் அன்னை என்பார்; ''அண்டமெலாம் சிற்றில் இழைப்பாள்'' (550), ''அண்டக் குவை வெண் மணற் சோறு ஆக்கித் தனியே விளையாடும், கொண்டற் கோதாய்'' (595)

அவள் பராசக்தி, ஆதிசக்தி, இச்சாசக்தி, ஞான சக்தி, கிரியா சக்தி என்று ஐந்து வேறு சக்தியாக நிலவுபவள் (540); ஞானம்தரும் மகள் (95); பரம்பரன் உருவே தனக்குரிய படிவமாக நிற்பவள் (9); ஆதலால் அவள் ஈறிலாதவள்; அவளே ஐந்தொழில் இயற்ற வேறு வேறு பேர் பெற்று விளங்குகிறாள் (48); சிவபெருமானைப் போலவே, ''உலக மெலாம் படைத்துக் காத்து, வரையாது துடைத்து மறைத்தருள்பவள்'' (22); மறைகடந்த முதல்வி (227); மறை தீண்டுதற்கரிதாய் இருந்த நாயகி (581); வேத முடிமேல் விளையாடுபவள் (591); தன் சக்தி பெற்ற முப்பெருந் தேவராலே முத்தொழில் நடாத்துபவள் (578.)

### இறைவனும் இறைவியும்

இறைவனும் இறைவியும் என்றும் பிரிவின்றி ஒன்றி இருப்ப வர்கள். இந்த நிலையைப் பல உவமைகளால் தெளியவைப்பார் முனிவர்.

*''நீரின், தண்மை அனல் வெம்மைஎனத்*
*தணையகலா திருந்துசரா சரங்கள் ஈன்ற*
*பெண்மையுரு வாகியதன் ஆனந்தக்கொடி''* (10)

என்று சிவகாமவல்லியைச் சொல்வார்.

"'சரதமறை யாய்மறையின் பொருளாய்அப்
பொருள்முடிவு தானுய்த் தேனின்
இரதமெனப் பூவின்மணம் எனப்பரம
னிடம்பிரியா எம்பி ராட்டி" (560)

என்று தடாதகைப் பிராட்டியைப் புகழ்வார்.

அன்னையுடன் அப்பன் திருமணக்கோலத்தில் எழுந்தருளி யிருந்ததைச் சொல்கையில் இந்தப் பிரிவிலாத தன்மையைப் புலப் படுத்துவார்;

"பண்ணும்இன் னிசையும், நீரும் தண்மையும், பாலும் பாலில்
நண்ணும்இன் சுவையும், பூவும் நாற்றமும், மணியும் அங்கேழ்
வண்ணமும் வேறு வேறு வடிவுகொண் டிருந்தால் ஒத்தது,
அண்ணலும் உலகம் ஈன்ற அம்மையும் இருந்த தம்மா!" (773)

வேறு ஓர் இடத்தில்,

"அலர்மணம் போல நீங்கார்" (780)

என்று அமைப்பார்.

சக்தி பீடங்கள் அறுபத்து நான்கு என்பதை ஓரிடத்தில் குறித் துள்ளார் (586.)

அங்கயற்கண்ணம்மையை மகளாகப் பெற்றவள் பாண்டியன் மாதேவியாகிய காஞ்சனமாலை. அவள் முற்பிறவியில் விசுவாவசு என்னும் வித்தியாதரனுடைய மகளாய் வித்தியாவதி என்ற பெய ருடன் இருந்தவள்; அவள் அம்பிகையை வழிபட்டு அப்பிராட்டி தன் மகளாக வரவேண்டும் என்று தவம் செய்து வரம் பெற்று மறுபிறவி யில் காஞ்சனமாலையாகப் பிறந்தாள்.

வித்தியாவதிக்கு அவள் தந்தையே அம்பிகையின் மந்திரத்தை உபதேசம் செய்தான். இதை,

"ஐய அர்பிகை தன்னையான் அன்பினுல் வழிபட்டு
உய்ய வேண்டும்என் றுள்;அவன் உலகெலாம் பயந்த
தையல் மந்திரந் தனமகள் தனக்குப தேசம்
செய்ய, அந்நெறி ஒழுகுவாள்" (584)

என்பதனுல் அறியலாம். இங்கே அவன் உபதேசித்த மந்திரத்தை, "தையல் மந்திரம்" என்று குறிக்கிருர் முனிவர். தையல் என்பது இளம்பெண் அல்லது பாலையைக் குறிக்கும் சொல். புள்ளிருக்கு வேளூரில் எழுந்தருளியிருக்கும் அன்னைக்குத் தமிழில் தையல் நாயகி என்பது திருநாமம்; அது வடமொழியில் பாலாம்பிகை என வழங்கும். அந்த வழக்கிலிருந்து தையல் என்பதன் பொருள் தெளிவாகிறது.

ஆகவே, இங்கே சொன்ன தையல் மந்திரம் என்றது பாலை என்று வழங்கும் மந்திரம் என்று கொள்ளலாம். *

### துதிகள்

நெஞ்சுருக்கும் வகையில் துதிகளை அமைக்கும் திறம் படைத்தவர் பரஞ்சோதியார். கடவுள் வாழ்த்தில் உள்ள ஒவ்வொரு பாடலும் மணி மணியாகத் திகழ்கிறது.

இந்திரன் கடம்படி முளைத்த மூல லிங்கமாகிய இறைவனை, "அங்கணு போற்றி, வாய்மை ஆரணு போற்றி" என்று தொடங்கித் துதிப்பதாக நான்கு பாடல்களைப் பாடுகிருர் (430–33); குலசேகர பாண்டியன் அப்பெருமானை, "சரணம் மங்கையோர் பங்குறை சங்கர சரணம்" என்று தொடங்கிப் போற்றுவதை மூன்று பாடல்களில் (493–5) விரிக்கிருர். திருநடங்கண்டு இன்புற்ற பதஞ்சலி முனிவர் செய்ததுதி, "பராபர முதலே போற்றி, பத்தியில் விளைவாய் போற்றி" என்று தொடங்கி மூன்று பாடல்களாக (818–20) விரிந்திருக்கிறது.

இப்படியே வித்தியாவதி அம்பிகையைத் துதிக்கும் பாடல்கள் மூன்று (594–6)இடை மடக்காகிய கந்தருவ மார்க்கத்தில் அமைந்து உள்ளத்தை உருக்குகின்றன.

### அடியார்கள்

நந்தியெம் பெருமானுக்குத் தனியே ஒரு துதி பாடியுள்ளார்(18); நால்வரையும் சண்டீசரையும் பிற நாயன்மார்களையும் கடவுள் வாழ்த்தில் பரசுகிருர் (19, 20, 21, 22, 23); மூவர் செய்த அற்புதங்களில் சுந்தரர் சிவபிரானைத் தூது விட்டது, முதலை உண்டபாலனை வருவித்தது; ஞானசம் பந்தர் அங்கம் பூம்பாவை ஆக்கியது, அப்பர் மறைகள் அடைத்த கதவைத் திறந்தது (89) ஆகியவற்றை ஓரிடத்தில் எடுத்துரைப்பார். தேவாரத்தை மூவர் வாய்த்துதி (183) என்பார். கண்ணப்பர் தம் தலையில் சுமந்து வந்து இறைவனுக்கு மலர் சாத்தியதை ஓரிடத்தில் (566) உவமையாகச் சொல்வார். திருத்தொண்டர்களைச் சிவானுபவச் செல்வர் (23) என்பார்.

பொதுவாகச் சிவபக்தர்களின் இயல்புகளைச் சொல்லும் இடம் பல. உவமையாக அவற்றை எடுத்தாளுவார்.

சிவபக்தர்கள் திரு நீறு பூசிய கோலம் உடையவர்கள். மதுரையிலுள்ள வெண்ணிற மாடங்கள் அந்தப் பக்தர்களைப் போலத் தோன்றுகின்றனவாம். (135)ஆறு இருகரையும்உள்ள சிவாலயங்களை நெருங்கிப் பஞ்ச கவ்வியம், தேன் ஆகியவற்றை அலைகளாகிய

* இந்தக்கருத்தைத தெரிவித்தவர்கள் என் ஆசிரிய பிராஞகிய ஐயரவர்கள்.

கையினால் வீசி, கத்தூரியையும் சந்தனத்தையும் அப்பி, மலர் தூவிச் செல்லுவதனால், "பூசைத் தொண்டின் செயல்வினை மாக்கள்" போல (42) விளங்குகிறதாம். ஆற்றில் வெள்ளம் நிரம்பியதற்கு "மன்றுடையார்க்கு அன்பர் நிறைவு அழியாத உள்ளத்து அன்பு" நிரம்பியதை உவமிப்பார்(46). மன்னர்கள் பயிர்த் தொழில் செய்ய நெல் நன்றாக விளைகிறது; இதற்கு உவமையாக வருகிறது, அடியாரின் அநுபவம்; "அன்புறு பத்தி வித்தி ஆர்வநீர் பாய்ச்சும் தொண்டர்க்கு, இன்புருவான ஈசன் இன்னருள் விளையுமா போல்" (56) சோமசுந்தரக் கடவுள் பவனி வருகிறான்; அது கண்ட மகளிர் அவன்பால் காதல் கொண்டு உருகுகிறார்கள்; அவர்களுடைய மெய்ப்பாடுகளுக்கு அன்பரின் மெய்ப்பாடுகளை ஒப்பிடுகிறார்;

* *"கலையொடு நாணம் போக்கிக்*
*கருத்தோடு வண்ணம் வேறா*
*உலையொடு மெழுகிட் டென்ன*
*உருகுகண் ணீர ராகிக்*
*கொலையொடு பயில்வேற் கண்ணார்*
*குரிசில்தன் பவனி நோக்கி*
*அலையொடு மதியம் சூடும்*
*ஐயன்மெய் அன்பர் ஒத்தார்"* (727)

சிவபெருமானுடைய திருவைந்தெழுத்தை எல்லா மந்திரங்களிலும் மேலானது என்று உணர்த்துவார் (300).

*"புனிதமந் திரங்கள் தம்முள்*
*போதஐந் தெழுத்து மேலாம்".*

அந்த அஞ்செழுத்தால் அப்பர் 'நீலநிறப் பெருங்கடலும் பிறப்பெனும் கடலும்' நீத்த அற்புதத்தைக் குறிப்பார் (20); அதைச் சிவநாம எழுத்தஞ்சு (907) என்றும், "புண்ணிய ஐந்தெழுத்து" (991) என்றும் விதப்பர்.

### சிவபூசை

இறைவனை வழிபடும் முறைகள், சிவபூசை செய்தல், சிவ புண்ணியச் செயல்கள் ஆகியவற்றை 312-ஆம் பாடல் முதல் 322-ஆம் பாடல் வரை மிக விரிவாகச் சொல்லியுள்ளார். இந்திரன் வழிபட்டுப் பூசித்ததை மூன்று பாடல்களால் (427-29) விரிப்பார். 1062 முதல் 1072 வரையிலும் வைகறை எழுவது முதல் இறைவனைப் பூசித்து வரம் பெறுதல் வரையிலுள்ள வழிபாட்டு முறை சொல்லப் பெறுகிறது.

---

* இங்கே கலை என்பது ஆடை, கல்வி என்று இரு பொருள்பட நின்றது.

நித்தியம், நைமித்திகம், பரிகாரம் என்ற மூன்று வகைகளையும், "மூன்றுறுப்பும் குறைவில் பூசனை" (517) என்று குறிப்பார். இறைவனுடைய நாமம் ஆயிரத்தை ஓரிடத்தில் நினைக்கச் செய்கிறார் (1070).

### சாத்திரக் கருத்துக்கள்

சைவசாத்திரங்களில் வரும் கருத்துக்கள் பலவற்றை அங்கங்கே எடுத்து ஆளுவார். வேதம் பொது நூல் என்றும் ஆகமம் சிறப்பு நூலென்றும் புலப்படுத்துவார் (182). வைகரியாகவரும் மொழிகளை மாயாகாரிய ஒலி என்று சொல்வர். வெறும் ஓசை வானம் என்னும் பூதத்தின் காரியம்.

இருவினை ஒத்தால் மலபரிபாகம் உண்டாகும் (488). மூன்று வகையான பக்குவிகளுக்கு இறைவன் அருளும் முறையை ஒரு செய்யுளில் சொல்கிறார். ஒரு மலம் உடையாராகிய விஞ்ஞான கலருக்கு உண் முகத்தே சோதியாக எழுந்தருளி அருளமுதம் பெய்வதையும், இருமலத்தராகிய பிரளயாகலருக்கு இடப வாகனு ரூடனாய்க் காட்சி தருதலையும், மும்மலமும் உடைய சகலகலருக்கு அர்ச்சா மூர்த்தியாக அருள்புரிதலையும் எடுத்துரைக்கும் பாடல் வருமாறு:

*"வென்றுளே புலன்க ளைந்தார்*
*மெய்யுணர் உள்ளந் தோறும்*
*சென்றுளே அமுதம் ஊற்றும்*
*திருவருள் போற்றி; ஏற்றுக்*
*குன்றுளே இருந்து காட்சி*
*கொடுத்தருள் கோலம் போற்றி*
*மன்றுளே மாறி ஆடும்*
*மறைச்சிலம் படிகள் போற்றி!"* (4)

சைவ சித்தாந்தத்தைச் சுத்தாத்வைதம் என்று சொல்வர். "சுத்தஅத் துவிதமான சுயம்பிரகாசம்" (1180) என்பதில் அச் சொல்லை ஆளுகிறார்.

முக்தி என்பது பதியும் பசுவும் ஒன்றாகி இணைவதுமன்று; இரண்டாகப் பிரிந்து நிற்றலுமன்று; ஒன்றும் இரண்டும் அறக் கலத்தல் என்பது சைவசித்தாந்தம். இதை இரண்டறக்கலத்தல் என்றும் சொல்வர்.

*"முடிவில்*
*அறையும் வீடும்* **ஒன்றிரண் டெனும்**
**பிணக்கற** *அமைந்த*
*குறைவிலாச் சிவயோகியர்."* (182)

"உவமையில் இன்ப அருள்நிழல் எய்தி
ஒன்றிஒன் றுநிலை நின்றான்." (518)

என்பவற்றில் இந்த உண்மையை விளக்குகிறார்.

### பிற தலங்கள்

பாண்டி நாடாகிய பெண்ணுக்கு அந்நாட்டுத் தலங்கள் உறுப்புக்களாக இருக்கின்றன என்று சிலேடையும், தொனியும் அமைய ஒரு பாட்டில் சொல்கிறார். மகளிர் நகிலுக்குக் குன்றையும், உந்திக்கு நீர்ச்சுழியையும், வயிற்றுக்கு ஆலிலையையும், கைக்கு இதழ் நிறைந்த தாமரையையும், மேனிக்குச் சண்பகப் பூவையும், தோளுக்கு மூங்கிலையும், முகத்துக்கு அமுதம் நிறைந்த சந்திரனை யும் உவமித்தல் மரபு. அதனை எண்ணி இந்தப் பாட்டைப் பாடுகிறார்.

"கொங்கை யேபரங் குன்றமும் கொடுங்குன்றும்; சொப்பூழ்
அங்க மேதிருச் சுழியல்,அவ் வயிறுகுற் றாலம்;
செங்கை ஏடகம்; மேனியே பூவணம் திரள்தோள்
பொங்கர் வேய்வனம்; திருமுகம் மதுரையாம் புரமே." (93)

இந்தப் பாட்டில் பாண்டி நாட்டிலுள்ள எட்டுத் தலங்களின் பெயர்கள் வந்துள்ளன.

### தமிழ் நலம்

சிவானு பூதிச் செல்வராகிய பரஞ்சோதி முனிவர் சிறந்த தண்டமிழ்ப் புலவராகவும் விளங்கினவர். இவருடைய புலமை நலம் இந்த நூலில் மிக நன்றாக வெளிப்படுகிறது. தமிழின்பால் இவருக் குள்ள மதிப்பு அளவிடற்கரியது. அதன் தெய்வத் தன்மையை நன்கு உணர்ந்தவர். தமிழ் இலக்கண இலக்கியங்களில் துறை போயவர்.

இவருடைய நடை தடையின்றிச் செல்லும் ஆற்றின் ஒழுக்கைப் போல இருக்கிறது. இனிய ஓசையுடன் விளங்குகிறது. வையை ஆற்றுக்கு நல்ல கவிதையை உவமை கூற வந்த இப் புலவர் அக் கவிதைக்கும் ஆற்றுக்கும் உரிய பொதுப்பண்பாகச் சிலவற்றைச் சொல்கிறார்.

" .. .. கலைமாண்ட கேள்வி
வல்லார் கவிபோல் பலவான்துறை தோன்ற வாய்த்து
சொல்லாறு தோறும் பொருளாழ்ந்து தெளிந்து தேயத்து
எல்லாரும் வீழ்ந்து பயன்கொள்ள இறுத்த தன்றே" (870)

என்று இவர் கூறும் நல்ல கவிதையின் பண்பை இவருடைய திருவாக்கில் நன்றாகக் காணலாம்.

இவர் தமிழின் பெருமையை இறைவனோடும், அற்புதச் செயல் செய்த சமயாசாரியர்களோடும் சார்த்திச் சொல்லும் அழகே அழகு.

இறைவன் இரத்தின சபை, பொன்னம்பலம், வெள்ளிமன்று, தாமிர சபை, சித்திர சபை, என்று திருவாலங்காடு தொடங்கித் தில்லை, மதுரை, திருநெல்வேலி, திருக்குற்றாலம் என்றுள்ள தலத்தி லுள்ள சபைகளில் தெற்கே நோக்கித் திருநடனம் ஆடுகிறான். வரவரத் தெற்கே வருவது எதற்கு? சந்தனமணம் வீசும் தென்றல் காற்றை மடுக்கவும் தமிழைத் திருச் செவியால் கேட்டுத் திளைக்கவும் அப்படிச் செய்கிறானாம்.

*"கடுக்க வின்பெறு கண்டனும் தென்திசை நோக்கி*
*அடுக்க வந்துவந் தாடுவான்; ஆடலின் இளைப்பு*
*விடுக்க ஆரமென் கால்திரு முகத்திடை வீசி*
*மடுக்க வும்***தமிழ் திருச்செவி யாந்தவும்** *அன்றோ?"* (86)

இறைவனே சங்கப் புலவனாக வீற்றிருந்து தமிழை ஆராய்ந்தான்; அத்தகைய மொழியை இலக்கண வரம்பிலாத சில மொழிகளைப்போல எண்ணலாமா?

*"கண்ணு தற்பெருங் கடவுளும் கழகமோடு அமர்ந்து*
*பண்ணு றத்தெரிந் தாய்ந்தஇப் பசுந்தமிழ் ஏனை*
*மண்ணி டைச்சில இலக்கண வரம்பிலா மொழிபோல்*
*எண்ணி டைப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ?"* (88)

தொண்டர் நாதனைத் தூது போக விடுத்தது முதலிய அற்புதச் செயல்களைச் செய்தது, "கன்னித் தண்டமிழ்ச் சொலோ, மறுபுலச் சொற்களோ சாற்றீர்" (89) என்று கேட்கிறார்.

இவ்வளவு உயர்வாகத் தமிழைப் பாராட்டிப் பாடிய புலவர்கள் பழங்காலத்தில் யாரும் இல்லை. தமிழை அருந்தமிழ் (228), உரைபெறுதமிழ் (146), தண்டமிழ் (89), தீந்தமிழ் (532) பசுந் தமிழ் (88), பாரொடு திசை பரவிய தமிழ் (869), முத்தமிழ் (81) என்று பாராட்டுவார்; முத்தமிழை வேதமாக உருவகம் செய்வார் (81); ஞானசம்பந்தர் தேவாரத்தை, "வேதத் தமிழ்" (188) என்பார்.

**இலக்கணச் செய்திகள்**

ஐந்திலக்கணமும் நன்குணர்ந்தவர் இம்முனிவர். தமிழ், இலக்கண வரம்புடையது என்று சிறப்பிப்பர் இவர். இலக்கணச் செய்திகள் பலவற்றை இடையிடையே எடுத்தாள்கிறார்.

காப்பியம் என்பது, தன்னிகர் இல்லாத் தலைவனையுடையதாக வரவேண்டுமென்று தண்டியலங்காரம் கூறுகின்றது. அதை நினைந்து இவர் ஒரு பாடலை அமைக்கிறார்.

"தன்னிகர் உயர்ச்சி இல்லான்
காப்பியத் தலைவன் ஆக
முன்னவர் மொழிந்த தேனோர்
தமக்கெலாம் முகமன் அன்றோ?
அன்னது தனதே ஆகும்
அண்ணலே பாண்டி வேந்தாய்
இந்நகர்க் கரசன் ஆவான்;
இக்கவிக் கிறைவன் ஆவான்' (199)

மெய்ப்பாடுகள் சிலவற்றைச் சில இடங்களில் காணலாம். நாணம் உள்ளபெண்களால் காலால் நிலத்தைக் கிளறுவது ஒரு வகை மெய்ப்பாடு. இதனை, மீனாட்சியம்மை கைலையில் இறைவனைக் கண்டபோது நாணுற்று நின்றதை,

"கெண்டை உண்கணும் புறஅடி நோக்கமண்
கிளைத்து மின்என நின்றாள்" (642)

என்றும், குண்டோதரன் அட்ட சோற்றையெல்லாம் தின்றும் பசியாறமல் நின்றதைக் கண்டு, அதிசயித்துப் பிறகு நாணம் எய்தி வந்து நின்றதை,

" ...நாணம்உள் கிடப்ப
இலங்கு பூங்குழல் சுவல்மிசை இறக்கியிட்டு ஒல்கி
நிலங்கிளைத்துநின் றாள்" (843)

என்றும் எடுத்துரைப்பார்.

## உவமை

இவருடைய திருவாக்கில் பலவகை அணிகள் ஒன்றனை ஒன்று முந்திக் கொண்டு வந்து பொருந்திச் சுவை ஊட்டுகின்றன.

மதுரைமாநகர் திருமகளின் தாமரைபோலவும் கலைமகளின் வெண்டாமரையாகவும், ஞானமகளுக்குரிய யோக பீடமாகவும் நில மகளுக்குத் திலகமாகவும் விளங்குகிறது (95).

சொக்கலிங்கப் பெருமானைத் தரிசித்து வழிபட்டவர்களின் பாவங்கள் யாவும் அழிந்துவிடும். இதற்குப் பல உவமைகளை எடுத்துரைக்கிறார். நெருப்பில் பட்ட பஞ்சு போலவும், கோபத்தினால் சிதையும் தவம் போலவும், மருந்தினால் நீங்கும் நோய் போலவும், உலோபத்தால் அழியும் உத்தம குணங்கள் போலவும், சூரியனால் அழியும் இருள் போலவும், பெருங்காற்றால் உடைபடும் மேகங்கள் போலவும், சிங்கம் சீற மாயும் யானை போலவும், வச்சிரத்தால் பொடிபடும் குன்றம் போலவும், காம நோயால் கெடும் மதி போலவும், சிவஞான நோக்கால் கெடும் அவிச்சை போலவும்,

கருடன் சீறக் கெடும் பாம்பு போலவும், செருக்கினுல் அழியும் கல்வி போலவும் அவை அழிந்தன என்று மூன்று பாடல்களில் விரித் துரைக்கிருர் (305-7).

நீதிகளே உவமையாக்கி அழகு பெற அமைப்பதிலும் இவர் வல்லவர். கோபத்தால் தவம் சிதையும், உலோபத்தால் நற் குணங்கள் அழியும் (305), காமத்தால் அறிவு கெடும், செருக்கினுல் கல்வி அழியும் (307), பிறருக்கு இட்டு உண்ணுதவர் வயிறு காந்தும் (847) என்பன போன்ற நீதிகள் அங்கங்கே உவமையாக வருகின்றன.

### உருவகம்

உருவகம் என்னும் அணியையும் அங்கங்கே அழகுறப் பொருந் தும் படி அமைத்திருக்கிருர். சித்தி விநாயகர் வாழ்த்தில் அவரை வேழமாக உருவகித்து, உள்ளத்தைக் கூடமாகவும், ஊக்கத்தைத் தறியாகவும், அன்பைச் சங்கிலியாகவும் சிவபோதத்தைக் கவள மாகவும் கருணையைப் பதமாகவும் உருவகிக்கிருர் (15) இது முற்றுருவகம்.

பாண்டி நாட்டை நிலமகளின் மார்பில் உள்ள ஆரமாகவும், புறநகர்களேச் சுற்றியுள்ள மணியாகவும், மதுரை மாநகரத்தை நடு நாயக மணியாகவும் உருவகம் செய்கிருர் (93.) ஒருபாடலில் பிறவியைக் கடலாக உருவகம் செய்தவர், திருநீற்றையும் ஐந்தெழுத் தையும் கப்பலாகவும், சிவபிரான் அடியைக் கரையாகவும் அமைக் கிருர் (179.) சேனையென்னும் கடலில் தேர்கள் என்னும் கப்பல் களும், குதிரைகளென்னும் அலைகளும், முரசின் ஓசையாகிய அலை ஓசையும், வாளாகிய மீனும், கவரிகளாகிய நுரையும், யானை களாகிய மேகங்களும் காட்சி அளிக்கின்றன (615).

### பிற அணிகள்

ஒப்புமைக் கூட்டம் (16, 20, 301, 302), வேற்றுப் பொருள் வைப்பு (54, 347, 408, 790, 1138), சொற்பின் வருநிலை (9, 13, 972), சொற்பொருட்பின் வருநிலை (16, 23, 426, 972, 1119, 1302) தற்குறிப்பேற்றம் (135, 191, 618, 731) ஆகிய அணிகளும் சிலேடை அணியும் (17, 19, 39, 72, 127, 128, 130, 131, 723, 865-7) பல இடங்களில் விரவி வருகின்றன.

### நயமான இடங்கள்

சில செய்திகளே இவர் சொல்லும் போது நயமுற அமைக்கிருர். ''அம்பலத்துள் ஆடியருள் பேரொளியை அகத்துள் வைப்பாம்''(10)

என்னும் போது வீட்டுக்கு விளக்கேற்றுவோம் என்று சொல்வது போல இருக்கிறது. 'தென்முகக் கடவுள் மோன உபதேசம் செய்தார், அவரை நாம் எப்போதும் நினைக்க வேண்டும்' என்ற கருத்தை, "சொல்லாமற் சொன்னவரை நினையாமல் நினைந்து" (14) என்று அமைக்கிறார். மறதியிருந்தால் அங்கே பிறகு நினைப்புவரும். எப்போதும் மறவாமல் நினைப்பதையே' 'நினையாமல் நினைந்து' என்று நயம் பெறச் சொன்னார். பாண்டிய மன்னருடைய கண்ணி வேம்பு; அவர்களுடைய அடியில் ஆத்தியையும் பனையையும் அணிந்த சோழரும் சேரரும் பணிகிறார்கள். இதை "முடிமிசை வேம்பு நாற முருகவிழ் ஆரும் போந்தும், அடிமிசை நாறத் தென்னர் வழிவழி அரசு செய்யும்" (172) என்று அழகுபெறக் கூறுகிறார்.

மலையத்துவச பாண்டியன் தடாதகைப் பிராட்டிக்கு முடி சூட்டிய பிறகு மண்ணுலக வாழ்வை நீத்தான். இதனை அமங்கல வாசகம் வராமல், "மண்ணொடு மகட்களித்து வான் நாடு பெற்றான் அம் மகவு பெற்றான்" (559) என்று நலமுறக் கூறுவார். உக்கிரபாண்டியன் மழையில்லாமல் நாடு பஞ்சம் அடைந்ததை எண்ணி இறைவனிடம் வந்து வணங்கினான். இறைவன் வாளா இருந்தான். பாண்டியன் மிக்க துயரத்தோடு அரண்மனையை அடைந்தான். அப்போது கதிரவன் மறைந்தான். இதை, "மருத்தார் மார்பன், கரைக்கு அரிதாய துன்பக் கடலில் வீழ்ந் திருக்கை புக்கான், அரக்கர் போர்க் கடலின் நீந்தி அருக்கன் நீர்க் கடலின் வீழ்ந்தான்" (1119) என்று சொல்வது, அறிந்து இன்புறத் தக்கது. கடல் வெள்ளம் பெருகி வருகிறது; "மண் புதைக்கத் திசை புதைக்க மயங்கிருள் போல்வரும் நீத்தம், விண்புதைக்க எழுமாட வியனகரின் புறத்திரவி, கண் புதைக்க" வருகிறது. அப்போது பாண்டிய அரசன் இறைவனைக் சரணடைகிறான். அங்கே இறைவனை, "பெண்புதைக்கும் ஒருபாகப் பிரான்" (1302) என்று குறிப்பிடுவது சுவையாக இருக்கிறது. இப்படி நயமாக உள்ள இடங்கள் பலப்பல.

### பிறநூற் சொல்லும் பொருளும்

பரஞ்சோதி முனிவர் பல நூலும் கற்றுத் துறைபோன புலவர் பெருமான். பழந்தமிழ் நூல்களில் பயின்ற சொல்லும் பொருளும் இவருடைய திருவாக்கில் அங்கங்கே இழையோடி நிற்கின்றன.

"முரவை போகிய முரிவில்வால் மூரல்" (840) என்று நல்ல அரிசியாலான சோற்றை இவர் வருணிப்பர். இது பொரு "நராற்றுப் படையில் வரும்" முரவை போகிய முரியா அரிசி, விரலென நிமிர்ந்த நிரலமை புழுக்கல்" (113-4) என்பதை அடியொற்றியது. "ஓரே ருழவர் போல் வாடி நிற்பார்" (147) என்ற

உவமை, ''ஓரேர் உழவன் போலப், பெருவிதுப் புற்றன்ருல்'' (131) என்னும், ''நொச்சிப்பா சிலையன்ன பைந்தாள் மஞ்ஞை'' (417) என்னும் உவமை, ''மயிலடி இலைய மாக்குரல் நொச்சி'' (138) என்றும் குறுந்தொகையில் வருவனவற்றை அறிந்து அமைத்தவை. திருக்குறளின் சொல்லாட்சி, கருத்து இரண்டும் வந்துள்ள இடங்கள் பல. ''கட்புலன் ஆதி ஐந்தும் உவப்புறக் கனிந்த காமம்'' (144) என்பது, ''கண்டு கேட்டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும், ஒண்டொடி கண்ணே உள'' (1101) என்ற குறளின் கருத்தை அடக்கியது. ''அருந்தினர் அருந்திச் செல்ல அருந்துகின்ருரும் ஆங்கே, இருந்தினி தருந்தா நிற்க இன்னமு தட்டுப் பின்னும், விருந்தினர் வரவு நோக்கி நிற்பார்'' (147) என்பதில், செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான், நல்விருந்து வானத்த வர்க்கு'' (86) என்ற குறளை நினைப்பிக்கிறது. ''அதுபல தருமம் என்று உரைக்கும், மின்னை ஈன்றது அஃது ஈன்றதால் விழுத்தகு புகழே'' (190) என்பதில், ''உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப் பார்க்கொன், றீவார்மேல் நிற்கும் புகழ்'' (232) என்பதன் கருத்தைக் காணலாம். ''குடம்பை தனித்தொழியப் புள்பறந் தற்றே, உடம்பொ டுயிரிடை நட்பு'' (338) என்ற குறளின் கருத்தை இவ்வாசிரியர், ''வீறுமை, குடம்பையும் தான் எனும் கொள்கைத் தேகொலாம், உடம்பையும்'' (376) என்ற பாடலில் அமைத்தார். ''வெவ்வே றுெற்றுவிட் டுணர்ந்தும்'' (571) என்னும் அரசியல் நுட்பத்தை, ''ஒற்றெற்றித் தந்த பொருளையும் மற்றுமோர், ஒற்றினுல் ஒற்றிக் கொளல்'' (588) என்னும் குறளிலிருந்து அறிந் தவர் இவர். ''வான் செய்யும் நன்றிக்கு வையகத்தோர் செய்யும் கைம் மாறுஒன் றுண்டோ'' (1280) என்பது, ''கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு, என் ஆற்றுங் கொல்லோ உலகு'' (211) என்ற குறளின் எதிரொலி யென்பதற்கு ஐயம் இல்லை.

தடாதகைப் பிராட்டியின் திருவவதாரத்தைச் சொல்லும் இவ் வாசிரியர், ''மாந்தர் பயில் மூவறு சொல் மாநில வரைப்பில், தீந்தமிழ் வழங்குதிரு நாடது சிறப்ப'' அப்பிராட்டியார் தோன்றினர் என்கிருர் (532). இது, திருஞானசம்பந்தர் திருவவதாரத்தைச் சொல்ல வந்த சேக்கிழார், ''திசையனைத்தின் பெருமையெலாம் தென்றிசையே வென்றேற, .. அசைவில் செழுந்தமிழ் வழக்கே அயல் வழக்கின் துறை வெல்ல'' என்று கூறுவதனேடு ஒப்புநோக்கி யின்புறற்பாலது.

சிறந்த காப்பியமாகிய கம்பராமாயணத்தில் நன்கு ஆழங்காற் பட்டவர் இம் முனிவர்பிரான் என்றே தோன்றுகிறது. கம்ப

நாடனுடைய விருத்தக் கவித்திறத்தை இவர் வாக்கிலும் காண்கிறோம். கம்பன் இராமகாதையை ''ஆசை பற்றி அறைய லுற்றேன்'' என்றான்; இவரும், ''இதனைச் சொல்லு வேனெனும் ஆசை'' (30) என்கிறார். ''உளப்பரும் பிணிப்புறு உலோபம் ஒன்றுமே, அளப்பருங் குணங்களை அழிக்குமாறு போல்'' (தாடகைவதை 43) என்பது கம்பன் வாக்கு; ''உத்தம குணங்களெல்லாம் உலோபத்தால் அழியுமாபோல்'' (305) என்பது இவர் வாக்கு. ''தென்சொற் கடந்தான் வட சொற் கடற்கு எல்லை தேர்ந்தான்'' (நகர் நீங்கு. 140) என்று கம்பன் இராமனைச் சிறப்பிப்பான். "வடசொற்கடல் தென் சொற்கட லிகந்தோன்'' (520) என்று மலையத்துவசனையும், ''செந்தமிழ் வடநூல் எல்லை தெரிந்தவர்'' (569) என்று சில பெரியோரையும் இவர் சிறப்பிப்பார். தடாதகைப் பிராட்டியையும் சுந்தரேசப் பெருமானையும் கண்ட மகளிர் மகிழ்ச்சி மிகுதியால் சொல்வதைக் கூறும் பாடல்கள் (719-20) கம்பராமாயணத்தில் இராமனைக் கண்ட மிதிலை மாநகர் மகளிர் உறுவனவற்றோடு ஒப்பிட்டு இன்புறத் தக்கவை. குண்டோதரன் உண்ட வேகத்தைச் சொல்லவந்த இவ் வாசிரியர், ''அடுத்தி ருந்ததே கண்டனர் அன்னமா மலையை, எடுத்த யின்றதும் அடிசிலங்கிருந்ததும் காணார்'' (838) என வருணிக்கிறார். இது, ''கடுப்பினில் யாரும் அறிந்திலர் கையால், எடுத்தது கண்டனர் இற்றது கேட்டார்'' என்ற கம்பன் பாடலை நினைவுறுத்துகிறது. இராமனை, ''ஆடவர் பெண்மையை அவாவும் தோளினாய்'' என்று விசுவாமித்திரர் வியப்பதாகச் சொல்வான் கம்பன். இவ்வாசிரியரோ உக்கிரகுமார பாண்டியனை, ''அழகினால் மதனும் பெண்மை அவாவுறும் இவன்'' (940) என்பார்.

நன்னூலில் விடை இப்படி அமைந்திருக்க வேண்டும் என்பதை,

*''தம்பால் இல்லது இல்லெனின் இனனாய்*
*உள்ளது கூறி மாற்றியும்; உள்ளது*
*சுட்டியும் உரைப்பர் சொற்சுருங் குதற்கே''* (406)

என்ற சூத்திரம் கூறுகிறது. இந்தச் சூத்திரத்தை உள்ளத்தே வைத்து வணிகருடைய இயல்பைச் சொல்லும்போது அழகிய பாடல் ஒன்றை இம் முனிவர் அமைக்கின்றார்.

*''புல்லிஓர் பண்டம் கொள்வார் வினவின்அப் பொருள்தம் பக்கல்*
*இல்லெனின் இனமாய் உள்ள பொருளுரைத்து எதிர்ம றுத்தும்*
*அல்லதப் பொருள்உண் டென்னின் விலைசுட்டி அறுத்து நேர்ந்தும்*
*சொல்லிலும் இலாபம் கொள்வார் தொன்மர பிருக்கை சொல்வாம்''*
(149)

என்பதைக் காண்க.

## மரபும் வழக்கமும்

புலவர்கள் மேற்கொண்ட சில கவி மரபுகளும், சான்றோர் வழக்கில் ஆண்ட மரபுகளும் இக் காண்டத்தில் அங்கங்கே வருகின்றன.

நெஞ்சைத் தூது விடுதல் (732), இசைப் பாட்டைக் கந்தருவ மார்க்கமாகிய இடைமடக்காக அமைத்தல் (594, 595, 596) என்பவை இலக்கிய மரபு. வேளாளர்களைக் கங்கையின் மரபினர் என்பது, (145), யாழில் தெய்வம் உறைவதாகச் சொல்வது, (593) பண்டை மரபு. பலவகை அறங்கள் (61) நான்கு வகை உறுதிப் பொருள்கள் (287), எட்டு வகை மங்கலங்கள் (666), புவலோகம் முதலிய உலகங்கள் (908), குழந்தைப் பருவத்துக்குரிய சடங்குகள் (948), மணமக்களை உமாமகேசுவரராகப் பாவித்தல் (1012), திருமணச் சடங்குகள் (1014, 1020) முதலியவை ஆன்றோர் மரபை ஒட்டிக் கூறப்படுகின்றன.

## அரிய செய்திகள்

நுட்பமாகவும் அருமையாகவும் உள்ள சில செய்திகள் வருமாறு:

முருகன் வேலால் சூரன் மார்பையும் மலையையும் ஒருங்கே துளைத்தான். (16). ஆசிரியனுக்குச் செய்த குற்றத்தை யாராலும் தீர்க்க இயலாது (411), வயிரம் எல்லாவற்றையும் துளையிட்டுத் தன்னையும் துளைப்பதால் மணிகளில் முதன்மையாயிற்று (1255), பால்குடத்தில் நீலமணியை இட்டால் பால்முழுவதும் நீலமாகத் தோற்றும். (1267)

## அருஞ்சொற்களும் சொற்றொடர்களும்

இவர் ஆளும் அரிய சொற்களும் தொடர்களும் சில உண்டு.

மாணிக்கவாசகரை அழுதடி அடைந்த அன்பன் என்பார் (22); புளியங்காயைக் கூனலங்காய் (73) என்பார். பிரதி சாபத்தைப் பிறிது சாபம் (459) என்று தமிழாக்குவார். அருச்சனை செய்தலை அருச்சி செய்தல் என்பர் (482); இரவைக்குருட்டுக்கங்குல் (1038) என்று கூறுவார். தன் என்பதற்கு தன் என்னும் சாரியையை இயைத்து, "தன்றன்னை உடைய" (886) என்று ஆளுவார்.

## விரிவான செய்திகள்

காப்பியத்தை அகலக்கவி என்பார்கள். எதையும் விரிவாகச் சொல்லும் வாய்ப்பு, காப்பியம் பாடும் புலவனுக்கு உண்டு. அதனால் அவனை வித்தார கவி என்றும் சொல்வதுண்டு. பரஞ்சோதி முனிவர் மிக விரிவாகச் செய்திகளைச் சொல்லும் இடங்கள் பல. இந்தக் காண்டத்திலுள்ள சில வருமாறு:

ஊர்களின் அவயவம் (64), பலவகை ஒலிகள் (136, 203, 814), மக்கள் பொழுது போக்கும் வகை (195–8), பூசை பற்றிய செய்திகள் (315–22, 428–9), கோயிலும் அங்கங்களும் (508–12), தடாதகைப் பிராட்டியின் இளம் பருவ வருணனை (550–51), அரசர்கள் (673–4), இறைவன் கோலம் கொள்ளல் (696–700), இறைவன் வருகை (701–712), இறைவியின் கோலம் (755–63), திருமணச் சடங்குகள் (784–8), தவங்களின் வகை (830–34), உக்கிர பாண்டியன் திருவவதாரத்தால் உண்டாகும் நல்ல விளைவுகள் (929-34), உக்கிர பாண்டியன் உறுப்பு நலங்கள் (956–62), குணங்கள் (664–5), பெண்களின் உறுப்பு நலம் (996–1009), சோம வார விரதம் (1058–66),மணியின் இலக்கணம் (1211) முதலியன.

திருவிளையாடற் புராணம் ஓசை நயம் மிக்க செய்யுட்களை உடையது, பக்திச்சுவை நிரம்பியது, சொற் சுவை பொருட்சுவை நிரம்பியது, சிவபெருமானின் புகழையும் அம்மையின் சிறப்பையும் பல வகையில் எடுத்துக் காட்டுவது.

இதன் ஆசிரியர் சிவபக்திச் செல்வர்; தமிழில் சிறந்த புலமை உடையவர்; ஐந்திலக்கணமும் நன்கு கற்றவர்; பழைய நூல்களைத் தேர்ந்தவர்.

இவருடைய திருவாக்கில் தமிழின் அழகெல்லாம் இயைந்து வரும்; சைவசாத்திரக் கருத்துக்கள் இடையில் திகழும்; அணிகள் அங்கங்கே பொருந்தி இன்பந்தரும்; மரபும் வழக்கங்களும் இடையிடையே காணப்படும்.

இது காறும் வெவ்வேருக வகுத்துச் சொன்னவற்ருல் இவை புலனுகும்.

**பதிப்பு நலம்**

இத்தகைய அரிய நூலைப்பதிப்பிக்கும் அருந் தொண்டை மேற் கொண்ட திரு **தமிழ்க் கடல் ராய சொ** அவர்கள் பெரிதும்பாராட்டுதற் குரியவர். மூலபாடத்தை யாவரும் தெளிவாகப் பொருளுணரும் வகையில் பதம் பிரித்து அமைத்திருக்கிருர்; நிறுத்தக் குறிகளும் பெய்திருக்கிருர். இன்றியமையாத சொற்களுக்குப் பொருளும் கருத்துவிளக்கமும் அடிக் குறிப்பாக அமைத்திருக்கிருர். படிப்பவர்கள் அதிக வருத்த மின்றித் தெரிந்து கொள்ளும் வகையில் இந்தப் பதிப்பு அமைந்திருப்பது ஒருசிறப்பு.

இதனை வெளியிடும் மதுரைத் திருக்கோயில் அறங்காவலர்களைத் தமிழுலகம் பாராட்டும் என்பதில் ஐயம் இல்லை.

இந்த மதுரைக் காண்டத்தைப் போலவே பிற காண்டங்களும் விரைவில் வெளிவர அங்கயற்கண்ணி யுடனுறை ஆலவாயரன் அருள் செய்வானென்று நம்புகிறேன்.

'காந்தமலை'
சென்னை – 28
11—11—1973

**கி. வா. ஜகந்நாதன்**

உ
சிவமயம்

# திருவிளையாடற் புராணம்

## மதுரைக் காண்டம்

### காப்பு

1 சத்தி யாய்,சிவ மாகி, தனிப்பர
முத்தி யான முதலைத் துதிசெய,
சுத்தி யாகிய சொற்பொருள் நல்குவ;
சித்தி யானைதன் செய்யபொற் பாதமே. 1

### வாழ்த்து

2 மல்குக வேத வேள்வி! வழங்குக சுரந்து வானம்!
பல்குக வளங்கள் எங்கும்! பரவுக அறங்கள்! இன்பம்
நல்குக உயிர்கட்கு எல்லாம்! நான்மறைச் சைவம் ஓங்கிப்
புல்குக உலகம் எல்லாம்! புரவலன் செங்கோல் வாழ்க! 2

### நூல்பயன்

3 திங்கள்அணி திருவால வாய்எம் அண்ணல்
திருவிளையாட்டு இவை,அன்பு செய்து கேட்போர்
சங்கநிதி பதுமநிதிச் செல்வம் ஓங்கி,
தகைமைதரு மகப்பெறுவர்; பகையை வெல்வர்;
மங்கலநன் மணம்பெறுவர்; பிணிவந்து எய்தார்;
வாழ்நாளும் நனிபெறுவர்; வானாடு எய்திப்
புங்கவராய் அங்குள்ள போகம் மூழ்கிப்
புண்ணியராய்ச் சிவன்அடிக்கீழ் நண்ணி வாழ்வார். 3

---

1. சத்தி: அம்பிகை. சிவம்: கடவுள். தனிப்பரமுத்தி: ஒப்பற்ற மேலானவீடு. முதல்: முழுமுதற்கடவுளான ஆலவாய் அண்ணல். சுத்தியாகிய: தூய்மையான. சொற் பொருள்: சொல்லும் பொருளும். நல்குவ: அருளுவதாக. சித்தியானை: எண்ணத்தை முடிக்கின்ற விநாயகக் கடவுள்.

2. மல்குக: நிறைக. வழங்குக: ஈக. வானம்: மழை. பல்குக: பெருகுக. புல்குக: நிலைபெறுக. புரவலன்: காவலன்.

3. திங்கள்:சந்திரன். அண்ணல்:சிவபெருமான். தகைமை தரு: பண்புமிக்க. நனி: நிறைய. புங்கவர்: தூய்மையானவர். நண்ணி: பொருந்தி.

# கடவுள் வாழ்த்து

## சிவம்

4 வென்றுளே புலன்க ளைந்தார்,
மெய்யுணர் உள்ளந் தோறும்,
சென்றுளே அமுதம் ஊற்றும்
திருவருள் போற்றி! ஏற்றுக்
குன்றுளே யிருந்து காட்சி
கொடுத்தருள் கோலம் போற்றி!
மன்றுளே மாறி ஆடும்
மறைச்சிலம்பு அடிகள் போற்றி! 4

## சத்தி

5 சுரும்புமுரல் கடிமலர்ப்பூங் குழல்போற்றி!
உத்தரியத் தொடித்தோள் போற்றி!
கரும்புருவச் சிலைபோற்றி! கவுணியர்க்குப்
பால்சுரந்த கலசம் போற்றி!
இரும்புமனம் குழைத்துஎன்னை எடுத்துஆண்ட
அங்கயற்கண் எம்பி ராட்டி
அரும்பும்இள நகைபோற்றி! ஆரணநூ
புரம்சிலம்பும் அடிகள் போற்றி! 5

## பரசிவம்

6 பூவண்ணம் பூவின் மணம்போலமெய்ப் போத இன்பம்
ஆவண்ணம் மெய்கொண் டவன்தன்வலி ஆணை தாங்கி
மூஅண்ணல் தன்சந் நிதிமுத்தொழில் செய்ய வாளா
மேவுஅண்ணல் அன்னான் விளையாட்டின்வினையைவெல்வாம் 6

---

4. புலன்களைந்தார்: ஐம்புலன்களை வென்றவர். போற்றி: வணக்கம். ஏற்றுக்குன்று: மலையனைய இடபம். மன்று: (ஈண்டு)வெள்ளியம்பலம். எங்கும் வலக்கால் ஊன்றி இடக்கால் தூக்கி ஆடும் பெருமான்; மதுரை வெள்ளியம்பலத்தில் இடக்கால் ஊன்றி. வலக்கால் தூக்கி மாறி ஆடுகின்றார்.

5. சுரும்பு: வண்டு. முரலுதல்: ஒலித்தல், கடி: மணம். பூங்குழல்; அழகிய கூந்தல். உத்தரியம்: மேலாடை. தொடி: வளையல். புருவச்சிலை; வில் அனைய புருவம். கவுணியர்: திருஞானசம்பந்தப் பெருமான். கலசம்; தனம். அங்கயற்கண் எம்பிராட்டி: அழகிய மீனாட்சி யாகிய தலைவி. இளநகை; புன் சிரிப்பு. ஆரண நூபுரம்; மறையாகிய சிலம்பு.

6 பூவண்ணம் பூவின் மணம் போல; பூவும் மணமும் ஒன்றி இருத்தல் போல. போதம்: அறிவு. மெய் கொண்டவன்: முழு முதற் கடவுளாகிய சிவபெருமான். மூ அண்ணல்; முத்தொழில் செய்யும் அயன், அரி; அரன்.

## பராசத்தி

7 அண்டங்கள் எல்லாம் அணுவாக, அணுக்கள் எல்லாம்
அண்டங்கள் ஆகப் பெரிதாய்,சிறிது ஆயி னும்
அண்டங்கள் உள்ளும் புறம்பும்கரி ஆயி னும்
அண்டங்கள் ஈன்றாள் துணைஎன்பர் அறிந்த நல்லோர். 7

## சொக்கலிங்கம்

8 பூவின் நாயகன், பூமகள் நாயகன்,
காவின் நாயகன், ஆதி கடவுளர்க்கு
ஆவி நாயகன்; அங்கயற் கண்ணிமா
தேவி நாயகன்; சேவடி ஏத்துவாம். 8

## அங்கயற்கண்ணி

9 பங்கயற்கு அண்ண அரியபரம் பரன்உருவே
தனக்குரிய படிவம் ஆகி,
இங்குஅயற்கண் அகன்உலகம் எண்ணிறந்த
சராசரங்கள் ஈன்றும், தாழாக்
கொங்கை,அற்கண், மலர்க்கூந்தல், குமரி,பாண்
டியன்மகள்போல் கோலம் கொண்ட
அம்கயற்கண் அம்மைஇரு பாதப்போது,
எப்போதும் அகத்துள் வைப்பாம். 9

---

7. அண்டங்கள்: உலகங்கள். உள்ளும் புறம்பும்: உள்ளேயும் வெளியேயும். கரி: சாட்சி. அண்டங்கள் ஈன்றாள்: உலகனைத்தையும் பெற்ற அம்பிகை.

8. பூவின் நாயகன்: பிரமன். பூமகள் நாயகன்: திருமால். காவின் நாயகன்: இந்திரன் ஆவி நாயகன்: உயிரனையதலைவன். அங்கயற்கண்ணிமாதேவி நாயகன்: மீனாட்சியின் கணவன்.

9. பங்கயன்: பிரமன். அண்ண அரிய: நெருங்கமுடியாத. பரம்பரன்: சிவபெருமான். இங்கு அயற்கண் அகன் உலகம்: இங்கும் வேறு இடத்தும் உள்ள பரந்த உலகம். ஈன்றும்: பெற்றும். தாழா: முதிராத. அல்கண்: கருமை நிறமான கண். குமரி: உமை. பாதப்போது: திருவடித்தாமரை.

## கூத்தப்பெருமான்

10 உண்மைஅறிவு ஆனந்த உருவாகி,
எவ்வுயிர்க்கும் உயிராய், நீரின்
தண்மை,அனல் வெம்மை,எனத் தனைஅகலாது
இருந்து,சரா சரங்கள் ஈன்ற
பெண்மைஉருவு ஆகிய,தன் ஆனந்தக்
கொடி,மகிழ்ச்சி பெருக, யார்க்கும்
அண்மையதாய், அம்பலத்துள் ஆடியருள்
பேரொளியை, அகத்துள் வைப்பாம். 10

## சோமசுந்தரர்

11 சடைமறைத்து, கதிர்மகுடம் தரித்து,நறும்
கொன்றைஅம்தார் தணந்து, வேப்பம்
தொடைமுடித்து, விடநாகக் கலன்அகற்றி,
மாணிக்கச் சுடர்ப்பூண் ஏந்தி,
விடைநிறுத்தி, கயல்எடுத்து, வழுதிமரு
மகன்ஆகி, மீன நோக்கின்
மடவரலை மணந்து,உலகம் முழுதாண்ட
சுந்தரனை, வணக்கம் செய்வாம். 11

## தடாதகை

12 செழியர்பிரான் திருமகளாய்க் கலைபயின்று,
முடிபுனைந்து, செங்கோல் ஓச்சி,
முழுதுஉலகும் சயம்கொண்டு, திறைகொண்டு,
நந்திகணம் முனைப்போர் சாய்த்து,
தொழுகணவற்கு அணிமணமா லிகைசூட்டி,
தன்மகுடம் சூட்டி, செல்வம்
தழைவுறுதன் அரசளித்த பெண்ணரசி
அடிக்கமலம், தலைமேல் வைப்பாம். 12

---

10. ஆனந்தக்கொடி: சிவகாமி. அண்மையதாய்: அருகாக. பேரொளி; நிறைந்த ஒளிவடிவமான கூத்தப்பெருமான்.

11. அம்தார்; அழகியமாலை. தணந்து; நீத்து. வேப்பம் தொடை; வேப்பம்பூ மாலை. விடநாகக் கலன்: நஞ்சுடைய பாம்பு ஆபரணம். சுடர்ப்பூண்: ஒளிமிக்க அணி. விடை: இடபம். கயல்: மீன். வழுதி: பாண்டியன். மீன நோக்கின்மடவரல்: மீனுட்சி. சிவனுக்குரியவற்றை எல்லாம் நீக்கி, பாண்டியனுக்கு உரியவற்றைக் கொண்டு, மீனுட்சியை மணந்து, பாண்டியனுக்கு மருகனுகி, அரசாண்ட சுந்தரனுக்கு வணக்கம் என்பது பாட்டின் கருத்து. மீனுட்சி திருமணத்தில் "அதிர் விடைக் கொடி" என்று தொடங்கும் பாடல் இக்கருத்துக்கு ஒத்தது.

12. செழியர்பிரான்; பாண்டியன். திறை: கப்பம். தொழு கணவன்; அனைவரும் வணங்கத்தக்க சிவபெருமான். மாலிகை; மாலை. பெண்ணரசி; மீனுட்சி.

## கால்மாறி ஆடியகடவுள்

13 பொரும்ஆறில் கிளர்தடம்தோள் ஒருமாறன்
மனம்கிடந்த புழுக்கம் ஆற,
வரும்ஆறில் கண்அருவி மாருது
களிப்படைய, மண்ணும் விண்ணும்
உருமாறிப் பவக்கடல்வீழ்ந்து ஊசல்எனத்
தடுமாறி உழலும் மாக்கள்,
கருமாறிக் கதியடைய, கால்மாறி
நடித்தவரைக் கருத்துள் வைப்பாம். 13

## தட்சிணுமூர்த்தி

14 கல்ஆலின் புடைஅமர்ந்து, நான்மறைஆறு
அங்கமுதல் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும், வாக்குஇறந்த
பூரணமாய், மறைக்குஅப் பாலாய்,
எல்லாமாய், அல்லதுமாய், இருந்ததனை
இருந்தபடி இருந்து காட்டி,
சொல்லாமற் சொன்னவரை, நினையாமல்
நினைந்து,பவத் தொடக்கை வெல்வாம். 14

## சித்திவிநாயகர்

15 உள்ளம்எனும் கூடத்தில், ஊக்கம்எனும்
தறிநிறுவி, உறுதி யாகத்
தள்ளரிய அன்பென்னும் தொடர்பூட்டி
இடைப்படுத்தி, தறுகட் பாசக்
கள்ளவினைப் பசுபோதக் கவளம்இடக்
களித்துஉண்டு கருணை என்னும்
வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை
நினைந்து,வரு வினைகள் தீர்ப்பாம். 15

---

13 ஒரு மாறன்: ஒருபாண்டியன். புழுக்கம்: துயரம். வரும் ஆறில்: ஆற்றுவெள்ளம்போல். பவக்கடல்: பிறவிக்கடல். கருமாறி: பிறப்பு ஒழித்து. கதிஅடைய: வீடுபேறு எய்த. கால்மாறி நடித்தவர்: வெள்ளியம்பலத் திருக்கூத்து ஆடியவர்,

14. கல்ஆல்: கல்லாலமரம். புடை: பக்கம். நால்வர்: சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர். சொல்லாமல்சொன்னவர்: சின்முத்திரையால் அறிவித்தவர். நினையாமல் நினைந்து: மற்ருென்றை நினையாமல் அவரையே நினைந்து. ''நினைப்பற நினைந்தேன்'' என்ற திருவாசகம் ஈண்டு நோக்கத்தக்கது. பவத்தொடக்கு: பிறவித்தொடர்பு.

15. தறி: யானை கட்டும் முளை. தொடர்: சங்கிலி. இடைப்படுத்தி: பொருத்தி. தறுகண்: ஆற்றல்வாய்ந்த. கள்ளவினைப்பசுபோத: வஞ்சக வினைப்பிறவி நீங்க. கவளம்: உணவு. வேழம்: பதியாகிய யானைமுகக் கடவுள், வருவினை: மேல் வரும் வினை. உள்ளத்தை யானை கட்டும் இடமாகவும், ஊக்கத்தை யானைகட்டும் முளையாகவும், அன்பைச் சங்கிலியாகவும். வினையை உணவாகவும், உருவகப்படுத்தி, விநாயகக் கடவுளை யானையாகக் காட்டப் பெற்றது.

## குமரவேள்

16 கறங்குதிரைக் கருங்கடலும், கார்அவுணப்
பெருங்கடலும் கலங்க, கார்வந்து
உறங்குசிகைப் பொருப்பும்,சூர் உரப்பொருப்பும்
பிளப்ப,மறை உணர்ந்தோர் ஆற்றும்
அறம்குலவும் மகத்தழலும், அவுணமட
வார்வயிற்றின் அழலும் மூள,
மறம்குலவு வேலெடுத்த குமரவேள்
சேவடிகள் வணக்கம் செய்வாம். 16

## கலைமகள்

17 பழுதுஅகன்ற நால்வகைச்சொல் மலர்எடுத்து,
பத்திபடப் பரப்பி, திக்கு
முழுதுஅகன்று மணந்து,சுவை ஒழுகி,அணி
பெறமுக்கண் மூர்த்தி தாளில்
தொழுது,அகன்ற அன்பெனும்நார் தொடுத்து,அலங்கல்
சூட்ட,வரிச் சுரும்பும், தேனும்,
கொழுதுஅகன்ற, வெண்தோட்டு முண்டகத்தாள்
அடி,முடிமேல் கொண்டு வாழ்வாம். 17

## திருநந்திதேவர்

18 வந்துஇறை அடியில் தாழும் வானவர் மகுட கோடி
பந்தியின் மணிகள் சிந்த, வேத்திரப் படையால் தாக்கி,
அந்தியும் பகலும் தொண்டர் அலகுஇடும் குப்பை யாக்கும்
நந்திஎம் பெருமான் பாத நகைமலர், முடிமேல் வைப்பாம். 18

---

16. கறங்கு: ஒலிக்கின்ற. திரை; அலை. கார் அவுணப் பெருங்கடல்: கருமைவாய்ந்த அசுரராகிய பெரிய கடல். பொருப்பு: கிரௌஞ்சமலை. சூர் உரப்பொருப்பு: சூரபதுமன் மார்பாகிய மலை. மகம்: வேள்வி. மறம்: வீரம். முருகக்கடவுள் வேல் எடுத்தவுடன் இரண்டு கடல்கள் கலங்கின: இரண்டு மலைகள் பிளந்தன: இரண்டு நெருப்புக்கள் மூண்டன.

17. பழுது: குற்றம். நால்வகைச்சொல்: பெயர் வினை இடை உரி. அணி: அழகு. முக்கண்மூர்த்தி: சொக்கேசர். நார்: கயிறு. அலங்கல்: மாலை. வரிச்சுருப்பு: கோடுகளை உடைய ஆண்வண்டு. தேன்: பெண்வண்டு. கொழுது: கொழு கொழுத்து. வெண்தோட்டு முண்டகத்தாள்: வெள்ளைத் தாமரையில் இருக்கும் கலைமகள்.

18. தாழும்: வணங்கும். பந்தி: வரிசை. வேத்திரப்படை: பிரம்பு. அலகுஇடுதல்: கூட்டுதல். நந்திஎம்பெருமான்: திருநந்திதேவர்,

## சம்பந்தர்

19 கடிஅவிழ் கடுக்கை வேணித்
தாதைபோல், கனல்கண் மீனக்
கொடியனை வேவ நோக்கிக்
குறைஇரந்து, அனையான் கற்பின்
பிடிஅன நடையாள் வேண்ட,
பின்உயிர் அளித்துக் காத்த
முடிஅணி மாடக் காழி
முனிவனை, வணக்கம் செய்வாம். 19

## அப்பர்

20 அறப்பெரும் செல்வி பாகத்து
அண்ணல்அஞ்சு எழுத்தால், அஞ்சா
மறப்பெரும் செய்கை மாறா
வஞ்சகர் இட்ட நீல
நிறப்பெரும் கடலும், யார்க்கும்
நீந்துதற்கு அரிய ஏழு
பிறப்பெனும் கடலும், நீத்த
பிரான்அடி வணக்கம் செய்வாம். 20

## சுந்தரர்

21 அரவுஅகல் அல்கு லார்பால்
ஆசைநீத் தவர்க்கே வீடு
தருவம்என்று அளவில் வேதம்
சாற்றிய தலைவன் தன்னை,
பரவைதன் புலவி தீர்ப்பான்
கழுது,கண் படுக்கும் பாநாள்
இரவினில் தூது கொண்டோன்
இணையடி, முடிமேல் வைப்பாம். 21

---

19. கடி: மணம். கடுக்கை: கொன்றை. வேணி: சடை. தாதை: சிவபெருமான். கனற்கண்: 1. நெற்றிக்கண்: 2 தீயின்இடத்து. மீனக்கொடியன்: 1. மன்மதன்: 2. கூன்பாண்டியன். வேவ; 1. சாம்பராக: 2. வெப்பம் தாக்க. அனையான்: 1. மன்மதன்: 2. கூன்பாண்டியன். பிடிஅன நடையாள்: 1 இரதி: 2. மங்கையர்க்கரசி. பிடி: பெண்யானை. காழிமுனிவன்: ஞானசம்பந்தன். தாதை: மன்மதனை எரிக்க. அவன் மனைவியின் வேண்டுதலுக்கு அவனுக்கு உயிர் கொடுத்தார். ஞானசம்பந்தப்பிள்ளை கூன்பாண்டியனுக்கு வெப்பு நோயை நல்கி: அவன் மனைவியாகிய மங்கையர்க்கரசி குறை இரந்தமையால் காப்பாற்றி. நின்றசீர் நெடுமாற நாயனார் ஆக்கினார்.

20. அறப்பெரும்செல்வி; அறம்வளர்த்த நாயகியாகிய அம்பிகை. மறம்; பாவம். வஞ்சகர்: சமணர். பிரான்: திருநாவுக்கரசர். கல்லில் கட்டி அமணர் கடலில்போட அக்கருங்கடலை நீந்தியதோடு அல்லாமல், யாரும் நீந்துதற்கு அருமையான பிறவிப் பெருங்கடலையும் நீந்தினார் அப்பர் அடிகள் என்பது கருத்து.

21. அரவு: பாம்பு. தலைவன்: சிவபெருமான். பரவை: பரவைநாச்சியார். புலவி: ஊடல். தீர்ப்பான்; நீக்கும் பொருட்டு. கழுது: பேய். கண்படுத்தல்; உறங்குதல். பா நாள் இரவு நடுச்சாமம். தூது கொண்டோன்: சுந்தரமூர்த்திகள். பெண்ணாசை நீத்தவர்க்கே வீடுபேறு என்று மறைவகுத்த கடவுளையே ஓர் பெண்ணிடம் ஊடல் தீர்க்கத் தூது விடுத்தார் சுந்தரர் என்பது கருத்து.

## மணிவாசகர்

22 எழுதஅரும் மறைகள் தேரு
இறைவனை, எல்லிற் கங்குல்
பொழுதுஅறு காலத்து என்றும்
பூசனை விடாது செய்து,
தொழுத,கை தலைமேல் ஏறத்,
துளும்புகண் நீருள் மூழ்கி,
அழுதுஅடி அடைந்த அன்பன்
அடியவர்க்கு, அடிமை செய்வாம். 22

## திருத்தொண்டர்

23 தந்தைதா ளொடும்பிறவித் தாள்எரிந்து,
நிருத்தர்இரு தாளைச் சேர்ந்த
மைந்தர்தாள், வேதநெறி சைவநெறி
பத்திநெறி வழாது, வாய்மெய்
சிந்தைதான் அரனடிக்கே செலுத்தினராய்ச்
சிவாநுபவச் செல்வர் ஆகிப்
பந்தமாம் தொடக்கறுத்த திருத்தொண்டர்
தாள்பரவிப் பணிதல் செய்வாம். 23

## பாயிரம்

### முதல் நூல்

24 அண்ணல்பால் தெளிந்த நந்தி
அடிகள்பால் சனற்கு மாரன்
உள்நிறை அன்பின் ஆய்ந்து
வியாதனுக்கு உணர்த்த, அந்தப்
புண்ணிய முனிவன் சூதற்கு
ஓதிய புராணம் மூஆறு
எண்ணிய இவற்றுள் காந்தத்து
ஈசசங் கிதையின் மாதோ. 24

---

22. மறைகள்: எழுதமுடியாத வேதங்கள். தேரு; தெளியாத. எல்; பகல். கங்குல்; இரவு, அறுகாலம்; ஆறுவேளை. அன்பன்; மாணிக்கவாசகர்.

23. தந்தை; சண்டேசுரரின் தகப்பனாராகிய எச்சதத்தர். தாள்; கால். பிறவித்தாள்: பிறவியின்வேர். நிருத்தர்: ஈசன். மைந்தர்: சண்டேசர். பந்தமாம் தொடக்கு; கட்டாகிய தொடர்பு. திருத்தொண்டர்: நாயன்மார். தந்தை தாளையும், பிறவித்தாளையும் அறுத்து, இறைவன் தாளை அடைந்த சண்டேசர்தாளை வணங்குவேம் என்பது அருமைப்பாடுடையது.

24. அண்ணல்: சிவபெருமான். புண்ணிய முனிவன்:வியாதன். சூதன்: சூதமுனிவன். புராணம் மூஆறு: பதினெண் புராணம். காந்தத்து: கந்தபுராணத்து. ஈச சங்கிதையில் திருவிளையாடல் சொல்லப் பட்டிருக்கின்றது என்பது கருத்து.

## நூல் செய்தற்குக் காரணம்

25 அறைந்திடப் பட்டது ஆகும்
ஆலவாய்ப் புகழ்மை; அந்தச்
சிறந்திடும் வடநூல் தன்னைத்
தென்சொலால் செய்தி என்று,இங்கு
உறைந்திடும் பெரியோர் கூறக்
கடைப்பிடித்து உறுதி இந்தப்
பிறந்திடும் பிறப்பில் எய்தப்
பெறுதும்என்று உள்ளம் தேரு, 25

## திருவிளையாடல் தொகை

26 திருநகர், தீர்த்தம், மூர்த்திச்
சிறப்புமூன்று; அந்த மூர்த்தி
அருள்விளை ஆடல் எட்டெட்டு;
அருச்சனை வினைஒன்று ஆக,
வரன்முறை அறுபத்து எட்டாம்;
மற்றவை படலமாக
விரிமுறை விருத்தச் செய்யுள்
வகைமையால் விளம்பல் உற்றேன். 26

## அவைஅடக்கம்

27 நாயகன் கவிக்கும் குற்றம்
நாட்டிய கழக மாந்தர்
மேய,இத் தலத்தி னோர்க்கு,என்
வெள்அறிவு உரையில் குற்றம்
ஆயும்ஆறு அரிதன்று; ஏனும்,
நீர்பிரித்து அன்னம் உண்ணும்
தூயதீம் பால்போல் கொள்க,
சுந்தரன் சரிதம் தன்னை. 27

---

25. வடநூல்: ஈசசங்கிதையைக் குறிக்கும். தேரு: தெளிந்து.

26. எட்டெட்டு; அறுபத்துநான்கு. வரன்முறை அறுபத்தெட்டு: வந்த வரலாறு அறுபத்து எட்டு.

27. நாயகன்; சிவபெருமான். கழகமாந்தர்; சங்கப்புலவர். இத்தலத்தினோர்: மதுரை நகரத்தார். வெள் அறிவு; அறியாமை. சுந்தரன்: சோமசுந்தரன். இறைவனுடைய பாடலுக்கும் குற்றம் சொன்ன தமிழ்ச்சங்கமிருந்த மதுரை மக்கள் என் பாடலில் குற்றம் காணுதல் எளிது எனினும், சுந்தரன்சரிதம் ஆதலின், நீரைப்பிரித்துப் பாலை உண்ணுகின்ற அன்னப்பறவை போல் ஏற்றுக் கொள்க என்பது கருத்து.

## சிறியனேன் பனுவல்

28 கவைக்கொ ழுந்துஅழல் நாச்சுவை கண்டஊன், இமையோர்
சுவைக்க இன்னமுது ஆயின; துளக்கம்இல் சான்றோர்
அவைக்க ளம்புகுந்து இனியவாய் ஆலவாய் உடையார்
செவிக்க ளம்புகுந்து ஏறுவ, சிறியனேன் பனுவல். 28

## நலமிலேன் புன்சொல்

29 பாய வாரிஉண்டு உவர்கெடுத்து உலகெலாம் பருகத்
தூய ஆக்கிய கார்எனச் சொற்பொருள் தெளிந்தோர்
ஆய கேள்வியர் துகள்அறுத்து, ஆலவாய் உடைய
நாய னார்க்குஇனிது ஆக்குப நலமிலேன் புன்சொல். 29

## ஆசை கேளா

30 அல்லைஈது,அல்லை ஈது,என மறைகளும் அன்மைச்
சொல்லி னால்துதித்து இளைக்கும்இச் சுந்தரன் ஆடற்கு
எல்லை ஆகுமோ? என்னுரை; என்செய்கோ! இதனைச்
சொல்லு வேன்எனும் ஆசைஎன் சொல்வழி கேளா. 30

## அரங்கேற்றம்

31 அறுகால்பீ டத்துஉயர்மால் ஆழிகடைந்து,
அமுதைஅரங்கு ஏற்று மாபோல்,
அறுகால்பேடு இசைபாடும் கூடல்மான்
மியத்தை,அருந் தமிழாற் பாடி,
அருகால்பீடு உயர்முடியார், சொக்கேசர்
சந்நிதியில் அமரர் சூழும்
அறுகால்பீ டத்துஇருந்து, பரஞ்சோதி
முனிவன்,அரங்கு ஏற்றி னானே. 31

---

28. கவைக்கொழுந்து அழல்: பிளவுபட்ட கொழுந்து விடுகின்ற தீ, மகத்தில் இட்ட அவிப் பொருள் இமையோருக்கு அமுதம் ஆயிற்று. துளக்கம்: அசைவு. செவிக்களம்: செவியாகிய இடம். பனுவல்: பாடல்.

29. பாயவாரி: பரந்தகடல். உவர்கெடுத்து: உப்பைப் போக்கி. கார்: மேகம். துகள் அறுத்து: குற்றத்தை நீக்கி. ஆலவாய் உடைய நாயனார்; மதுரைச் சொக்கேசர். புன்சொல்: இழிந்தசொல்.

30. சுந்தரன்: இறைவன். மறைகள்: ஈதுஅல்லை, ஈதுஅல்லை: என மறுதலைச் சொற் களால் போற்றி இளைக்கும் பண்பினன் கடவுள் என்பது கருத்து.

31. அறுகால்பீடம்: காலில்லாத பாம்புப்படுக்கை ஆழி: கடல். அரங்கு ஏற்றுதல்; வெளிக் கொணருதல். அறுகால் பேடு: ஆறுகாலையுடைய வண்டு. கூடல்மான்மியம்: திரு விளையாடற்புராணம். அறுகால்: அறுகம்புல்லினால். அறுகால்பீடம்: ஆறுகாலையுடைய இருக்கை. பரஞ்சோதி முனிவன்: திருவிளையாடல் ஆசிரியன். அரங்கு ஏற்றினான்: சபைக்கு வழங்கினான். இப்பாடல் மிக்க எதுகை நயம் வாய்ந்தது.

## திருநாட்டுச் சிறப்பு

32 கறைநி றுத்திய கந்தரச் சுந்தரக் கடவுள்,
உறைநி றுத்திய வாளினுல் பகைஇருள் ஒதுக்கி,
மறைநி றுத்திய வழியினுல், வழுதியாய்ச் செங்கோல்
முறைநி றுத்திய பாண்டிநாட்டு அணிஅது மொழிவாம். 1

33 தெய்வ நாயகன் நீறுஅணி மேனிபோல் சென்று,
பௌவம் மேய்ந்து,உமை மேனிபோல் பசந்து,பல் உயிர்க்கும்
எவ்வம் மாற்றுவான் சுரந்திடும் இன்னருள் என்னக்
கௌவை நீர்சுரந்து எழுந்தன கனைகுரல் மேகம். 2

34 இடித்து வாய்திறந்து ஒல்என எல்ஒளி மழுங்கத்
தடித்து வாள்புடை விதிர்த்துநின்று இந்திர சாபம்
பிடித்து நீள்அம்பு கோடைமேல் பெய்துவெம் பெரும்போர்
முடித்தும் நாம்என வருதல்போல் மொய்த்தன கொண்மூ. 3

35 முனிதன் நீள்வரை உச்சிமேல் முழுங்கிவான் நிவந்து
தனிதம் நீர்மழை பொழிவன, தடம்சிலை இராமன்,
கனிதல் நீர்மையால் ஆலவாய்க் கண்நுதல் முடிமேல்
புனித நீர்த்திரு மஞ்சனம் ஆட்டுவான் போலும். 4

---

32. கறை; நஞ்சு. கந்தரம்: கழுத்து. சுந்தரக்கடவுள்: சோமசுந்தரக்கடவுள். வழுதியாய்: பாண்டியனுகி. செங்கோல் முறைநிறுத்திய: அரசாட்சிசெய்த. அணி: அழகு.

33, தெய்வநாயகன்: சிவபெருமான். பௌவம்: கடல். பசந்து: பசுமை நிறமடைந்து. எவ்வம்: துன்பம் கௌவை: ஒலி. மேகமானது நீறணிந்த சிவபிரான் நிறம்போல் போய்க் கடல் குடித்து நீர்மொண்டு உமையவள் உடம்பு போலப் பசுமைபெற்று வந்தது என்பது கருத்து: இக்கருத்தைப் பல இலக்கியங்களும் பரக்கப் பேசும்,

34. ஒல்என: ஒல் ஒலிக்குறிப்பு. எல் ஒளி: சூரிய ஒளி. வாள் புடை விதிர்த்து: மின்னல் ஒளியை எல்லாப் பக்கங்களிலும் அசைத்து. இந்திரசாபம்: வானவில். கோடை மேல் பெய்து: கோடையாகிய மாற்றுன் மீது பொழிந்து. மொய்த்தன; நெருங்கி அடர்த்தன. கொண்மூ: மேகம். மேகம் போர்க்கோலம் பூண்டது என்பது கருத்து.

35. முனி அகத்தியன். நீள் வரை: பொதிய மலை. தனிதம்: ஓசை. கனிதல் நீர்மை: கனிந்த அன்புத் தன்மை. மேகங்கள் வானில் நின்றும் மழை பொழிவது வில்வல் இராமன் அன்புடன் ஆலவாய் அண்ணலுக்குத் தூய நீர் ஆட்டுதலை ஒக்கும் என்பது கருத்து.

36 சுந்த ரன்திரு முடிமிசைத் தூயநீர் ஆட்டும்
இந்தி ரன்தனை ஒத்தகார் எழிலிதென் மலைமேல்
வந்து பெய்யஅத் தனிமுதல் மௌலிமேல் வலாரி
சிந்து கின்ற,கைப் போதுஎனப் பன்மணி தெறிப்ப. 5

37 உடுத்த தெள்கடல் மேகலை உடையபார் மகள்தன்
இடத்து உதித்தபல் உயிர்க்குஎலாம் இரங்கித்தன் கொங்கைத்
தடத்து நின்றுஇழி பால்எனத் தடவரை முகடு
தொடுத்து வீழ்வன விழும்எனத் தூங்குவெள் அருவி. 6

38 கருநிற மேகம் என்னும்
கச்சணி சிகரக் கொங்கை,
அருவியாம் தீம்பால் சோர,
அகன்சுனை என்னும் கொப்பூழ்,
பொருவுஇல்வேய் என்னும் மென்தோள்,
பொதியமாம் சைலப் பாவை
பெருகுதண் பொருநை என்னும்
பெண்மகப் பெற்றாள் அன்றே 7

---

36. கார் எழிலி: கரிய மேகம். தென்மலை: பொதிகை மலை. தனிமுதல்: சிவபெருமான். மௌலி: முடி. வலாரி: இந்திரன். எழிலி இந்திரனை நிகர்க்கும் என்பதும் அம்மேகத்தினின்றும் தெறிக்கும் அரதனங்கள் இந்திரன் வழிபடும் மலர்களை ஒக்கும் என்பதும் கருத்து.

37. மேகலை: ஈண்டு ஆடை. முகடு: உச்சி. விழும்: ஓசைக்குறிப்பு. தூங்கு வெள் அருவி: இடையறாது வீழுகின்ற வெள்ளிய அருவி. நிலமகள் தான் பெற்ற உயிர்கட்கெல்லாம் பால் பொழிவது போல் அருவி வீழ்கின்றது என்பது கருத்து.

38. அகன்சுனை: அகன்றநீர் நிலை. பொருவுஇல்: ஒப்பற்ற. வேய்: மூங்கில். சைலம்: மலை. பாவை: பெண். பொருநை; தாமிரபரணிஆறு. மேகம்என்ற இரவிக்கையை அணிந்த சிகரமாகிய தனங்கள், அருவியாகிய இனிய பாலைச்சொரிய, சுனைஎன்ற கொப்பூழையும், மூங்கிலாகிய தோளையும் உடைய பொதிய மலை என்ற பெண் பொருநை என்ற பெண் மகவைப் பெற்றாள் என்பது கற்பனை.

39 கல்எனக் கரைந்து வீழுங்
கடும்புனல் குழவி கானத்து
ஒல்எனத் தவழ்ந்து தீம்பால்
உண்டுஒரீஇத் திண்தோள் மள்ளர்
செல்எனத் தெழிக்கும் பம்பைத்
தீங்குரல் செவிவாய்த் தேக்கி
மெல்எனக் காலிற் போகிப்
பணைதொறும் விளையாட்டு எய்தி, 8

40 அரம்பைமென் குறங்கா, மாவின்
அவிர்தளிர் நிறமா, தெங்கின்
குரும்பைவெம் முலையா, வஞ்சிக்
கொடிஇறு நுசுப்பா, கூந்தல்
சுரும்புஅவிழ் குழலா, கஞ்சம்
சுடர்மதி முகமாக் கொண்டு,
நிரம்பிநீள் கைதை வேலி
நெய்தல்சூழ் காவில் வைகி, 9

41 பன்மலர் மாலை வேய்ந்து,
பால்நுரைப் போர்வை போர்த்து,
தென்மலைத் தேய்ந்த சாந்தம்
மான்மதச் சேறு பூசி,
பொன்மணி ஆரம் தாங்கிப்
பொருநையாம் கன்னி, முந்நீர்த்
தன்மகிழ் கிழவன் ஆகம்
தழீஇக்கொடு கலந்தது அன்றே. 10

---

39. கல் எனக் கரைந்து:கல் என்று ஒலித்துக் கொண்டு. புனற்குழவி: நீராகிய குழந்தை. கானத்து ஒல் எனத் தவழ்ந்து: முல்லை நிலத்தில் ஒல் என்ற ஓசையுடன் தவழ்ந்து. ஒரீஇ: நீங்கி. மள்ளர்: உழவர். செல்; மேகம். பம்பை: இசைக் கருவி கால்; கால்வாய்கள், பணை: வயல். இப்பாடல் குளகம்.

40. அரம்பை: வாழை. குறங்கு: தொடை. இறுநுசுப்பு: ஒடிகின்ற இடை.கஞ்சம்: தாமரை. கைதை: தாழை. கா: சோலை. இதுவும் குளகம். மேகம் பெண்ணாக உருவகப்படுத்தப் பெறுகிறது.

41. வேய்ந்து:அணிந்து. பால் நுரைப் போர்வை: பால் போன்ற வெள்ளிய நுரையாகிய போர்வை. சாந்தம்: சந்தனம். மான்மதம்: கத்தூரி. பொன்மணி ஆரம்: அரதனங்கள் இழைக்கப்பட்ட மாலை. பொருநையாம் கன்னி: பொருநை ஆறு என்னும் கன்னிப் பெண். முந்நீர்த்தன் மகிழ் கிழவன்: கடல் என்னும் தன்னை மகிழ்ந்து ஏற்கும் தலைவன். ஆகம்: மார்பு.

42 வல்லை,தாய் இருபால் வைகும்
சிவாலயம் மருங்கும் ஈண்டி,
முல்லைஆன் ஐந்தும், தேனும்
திரைக்கையால் முகந்து வீசி,
நல்லமான் மதம்,சாந்து அப்பி,
நறுவிரை மலர்தூய் நீத்தம்
செல்லலாற் பூசைத் தொண்டின்
செயல்வினை மாக்கள் போலும். 11

43 அரும்புஅவிழ் அனங்க வாளி
அலைதர ஆகம் பொன்போர்த்து,
இரங்கிவால் அன்னம் ஏந்தி,
இருகையும் சங்கம் சிந்தி,
மருங்குசூழ் காஞ்சி தள்ளி,
வரம்புஇற ஒழுகும் வாரி,
பரம்பரற்கு ஐயம் பெய்யும்
பார்ப்பன மகளிர் போலும். 12

44 வரைபடு மணியும் பொன்னும்
வயிரமும் குழையும் பூட்டி,
அரைபடும் அகிலும் சாந்தும்
அப்பி,இன் அமுதம் ஊட்டி,
கரைபடும் மருதம் என்னும்
கன்னியைப் பருவம் நோக்கி,
திரைபடு பொருநை நீத்தம்
செவிலிபோல் வளர்க்கும் மாதோ. 13

---

42. வல்லை: விரைந்து. தாய்: தாவி. ஈண்டி: நெருங்கி. முல்லை: காடும்காடுசார்ந்தநிலமும். ஆன்ஐந்து: பால், தயிர், நெய், கோமயம், கோசலம். முகந்து: மொண்டு. மான்மதம்: கத்தூரி. சாந்து: சந்தனம். விரை: மணம் நீத்தம்: வெள்ளம் இப்பாடல், ஆறு சிவபூசைச் செல்வர்களை நிகர்த்தது என்று பேசுகின்றது.

43. அரும்பு அவிழ்: அனங்கவாளி. மொக்குகள் விரிகின்ற மலர்களாகிய மன்மதன் அம்பு. ஆகம்: உடம்பு. காஞ்சி: ஒருவகை. மரம்: வரம்பு இற: எல்லை கடக்க. வாரி: வெள்ளம். பரம்பான்: பிட்சாடன மூர்த்தியாகிய சிவபெருமான். ஐயம்: பிச்சை. பார்ப்பனமகளிர்: தாருகா வனத்து முனி மனைவியர்.

44. வரைபடுமணி: மலையில் தோன்றும் இரத்தினம். குழை: குண்டலம். அகில்: அகில் கட்டை. மருதம்: வயலும் வயல் சார்ந்த இடமும். கன்னி: பெண். பொருநை நீத்தம்: தாம்பிரபரணி ஆறு. செவிலி :வளர்ப்புத்தாய். மருத நிலமாகிய கன்னிப்பெண்ணை. பருவம் பார்த்து, பொருநை ஆறு, செவிலித்தாய் போல் வளர்க்கின்றது என்பது கருத்து.

45 மறைமுதல் கலைகள் எல்லாம்
மணிமிடற் றவனே எங்கும்
நிறைபரம் என்றும், பூதி
சாதனம் நெறிவீடு என்றும்,
அறைகுவது அறிந்தும், தேரூர்
அறிவுஎனக் கலங்கி, அந்த
முறையின்வீடு உணர்ந்தோர் போலத்
தெளிந்தது மூரி வெள்ளம். 14

46 மறைவழி கிளைத்த எண்எண்
கலைகள்போல் வருநீர் வெள்ளம்,
துறைவழி ஒழுகும் பல்கால்
சோலைதண் பழனம் செய்,தேன்
உறைவழி ஓடை எங்கும்
ஓடி,மன்று உடையார்க்கு அன்பர்
நிறைவுஅழி யாத உள்ளத்து
அன்புபோல் நிரம்பிற்று அன்றே. 15

47 இழிந்த மாந்தர்கைப் பொருள்களும்,
இகபரத்து ஆசை
கழிந்த யோகியர் கைப்படில்,
தூயவாய்க் களங்கம்
ஒழிந்த வாறுபோல், உவரியுண்டு,
உவர்கெடுத்து, எழிலி
பொழிந்த நீர்அமுது ஆயின,
புவிக்கும்வா னவர்க்கும். 16

---

45. மணிமிடற்றவன்: நீலகண்டனாகிய சிவபெருமான். எங்கும் நிறைபரம்: எங்கும் நிறைந்த பரம்பொருள். பூதி சாதனம்; திருநீறு முதலிய சாதனங்கள். நெறி: வழி. அறைகுவது: கூறுவது. தேரூர்: தெளியாதவர். மூரி வெள்ளம்: பெரிய நீர்.

46. எண்எண்கலைகள்: அறுபத்துநான்கு கலைகள். வருநீர் வெள்ளம்; மலையினின்றும் வருகின்ற தண் பொருநை ஆறு. துறைவழி ஒழுகும் பல் கால்; வழி வழியாகச் செல்லும் பல கால்கள். தேன் உறைவழி ஓடை; தேன் சிந்தும் மலர் ஓடைகள். மன்று உடையார்; அம்பலக் கூத்தர். அவரிடத்துக் கொண்ட அன்பு போல் நீர் நிறைந்தது என்க.

47. இழிந்த மாந்தர்: கீழ்மக்கள். இகபரம்: இம்மை மறுமை. ஆசை: அவா. கழிந்த: நீங்கிய. களங்கம்: குற்றம். உவரி: கடல். உவர்கெடுத்து: உப்பைப் போக்கி. எழிலி: மேகம். புவி: நில உலகம்.

48 ஈறு இலாதவள் ஒருத்தியே ஐந்தொழில் இயற்ற,
வேறு வேறுபேர் பெற்றுஎன, வேலைநீர் ஒன்றே
ஆறு, கால்,குளம் கூவல் குண்டு, அகழ்,கிடங்கு எனப்பேர்
மாறி, ஈறில்வான் பயிரெலாம் வளர்ப்பது மாதோ. 17

49 களமர்கள் பொன்னேர் பூட்டித் தாயர்வாய்க் கனிந்த பாடற்கு
உளமகிழ் சிரூரின் ஏறும் ஒருத்தலும் உவகை தூங்க
வளமலி மருதம் பாடி மனவலி கடந்தோர் வென்ற
அளமருபொறிபோல்ஏவல் ஆற்றஆள்வினையின்மூண்டார். 18

50 பலநிற மணிகோத்து என்னப் பல்நிற ஏறு பூட்டி
அலமுக இரும்பு தேய ஆள்வினைக் கருங்கால் மள்ளர்
நிலமகள் உடலம் கீண்ட சால்வழி நிமிர்ந்த சோரிச்
சலம்என நிவந்தசெங்கேழ்த்தழல்மணி இமைக்கும்மன்னோ. 19

51 ஊறுசெய் படைவாய் தேய உழுநரும் நீர்கால் யாத்துச்
சேறுசெய் குநரும் தெய்வம் தொழுதுதீஞ் செந்நெல் வீசி
நாறுசெய் குநரும் பேர்த்து நடவுசெய் குநரும் தெவ்வின்
மாறுசெய் களைகட்டு ஓம்பி வளம்படுக் குநரும் ஆனார். 20

52 பழிபடு நறவம் தன்னைக் கடைசியர் பருகிச் செவ்வாய்
மொழிதடு மாற வேர்வை முகத்துஎழு முறுவல் தோன்ற
விழிசிவந்து உழலக் கூந்தல் மென்துகில் சோர உள்ளக்
கழிபெருங் களிப்பு நல்கிக் கலந்தவர் ஒத்தது அன்றே. 21

---

48. ஈறு இலாதவள்: அழிவில்லாதவள். ஒருத்தி: சிவசத்தி. ஐந்தொழில்: படைப்பு முதலிய ஐந்தொழில்கள். வேறுவேறு: வெவ்வேறு. வேலை: கடல். கால்: கால்வாய். கூவல்: கிணறு. குண்டு: ஆழம். அகழ்: தோண்டப்பெற்ற. ஈறில் வான் பயிர்: எண்ணிறந்த உயர்ந்த பயிர்களை. (மாதோ: அசை).

49. களமர்கள்: உழவர்கள். பொன். அழகு. சிரூர்: சிறுவர். ஏறு: எருது. ஒருத்தல்: எருமைக்கடா. மருதம்: மருதப் பண். மனவலி கடநதோர்: ஞானிகள். அளமரு பொறி: சுழலும் ஐம்புலன்கள். ஆள்வினை: முயற்சி.

50. மணி: இரத்தினம். ஏறு: காளை. அலமுகம்: கலப்பையின் முனை. ஆள் வினைக் கருங் கால் மள்ளர்: உழவுத் தொழிலுடைய கரிய கால்களை உடைய உழவர். சால்வழி: கொழுமுனை செல்லும் வழி, சோரிச்சலம்: இரத்தநீர், நிவந்த: மேல் எழுந்த. செங்கேழ்: செந்நிறமான, தழல்மணி: தீ அனைய இரத்தினம். இமைக்கும்: விளங்கும்.

51. ஊறுசெய்படை: நிலத்தைக் கிழக்கின்ற கலப்பை, நீர்கால் யாத்து: நீரைக்கால் வழியாகச் செலுத்தி. நாறு செய்குநர்: நாற்றைப் பறிக்கின்றவர். தெவ்வின்: பகைவரைப் போல். மாறு செய்களை: பயிருக்கு மாருக இருக்கின்ற செடிகள், கட்டு: களைந்து.

52. நறவம்: கள். கடைசியர்: உழத்தியர், முறுவல்: புன்னகை. உழல; சுற்ற, சோர: நிலைகுலைய. கலந்தவர்: அம் மாதரைக் கலந்த ஆடவர்.

53 பண்பகை ஆகும் தீஞ்சொற் கடைசியர் பவளச் செவ்வாய்க்கு
உள்பகை ஆம்பல் என்றும் ஒள்நறுங் குவளை நீலம்
கண்பகை ஆகும் என்றும் கமலநன் முகத்துக்கு என்றும்
திண்பகைஆகும்என்றும் செறுதல்போல்களைதல்செய்வார். 22

54 கடைசியர் முகமும் காலும் கைகளும் கமலம் என்னார்
படைவிழி குவளை என்னார் பவளவாய் குமுதம் என்னார்
அடையவும் களைந்தார் மள்ளர் பகைஞராய் அடுத்த எல்லை
உடையவன்ஆணை ஆற்றல் ஒறுப்பவர்க்குஉறவுஉண்டாமோ.

55 புரைஅறஉணர்ந்தோர் நூலின்பொருளின்உள் அடங்கி,அந்நூல்
வரையறை கருத்தும் ஆன வளர்கருப் புறம்பு தோன்றி,
கரையமை கல்வி சாலாக் கவிஞர்போல் இறுமாந்து, அந்நூல்
உரையெனவிரிந்து,கற்பின்மகளிர்போல்ஒசிந்தது அன்றே. 24

56 அன்புறு பத்தி வித்தி ஆர்வநீர் பாய்ச்சும் தொண்டர்க்கு
இன்புரு வான ஈசன் இன்னருள் விளையு மாபோல்,
வன்புறு கருங்கால் மள்ளர் வைகலும் செவ்வி நோக்கி,
நன்புலம் முயன்று காக்க விளைந்தன நறுந்தண் சாலி. 25

57 அகல்நில வேறு பாட்டின் இயல்செவ்வி அறிந்து, மள்ளர்
தகவினை முயற்சி செய்ய, காமநூல் சாற்றும் நான்கு
வகைநலார் பண்பு, செவ்வி அறிந்துசேர் மைந்தர்க்கு, இன்பம்
மிகவிளை போகம்போன்று, விளைந்தன பைங்கூழ்எல்லாம். 26

---

53. தீஞ்சொல்: தித்திக்கும் மொழி. ஆம்பல்: செவ்வல்லி. ஒள்: ஒளி. நறும்: நல்ல. குவளை: செங்குவளை. நீலம்: கருங்குவளை. கமலம்: தாமரை. திணபகை: வலிய பகைமை. செறுதல்: அழித்தல்.

54. என்னார்: என்று நினைத்திலர். அடையவும் களைந்தார்: முழுதும் பறித்தார்கள். ஆணை ஆற்றல்: ஆணை வழி. ஒறுப்பவர்: தண்டிப்பவர்.

55. புரை: குற்றம். அற: நீங்க. நூலின்: நூலின்கண் பொருளின்: பொருள்போல. வரை அறை: அளவைத் தெரிவிக்கின்ற. வளர்கரு: வளர்கின்ற கருவானது. புறம்பு: வெளியே. கரை அமைகல்வி: இலக்கண வரம்பு அமைந்த கல்வி. சாலா: நிறையாத. ஒசிந்தது: தலை வளைந்தது.

56. பத்தி வித்தி: பக்தியை விதைத்து. ஆர்வநீர்: ஆசையாகிய நீர். தொண்டர்: அடியார். வன்பு: வலிமை. வைகலும்: நாள்தோறும். செவ்வி: பருவம். புலம்: வயல். சாலி: நெல்.

57. அகல்: அகன்ற. இயல்: தன்மை. செவ்வி: பருவம். தக: தகுதியாக. வினை: தொழில். காமநூல் சாற்றும் நான்கு வகை நலார்: காமநூலில் கூறப்பட்ட நான்கு வகை மகளிர் (பத்தினி, சித்தினி, சங்கினி, அத்தினி) மைந்தர்: ஆடவர், பைங்கூழ்: பசுமையான பயிர்.

58 கொடும்பிறை வடிவிற் செய்த கூன் இரும்பு அங்கை வாங்கி
முடங்குகால் வரிவண்டு ஆர்ப்ப, முள்அரைக் கமலம் நீலம்
அடங்கவெண் சாலிசெந்நெல் வேறுவேறு அரிந்து,ஈடு ஆக்கி
நெடுங்களத்துஅம்பொன்குன்றநிரைஎனப்பெரும்போர்செய்தார்

59 கற்றைவை களைந்து தூற்றிக் கூப்பி,ஊர்க் காணித் தெய்வம்
அற்றவர்க்கு அற்ற வாறுஈந்து,அளவைகண்டு, ஆறில் ஒன்று
கொற்றவர்கடமைகொள்ள,பண்டியிற்கொடுபோய்த்தென்நாடு
உற்றவர்சுற்றம்தெய்வம்விருந்தினர்க்குஊட்டி உண்பார். 28

60 சாறுஅடு கட்டி, எள்ளுச் சாமை,கொள், இறுங்கு, தோரை,
ஆறுஇடு மதமால் யானைப் பழுக்குலை, அவரை, ஏனல்,
வேறுபல் பயறோடு இன்ன புன்நில விளைவு மற்றும்
ஏறொடு பண்டி ஏற்றி இருநிலம் கிழிய உய்ப்பார். 29

61 துறவினர் ஈசன் நேசத் தொண்டினர் பசிக்கு நல்ஊண்,
திறவினைப் பிணிக்குத் தீர்க்கு மருந்துஉடல் பனிப்புக்கு ஆடை
உறைவிடம் பிறிது நல்கி, அவரவர் ஒழுகிச் செய்யும்
அறவினை இடுக்கண் நீக்கி, அருங்கதி உய்க்க வல்லார். 30

62 நிச்சலும் ஈசன் அன்பர் நெறிப்படில், சிறார்மேல் வைத்த
பொச்சமில் அன்பும் மன்னர் புதல்வரைக் கண்டால் அன்ன
அச்சமும் கொண்டு, கூசி அடிபணிந்து, இனிய கூறி
இச்சைஆறுஒழுகிஉள்ளக்குறிப்புஅறிந்துஏவல்செய்வார். 31

---

58. கூன் இரும்பு: வளைந்த அரிவாள். ஆர்ப்ப ஒலிக்க. முள் அரைக் கமலம்: முள்ளை அடியில் உடைய தாமரை. ஈடு: கட்டாகக் கட்டி. குன்றம் நிரை: மலைவரிசை.

59. வை களைந்து: வைக்கோல் நீக்கி. கூப்பி: குவித்து. ஊர்க் காணித் தெய்வம்: கிராம தேவதை. அற்றவர்: ஏழைகள். அற்றவாறு: முறைப்படி. அளவை கண்டு: மீதத்தைக் கணக்கிட்டு. கொற்றவர் கடமை: அரசுக்குரிய பகுதி. பண்டி: வண்டி. தென்நாடு உற்றவர்: தென்புலத்தார்.

60. சாறுஅடுகட்டி: வெல்லம். இறுங்கு: சோளம். தோரை: துவரை. ஆறுஇடுமதம்: ஆறுபோல் சொரிகின்ற மதம். மால்: பெரிய. யானைப்பழுக்குலை: யானைத் துதிக்கைபோல் வடிவுள்ள பழுத்த வாழைக்குலை. ஏனல்: தினை. புன்நிலம்: புன்செய். ஏறு: எருது. பண்டி: வண்டி.

61. துறவினர்: துறவிகள். ஈசன் நேசத் தொண்டினர்: சிவன் அடியார். திறவினை: வலிய ஊழ். பனிப்பு: நடுக்கம். உறைவிடம்: தங்கும் இடம். பிறிது: மற்றவை. இடுக்கண்: துயரம். அருங்கதி: அரிய வீட்டின்பம்.

62. நிச்சலும்: நாள்தோறும். நெறிப்படில்: வழியில் தோன்றினால். சிறார்: தம் மைந்தர். பொச்சம்: பொய். இச்சைஆறு: விருப்பத்தின் வழி. ஏவல்: தொண்டு.

63 நறைபடு கனி,தேன் பெய்த பாலொடு, நறுநெய் வெள்ளம்
நிறைபடு செம்பொன் வண்ணப் புழுக்கலால் நிமிர்ந்த சோறு,
குறைவுற உண்டு,வேண்டும் பொருள்களும் கொண்மின் என்ன
மறைமுதல் அடியார் தம்மை வழிமறித்து அருத்து வார்கள். 32

64 பின்னவன் உரைப்பது; அந்தப் பெருந்தமிழ் நாடாம் கன்னி
தன்னிடை ஊர்கள் என்னும் அவயவம் தாங்கச் செய்த,
பொன் இயல் கலனே, கோயில் மடம் அறப் புறநீர்ச் சாலை
இன்னமுது அருத்து சாலை எனஉருத் திரிந்தது அம்மா. 33

65 இந்த டம்புனல் வேலிசூழ் இந்நில வரைப்பில்
குன்ற முல்லைதண் பணைநெய்தல் குலத்திணை நான்கும்
மன்ற உள்ள;மற் றவைநிற்க, மயங்கிய மரபின்
ஒன்றொடு ஒன்றுபோய் மயங்கிய திணைவகை உரைப்பாம். 34

66 கொல்லை ஆன்நிரை மேய்ப்பவர் கோழ்இணர்க் குருந்தின்
ஒல்லை தாய்,அதிற் படர்கறிக் கருந்துணர் உகுப்ப,
முல்லை சோறுஎனத் தேன்விராய், முத்திழை சிற்றில்
எல்லை ஆயமோடு ஆடுப; எயின்சிறு மகளிர். 35

67 கன்றொ டுங்களி வண்டுவாய் நக்க,ஈர்ங் கரும்பு
மென்று, பொன்சொரி வேங்கைவாய் உறங்குவ மேதி;
குன்றுஇ ளந்தினை மேய்ந்து,பூங் கொழுநிழல் மருதம்
சென்றுஉ றங்குவ, சேவகம் எனமுறச் செவிமா. 36

63. நறை: தேன். நறுநெய் வெள்ளம்: பெருகிய நல்ல நெய். செம்பொன் வண்ணப் புழுக்கல்: பருப்புக் கலந்த அரிசி. உண்டு: உண்பித்து. கொண்மின்: கொள்ளுங்கள். மறைமுதல்: சிவபெருமான். வழி மறித்து: செல்லுகின்றவர்களைத் தடுத்து. அருத்து வார்கள்: ஊட்டுவார்கள்.

64. கன்னி: பெண். அவயவம்: அங்கங்கள். பொன் இயல் கலன்: தங்க அணிகள். அறம்: அறநிலையம். நீர்ச்சாலை: தண்ணீர்ப்பந்தல். இன்னமுது அருத்து சாலை: உணவளிக்கும் நிலையம்.
பாண்டி நாட்டைப் பெண்ணாகவும், அந் நாட்டில் உள்ள ஊர்களைப் பெண்ணின் அங்கங்களாகவும், கோயில், திருமடம் முதலியவற்றை அப் பெண்ணின் அணிகலன்களாகவும் உருவகம் செய்யப்பெற்றிருக்கிறது.

65. வரைப்பு: எல்லை. குன்றம்: மலைப்பகுதி. முல்லை: காட்டுப்பகுதி. பணை. வயற்பகுதி. நெய்தல்: கடல் பகுதி. மன்ற உள்ள: நிலைபெற்றிருக்கின்றன. மயங்கிய திணை வகை: கருப்பொருள் கலந்தவகை.

66. கொல்லை: முல்லை நிலம். ஆன் நிரை: பசுக்கூட்டம். கோழ்: கொழுத்த. இணர்: பூங்கொத்து. ஒல்லை: விரைந்து. தாய்: தாவி. கறிக்கருந்துணர்: கரிய மிளகுக் கொத்துக்கள். உகுப்ப: உதிர்ப்பர். முல்லை: முல்லை அரும்பு. முத்திழை சிற்றில்: முத்தால்கட்டிய சிறுவீடு. ஆயம்: கூட்டம். ஆடுப: விளையாடுவர். எயின் சிறு மகளிர்: வேட்டுவச் சிறு பெண்கள்.

67. ஈர்ங்கரும்புமென்று: குளிர்ந்த கரும்புகளைச் சுவைத்து. பொன் சொரி வேங்கை: பொன் போலும் பூவை உதிர்க்கின்ற வேங்கை மரம். மேதி: எருமை. மருதம் சென்று: மருதமரத்தின் அடியில் போய் சேவகம்: (யானை) துயிலும் இடம். முறச் செவிமா: முறம் போன்ற காதுகளை உடைய யானை.

68 எற்று தெண்திரை, எறிவளை எயிற்றியர் இழைத்த
சிற்றில் வாய்நுழைந்து அழிப்ப,அச் சிறுமியர் வெகுண்டு
பற்றி லார்எனச் சிதறிய மனஅணி, பரதர்
முற்றி லாமுலைச் சிறுமியர் முத்தொடுங் கோப்ப. 37

69 முல்லை வண்டுபோய் முல்லையாழ் முளரிவாய் மருதம்
வல்ல வண்டினைப் பயிற்றி,பின் பயில்வன மருதம்;
கொல்லை ஆன்மடி எறிந்து,இளம் குளவிஎன்று இரங்கி,
ஒல்லை ஊற்றுபால் வெள்ளத்துள் உகள்வன வாளை. 38

70 கரும்பொன் கோட்டுஇளம் புன்னைவாய்க் கள்ளுண்டு, காளைச்
சுரும்பு செவ்வழிப் பாண்செய, கொன்றைபொன் சொரிவ;
அரும்த டங்கடல் வளையெடுத்து, ஆழியான் கையில்
இருந்த சங்கென இறைகொள்அப் பூவைமேல் எறிவ. 39

71 கழிந்த தெங்கின்ஒண் பழம்பரீஇ, முள்பலாக் கனிகீண்டு,
அழிந்த தேன்உவர்க் கேணிபாய்ந்து அகற்றுவ உவரை;
வழிந்த தேன்மடல் கேதகை மலர்நிழல் குருகுஎன்று
ஒழிந்த தாமரைப் போதுபுக்கு ஒளிப்பன கெண்டை. 40

72 ஆறு சூழ்கழிப் புலால்பொருது அசைந்துகூன் கைதை,
சோறு கால்வன, ஆம்பல்வாய் திறப்பன, துணிந்து
கூறு வார்எனக் குவளைகண் காட்டிடக் கூடித்
தூறு வார்எனச் சிரித்துஅலர் தூற்றுவ முல்லை. 41

---

68. வளை: சங்கு. எயிற்றியர்: வேட்டுவமாதர். சிதறிய மன அணி: கழற்றி எறிந்தமனம் உவந்த அணிகலன்கள். பரதர் சிறுமியர்: நெய்தல் நிலத்து இளம் பெண்கள்.

69. முளரி: தாமரை. பயிற்றி: கற்பித்து. பயில்வன மருதம்: மருத நிலப்பண்களைக் கற்றுக் கொள்கின்றன. இளம் குளவி: சிறுகன்று. உகள்வன: புரள்கின்றன. வாளை: வாளை மீன்கள்.

70. கோடு: கொம்பு. காளைச் சுரும்பு: ஆண்வண்டு. ஆழியான். திருமால். சங்கு: பாஞ்சசன்யம். பூவை: காயாமரம்.

71. கழிந்த: கீழ்விழுந்த. பழம்: நெற்று. கீண்டு: கீறி. உவர்க்கேணி: உப்புக்கிணறு. அகற்றுவ உவரை: உவர்ப்பை நீக்கும். கேதகை: தாழை. குருகு: கொக்கு. ஒளிப்பன: மறைந்துகொண்டன. கெண்டை: கெண்டைமீன்.

72. ஆறுசூழ்கழி: ஆருகச் சூழ்ந்திருக்கின்ற உப்பங்கழி. புலால்: முடைநாற்றம். கூன் கைதை: வளைந்த தாழை. சோறு: மகரந்தப்பொடி. கால்வன: கக்குகின்றன. ஆம்பல்: செவ்வாம்பல். கூறுவார்என: பிறர் குற்றத்தை எடுத்துக்காட்டுபவர் போல. குவளை: நீலப்பூ. தூறுவார்: தூற்றுகின்றவர். தாழை சோறு கக்க, ஆம்பல் அதனை உண்ண வாய்திறப்ப, குவளை துணிந்து அச்செயலை எடுத்துக்காட்ட, முல்லை சிரித்து அலர் தூற்றுகின்றன என்பது கருத்து.

73 துள்ளு சேல்விழி நுளைச்சியர், சுறவொடும் அருந்தக்
கள்ளு மாறவும் கூனல்அம் காய்,தினை, அவரை,
கொள்ளு மாறவும் கிழங்குதேன் கொழுஞ்சுவைக் கன்னல்
எள்ளு மாறவும் அளப்பன இடைக்குஇடை முத்தம். 42

74 அவமி கும்,புலப் பகைகடந்து, உயிர்க்குஎலாம் அன்பாம்
நவமி கும்,குடை நிழற்றி,மெய்ச் செய்யகோல் நடாத்தி,
சிவமி கும்பர ஞானமெய்த் திருவொடும் பொலிந்து,
தவம்இ ருந்துஅரசு ஆள்வது, தண்டமிழ்ப் பொதியம். 43

75 வான ஆறுதோய்ந்து உயரிய மலயமே, முக்கண்
ஞான நாயகன்; அம்மலை போர்த்தகார், நால்வாய்
யானை ஈர்உரி; அம்மழை அசும்பு,அதன் புண்நீர்;
கூனல் வான்சிலை, குருதிதோய் கோடுபோன்று அன்றே. 44

76 சுனைஅ கன்கரைச் சூழல்வாய்ச் சுரும்புசூழ் கிடப்ப,
நனைஅ விழ்ந்தசெங் காந்தள்மேல் நாகுஇள வேங்கைச்
சினைஅ விழ்ந்தவீ கிடப்ப,பொன் தோய்கலத் தெள்நீர்
அனைய பொன்சுடு நெருப்பொடு கரிஇருந் தனைய. 45

77 குண்டு நீர்ப்படு, குவளைவாய்க், கொழுஞ்சினை, மரவம்,
வண்டு கூப்பிடச், செம்மல்தூய்ப், புதுமது, வார்ப்ப,
அண்டர் வாய்ப்பட மறைவழி பொரிசொரிந்து ஆன்நெய்
மொண்டு, வாக்கி,முத் தீவினை, முடிப்பவர், அனைய. 46

---

73. நுளைச்சியர்: நெய்தல் நிலப்பெண்கள். சுறவு: சுறுமீன். கூனல்அம்காய்: புளியங் காய். கன்னல்: கரும்பு. நெய்தல் நிலப்பெண்கள், கள்ளு, புளி, தினை, அவரை, கொள்ளு, கிழங்கு, தேன், கரும்பு, எள்ளு ஆகிய மருதம், முல்லை, குறிஞ்சி நிலத்துப்பொருட்களைப் பெற எடைக்கு எடை முத்துக்களை அளந்துகொடுக்கின்றனர் என்பது கருத்து.

74. அவம்: கேடு. புலப்பகை: ஐம்புலனுகிய பகை. கடந்து: வென்று. நவம்மிகும்: புதுமைமிகும். நிழற்றி: நிழலைச்செய்து. மெய்: வாய்மை. செய்யகோல்: செங்கோல். மெய்த்திரு: நிலையான செல்வம். பொலிந்து: விளங்கி. தண்தமிழ்: குளிர்ச்சியான செந்தமிழ் பொதியம்: பொதியமலை.

75. வான ஆறு: ஆகாய கங்கை. மலயம்: பொதிகைமலை. முக்கண் ஞானநாயகன்: சிவ பெருமான். கார்: மேகம். நால்வாய் யானை: தொங்குகின்ற வாயை உடைய யானை. ஈர்உரி: உரித்த தோல். அசும்பு: மழைத்துளி. புண்நீர்: இரத்தம். கூனல்வான்சிலை: வளைந்த வானவில். கோடு; யானைக்கொம்பு. பொதிகை யானை உரிபோர்த்த சிவ பெருமானேடு ஒப்பிடப்பெறுகின்றது.

76. சுனை: மலையிலுள்ள நீர்நிலை. சுரும்பு: வண்டு. நனை அவிழ்ந்த: மொட்டு விரிந்த. நாகு இளவேங்கை: மிக்க இளமை வாய்ந்த வேங்கை மரம். சினை அவிழ்ந்த வீ: மலர்ந்த பூ. சுனையைப் பொன் தோய் நீர்க்கலமாகவும், அரும்பைக் கரியாகவும், செங்காந்தளைத் தீயாகவும், வேங்கைப் பூவைப் பொன்னுகவும் உருவகம் செய்யப் பெறுகின்றன.

77. குண்டு: நீர்ச்சுனை. மரவம்: குங்கும மரம். கூப்பிட: ஒலிக்க. செம்மல்: பழைய அண்டர்: அமரர். வாக்கி: வார்த்து. முத்தீ: மூவகை வேள்வி. முடிப்பவர்: முனிவர்.

78 அகிலும் ஆரமும் தழல்மடுத்து, அகழ்ந்துஎறிந்து அழல்கால்
துகிரும் ஆரமும் தொட்டெறிந்து, ஐவனம் தூவி,
புகர்இல் மால்கரி மருப்பினால் வேலிகள் போக்கி,
இகல்இல் வான்பயிர் ஓம்புவ எயினர்தம் சீறூர். 47

79 அண்ட வாணருக்கு இன்னமுது அருத்துவோர், வேள்விக்
குண்ட ஆர்அழல் கொழும்புகை கோலும்அக் குன்றில்,
புண்த வாதவேல் இறவுளர் புனத்துஎரி மடுப்ப
உண்ட கார்அகில் தூமமும் ஒக்கவே மயங்கும். 48

80 கருவி வான்சொரி மணிகளும் கழைசொரி மணியும்
அருவி கான்றபல் மணிகளும் அகன்தலை நாகத்து
இரவி கான்றசெம் மணிகளும் புனம்கவர் இனமான்
குருவி வீழ்ந்திடக் கொடிச்சியர் கோத்துஎறி கவண்கல். 49

81 மாய வன்வடிவு ஆயது வையம்;மால் உந்திச்
சேய பங்கயம் ஆயது தென்னன்நாடு; அலர்மேற்
போய மென்பொகுட்டு ஆயது பொதியம்;அப் பொகுட்டின்
மேய நான்முகன் அகத்தியன்; முத்தமிழ் வேதம். 50

82 ஏகம் ஆகிய மேருவும் பொதியம்,ஏய் இரும்பொன்
ஆகும், மேருவைச் சூழ்ந்தசாம் பூநத ஆறும்,
நாகர் ஆடுதண் பொருநையே, நாவலாறு உடுத்த
போக பூமியும் பொருநைசூழ் பூமியே போலும். 51

---

78. தழல்மடுத்து: அகழ்ந்து நெருப்பிட்டுப் பிடுங்கி. துகிர்: பவளம். முதல் ஆரம்: சந்தனம். இரண்டாவது ஆரம் முத்து. தொட்டு: கல்லி. ஐவனம்: மலை நெல். புகர்: புள்ளி. ஓம்புவ: பாதுகாப்பர். எயினர்: வேட்டுவர்.

79. அருத்துவோர்: முனிவர். குன்று: பொதிகை. புண்தவாதவேல் இறவுளர். விழுப் புண் பெற்ற வேட்டுவர். எரிமடுப்ப: நெருப்பு இட. தூமம்: புகை.

80. கருவிவான் சொரிமணி: உலகத்துக்குத் துணைக் காரணமாகியமேகங்கள் தருகின்றமுத்து. கழை: மூங்கில். கான்ற: சொரிகின்ற, நாகத்து இரவி கான்ற செம்மணி: சூரியனைப்போல் பாம்புத் தலையினின்று வெளிப்படும் சிவந்த இரத்தினம். கொடிச்சியர்: குறப் பெண்கள். கோத்து எறிகவண்கள்: கவணில் கோத்து எறியும் கற்கள். புனத்தை மேயும் மான்களையும் குருவிகளையும் குறப் பெண்கள் ரத்தினங்களைக் கவண்கற்களாகக் கொண்டு எறிகின்றனர் என்பது கருத்து.

81. உலகம் திருமால் வடிவமாகவும், பாண்டிநாடு திருமாலின் உந்திக் கமலமாகவும், பொதிகை, அவ்வுந்திக் கமலத்தின் மொட்டாகவும், பொதிகைவாழ் தமிழ் முனிவன் மாலின் உந்திக் கமலத்தில் உறையும் பிரமன் ஆகவும், அகத்தியன் மொழியும் முத்தமிழ் வேதங்களாகவும் உவமிக்கப் பெறுகின்றன.

82. ஒப்பற்ற இமயமலையைப் பொதியம் ஆகவும், அம்மேருவில் ஓடும் சாம்பூநத ஆற்றைத் தண் பொருநையாகவும். நாவற்பழங்கள் ஆறுக ஓடுகின்ற அந்தப் போகபூமியைப் பாண்டி நாடாகவும் உவமிக்கப்பெறுகின்றன.

83 சிறந்த தண்தமிழ் ஆலவாய், சிவன்உலகு ஆனல்,
புறம்த யங்கிய நகரெலாம் புரந்தரன், பிரமன்,
மறம்த யங்கிய நேமியோன், ஆதிய வானோர்
அறம்த யங்கிய உலகுஉருவு ஆனதே ஆகும். 52

84 வளைந்த நுண்இடை மடந்தையர் வனமுலை மெழுகிக்
களைந்த குங்குமக் கலவையும் காசறைச் சாந்தும்
அளைந்த தெண்திரைப் பொருநையோ! அந்நதி ஞாங்கர்
விளைந்த செந்நெலும் கன்னலும் வீசும்அவ் வாசம். 53

85 பொதியி லேவிளை கின்றன சந்தனம்; பொதியின்
நதியி லேவிளை கின்றன முத்தம்;அந் நதிசூழ்
பதியி லேவிளை கின்றன தருமம்;அப் பதியோர்
மதியி லேவிளை கின்றன மறைமுதற் பத்தி. 54

86 கடுக்க வின்பெறு கண்டனும் தென்திசை நோக்கி
அடுக்க வந்துஉவந்து ஆடுவான்; ஆடலின் இளைப்பு
விடுக்க, ஆரமென் கால்திரு முகத்திடை வீசி,
மடுக்க வும்,தமிழ் திருச்செவி மாந்தவும் அன்றோ? 55

87 விடைஉ கைத்தவன் பாணினிக்கு இலக்கணம் மேனாள்
வடமொ ழிக்குஉ ரைத்து ஆங்கு,இயல், மலயமா முனிக்குத்
திடம்உ றுத்தி,அம் மொழிக்குஎதி ராக்கிய தென்சொல்
மடம கட்குஅரங்கு என்பது, வழுதிநாடு அன்றோ? 56

---

83. புறம் தயங்கிய: வெளிப்புறத்தில் விளங்குகிற. புரந்தரன்: இந்திரன். மறம் தயங்கிய: வீரம் விளங்குகின்ற. நேமியோன்: சக்கரப் படையுடைய திருமால். ஆதிய: முதலிய. வானோர்: தேவர்கள். "அப் பாண்டி நாட்டைச் சிவலோகம் ஆக்குவித்த" என்பது திருவாசகம்.

84. காசு: கத்தூரி. ஞாங்கர்: பக்கம். பெண்கள் நீராடுதலால் அவர்கள் பூசிக் கழுவிய கத்தூரி, குங்குமம், சந்தனம் ஆகியவற்றின் மணம், அவர்கள் ஆடிய தண் பொருநை ஆற்றில் மட்டும் அல்லாமல் அவ்வாற்று நீரால் விளைந்த நெல்லிலும் கரும்பிலும் வீசுகின்றது என்பது கருத்து.

85. பொதிகை மலையிலே சந்தன மரங்கள் உண்டாகின்றன: அம்மலையில் தோன்றிய தண்பொருநை ஆற்றிலே முத்தங்கள் தோன்றுகின்றன; அவ் ஆறு சூழ்ந்த நகரங்களிலே அறங்கள் வளர்கின்றன; அந் நகரத்தார் அறிவிலே முகிழ்கின்றன வேத முதலாகிய சிவபெருமான் மீது தோன்றும் பத்தி.

86. கடுக்கவின் பெறுகண்டன்: நஞ்சினால் அழகு பெற்ற திருநீலகண்டனாகிய சிவ பெருமான். அடுக்க வந்து உவந்து: நெருங்கவந்து மகிழ்ந்து. விடுக்க: நீக்குதற்பொருட்டு. ஆரமென்கால்: சந்தனச் சோலையிற் படிந்து வருகிற தென்றல் காற்று. மடுக்கவும்: ஏற்கவும். மாந்தவும்: நுகரவும். நடராசப் பெருமான் ஆடும் களைப்புத் தீரத் தென்றலை நுகரவும், தமிழைச் செவியாரப் பருகவுமே தென்திசை நோக்கி ஆடுகிறார் என்ற பாடற் சுவை எண்ணி எண்ணி இன்புறத்தக்கது.

87. விடை உகைத்தவன்: இடபவாகனத்தைச் செலுத்துகின்ற சிவபெருமான் பாணினி: வடமொழி இலக்கணம் வகுத்தவர். உரைத்தாங்கு: அருளிச் செய்தது போல். இயல்: தமிழ் இலக்கணம். மலயமாமுனி: பொதிய மலையிலுள்ள பெருமை பொருந்திய அத்தியக முனிவர். திடம்உறுத்தி: திடம் பெற அறிவுறுத்தி. தென்சொல் மடமகள்: தென்தமிழ் ஆகிய நங்கை. அரங்கு: நடனசாலை. வழுதிநாடு: பாண்டிநாடு. 'தழற்புரை சுடர்க் கடவுள் தந்த தமிழ்' என்பார் கம்பர்.

88 கண்ணு தல்பெருங் கடவுளும், கழகமோடு அமர்ந்து,
பண்ணு றத்தெரிந்து ஆய்ந்தஇப் பசுந்தமிழ், ஏனை
மண்ணி டைச்சில இலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்இ டைப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ? 57

89 தொண்டர் நாதனைத் தூதுஇடை விடுத்ததும், முதலை
உண்ட பாலனை அழைத்ததும், என்புபெண் உருவாக்
கண்ட தும்,மறைக் கதவினைத் திறந்ததும், கன்னித்
தண்த மிழ்ச்சொலோ? மறுபுலச் சொற்களோ? சாற்றீர்! 58

90 வெம்மை யால்விளைவு அஃகினும் வேந்தர்கோல் கோடிச்
செம்மை மாறினும், வறுமைநோய் சிதைப்பினும், சிவன்பால்
பொய்ம்மை மாறிய பத்தியும் பொலிவுகுன் றுவாய்,
தம்மை மாறியும் புரிவது தருமம்அந் நாடு. 59

91 உலகம் யாவையும் ஈன்றவள், உம்பருள் உயர்ந்த
திலக நாயகி, பரஞ்சுடர், சேய்என, மூன்று
தலைவ ரால்முறை செய்தநாடு இஃதன்றி, சலதி
சுலவு பாரில்உண் டாகுமோ? துறக்கத்தும் அஃதே. 60

---

88. கண்ணுதல் பெருங்கடவுள்: நெற்றிக்கண்ணனாகிய சிவபெருமான். கழகமோடு அமர்ந்து: சங்கத்தின் கண் வீற்றிருந்து. பண்ணுற: செப்பமுற, அல்லது இசைபொருந்த, ஆய்ந்த: ஆராய்ந்த. ஏனை மண்ணிடை: மற்றை நிலங்களிலுள்ள, எண். இடை. எண்ணிக்கையில். படக்கிடந்ததா: அமையக்கிடந்ததாக. எண்ணவும்: நினைக்கவும்.

89. தொண்டர் நாதன்: சிவபெருமான். தூதுஇடை: தூதாக. விடுத்தது: செலுத்தியது. மறுபுலச் சொற்கள். ஏனைய நிலங்களில் வழங்கும் மொழிகள். சாற்றீர்: சொல்லுங்கள். சுந்தரமூர்த்தி சுவாமிகளும் ஞான சம்பந்தப் பெருமானும் அப்பர் அடிகளும் நிகழ்த்திய அற்புதங்கள் அனைத்தும் தங்களது தீந்தமிழ்த் தெய்விகத் தேவாரப்பாடல்களாலேயே என்று பரஞ்சோதியார் பெருமிதத்தோடு பேசுகிறார்.

90. வெம்மை: கோடை. அஃகினும்: குன்றினாலும். கோல்: செங்கோல். கோடி: வளைந்து. செம்மை: நடுநிலைமை. சிதைப்பினும்: வருந்தினாலும். பொலிவு; விளக்கம். குன்றுவாய்: குறையாது. தம்மைமாறியும்: (அங்குள்ளார்) தங்களை விற்றாயினும்.

91. உம்பருள் உயர்ந்த திலக நாயகி: வானவர்களுக்குள் உயர்ந்த திலகம் போல்வாளான உமாதேவி. பரஞ்சுடர்: பரஞ்சோதியாகிய சிவபெருமான். சேய்' முருகக் கடவுள். முறை செய்த: அரசு செய்த. சலதிசுலவுபார்: கடலால் சூழப்பட்ட உலகம். துறக்கம். விண்ணுலகம்.

## திருநகரச் சிறப்பு

92 மங்க லம்புனை பாண்டி நாடு ஆகிய மகட்கு,
சங்குஅ லம்புகை, தோள்இணை, தடமுலை ஆதி
அங்க மாம்புறம் தழுவிய நகர்எலாம்; அனைய
நங்கை மாமுகம் ஆகிய நகர்வளம் பகர்வாம். 1

93 கொங்கை யே,பரங் குன்றமும், கொடுங்குன்றும்; கொப்பூழ்
அங்க மே,திருச் சுழியல்;அவ் வயிறுகுற் றாலம்;
செங்கை ஏடகம்; மேனியே பூவணம்; திரள்தோள்,
பொங்கர் வேய்வனம்; திருமுகம் மதுரையாம் புரமே. 2

94 வடுஇல் மாநில மடந்தைமார்பு இடைக்கிடந்து, இமைக்கப்
படுவில் ஆரமே பாண்டிநாடு ஆரம்;மேல் பக்கத்து
இடுவில் மாமணி அதன்புற நகர்எலாம்; இவற்றுள்
நடுவில் நாயக மாமணி, மதுரைமா நகரம். 3

95 திரும கட்குஒரு தாமரைக் கூடமே; திருமால்
மரும கட்குவெண் தாமரை மாடமே; ஞானம்
தரும கட்குயோ கத்தனிப் பீடமே; தரையாம்
பெரும கட்குஅணி திலகமே ஆனது,இப் பேரூர். 4

---

92. மங்கலம்புனை: பல நலன்களையும் பூண்ட. மகட்கு: மங்கைக்கு. சங்கு அலம்பு கை: வளை ஒலிக்கும் கைகள். இணை: இரண்டு தடம்: பெரிய ஆதி: முதலிய. அங்கம்: உறுப்பு, புறம் தழுவிய: புறத்தே சூழ்ந்த மாமுகம் ஆகிய நகர்வளம்: பெருமைபொருந்திய முகமாகிய மதுரை நகரின் சிறப்பினை. பகர்வாம்: கூறுவாம்.

93. பரங்குன்றம்: திருப்பரங்குன்றம் கொடுங்குன்று: பிரான்மலை கொப்பூழ்: உந்தி, திருச்சுழியல்: திருச்சுழியல் தலம். குற்றாலம்: திருக்குற்றாலத்தலம். ஏடகம்: திருஏடகத் தலம். பூவணம்: திருப்பூவணம். திரள்: திரண்ட, பொங்கர்: சோலைகள் சூழ்ந்த. வேய்வனம்: வேணுவனம் என்னும் திருநெல்வேலி. புரம்: நகரம். மேலே சொன்ன ஏழும் தேவாரத் தலங்கள். அவை மதுரை மாகர் என்னும் நங்கையின் திருமுகத்திற்கு ஏற்பப் பொலிவு செய் உறுப்புக்களாகக் கூறப்படும் நயம்காண்க. பெண்ணைக் குறிக்குங்கால் கொங்கைக்கு மலையும் கொப்பூழுக்குச் சுழியும் வயிற்றுக்கு ஆல் இலையும் கைக்குப் பூஇதழும் உடம்புக்கு மலர் வண்ணமும் தோளுக்கு மூங்கிலும் முகத்துக்கு மதுரமும் உவமை.

94. வடுஇல்: குற்றம் இல்லாத. மாநிலமடந்தை: பெரிய நிலமகள். இமைக்கப்படு: இருந்து விளங்குகின்ற. வில் ஆரம்: ஒளியையுடைய பதக்கம், மேல்பக்கத்து இடு வில் மாமணி: மேலே சுற்றுப்புறங்களில் பதித்த ஒளியையுடைய பெருமணிகள். நாயகமாமணி, தலைமையாகிய பெரியமணி.

95. ஒரு: ஒப்பற்ற. தாமரைக்கூடம்: தாமரை இல்லம். திருமால் மருமகள்: திருமாலின் மருகியாகிய கலைமகள். மாடம்: இல்லம். ஞானம் தருமகள்: ஞானத்தைஅருளும் மலைமகள், யோகத்தனிப்பீடம்: ஒப்பற்ற யோகபீடம். தரையாம்பெருமகள்: நிலப்பெரு மாட்டி. பேரூர்: பெரிய ஊர்.

96 திக்கும், வானமும், புதைஇருள் தின்று,வெண் சோதி
கக்கும் மாளிகை நிவப்புறு காட்சி,அந் நகருள்
மிக்க வால்இதழ்த் தாமரை வெண்மகள் இருக்கை
ஒக்கும்; அல்லது, புகழ்மகள் இருக்கையும் ஒக்கும். 5

## புடைநகர்

97 நெல்க ரும்புஎன, கரும்புஎலாம் நெடுங் கமுகுஎன்ன,
வர்க்க வான்கமுகு ஒலிகலித் தெங்கென, வளர்ந்த
பொற்க வின்குலைத் தெங்கு,கார்ப் பந்தரைப் பொறுத்து
நிற்க நாட்டிய கால்என நிவந்ததண் பணையே. 6

98 சிவந்த வாய்க்கரும் கயல்கணாள், வலாரியைச் சீறிக்
கவர்ந்த வான்தருக் குலங்களே, கடிமணம் வீசி,
உவந்து வேறுபல் பலன்களும் வேண்டினர்க்கு உதவி,
நிவந்த காட்சியே போன்றது நிழல்மலர்ச் சோலை. 7

99 ஒல்ஒ லிக்கதிர்ச் சாலிகள் புறந்தழீஇ ஓங்க,
மெல்இ லைப்பசுங் கொடியினுல் வீக்குறு பூகம்,
அல்எ னும்களத்து அண்ணல்தன் அணிவிழாத் தருப்பைப்
புல்ஓ டும்பிணிப்பு உண்டபொன் கொடிமரம் போலும். 8

100 சீத வேரிஉண்டு அளிமுரல் கமலமேல் செருந்தி,
போத வேரியும் மலர்களும் சொரிவன, புத்தேள்
வேத வேதியர் செங்கரம் விரித்து,வாய் மனுக்கள்
ஓத, ஏமமும் உதகமும் உதவுவார் அனைய. 9

---

96. திக்கு: திசை. புதை: மறைந்த. தின்று: விழுங்கி. வெண்சோதி கக்கும்: வெள்ளிய ஒளியை வெளிவிடும். நிவப்புறுகாட்சி: உயர்ந்துள்ள தோற்றம். மிக்கவால் இதழ்: மிக்க வெண்மையான இதழ்களையுடைய. வெண்மகள்: கலைமகள். புகழ்மகள்: புகழ்மாது. (புகழை வெண்மையாகக் கூறுவது மரபு) இருக்கை: இருப்பிடம்.

97. வர்க்க வான் கமுகு: வரிசையான உயர்ந்த பாக்கு மரம். கலி: ஓசை. கார்ப்பந்தர்: மேகமாகிய காவணம். நிவந்த: உயர்ந்த. தண்பணை: குளிர்த்த வயல்.

98. கயல்கணாள்: தடாதகை. வலாரி: இந்திரன். சீறி: சினந்து. வான்தருக்குலங்கள்: கற்பகம் முதலிய கூட்டம். மலர்ச்சோலை: பூங்கா. தடாதகைப் பிராட்டி இந்திரனை வென்று கவர்ந்த விண் மரங்களின் மணம் சோலைகளில் மணக்கின்றது என்பது கருத்து.

99. ஒல்ஒலி: ஒல் என்ற ஒலிக்குறிப்பு. வீக்குதல்: கட்டுண்ணுதல். பூகம்: பாக்குமரம். அல்: கருநிறம். களம்: கழுத்து. அண்ணல்: சிவபெருமான். பாக்குமரத்தைக் கொடிகள் பின்னி இருப்பது, திருவிழாவில் கொடிமரத்தைச் சுற்றி இருக்கும் தருப்பையை ஒக்கும் என்பது கருத்து.

100. சீதம்: குளிர்ச்சி. வேரி: தேன். முரல்: பண்பாடும். செருந்தி: ஒருசெடி. போத: நிறைய. புத்தேள்: தேவர். மனு: மந்திரம். ஏமம்: பொன். உதகம்: நீர்.

101 விரைசெய் பங்கயச் சேக்கைமேல் பெடையொடு மேவி,
அரச, அன்னம்நன் மணம்செய, அம்புயப் பொய்கை
திரைவ ளைக்கையால், நுண்துளி செறிந்தபா சடையாம்
மரக தக்கலத் தரளநீ ராஞ்சனம் வளைப்ப. 10

102 இரும்பின் அன்னதோள் வினைஞர், ஆர்த்துஎறிந்து, வாய்மடுக்கும்
கரும்பு தின்றுஇடி ஏற்றுஒலி காட்டிஇன் சாறு
சுரும்பு சூழ்கிடந்து அரற்றிடச் சொரிந்துவெம் சினத்தீ
அரும்பு கண்களிறு ஒத்தன, ஆலைஎந் திரங்கள். 11

103 பள்ள நீர்குடைந்து, அம்சிறைப் பாசிபோர்த்து, எழுந்த
வெள்ளை அன்னத்தை, கார்அனம் எனப்பெடை, வீழ்ந்த
உள்ளம் மீட்டுஅல மர, சிறகு உதறிஉள் அன்பு
கொள்ள, ஆசையின் தழீஇக்கொடு குடம்பைசென்று அணையும் 12

104 இரவி ஆழிஒன்று உடையதேர் ஈர்த்துஎழும் இமையாப்
புரவி, நாநிமிர்த்து அயில்வன, பொங்கர்வாய்த் தளிர்கள்;
கரவுஇ லார்மகத்து எழுபுகை கற்பக நாட்டில்
பரவி வாட்டுவ பனிஎனப் பங்கயப் பொய்கை. 13

---

101. சேக்கை: படுக்கை. பெடை: பெண் அன்னம். அரச அன்னம்: ஆண் அன்னம். அம்புயப் பொய்கை: தாமரைத் தடாகம். திரைவளைக்கை: அலைகளாகிய வளையணிந்த கைகள். பாசடை: பசிய இலை. மரகதக்கலம்: பச்சைத்தட்டு. தரள நீராஞ்சனம்: முத்து ஆரத்தி.

102. வினைஞர்: மள்ளர். இடிஏறு: ஆண் இடி. இன்சாறு: இனிய கருப்பஞ்சாறு. சுரும்பு: வண்டு. மள்ளர்கள் கரும்பைக் கொடுத்துச் சாறுபிழிகின்ற கரும்பாலைகள், கரும்பு தின்னும் யானைகளை ஒத்திருக்கின்றன என்பது கருத்து.

103. கார் அனம்: கருநிற அன்னம். வீழ்ந்த: விரும்பிய. மீட்டு: திருப்பி. அலமர: வருந்த. குடம்பை: கூடு. நீருள் மூழ்கி, நீரின்பாசி சிறையில் படிய, வெளித்தோன்றிய அன்னத்தை, அதன் கருநிறத்தைக் கண்டு, அது தன் துணை அன்று எனப் பெண் அன்னம் வருந்த, ஆண் அன்னம் சிறகை உதறித் தன் நிறத்தைக் காட்டிய உடன் தழுவிக் கூட்டினுள் சென்று அணையும் என்க,

104 இரவி: சூரியன். ஆழிஒன்று உடைய தேர்: ஒற்றைச் சக்கரத் தேர். ஈர்த்து: இழுத்து. புரவி: குதிரை. அயில்வன: உண்பன. பொங்கர்: சோலை. கரவு: வஞ்சகம். மகம்: வேள்வி,

## இடைநகர்

105 பிறங்கும் ஆலவாய் அகத்துள்எம் பிரான்அரு ளால்வந்து
அறங்கொள் தீர்த்தமாய் எழுகடல் அமர்ந்தவா நோக்கி,
கறங்கு தெண்திரைப் பெரும்புறக் கடலும்வந்து, இவ்வூர்ப்
புறங்கி டந்ததே போன்றது புரிசைசூழ் கிடங்கு 14

106 எறியும் வாளையும் அடிக்கடி எழுந்துஉடல் பரப்பிப்
பறியும் ஆமையும் வாளொடு கேடகம் பற்றிச்
செறியும் நாண்மலர் அகழியும் சேண்தொடு புரிசைப்
பொறியு மேஅன்றி உடன்றுபோர் புரிவது போலும். 15

107 கண்இ லாதவெம் கூற்றுஎன, கராம்கிடந்து அலைப்ப,
மண்ணி னார்எவ ரேனும்இம் மடுவிடை வீழ்ந்தோர்,
தெள்நி லாமதி மிலைந்தவர்க்கு ஒப்புஎனச் சிலரை
எண்ணி னார்,இருள் நரகம்நீத்து ஏறினும் ஏறார். 16

108 குமிழ்அ லர்ந்தசெந் தாமரைக் கொடிமுகிழ் கோங்கின்
உமிழ்த ரும்பர ஞானமுண்டு உமிழ்ந்தவாய் வேதத்
தமிழ்அ றிந்து,வை திகமுடன் சைவமும் நிறுத்தும்
அமிழ்த வெண்திரை வையையும் ஒருபுறத்து அகழாம். 17

109 பிள்ளை யும்பெடை அன்னமும் சேவலும் பிரியாக்
கள்ள முண்டகச் செவ்வியால் கண்டவர் கண்ணும்
உள்ள மும்திரும் பாவகை சிறைப்படுத்து ஓங்கும்
புள்அ லம்புதண் கிடங்குஇது; புரிசையைப் புகல்வாம். 18

---

105 கறங்கு: ஒலிக்கின்ற. புரிசை: மதில். தடாதகையின் தாயாகிய காஞ்சனமாலை ஆடும் பொருட்டுச் சோமசுந்தரக் கடவுளால் வரவழைக்கப்பெற்ற எழுகடலும் மதுரை நகரில் தங்கியிருப்பதைக் கண்டு, வெளிக் கடலும் மதுரை நகர மதிலைச் சுற்றி அகழியாக அமைந்திருக்கின்றது என்பது கருத்து.

106 சேண் தொடு: வானளாவிய. புரிசைப் பொறி: மதிலில் பொருந்திய படைக்கருவி. உடன்று: சினந்து. மதில்களில பதிக்கப்பெற்ற பொறிகள் மட்டும் போர் புரியவில்லை; மதிலை ஒட்டிய அகழியில் உள்ள வாளையும் ஆமையுமே போர் செய்கின்றன என்பது. கருத்து. வாளை வாளுக்கும் ஆமை கேடகத்துக்கும் உவமை.

107. கண்: கண்ணோட்டம். வெம் கூற்று: கொடிய யமன். கராம்: முதலை. மதி மிலைந்தவர்: சிவபெருமான். சிவபெருமானுக்கு வேறு சில தேவர்கள் சமம் என்று நினைக்கின்றவர் இருள் நகரத்தை நீத்துக் கரை யேறினும், முதலைகள் கிடக்கும் இக் கிடங்கில் வீழ்ந்தார் கரை யேறார் என்பது கருத்து.

108. குமிழ் அம்பிகையின் மூக்குக்கும், செந்தாமரை முகத்திற்கும் கொடி உடம்பிற்கும் கோங்கு தனத்திற்கும் உவமை. உமிழ்தருதல்: பொழிதல். பரஞானம்: சிவஞானம். உமிழ்ந்த வாய் வேதத் தமிழ்: வாயினின்றும் தோன்றிய தமிழ் மறையாகிய தேவாரம். அம்பிகை செம்பொற்கிண்ணத்து அமுத ஞானம் பருகி, தேவாரமாக வெளிப்படுத்திய ஞான சம்பந்தப் பிள்ளையாரின் தமிழை அறிந்து வைதிக சைவத்தை நிலை நாட்டும் வையை ஆறும் மதுரை நகரத்திற்கு ஒரு புறத்திற்கு அகழாக அமைந்திருக்கின்றது என்பது கருத்து.

109. கள்ள முண்டகம். தேனை உடைய தாமரை. கிடங்கில் பறவைகள் கூட்டம் கூட்டமாகத் திரிவது கண்டவர் உள்ளத்தையும் கண்ணையும் கவர்கின்றது என்பது கருத்து.

110 மாகம் உந்திய கடிமதில், மதுரை நாயகர்கைந்
நாகம் என்பதே தேற்றம்;அந் நகர்மதில் விழுங்கி,
மேகம் நின்றுஅசை கின்றது,அவ் வெஞ்சினப் பணிதன்
ஆகம் ஒன்றுதோல் உரிபட நெளிவதே ஆகும். 19

111 புரம்க டந்தபொன் குன்றுகோ புரம்என, சுருதிச்
சிரம்க டந்தவர் தென்னராய் இருந்தனர், திருந்தார்
உரம்க டந்திட வேண்டினும் உதவிசெய்து, அவரால்
வரம்கள் தந்திடப் பெறஎதிர் நிற்பது மானும். 20

112 சண்ட பானுவும் திங்களும் தடைபட, திசையும்
அண்ட கோளமும் பரந்துநீண்டு அகன்றகோ புரங்கள்,
விண்ட வாயிலால் வழங்குவ, விடஅரா அங்காந்து
உண்ட போல்பவும் உமிழ்வன போல்பவும் உழும்மா. 21

113 மகர வேலைஎன்று யானைபோல் மழைஅருந்து அகழிச்
சிகர மாலைசூழ் அம்மதில், திரைக்கரம் துழாவி
அகழ ஓங்குநீர் வைகையால் அல்லது, வேற்றுப்
பகைவர் சேனையால் பொரப்படும் பாலதோ? அன்றே. 22

114 எல்லை தேர்வழித் தடைசெயும் இம்மதிற் புறம்சூழ்ந்து,
ஒல்லை மேவலர் வளைந்துழி, உடன்றுபோர் ஆற்றி
வெல்ல மள்ளரும் வேண்டுமோ? பொறிகளே வெல்ல
வல்ல, அம்மதில் பொறிசெயும் மறம்சிறிது உரைப்பாம். 23

---

110. மாகம்: வானம். கடிமதில்: காவல் அமைந்த மதில் சுவர். மதுரை நாயகர்: சோம சுந்தரக் கடவுள். கைந்நாகம்: கையில் அணிந்த பாம்பு. தேற்றம்: துணிபு. பணி: பாம்பு. உரிபட: உரியும் பொருட்டு.

111. புரம் கடந்த பொற்குன்று: முப்புரத்தை வெல்ல வில்லாக அமைந்த மேருமலை. சுருதிச்சிரம் கடந்தவர்: வேதமுடிக்கும் அப்பாற்பட்ட சிவபெருமான். திருந்தார்: பகைவர். உரம்: வலிமை. வரங்கள் தந்திடப் பெற: தந்தருளும் வரங்களைப் பெற்றுக்கொள்ள. மேருமலை பணி கேட்கக் கோபுரமாக நிற்பதை ஒக்கும்.

112. சண்டபானு: விரைந்த இரவி. அங்காந்து: வாய் பிளந்து. பரந்து நின்று அகன்ற கோபுரங்களால் தடுக்கப் பெற்ற இரவியும் திங்களும் அக்கோபுர வாயிலில் நுழைந்து செல்வதால், நுழையும்போது பாம்பு விழுங்குவது போலவும், வெளிப்படும்போது அப்பாம்பு கக்குவது போலவும் தோன்றுகின்றன.

113. மகரம்: சுறாமீன். வேலை: கடல். மழை: மேகம். அகழ: தோண்ட. மதில், வையையின் அலைகளால் தாக்கப்படுமே அன்றி, மாற்றார் படைகளால் தாக்கப்படாது என்பது கருத்து.

114. எல்லை: சூரியன். மேவலர்: பகைவர். உடன்று: சினந்து. மள்ளர்: வீரர். மறம்: வீரம்.

## மதிற் பொறிகள்

115 மழுக்கள் வீசுவன, நஞ்சு பூசுமுனை
வாள்கள் வீசுவன, முத்தலைக்
கழுக்கள் வீசுவன, குந்தம் நேமிஎரி
கால வீசுவன, காலன்நேர்
எழுக்கள் வீசுவன, கப்ப ணங்கள்விடம்
என்ன வீசுவன, வல்நெடும்
கொழுக்கள் வீசுவன, கல்க வண்கயிறு
கோத்து வீசுவன, ஆர்த்தரோ. 24

116 நஞ்சு பில்குதுளை வாள்எ யிற்றுஅரவு
நாநிமிர்த்து எறியும்; மலைஅரா
வெஞ்சி னம்கொள்முழை வாய்தி றந்துபொரு
வாரை விக்கிட விழுங்குமால்;
குஞ்ச ரங்கொடிய முசலம் வீசிஎதிர்
குறுகு வார்தலைகள் சிதறுமால்;
அஞ்சு வெம்பொறி விசைப்பினும் கடுகி
அடுபு லிப்பொறி அமுக்குமால். 25

117 எள்ளி ஏறுநரை இவுளி, மார்புஇற
எறிந்து குண்டுஅகழி இடைவிழத்
தள்ளி மீளும்;உருள் கல்இ ருப்புமுளை
தந்து வீசிஉடல் சிந்துமால்;
கொள்ளி வாய்அலகை, வாய்தி றந்துகனல்
கொப்பு ளிப்பஉடல் குப்புறத்
துள்ளி ஆடுவன, கைகள் கொட்டுவன,
தோள்பு டைப்பசில கூளியே. 26

---

**115.** வீசுவன: எறிவன. முத்தலைக் கழு: மூன்று தலையை உடைய சூலம். குந்தம். வேல். நேமி: சக்கரம். எரிகால: தீப்பறக்க. காலன் நேர்: எமனை ஒத்த. எழுக்கள்: வளைதடிகள். கப்பணம்: இரும்பினால் செய்த நெருஞ்சிமுள் வடிபப்படை. கொழு: கொழுப்படை. ஆர்த்து: ஆரவாரித்து.

**116.** பில்குதுளை: கொட்டுகின்ற துவாரம். மலைஅரா: மலைப்பாம்பு. பொருவார்: பகைவர். விக்கிட: விக்குமாறு. குஞ்சரம்: யானை. முசலம்: உலக்கைப்படை.

**117.** எள்ளி: இகழ்ந்து. ஏறுநரை: ஏறுகின்றவர்களை. இவுளி: குதிரை. மார்பு இற எறிந்து: நெஞ்சுஒடிய உதைத்து. மீளும்: திரும்பும். கொள்ளிவாய் அலகை: கொள்ளி வாய்ப் பிசாசு. கூளி: பேய்.

118 துவக்கு சங்கிலி எறிந்துஇ ழுக்குர்;அரி
தொடர்பி டித்தகை அறுக்கவிட்டு
உவக்கும்; ஒன்னலர்கள் தலைக ளைத்திருகி
உடல்நெ ருக்கும்,மர நிலைகளால்
கவைக்கொ ழுந்தழல் கொளுத்தி வீசும்;எதிர்
கல்உ ருட்டிஅடும்; ஒல்எனக்
குவைக்க டுங்கல்மழை பெய்யும்; அட்டமணல்
கொட்டும்; மேவலர்கள் கிட்டவே. 27

119 உருக்கி ஈயமழை பெய்யு மால்,அய
உருக்கு வட்டுஉருகு செம்பின்நீர்
பெருக்கி வீசும்;விடு படைஎ லாம்எதிர்
பிடித்து விட்டுஅவர் தமைத்தெறச்
செருக்கி வீசும்;நடை கற்ற மாடமொடு
சென்று சென்றுதுடி முரசொடும்
பெருக்கி மீளும்,நடை வையம் மேல்நடவி
எய்யும்; வாளிமழை பெய்யுமால். 28

120 வெறிகொள் ஐம்பொறியை வெல்லினும், பொருது
வெல்லு தற்குஅரிய காலனை
முறிய வெல்லினும், வெலற்குஅரும் கொடிய
முரணவாய் அமரர் அரண்எலாம்
அறிவி னுல்நிறுவு கம்மி யன்செயவும்
அரியவாய், யவனர் புரியும்இப்
பொறிகள் செய்யும்வினை இன்ன; பொன்அணி
புர்த்து வீதிகள் உரைத்துமால். 29

---

118. துவக்கு: கட்டுகின்ற. கவை: பிளவு. குவை: கூட்டம். அட்ட மணல்; வறுத்த மணல். மேவலர்கள் கிட்ட: பகைவர்கள் நெருங்க.

119: உருக்கி ஈயமழை பெய்யும்: ஈயத்தை உருக்கி மழையாகப் பெய்யும். ஆல் அசை. அயம்: இரும்பு. நடைகற்றமாடம்: நடந்து செல்கின்ற மாடங்கள். துடி: உடுக்கை. முரசு: பேரிகை. நடைவையம்: நடைத்தேர்.

120. வெறி கொள் ஐம்பொறி: மயக்கத்தை உண்டாக்குகின்ற ஐம்புலன். முரன்: வலிமை. கம்மியன்: தேவதச்சன். இன்ன: இத் தன்மையன. பொன் அணிபுரம்: அழகிய மதுரைமா நகரம், ஐம்புலன்களை வென்றாலும், யமனை வென்றாலும் இம் மதிற் பொறிகளை வெல்லுதல் அருமை என்பது கருத்து. மேல் மதுரைமா நகர வீதிகளைச் சொல்லத் தொடங்குகின்றார்.

## அகநகர்

121 கழையும் தாமமும் சுண்ணமும் மணிநிழல் கலனும்
குழையும் தூபமும் தீபமும் கும்பமும் தாங்கித்
தழையும் காதலர் வரவுபார்த்து அன்புஅகம் ததும்பி
விழையும் கற்பினர் ஒத்தன விழாஅரு வீதி. 30

122 ஆலம் நின்றமா மணிமிடற்று அண்ணல்ஆ னந்தக்
கோலம் நின்றசே அடிநிழல் குறுகினர் குணம்போல்,
வேலை நின்றுஎழு மதிஎதிர் வெண்ணிலாத் தெண்ணீர்
கால நின்றன சந்திர காந்தமா ளிகையே. 31

123 குன்றம் நேர்பளிக்கு உபரிகை நிரைதொறும் குழுமி,
நின்ற பல்சரா சரமும்அந் நீழல்வாய் வெள்ளி
மன்றுஅ கம்பொலிந்து ஆடிய மலர்அடி நிழல்புக்கு,
ஒன்றி ஒன்றுஅறக் கலந்தபல் உயிர்நிலை அனைய. 32

124 கறித்துஅ ருந்துபுல் குவைகழீஇ, கால்தொடர் பரியத்
தெறித்து அகன்று,அயல் மரகதச் சித்திரத் தெற்றி
எறித்த பைங்கதிர்க் கொழுந்தையும் எட்டி,நா வளைத்துப்
பறித்தும் என்றுவாய் அசைப்பன, பசலைஆன் கன்று. 33

---

121. தாமம்: மாலை. சுண்ணம்: மணத்தூள். மணி: இரத்தினம். கலன்: அணிகலன். குழை: மாந்தளிர். கும்பம்: பூரணகும்பம். ததும்பி: நிறைந்து. விழையும் கற்பினர்: விரும்பிய காதலை உடைய மகளிர். விழாஅரு: விழாக்கள் நீங்காத.

122. ஆலம்: நஞ்சு. நின்ற: நிலைபெற்ற. மணிமிடற்று அண்ணல்: நீலகண்டனை **சிவ**பெருமான். கோலம்: வடிவம். சேவடி: சிவந்த திருவடி. குறுகினர்: அடைந்தவர்**கள்**. வேலைநின்று: கடலினின்றும். மதிஎதிர்: சந்திரன் முன்னர். தெண்ணீர்: தெளிந்த நீர். கால: ஒழுக. சந்திரகாந்தம்: சந்திர ஒளியில் நீர் ஒழுகும் ஒருவகைக் **கல்**.

123. பளிக்கு உபரிகை: பளிங்குக் கற்களால் ஆகிய மாடங்கள். நிரை: வரிசை. வெள்ளி மன்று அகம்: வெள்ளியம்பலம்.

124. கறித்து: கடித்து. புல் குவை: புல்கூட்டம். கழீஇ: நீக்கி. கால் தொடர்: காலிற் கட்டிய கயிறு. பரியத் தெறித்து அகன்று: அறுத்துத் தள்ளி நீங்கி. அயல்: அணித்தே உள்ள. மரகதச் சித்திரத்தெற்றி: பச்சைக் கற்கள் பதித்த அழகிய திண்ணை. பறித்தும் என்று: பிடுங்குவோம் என எண்ணி. பசலை ஆன்கன்று: பசுவின் இளம் கன்று.

125 சிறுகு கண்ணவாய், காற்றுஎறி செவியவாய், பாசம்
இறுகு காலவாய், கோட்டுமான் இனம்வழங்கு ஆறும்,
குறுகு நுண்மருங்கு இறுத்துஎழு கோட்டுமான் இனம்போம்
மறுகும், வண்டுசூழ்ந்து இறைகொள மான்மதம் நாறும். 34

126 மாட மாலையும் மேடையும் மாளிகை நிரையும்
ஆடுஅ ரங்கமும் அன்றி,வேள் அன்னவர் முடியும்
ஏடுஅ விழ்ந்ததார் அகலமும் இணைத்தடம் தோளும்
சூடும் மாதரார் சீறடிப் பஞ்சதோய் சுவடு. 35

127 மருமச் செம்புனல் ஆறுஇட, மாறுஅடு கோட்டுப்
பருமச் செங்கண்மால் யானையின் பணைக்கையும் மறைநூல்
அருமைச் செம்பொருள் ஆய்ந்தவர்க்கு அரும்பொருள் ஈவோர்
தருமச் செங்கையும் ஒழுகுவ, தானநீர் ஆறு. 36

128 பரிய மாமணி பத்தியிற் பதித்துஇருள் படலம்
பொரிய வில்இடக் குயிற்றிய பொன்அர மியமும்
தெரிய மாமுரசு ஒலிகெழு செம்பொன்ஆடு அரங்கும்
அரிய மின்பயோ தரம்சுமந்து ஆடுவ கொடிகள். 37

129 வலம்ப டும்புயத்து ஆடவர் மார்பமேல் புலவிக்
கலம்ப டர்ந்தபூண் முலையினர் கால்எடுத்து ஓச்ச,
சிலம்புஅ லம்புஇசை மழுங்க,முன் எழும்அவர் தேம்தார்ப்
புலம்பு வண்டுநொந்து அரற்றிய பொங்குபேர் ஒலியே. 38

---

125. பாசம்: சங்கிலி. கோட்டுமான் இனம்: கொம்புகளை உடைய யானைக்கூட்டம். வழங்கு ஆறு: செல்லுகின்ற வழி. குறுகுநுண்மருங்கு: குறுகிய நுண்ணிய இடை. இறுத்து எழுகோட்டு மான்இனம்: முறித்து மேல் எழுந்த கொங்கைகளை உடைய மான் போன்ற மகளிர்குழு. மறுகு: வீதி. மான்மதம்: கத்தூரி.

126. மாலை: வரிசை. ஆடு அரங்கு: நடனசாலை. வேள் அன்னவர்: மன்மதனை ஒத்த ஆடவர். அகலம்: மார்பு. இணை: இரண்டு. சூடும்: பொருந்தும். பஞ்சுதோய் சுவடு: செம்பஞ்சுக் குழம்பில் தோய்ந்த அடிச்சுவடு.

127. மருமம்: மார்பு. செம்புனல்: இரத்தம். மாறு: பகைவர் கோடு: கொம்பு. பணைக்கை: பணை போன்ற துதிக்கை. தருமச் செங்கை: அறம் செய்யும் செவ்விய கை. தான நீர் ஆறு: யானையைக்குறிக்கும் கால், ஆறுபோல் பெருகும் மதநீர். அறவோரைக் குறிப்பிடுங்கால தாரை வார்க்கும் நீர்ப்பெருக்கு.

128. பத்தி: வரிசை. பொரிய: சிதறும்படி. வில்: ஒளி. குற்றிய: உண்டாக்கிய. அரமியம்: நிலா முற்றம். மின்: இடை. பயோதரம்: கொங்கை. பெண்களைக் கொடிகளாக உவமிக்கின்றார்.

129. வலம்: வெற்றி. மார்பமேல்: மார்பின் இடத்து. புலவி: ஊடல். கலம்: அணிகள். கால் எடுத்து ஓச்ச: கால் தூக்கி உதைக்க.

130 தைய லார்மதி முகங்களும் தடங்களும் குழைய;
மைஅ ளாவிய விழிகளும் மாடமும் கொடிய;
கையும் நாண்மலர்ப் பொதும்பரும் கறங்குஇசை வண்ட;
நெய்ய ஓதியும் வீதியும் நீள்அற னெறிய; 39

131 மலரும் திங்கள்தோய் மாடமும் செய்வன மணங்கள்;
அலரும் தண்துறை யும்குடைந்து ஆடுவ தும்பி;
சுலவும் சோலையும் மாதரும் தூற்றுவ அலர்கள்;
குலவும் பொய்கையும் மனைகளும் குறைபடா அன்னம். 40

132 ஊடி னார்எறி கலன்களும் அம்மனை உடன்பந்து
ஆடி னார்பரி ஆரமும் அடியினால் சிற்றில்
சாடி னாரொடு வெகுண்டுகண் ததும்புமுத்து உறைப்ப,
வாடி னார்பரி நித்தில மாலையும் குப்பை. 41

133 ஐய! என்உரை வரம்பின ஆகுமோ? அடியர்
உய்ய, மாமணி வரிவளை விறகுவிற்று உழன்றோன்,
பொய்இல் வேதமும் சுமந்திடப் பொருதுஅகன்று, அரற்றும்
செய்ய தாள்மலர் சுமந்திட, தவம்செய்த தெருக்கள். 42

134 தோரண நிரைமென் காஞ்சி சூழ்நிலை நெடுந்தேர் அல்குல்
பூரண கும்பக் கொங்கைப் பொருவுஇல்மங் கலமா மங்கை,
தார்அணிந்து ஆரம்தூக்கிச் சந்துஅகில் திமிர்ந்து பாலிச்
சீரணி முளைவெண் மூரல் செய்துவீற் றிருக்கு மன்றே. 43

---

130. தடங்கள்: தடாகங்கள். குழைய: 1. குண்டலங்களை உடையன, 2. தளிர்களை உடையன. மை: 1. கண்கட்கு இடும் மை, 2. மேகமண்டலம். கொடிய: 1. கொடுமை உடையன, 2. கொடிகளை உடையன. கை: மகளிர் கை. பொதும்பர்: சோலை. வண்ட: 1. வளையல்களை உடையன, 2. வண்டுகளை உடையன. நெய்ய ஓதி: நெய் பூசிய கூந்தல். கூந்தலைக் குறிக்குங்கால் அறல்நெறிய என்றும், வீதியைக் குறிக்குங்கால் அறன் நெறிய என்றும் பிரிக்கவேண்டும். அறல்: கருமணல். அறன்: அறம்.

131. மணம்: 1. வாசனை. 2. திருமணம். தும்பி: 1. வண்டு. 2. யானை. அலர்: 1. மலர். 2. பழிச்சொல். அன்னம்: 1. அன்னப்பறவை. 2. சோறு.

132. கலன்: ஆபரணம். அம்மனை: மகளிர் விளையாட்டு. பரி ஆரம்: நீக்கிய அணிகள். சிற்றில் சாடினார்: சிறு வீட்டை உதைத்த இளைஞர். முத்து உறைப்ப: முத்துப்போன்ற நீர்த்துளிகள் கொட்ட. வாடினார்: வருந்திய சிறுமிகள். பரிநித்தில மாலை: எறிந்த முத்துமாலை. குப்பை: குவியல். மேற்குறித்த பொருள்கள்தாம் வீதியில் குப்பையாகச் சேர்வன.

133. ஐய: வியப்பு. வரம்பு: அளவு. மாமணி, வரிவளை: பெரிய மாணிக்கங்கள். வரிகளையுடைய வளையல்கள். விற்று உழன்றோன்: (அடியார் பொருட்டு) விற்றுத் திரிந்த இறைவன். பொய்இல்: பொய் இல்லாத. சுமந்திடப் பொருது: தாங்க மாட்டாமல். அகன்று: விலகியிருந்து. அரற்றும்: முறையிடும். செய்யதாள் மலர்: சிவந்த திருவடித் தாமரை. சொக்கேசர் மாணிக்கமும் வளையலும் விறகும் விற்க நடந்த திருவடிகளைத் தாங்க மதுரை நகர் வீதிகள் தவம்செய்தன.

134. காஞ்சி: இடை அணி. பொருவு: ஒப்பு. ஆரம்: முத்துமாலை. சந்து அகில் திமிர்ந்து: சந்தனக் கலவையையும் அகில் குழம்பையும் பூசி. பாலி: பாலிகை. மூரல்: புன்னகை.

135 திங்களைச் சுண்ணம் செய்து சேறுசெய்து ஊட்டி அன்ன
பொங்குவெண் மாடப் பந்தி, புண்ணியம் பூசும் தொண்டர்,
தங்கள்மெய் வேடம் தன்னைத் தரித்தன, சாலக் கண்கொண்டு
அங்கணன் விழவு காண்பான் அடைந்துஎன மிடைந்தஅன்றே 44

136 தேர்ஒலி, கலினப் பாய்மான் சிரிப்பொலி, புரவி பூண்ட
தார்ஒலி, கருவி ஐந்தும் தழங்குஒலி, முழங்கு கைம்மான்
பேர்ஒலி, எல்லாம் ஒன்றிப் பெருகுஒலி அன்றி, என்றும்
கார்ஒலி செவிம டாது கடிமணி மாடக் கூடல். 45

## பரத்தையர் வீதி

137 இழிபவர் உயர்ந்தோர் மூத்தோர் இளையவர் கழியா நோயால்
கழிபவர் யாவ ரேனும் கண்வலைப் பட்டு நெஞ்சம்
அழிபவர், பொருள்கொண்டு, எள்ளுக்குஎண் ணெய்போல் அளந்து காட்டிப்
பழிபடு போகம் விற்பார் ஆவணப் பண்பு சொல்வாம். 46

138 மெய்படும் அன்பி னர்போல் விரும்பினர்க்கு அருத்தும் தங்கள்
பொய்படும் இன்பம் யார்க்கும் புலப்படத் தேற்று வார்போல்,
மைபடு கண்ணார், காமன் மறைப்பொருள் விளங்கத் தீட்டிக்
கைபடச் சுவராய்த் தோன்றச் சித்திரம் காணச் செய்வார். 47

139 திருவில்கால் மணிப்பூண் ஆகம் பலகையா, தெண்முத்து ஆரம்
அருவிக்கால் வரைமென் கொங்கைச் சூதுஒட்டி ஆடி வென்றும்,
மருவிக்கா முகரைத் தங்கள் வடிக்கண்வேல் மார்பம் தைப்பக்
கருவிச்சூது ஆடி வென்றும், கைப்பொருள் கவர்தல் செய்வார் 48

---

135. சுண்ணம் செய்து: நீறு ஆக்கி. மாடப்பந்தி: மாடவரிசை. புண்ணியம்: திருநீறு. அங்கணன்: இறைவன். விழவு: திருவிழா. மிடைந்த: நெருங்கிய. மாடப்பந்தி மிடைந்த என முடிக்க.

136. கலினம்: கடிவாளம். பாய்மான்: தாவுகின்ற குதிரை. சிரிப்பு: கனைப்பு. தார்: கிண்கிணி மாலை. கைம்மான்: யானை. கார்ஒலி: மேகமுழக்கம். செவிமடாது: செவியில் படாது. யானை, குதிரை, தேர்ப்படைகளின் பெருக்கத்தால் தோன்றும் ஒலி மேகத்தின் ஒலியைத் தோற்கடித்துவிட்டன மாடக் கூடலில்.

137. கழியா நோய்: தீராப் பிணி. போகம் விற்பார்: இன்பத்தை விற்கும் விலைமாதர். ஆவணம்: வீதி.

138. அருத்தும்: ஊட்டுகின்ற. பொய்படும் இன்பம்: பொய்ஆகிய இன்பம். மைபடு கண்ணார்: மைதீட்டிய கண்ணை உடையார். காமன் மறைப்பொருள்: சிற்றினப நூலுள் கூறப்பெற்ற மறைந்த பொருள்.

139. வில்கால்: ஒளியைக் கக்குகின்ற. ஆகம்பலகையா: மார்பகத்தைப் பலகையாகக் கொண்டு. அருவிக்கால்: அருவியைக் கொட்டுகின்ற. கொங்கைச்சூது ஒட்டி ஆடி: கொங்கையைச் சூதாடு கருவியாக வைத்து விளையாடி. வடிக்கண்: கூர்மையான கண்.

140 தண்பனி நீரில் தோய்த்த மல்லிகைத் தாமம் நாற்றி,
விண்படு மதியம் தீண்டும் வெண்ணிலா முற்றத்து இட்ட
கண்படை அணைமேல் கொண்டு, காமனும் காமுற்று எய்தப்
பண்பல பாடி, மைந்தர் ஆவியைப் பரிசில் கொள்வார். 49

141 குரும்பை வெம்முலையில் சிந்து சாந்தமும், குழலில் சிந்தும்
அரும்புஅவிழ் மாலைத் தாதும், அளிநுகர்ந்து எச்சில் ஆகிப்
பொரும்பரிக் காலில் தூளாய்ப் போய்,அர மாதர் மெய்யும்
இருங்குழல் காடும் சூழ்போய் இயல்மணம் விழுங்குமன்றே. 50

142 ஆலவாய் உடையான் என்றும், அங்கயற் கண்ணி என்றும்,
சோலைவாழ் குயிலின் நல்லார் சொல்லியாங்கு ஒருங்கு சொல்லும்
பால்அவாம் கிளிகள், பூவை, பன்முறை குரவன் ஓதும்
நூல்அவாய்ச் சந்தை கூட்டி நுவல்மறைச் சிறுரை ஒத்த. 51

143 ஔவிய மதர்வேல் கண்ணார் அந்தளிர் விரல்நடாத்தும்
திவ்விய நரம்பும் செவ்வாய்த் தித்திக்கும் எழாலும் தம்மில்
கௌவிய நீர ஆகிக் காளையர் செவிக்கால் ஓடி
வெவ்விய காமப் பைங்கூழ் விளைதர வளர்க்கும் அன்றே. 52

144 கண்புலன் ஆதி ஐந்தும் உவப்புற, கனிந்த காமம்
விண்புலத் தவரே அன்றி, வீடுபெற் றவரும் வீழ்ந்து
பெட்பமுற்று, அமுதுங் கைப்ப, பெருங்குலக் கற்பி னார்போல்
நட்பிடைப் படுத்தி, விற்கும் நல்லவர் இருக்கை ஈதால். 53

---

140. நாற்றி: தொங்கவிட்டு. கண்படை அணை: உறங்கும் மஞ்சம். காமுற்று எய்த: ஆசைப்பட்டு வர. பண்: இசை. ஆவியை: உயிரை.

141. குரும்பை: தென்னம்பிஞ்சு. அளி: வண்டு. பொரும்பரி: போர்க்குதிரை. தூளாய்ப் போய்: பொடி ஆகி. அரமாதர்: தெய்வப் பெண்கள். இயல் மணம்: இயற்கை வாசனை.

142. ஆலவாய் உடையான்: மதுரையில் கோயில் கொண்டுள்ள சொக்கேசன். அங்கயற் கண்ணி: மீனாட்சி. குயிலின்: குயிலின் குரல் போன்ற இன் குரலுடைய. நல்லார்: மகளிர். ஒருங்கு: ஒன்றுசேர. பால் அவாம்: பாலை விரும்புகின்ற. பூவை: நாகணவாய்ப்பறவை. குரவன்: ஆசிரியன். நூல்: மறை. சந்தை கூட்டி: ஒருசேர கூட்டிச் சொல்கிற. மறைச்சிறுர்: அந்தணச்சிறுவர்.

143. ஔவியம்: பொறாமை. மதர்: கொழுத்த. திவ்விய நரம்பு: மேலான வீணையின் நரம்பு ஒலி. செவ்வாய் தித்திக்கும் எழால்: சிவந்த வாயினின்று வரும் இனிக்கும்பாடல். கௌவிய நீரஆகி: கலந்த நீராகி. செவிக்கால்: காதாகிய கால்வாய். வெவ்விய: கொடிய. காமப் பைங்கூழ்: காமம் ஆகிய பசிய பயிர்.

144. உவப்புற: களிப்பெய்த. வீடு பெற்றவர்: முத்தி அடைந்தவர். வீழ்ந்து: விரும்பி. பெட்பம் உற்று: மையலாகி. நட்பிடைப் படுத்திவிற்கும் நல்லவர்: நட்பின்கண் ஈடுபடுத்தி விற்கின்ற பரத்தையர்.

## வேளாளர் வீதி

145 வழுக்குஅறு வாய்மை மாண்பும், கங்கைதன் மரபின் வந்த
விழுக்குடிப் பிறப்பும், மூவர் ஏவிய வினைகேட்டு ஆற்றும்
ஒழுக்கமும், அமைச்சாய் வேந்தர்க்கு உறுதிசூழ் வினையும், குன்றா
இழுக்குஅறு மேழிச் செல்வர், வளமறுகு இயம்பல் உற்றும். 54

146 வருவிருந்து எதிர்கொண்டு ஏற்று நயன்உரை வழங்கும் ஓசை,
அருகுஇருந்து அடிசில் ஊட்டி முகமன் நன்கு அறையும் ஓசை,
உரைபெறு தமிழ்பா ராட்டும் ஓசைகேட்டு உவகை துள்ள
இருநிதி அளிக்கும் ஓசை, எழுகடல் அடைக்கும் ஓசை. 55

147 அருந்தினர் அருந்திச் செல்ல, அருந்துகின் றுரும், ஆங்கே
இருந்துஇனிது அருந்தா நிற்க, இன்னமுது அட்டுப் பின்னும்
விருந்தினர் வரவு நோக்கி, வித்துஎலாம் வயலில் வீசி,
வருந்திவிண் நோக்கும் ஓர்ஏர் உழவர்போல் வாடி நிற்பார். 56

148 வானமும் திசையும் பொங்கும் புகழ்மையும் வானம் பேணும்
ஞானமும் பொறையும் குன்றா நன்றியும் ஊக்கப் பாடும்
தானமும் கொடையும் அன்பும் வரிசையும் தகைசால் நண்பும்
மானமும் தவம்செய்து ஈன்ற மகவுபோல் வளர்க்க வல்லார். 57

## வணிகர் வீதி

149 புல்லி,ஓர் பண்டம் கொள்வார் வினவின்,அப் பொருள்தம் பக்கல்
இல்எனின், இனமாய் உள்ள பொருளுரைத்து எதிர்ம றுத்தும்,
அல்லதுஅப் பொருள்உண்டு என்னில், விலைசுட்டி அறுத்து நேர்ந்தும்,
சொல்லிலும்இலாபம்கொள்வார் தொல்மரபுஇருக்கைசொல்வாம்.58

---

145. வழுக்கு அறு: தவறாத. மூவர்: அந்தணர், அரசர், வணிகர். குன்றா: குறையாத. மேழிச் செல்வர்: வேளாளர். மறுகு: வீதி.

146. உரைபெறு தமிழ் பாராட்டும் ஓசை கேட்டு: புகழ் மிக்கதமிழ்ப் பாடலைப் போற்றுகின்ற ஒலியைச் செவிமடுத்து. இருநிதி: பெரும் பொருள். விருந்தினரை எதிர் கொண்டு வரவேற்கும் ஒலியும், அவருக்கு விருந்தூட்டும் ஒலியும், தமிழ்ப் பாடலின் நயம் உணர்ந்து பெரும் பொருள் வழங்கும் ஒலியும் எழுகடல் ஒலியை அடக்குகின்றன.

147. அருந்தினர்: உண்ட விருந்தினர். இன் அமுது அட்டு: (பின்னும்) இனிய அமுதை (உணவை) சமைத்து. வித்து: விதை. வாடி: வருந்தி. "செல்விருந்து ஓம்பி, வருவிருந்து பார்த்திருப்பான் நல்விருந்து வானத்தவர்க்கு'' என்ற திருக்குறள் ஈண்டு நினைவு கூரத் தக்கது.

148 வரிசை: தகுதி. வேளாளர் வானம் முதலிய மேற்சொன்ன எல்லாவற்றையும் தவம் செய்து பெற்ற பிள்ளையைப்போல் வளர்க்க வல்லவர்கள்.

149. புல்லி: அடைந்து. தம்பக்கல்: தம் இடத்து விலை சுட்டி அறுத்து: விலையை வரையறுத்துச் சொல்லி. கேட்கும் பொருள் இல் எனில் இல்லை என்றது உள்ளவேறு பொருளைச் சொல்லி மறுத்து இருக்கும் பொருளுக்கு விலையை வரையறுத்துச் சொல்லி, பேச்சினும் இலாபம் பெறுவர் வணிகர் என்க.

150 நீல வேதிமேல் பளிங்கினால் நிழல்சுவர் நிறீஇ,மின்
கால வாலிய வைரவாள் கால்நிரைத்து, உம்பர்க்
கோல வாள்நிலாச் சொரிமணி குயிற்றி,வெண் மாடம்
மாலை போல்வகுத்து, இயற்றின பீடிகை மறுகு. 59

151 திரைஅ ளிப்பவும் திரைபடு தீம்புனல் வேலிக்
கரைஅ ளிப்பவும் கரையில்ஆன் நிரைபடு கானத்
தரைஅ ளிப்பவும் தரைகிழித்து ஊன்றி விண்தாங்கும்
வரைஅ ளிப்பவும் வாங்கிவாய் மடுப்பன மாடம். 60

152 கரிய கம்பலக் கிடுகின்மேல் கதிர்விடு பவளத்
தெரியல், பொன்அரி மாலிகை, தெள்நிலாச் சொரியும்
பரிய நித்தில மணிவடம், மரகதப் பசுந்தார்,
விரிய விட்டன, இந்திர வில்நிரை அனைய. 61

153 நாள்க ளும்குளிர் திங்களும் ஞாயிறும் ஏனைக்
கோள்க ளும்குளிர் விசும்புஒரீஇக் குடிபுகுந் தாங்கு,
வாள்கி டந்துஇராப் பகல்ஒளி மழுக்கலால், வணிகர்
ஆள்க லம்பகர் பீடிகை, துறக்கநாடு அனைய. 62

154 பல்நி றத்தபல் பெருவிலைப் பட்டுஎலாம் அவண;
அன்ன பட்டின்மேம் படுவிலைப் பருத்தியும் அவண;
எந்நி லத்துஅரும் பொருள், பதின் எழுபுல வணிகர்
மன்இ ருக்கையும் அரும்பெறல் வளன்எலாம் அவண. 63

---

150. வேதி: திண்ணை. மின்கால: ஒளியைக்கக்க வாலிய: வெண்மையான. உம்பர்: மேலே. வாள் நிலாச் சொரிமணிகுயிற்றி: ஒளியுள்ளநிலவைப் பொழிகின்ற அரதனங்களைப் பதித்து, பீடிகை மறுகு: கடைவீதி.

151. நெய்தல் நிலத்துப் பொருள்களும் மருத நிலத்துப் பொருள்களும், முல்லை நிலத்துப் பொருள்களும், குறிஞ்சி நிலத்துப் பொருள்களும் வாங்கி நிறைத்து வைக்கப் பெற்றிருக்கின்றன பண்டசாலைகளில்.

152. கரிய கம்பலக் கிடுகு: கருமை நிறம் வாய்ந்த கம்பளிச்சட்டம். தெரியல்: மாலை. பொன் அரிமாலிகை: தங்கத்தில் பதித்த மணிமாலை. பரிய: பெரிய. மரகதப் பசுந்தார்: பசிய பச்சைமாலை. விரிய விட்டன: விரியுமாறு பரப்பப் பெற்றன. இந்திரவில் நிரை: வானவில் வரிசை.

153. நாள்கள்: நட்சத்திரங்கள். கோள்கள்: கிரகங்கள். ஒரீஇ: நீங்கி. குடிபுகுந் தாங்கு: குடிபுகுந்தாற் போல. வாள்: ஒளி. ஆள்கலம்: அணியும் ஆபரணம். துறக்க நாடு: வானுலகம்.

154. அவண: அவ்விடத்து உள்ளன. பருத்தி: நூலாடை. எந்நிலத்து அரும்பொருள்: எங்கும் கிடைத்தற்கரிய பொருள்கள். பதினெழு புலவணிகர்: இயல்பாகவே பொருந்தி இருக்கின்ற தமிழர் ஒழிந்த, பதினேழு மொழிக்கு உரிய வாணிகர்கள். மன்இருக்கை: நிலைபெற்ற உறைவிடம்,

155 மரக தத்தினுல் அம்மிகள், வைரவாள் உலக்கை,
உரல்கள் வெள்ளியால், அடுப்புஅகில் விறகு,உலை பனிநீர்,
அரிசி முத்து,அழல் செம்மணி, அடுகலன் பிறவும்
எரிபொ னுல்இழைத்து ஆடுப இவர்சிறு மகளிர். 64

156 செயிரில் தீர்ந்தசெம் பொன்னினுல் திண்நிலைக் கதவம்,
வயிரத் தாழ்உடைத்து அவர்கடை வாயிலும் என்ருல்,
அயிரில் தீர்ந்தபேர் அறிஞரும் அனையர்தம் செல்வத்து
இயல்இற் ரும்எனை வரையறுத்து இசைப்பதை எவனே? 65

157 எரிக்கு றும்பொறி அனையசெம் மணி,சுடர் எறிபொன்
வரிச்சு ரும்புநேர் மரகதம், முத்து,வாள் வைரம்,
தெரிப்புஅ ரும்துகிர், சிந்தின செல்லும்நாள் ஒன்றுக்கு
அரிப்பர் கைஅகப் படுவன, ஆயிரத்து இரட்டி. 66

158 பாய தொன்மரப் பறவைபோல் பயன்கொள்வான், பதினெண்
தேய மாந்தரும் கிளர்ந்தசொல் திரட்சிதான், தூய
மாயை காரிய ஒலியன்றி, வான்முதற் கருவின்
ஆய காரிய ஓசையே ஆய்க்கிடந் தன்றே. 67

159 ஒழிவுஇல் வேறுபல் பொருளும்ஏழ் உலோகமும் பிறவும்
வழுவுஇல் வேறுபல் கலைகளும் மரபுளி வகுத்துத்
தழுவி வேண்டினர் தாம்கொள, தக்கவா பகரா,
அழிவுஇ லாமறை போன்றன ஆவண வீதி. 68

---

155. சிறுமியர் பச்சைக்கல் அம்மிகள், வைரவாள் உலக்கை, வெள்ளி உரல், அகில் விறகு, பனிநீர் உலை, முத்து அரிசி, செம்மணி அழல், தங்கப் பாத்திரங்கள் இவைகளை வைத்து விளையாடுவர்.

156. செயிர்: குற்றம். திண்நிலைக்கததம்: வலிய நிலைக்கதவு. வயிரத் தாள்: வைரத்தினுல் ஆகிய தாழ்ப்பாள். அயிரில் தீர்ந்தபேர் அறிஞர்: ஐயத்தில் நீங்கித் தெளிந்த மூதறிஞர். செல்வத்து இயல் இற்ரும்: செல்வத்தின் அளவு இத்தன்மைத்தாம். இசைப்பதை எவன்: சொல்லுதல் எப்படி.

157. எரிக்குறும் பொறி: நெருப்பின் சிறிய சுடர். வரிச்சுரும்பு: கோடுகளை உடைய வண்டு. தெரிப்பு அரும் துகிர்: விலைமதிக்க முடியாத பவளம். சிந்தின: சிந்திக்கிடப்பன. செல்லும் நாள் ஒன்றுக்கு அரிப்பர் கைஅகப்படுவன: நாள்தோறும் அரித்து எடுக்கின்றவர் கையில் கிடைப்பன.

158. பாய தொன்மரம்: பரந்த பழையமரம். கிளர்ந்த சொல் திரட்சிதான்: பேசிய பல மொழிகளின் தொகுப்பு.

159. மரபுளி: முறையால். வகுத்து: வகைப்படுத்தி. பகரா: பகர்ந்து. ஆவண வீதி: கடைத்தெரு.

160 திக்குள லாம்புகழ் மதுரையைச் சிவபுரம் ஆக்கி,
முக்கண் நாயகன் அரசுசெய் முறையினுக்கு ஏற்ப,
தக்க தோழனோடு அளகைமா நகர்உறை தயக்கம்
ஒக்கும், அந்நகர் வாணிகர் உறையுள்சூழ் நியமம். 69

## மன்னவர் வீதி

161 ஒற்றை ஆழியான் உலகுஇருள் ஒதுக்குமா போல,
செற்ற நேமியால் கலிஇருள் தின்று,கோல் ஓச்சி,
மல்த டம்புய வலியினால் மாறுஅடு சீற்றக்
கொற்ற மன்னவர், விழுக்குடிக் கோமறுகு உரைப்பாம். 70

162 தரங்க வேலைகள் தம்மையே தாள்உறப் பிணித்து,
துரங்க மாஎனத் தொகுத்தமந் துரைபல; அருவி
இரங்கும் ஓர்அறிவு உயிர்வரை யாவையும் பெயர்த்து,
மரங்கொல் யானைபோல் பிணித்தகூ டம்பல மன்னோ. 71

163 மழுக்கள், வச்சிரம், கார்முகம், வாளி,முக் குடுமிக்
கழுக்கள், சக்கரம், உடம்பிடி, கப்பணம், நாஞ்சில்,
எழுக்கள், நாந்தகம், பலகை,தண்டு இவைமுதற் படையின்
குழுக்க ளோடுஇகல் விந்தைவாழ் கூடமும் பலவால். 72

164 தொளைய கல்லை, மால் எனக்கொண்டு சுழற்றியும் செந்தூள்
அளையும் யானைபோல் பாய்ந்துமல் ஆற்றியும் ஆற்றல்
விளைய வாளொடு கேடகம் வீசியும் வென்றி
இளையர் ஆடுஅமர் பயில்வன எண்ணிலாக் கூடம். 73

---

160. திக்கு எலாம்: எல்லாத் திசையாராலும். சிவபுரம்: சிவன் உறையுமிடம். முக்கண் நாயகன்: மூன்று கண்களையுடைய இறைவன். ஏற்ப: பொருந்த. தக்க: தகுதியான. தோழன்: (இங்கே) குபேரன். அளகை மாநகர்: குபேரபுரி. தயக்கம்: விளக்கம். உறையுள்: இல்லங்கள். நியமம்: கடைவீதி.

161. ஒற்றை ஆழியான்: சூரியன். நேமி: ஆணைச்சக்கரம். கலி இருள்: துன்பமாகிய இருள் கோல் ஓச்சி: செங்கோல் செலுத்தி. தடம்: அகன்ற. மாறு: பகை. அடு: கொல்லுதல். கொற்றம்: வெற்றி. கோமறுகு: மன்னவர்வீதி.

162. தரங்க வேலைகள்: அலைகளைக் கொண்ட கடல்கள். துரங்கமா: குதிரை. மந்துரை: குதிரை கட்டுமிடம். இரங்கும்: ஒலிக்கும். வரை: மலை. மரங்கொல்: மரங்களை முறிக்கும். பிணித்த: கட்டிய.

163. முக்குடுமிக்கழுக்கள்: முத்தலைச்சூலம். உடம்பிடி: கைவேல். கப்பணம்: நெருஞ்சிமுள் வடிவப்படை. நாஞ்சில்: கலப்பை. எழு: வளைதடிகள். நாந்தகம்: வாள். பலகை: கேடகம். குழு: கூட்டம். இகல்விந்தை: வெற்றிக் கொற்றவை.

164. தொளைய கல்: துவாரம் போட்டகல். மால்: திருமால். மல் ஆற்றி மற்போர் செய்து.

165 தேசுஅவிர் நீல மாடம், செம்மணிச் சென்னி மாடம்,
காசுஅறு கனக மாடம், சந்திர காந்த மாடம்,
மாசுஅற விளங்கும் இன்ன மாடநீள் மாலை கூடல்
பாசுஇழை மடந்தை பூண்ட பன்மணிக் கோவை அன்ன. 74

166 விரைஅகல் கதுப்பின் நல்லார் வீங்குஇளம் கொங்கை போழ்ந்த
வரைஅகல் மார்பம் அன்றி வடுப்படார், தமக்கு அன்பு இல்லார்,
உரைஅகல் மான ஆற்றல் ஒழுகுவார், பலகை ஒள்வாள்
கரைஅகல் விஞ்சை வீரர் கணம்பயில் காட்சித்து எங்கும். 75

167 மின்னைவாள் என்ன வீசி, வீங்குகார் தம்மிற் போர்மூண்டு
என்ன,வால் மருப்பு நீட்டி, எதிர்எதிர் புதையக் குத்தி,
அன்னவான் என்ன, வாய்விட்டு, அதுஎனச் செந்நீர் சோரப்
பொன்அவாம் அகன்ற மார்பர், பொருகளிறு ஆட்டு வார்கள். 76

168 தூண்டுவார் உளமும் தங்கள் பின்னிடத் துவக்குண்டு ஈர்த்துத்
தாண்டுமான், ஒற்றை ஆழித் தேரினும் தள்ளித் துள்ள,
பாண்டில்வாய்ப் பசும்பொன் தேய, பார்மகள் முதுகு கீண்டு
சேண்திசை போய்மடங்க, செல்வத்தேர் நடாத்து வார்கள். 77

169 மைந்தர்தம் நெருக்கில் சிந்து கலவையும் மகளிர் கொங்கைச்
சந்தமும் கூந்தல் சோர்ந்த தாமமும் சிவிறி வீசு
சிந்துரப் பொடியும் நாற, தேனொடும் எழுந்து செந்தூள்
அந்தர வயிறு தூர்ப்ப அடுபரி நடாத்து வார்கள் 78

---

165. தேசு: ஒளி. அவிர்: விளங்குகின்ற. காசு: குற்றம். சந்திர காந்த மாடம்: சந்திர காந்தக்கல்லால் ஆகிய மாடம். மாசு: குற்றம். கூடல்பாசிழை மடந்தை: மதுரையாகிய பசிய அணிகலன்களை உடைய பெண்.

166. விரை: மணம். அகல்கதுப்பு: விரிந்த கூந்தல். போழ்ந்த: பிளந்த. வடு: சுவடு. தமக்கு அன்பு இல்லார்: தம்உயிரிடத்து அன்பு இல்லாதவர். உரை: புகழ் கரைஅகல்: கணக்கற்ற விஞ்சை வித்தை.

167. வீரர்கள் யானைகளை ஒன்றோடொன்று மோதவிட்டுப் போர்த்திறம் காண்பது, மின்னலை வாள்போல வீசி மழை பொழியும் மேகங்கள் மோதுவதுபோல் இருக்கின்றன என்பது கருத்து.

168. துவக்குண்டு: கட்டுப்பட்டு. ஈர்த்து: இழுத்து. தாண்டுமான்: தாவும் குதிரை. ஒற்றைஆழித்தேர்: சூரியனது ஒற்றைச்சக்கரத் தேர். பாண்டில்: உருளை. கீண்டு: பிளந்து.

169. கலவை: சந்தனம். தாமம்: மாலை. சிவிறி: நீர்த்துருத்தி. நாற: மணக்க அந்தர வயிறு: வானின் நடு. அடுபரி: போர்க்குதிரை.

170 தம்உயிர்க்கு இரங்கா ராகி, தருக்கொடு மானம் ஈர்ப்ப,
தெம்முனை எதிர்ந்தார் ஆற்றும் செருவென, குருதிச் செங்கேழ்க்
கொய்ம்மலர் குடுமிச் சேவல் கோழ்இளம் தகர்போர் மூட்டி,
வெம்முனை நோக்கி நிற்பார், வேறுஅவற்று ஊறு நோக்கார். 79

171 பெண்முத்தம் அனைய பேதைச் சிறுமியர் பெருநீர் வைகை
வெண்முத்தம் இழைத்த சிற்றில் சிதைபட, வெகுண்டு நோக்கிக்
கண்முத்தம் சிதற, சிந்தும் கதிர்முத்த மாலை தட்ப,
தெண்முத்தின் நகைத்துச் செல்வச் சிறார்கள்தேர்உருட்டுவார்கள்

172 கொடிமுகில் துழாவும் இஞ்சிக் கோநகர் வடகீழ் ஞாங்கர்,
முடிமிசை வேம்பு நாற, முருகுஅவிழ் ஆரும் போந்தும்
அடிமிசை நாற, தென்னர் வழிவழி அரசு செய்யும்
இடிமுரசு உறங்கா வாயில் எழுநிலை மாடக் கோயில். 81

## மறையவர் வீதி

173 ஆத்திகர் உண்டென்று ஓதும் அறமுதல் பொருள்கள் நான்கும்
நாத்திகம் பேசும் வஞ்சர் நாஅரி கருவி யாக
ஆத்தனால் உரைத்த வேத அளவுகண்டு உள்ளம் தேறித்
தீர்த்தராய் முத்தீ வேட்கும் செல்வர்தம் இருக்கை சொல்வாம் 82

174 முஞ்சிநாண் மருங்கின் மின்ன, பொன்செய்த முளரி வேய்ந்த
குஞ்சி நான்று அசைய, தானைச் சொருக்குமுன் கொய்து தூங்க,
பஞ்சில்நாண் கலைத்தோல் மார்பும் பாலாசக்கோல் கையும்தாங்கி,
எஞ்சுஇல்நான் மறைநூல் கற்போர்கிடைகளேஇல்லம்எல்லாம் 83

---

170. தருக்கு: செருக்கு. தெம்முனை: போர்க்களம். செரு: போர். செங்கேழ்: செந்நிறம். குடுமி: கொண்டை. கோழ்: கொழுத்த. தகர்: ஆட்டுக்கிடா. ஊறு: துன்பம்.

171. முத்தனைய சிறுபெண்கள் வைகை ஆற்றில் வெண்முத்தால் இழைத்த சிறுவீடு அழிய, அச்சிறுமிகள் சினந்து கண் முத்து உகுக்க, அவர்கள் அறுத்து எறிந்த முத்துமாலை, தேரைத்தடைசெய்ய, புன்னகை செய்து, செல்வச் சிறுவர் சிறுதேர் உருட்டுவர் என்பது கருத்து. இப்பாடலை ஐந்து முத்துக்கள் அழகு செய்கின்றன.

172. துழாவும்: தடவுகின்ற. இஞ்சி: மதில். கோநகர்: தலைநகர். ஞாங்கர்: பக்கம். ஆர்: ஆத்திமாலை. போந்து: பனை மாலை. உறங்கா: நீங்காத. கோயில்: அரண்மனை. பாண்டியனுக்கு உரிய வேப்பம்பூ முடிமீதும், சோழ சேரர்க்குரிய ஆத்திமாலையும் பனைமாலையும் அடிமிசையும் மணக்க, பாண்டியன் அரசு செய்தான் என்பது கருத்து.

173. நாஅரி: நாக்கை அறுக்கும். ஆத்தன்: கடவுள். வேதஅளவு: மறையின் எல்லை. தேறி: தெளிந்து. தீர்த்தர்: புனிதர். செல்வர்: மறையவர்.

174. முஞ்சி: நாணல்புல். மருங்கு: இடை. முளரி: தாமரை. குஞ்சி: சிகை. நான்று, தொங்கி. தானைச்சொருக்கு: ஆடைச் சொருகு. தூங்க: தொங்க. பஞ்சில் நாண்கலைத் தோல்: மான்தோல் பொருந்திய பூநூல். பலாசக் கோல்: முள் முருக்கம் கோல். எஞ்சு இல் நான்மறை: குறைவில்லாத நான்குவேதம். கிடை: மறைபயில் சாலை.

175 தீவினை அந்த ணாளர் சிறார்பயில் தெய்வ வேதம்
நாஉரு ஏற்றக் கேட்டுக் கிளிகளோ நவிலும்! வேற்றுப்
பூவையும் பயின்று, புத்தேள் உலகுஉறை புதுமந் தாரக்
காஉறை கிளிகட்கு எல்லாம் கசடுஅறப் பயிற்றும் மன்னோ. 84

176 வேதமும், அங்கம் ஆறும் மிருதியும் புராண நூலின்
பேதமும் தெரிந்தோ ராலும், பிறமதம் களைய வல்ல
வாதமும், மதமேற்கொண்டு மறுத்தலும், நிறுத்த வல்ல
போதமும் உடையோ ராலும் பொலிந்தன, கழகம் எல்லாம். 85

177 உறிபொதி கரகக் கையர், ஒளிவிடு செங்கல் தோய்த்த
அறுவைர், உயிர்க்குஊறு அஞ்சும் நடையினர், அவிச்சை மாள
எறிசுடர் மழுவாள் என்னக் கோவணம் யாத்த கோலர்,
மறைமுடிவு அன்றித் தேறு மாதவர் மடங்கள் எங்கும். 86

178 அட்டில்வாய்ப் புகையும் மாடத்து அகில்படு புகையும் வேள்வி
விட்டுஎழு புகையும் ஒன்றி, விரிசுடர் விழுங்க, கங்குல்
பட்டது, பலரும் தத்தம் பயில்வினை இழக்க, நங்கை
மட்டுஅவிழ் கடுக்கை யான்கண் புதைத்தநாள் மானும் மன்னோ 87

## சைவர் வீதி

179 தெய்வ நீறும்ஐந்து எழுத்துமே சிதைக்கலன் ஆக,
எவ்வ மாசுஇரு வினைஉடம்பு எடுத்து,உழல் பிறவிப்
பௌவம் ஏழையும் கடந்து,அரன் பதமலர்க் கரைசேர்
சைவ மாதவர் உறைமடத் தனிமறுகு உரைப்பாம். 88

---

175. தீவினை: தீஓம்பும் செயல். நாஉரு: நாவினால் உருப்போடுதல். கிளிகளோ நவிலும்: கிளிகள் மட்டுமா சொல்லும். பூவை: நாகணவாய்ப்புள். புத்தேள் உலகு: தேவலோகம். மந்தாரக்கா: கற்பகச் சோலை.

176. மிருதி: பதினெண் வகையான நீதி நூல்கள். பேதம்: வேறுபாடு. களைய: அழிக்க. நிறுத்த: நிலையாகச் சாதிக்க. போதம்: அறிவு. பொலிந்தன: விளங்கின. கழகம்: ஓதும் சாலைகள்.

177. கரகம்: கமண்டலம். செங்கல்: காவிக்கல். அறுவை: உடை. உயிர்க்கு ஊறு: பிற உயிர்க்கு இடையூறு. அவிச்சை: அறியாமை. யாத்த: கட்டிய. கோலர்: கோலை உடையவர்.

178. அட்டில்: அடுக்களை. ஒன்றி: சேர்ந்து. விரிசுடர் விழுங்க: சூரியனை மறைக்க. கங்குல்பட்டது: இருண்டுவிட்டது. நங்கை: உமையவள். மட்டுஅவிழ் கடுக்கையான்: மணம் விரிந்த கொன்றை மாலை அணிந்த சிவபெருமான். மானும்: ஒக்கும்.

179. சிதைக்கலன்: பாய்மரத்தினை உடைய கப்பல். எவ்வம்: துன்பம். மாசு: குற்றம். பௌவம்: கடல். கடந்து: நீந்தி.

180 எங்கும் ஈசனைப் பூசைசெய்து இகபரம் அடைவார்;
எங்கும் அன்பரைப் பூசைசெய்து எழுபிறப்பு அறுப்பார்;
எங்கும் ஆகமம் செவிமடுத்து எதிர்வினை தடுப்பார்;
எங்கும் நாயகன் வடிவுணர்ந்து இருள்மலம் களைவார். 89

181 அழிவுஇ லான்உரை ஆகமம் இலக்கம்ஆய்ந்து அவற்றுள்
விழுமிது ஆகிய விதியினும் விலக்கினும் அடியைத்
தழுவு தொண்டர்கள், மைந்தர்கள், சாதகர், பாசம்
கழுவி வீடுஅருள் போதகக் காட்சியர் பலரால். 90

182 மறைகள் ஆகமம் பொதுச்சிறப்பு எனச்சிவன் வகுத்த
முறையின், ஓதிய விதிவிலக்கு உரைகளும், முடிவுஇல்
அறையும் வீடும்,ஒன்று இரண்டுஎனும் பிணக்குஅற அமைந்த
குறைவுஇ லாச்சிவ யோகியர் குழாங்களும் பலவால். 91

திருக்கோயில்

183 குழலும், தும்புரு நாரதர் பாடலும், குனித்துச்
சுழலும் கொம்பனூர் ஆடலும், மூவர்வாய்த் துதியும்,
விழவின் செல்வமும், சுருதியும், திசையெலாம் விழுங்கும்
முழவும் கண்துயி லாதது முன்னவன் கோயில். 92

184 மடங்கல் இன்றி,விண் பிளந்து,மேல் வளர்ந்து,வெள் ஏற்று
விடங்கர் வெள்ளிமன்று, இமைத்துஎழு வெண்சுடர் நீட்டம்,
முடங்கல் வெண்பிறைக் கண்ணியான் கயிலைமூ உலகும்
ஒடுங்கு கின்றநாள் ஓங்கிய ஓக்கமே ஓக்கும். 93

---

180. ஈசன்: சிவ பெருமான். இகபரம்: இம்மை, மறுமை. அறுப்பார்: போக்குவார். செவிமடுத்து: கேட்டு. எதிர்வினை: ஆகாமியவினை. இருள்மலம்: ஆணவமலம். களைவார்: கெடுப்பார்.

181. அழிவு இலான்: சிவ பெருமான். ஆகமம்: சிவாகமம். இலக்கம்: எண்ணிக்கை. அடியைத் தழுவு: இறைவன் திருவடியைத் தழுவுகின்ற. தொண்டர், மைந்தர், சாதகர். போதகக் காட்சியார்: சரியை, கிரியை, யோகம், ஞானநெறி நிற்போர்.

182. முறையின்: முறைமையால். ஓதிய: அவற்றுள் கூறப்பட்ட. ஒன்று இரண்டு என்னும் பிணக்கு அற: ஒன்று எனவும் இரண்டு எனவும் உரைக்கின்ற முரண்பாடு இல்லாமல்.

183. குழல்: புல்லாங்குழல். குனித்துச்சுழலும் கொம்பனூர், ஆடல்: பூங்கொத்தை ஒத்த மகளிர் வளைந்து சுழன்று ஆடும் ஆடல்ஒலி. மூவர் வாய்த்துதி: ஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர்ஆகிய மூவரது தேவாரத்திருமுறைகள். விழவு: திருவிழா. முழவு: ஒருவகைவாத்தியம். கண்துயிலாதது: நீங்கப்பெறுதது. முன்னவன்: இறைவன்.

184. மடங்கல் இன்றி: மடங்காமல். வெள்ஏற்று விடங்கர்: வெள்ளை விடையில் இவரும் சிவபெருமான். வெள்ளிமன்று: வெள்ளியம்பலம். வெண்சுடர் நீட்டம்: வெள்ளிய ஒளியின் பெருக்கம். முடங்கல்: வளைந்த. கண்ணியான்: சிவபெருமான். ஓக்கம்: வளர்ச்சி.

185 சுரந்து தேன் துளித்து அலர்களும் சொரிந்துவண்டு அரற்ற,
நிரந்து சுந்தரற்கு ஒருசிறை நின்றபூம் கடம்பு,
பரந்து கண்புனல் உக,பல மலர்கள் தூய், பழிச்சி,
இரந்து நின்று,அருச் சனைசெயும் இந்திரன் நிகரும். 94

186 உழல்செய் தீவினை உருப்புஅற, உயிர்க்குஎலாம் அடியின்
நிழல்செய் வார்க்கு,நீள் நிழல்செயா நின்றபூம் கடம்பின்
குழல்செய் வண்டு,கற் பகமதுக் கொணர்ந்துஉவந்து ஊட்டித்
தழல்செய் காமமென் பேடையின் ஊடல்நோய் தணிக்கும். 95

187 ஆரும் நீர்க்கடல் அன்றுஅது என நிறை அகழ்,கார்
ஊரும் ஆழியன்று அதுஎன ஓங்குஎயில், எட்டாய்ச்
சாரும் நேமிஅன்று அதுஎனச் சமைந்தகோ புரம்,பொன்
மேரு அன்றுஅது எனச்சுடர் விண் இழி விமானம். 96

188 வேத அந்தமும் துளக்குஅற மெய்ப்பொருள் விளங்கும்
நாத அந்தமும் கடந்ததுஓர் நடுநிலைப் பொருளின்
பாத வந்தனைப் பத்தியின் பாலராய்ப் பயில்வோர்
மா,த வம்தரு பயன்எனத் தழைத்தபல் வளனும். 97

189 பொறிகள் ஐந்தினுக்கு ஊட்டுபல் போகமும், மிதப்பச்
செறிகொள் நீரவால், உ வப்ப,அத் திருநகர் மாக்கள்
நெறிகொள் செஞ்சடைப் பிறைமுடி நிருமலக் கொழுந்தின்
வெறிகொள் நாள்மலர் அடிதழீஇ வீடுபெற் றார்போல். 98

---

185. நிரந்து: தழைத்து சிறை: பக்கம். பூம் கடம்பு: மலரை உடைய தல விருட்சம் ஆகிய கடம்பமரம். பரந்து: பெருகி. கண்புனல்: கண்ணீர். உக: சொரிய. தூய்: தூவி. பழிச்சி: வழிபட்டு.

186. உருப்பு: வெப்பம். நிழல்செய்வார்க்கு நீள் நிழல் செயா: நிழல்செய்யும் இறைவனுக்கு நீண்ட நிழலைச்செய்து. குழல்: புல்லாங்குழல். வண்டு: ஆண்வண்டு. கற்பகமது: கற்பகச் சோலையின்:தேன். தழல் செய்: வெம்மையைத் தருகின்ற. மென்பெடை: மெல்லிய பெண் வண்டு.

187. ஆரும் நீர்க்கடல்: நிறைந்த நீரை உடைய கடல். கார் ஊரும் ஆழி: மேகம் தவழ்கின்ற சக்கரவாள மலை. எட்டாய்ச் சாரும் நேமி: எட்டுத் திக்கிலும் உள்ளமலை. விண் இழி: வான் உலகத்தினின்றும் இறங்கிய.

188. அந்தம்: முடிவு. துளக்குஅற: அசைவின்றி. நடுநிலைப் பொருள்: கடவுள். பயில்வோர்: பழகுவோர். மா தவம் தரு பயன்: சிவ புண்ணியப் பேறு.

189. மிதப்பச் செறி கொள் நீர: மிகநிறைந்த தன்மையை உடையன. ஆல் அசை. உவப்ப: களிப்பு அடைய. நிருமலக் கொழுந்து: இயல்பாகவே பாசங்களில் நீங்கிய இறைவன். வெறி: மணம்.

190 முன்ன வன்அரசு இருக்கையால். அந்நகர் முளரிப்
பொன்னை ஈன்றதால், அதுபல பொருள்நிறை செல்வம்
தன்னை ஈன்றதால், அதுபல தருமம்என்று உரைக்கும்
மின்னை ஈன்றது;அஃது ஈன்றதால் விழுத்தகு புகழே. 99

191 எழுக்க டந்ததோள் உருத்திர உலகம்என்று யாரும்
வழுத்த நின்றஇந் நகர்வயின், உம்பரின் மாண்ட
விழுத்த கும்பல செல்வமும் வியந்துபார்த்து, உள்ளத்து
அழுக்குஅ ருமையால் இன்னமும் அமரர்கண் உறங்கார். 100

192 விரைஅ விழ்ந்ததார் மீனவர் வாகைவேல் விடுத்துத்
திரையை வென்றதும் முடிதகர்த்து இந்திரன் செருக்குக்
கரைய வென்றதும் கார்தளை இட்டதும் கனக
வரையை வென்றதும் இந்நகர் வலியினால் அன்றோ. 101

193 எங்கும் நாவுமாய், எங்கணும் கண்ணுமாய், எங்கும்
தங்கு பேரொளி அல்லது,இத் தனிநகர்ச் செல்வம்,
செங்கண் ஆயிரம் நாவினான் செப்பவும் எதிர்கண்டு
அம்கண் ஆயிரம் உடையவன் அளக்கவும் படுமோ? 102

194 புண்ணி யம்புரி பூமிபார்; அதில்வரு போகம்
நண்ணி இன்புறு பூமிவான் நாடுஎன்ப; நாளும்
புண்ணி யம்புரி பூமியும் அதில்வரு போகம்
நண்ணி இன்புறு பூமியும் மதுரைமா நகரம். 103

---

190. முன்னவன்: சோமசுந்தரக் கடவுள். அந்நகர்: மதுரைமா நகரம். முளரிப்பொன், திருமகள். அது: அந்தத் திருமகளாகிய தெய்வம். மூன்றாவது வரியில் வரும் அது: செல்வம். தருமம் என்று உரைக்கும் மின். அறம் என்று சொல்லும் பெண். அஃது: அவ் அறம்.

191. எழுக்கடந்த தோள். தூணை வென்ற தோள் உருத்திர உலகம்: சிவலோகம். இந் நகர் வயின்: இந்த மதுரை மாநகரத்தில். உம்பரின்: விண் உலகத்தை விட. மாண்ட: மாட்சிமைப்பட்ட. உள்ளத்து அழுக்கு அருமையால்: மனத்தின் கண் பொறாமை நீங்காமையால். அமரர் கண்உறங்கார்: தேவர்கள் தூங்க மாட்டார்கள்.

192. மீனவர் பாண்டியர். திரையை வென்றது: கடல் சுவறவேல் விட்டது. இந்திரன் செருக்குக் கரைய வென்றது: இந்திரன் முடிமேல் வளை எறிந்தது. கார்தளை இட்டது: மேகத்தைத் தளை இட்டது. கனக வரையை வென்றது: மேருவைச் செண்டால் அடித்தது.

193. பேரொளி: இறைவன். ஆயிரம் நாவினான்: ஆதிசேடன். அம் கண் ஆயிரம் உடையவன்: இந்திரன்.

194. பூமிபார்: நிலஉலகம். அறத்திற்கு இடமாக இருப்பது இப்புவி; இப்புவியில் விளையும் இன்பத்தை நுகர்வது விண்ணுலம் என்று சொல்லுவார்கள்; அறம் செய்தற்கு உரியதும் அதில் விளையும் இன்பத்தை நுகர்தற்கு உரியதும் மதுரைமா நகரம் என்பது கருத்து.

195 பண்கனிந்து அனைய சொல்லார் நரப்புஇசைப் பாணி, தேவர்
உண்கனி அமுதும் கைப்பச் செவிதொளைத்து ஊட்ட உண்டும்,
பெண்களின் அமுதம் அன்னார் பெருமித நடனம் உண்ணக்
கண்களை விடுத்தும், காலம் கழிப்பவர் அளவுஇ லாதார். 104

196 கலவிவித்து ஆக ஊடிக் கண்புனல் குளிக்கும் நல்லார்,
புலவிதீர் செவ்வி நோக்கி, புணர்முலைப் போகம் துய்த்தும்,
நிலைநிலை யாமை நோக்கி, நெறிப்படு தருமதானம்
கலைஞர்கைப் பெய்தும், காலம் கழிப்பவர் எண்ணி லாதார். 105

197 சந்தித்தும், மீன நோக்கி தலைவனை மூன்று போதும்
வந்தித்தும், ஈசன் பூசை மரபுஉளி முடித்தும், வேதம்
அந்தித்தும் அறியான் செய்த திருவிளையாடல் கேட்டும்,
சிந்தித்தும், அன்பர் பூசை செய்தும்நாள் கழிப்பர் பல்லோர் 106

198 கற்பவை கற்றும், கேட்டும், கேட்டவை கருத்துள் ஊறச்
சொற்பொருள் நினைந்தும், கேட்போர்க்கு உணர்த்தி,உள் துளக்கம் தீர்த்தும்,
எற்பகல் இரவு நீங்கும் இடத்தும்,மெய் அறிவு ஆனந்த
அற்புத வெள்ளத்து ஆழாதுஆழ்ந்துநாள் கழிப்பர்சில்லோர். 107

199 தன்னிகர் உயர்ச்சி இல்லான் காப்பியத் தலைவன் ஆக,
முன்னவர் மொழிந்தது, ஏனோர் தமக்கெலாம் முகமன் அன்றோ?
அன்னது தனதே ஆகும் அண்ணலே, பாண்டி வேந்தாய்
இந்நகர்க்கு அரசன் ஆவான், இக்கவிக்குஇறைவன்ஆவான். 108

200 என்என உரைப்பேன் இந்த இறைமகன் பண்பை! ஏனை
மன்னவர், வானோர் போல, மதித்துரை விரிக்கற் பாற்றோ?
அன்னவன் ஆணை யால்தான் நடப்பதுஇவ் அகிலம் என்றால்
முன்னவன் செய்த ஆடல் வரவினை முறையிற் சொல்வேன். 109

---

195. நரப்பு இசைப் பாணி: யாழ் இசையோடு கூடிய பாடல். கைப்ப: கசக்க. உண்ண: நுகர. அளவு இலாதார்: எண்ணற்ற ஆடவர்.

196. வித்துஆக: காரணம்ஆக. ஊடி. புலந்து. கண்புனல் குளிக்கும் நல்லார்: கண்ணீரில் மூழ்கும் பெண்கள். செவ்வி: பருவம். நெறிப்படு தருமதானம்: நல்வழிப் பட்ட அறங்கள்.

197. மீனநோக்கி தலைவன்: கயற்கண்ணியின் தலைவனாகிய சோமசுந்தரன். மரபுளி: முறைப்படி. வேதம் அந்தித்தும் அறியான். வேதம் அணுகியும் அறியமுடியாதவன்.

198. கருத்துள்ஊற: கருத்தில்பதியும்படி. துளக்கம்: ஐயம், திரிபுஆகிய கலக்கங்கள். எல்,பகல்: ஒளியுள்ள, பகல். நீங்கும் இடத்து: அற்ற இடத்து. ஆழாதுஆழ்ந்து: படியாமற் படிந்து. நாள்: நாளை. சில்லோர்: சிலர்.

199. நிகர்: ஒப்பு. உயர்ச்சி: உயர்வு. முகமன்: உபசாரம். அன்னது, தனதே ஆகும் அண்ணல்: அவ்வுயர்வு ஒப்பில்லாத தன்மையைத் தனக்கே உரிமையாகக் கொண்டிருக்கும் சிவபெருமான். கவிக்கு இறைவன்: காப்பியத் தலைவன்.

200. இறைமகன்: பாண்டியமன்னனாகிய இறைவன். விரிக்கற்பாற்றோ: விரிக்கத்தகுதி யுடையதோ. அகிலம்: உலகம். முன்னவன்: முன்னவனாகிய ஆலவாய் அண்ணல். ஆடல்வரவினை: திருவிளையாடல்களை.

## திருக்கயிலாயச் சிறப்பு

201 வரங்கள் தந்தருள் என, முது வானவர், முனிவோர்
கரங்கள் தம்தலை முகிழ்த்திட, கருணை செய்து, அவிச்சை
உரங்க டந்துஉரை, உணர்வெலாம் கடந்து,அரு மறையின்
சிரங்க டந்தவன் இருப்பது திருக்கயி லாயம். 1

202 புரந்தர் ஆதிவா னவர்பதம், போதுஉறை புத்தேள்
பரந்த வான்பதம், சக்கரப் படைஉடைப் பகவன்
வரம்த வாதுவாழ் பதம்,எலாம் நிலைகெட வருநாள்
உரம்த வாதுநின்று ஊழிதோறு ஓங்கும்அவ் ஓங்கல். 2

203 அரம்பை மாதரார் ஆடலின் அரவமும் பாடல்
நரம்பின் ஓசையும் முழவுஅதிர் சும்மையும் நால்வாய்
வரம்புஇல் ஓதையும் அருவிவீழ் ஒலியும்மா ருது
நிரம்பி வானமும் திசைகளும் நிமிர்வன மாதோ. 3

204 வேந்த நீற்றுஒளி வெண்மையும் விமலனை அகம்கொண்டு
அந்தம் இன்றியே அசைவுஅற இருக்கையும் அருவி
வந்த கண்களும் கொண்டுஅவண் இருக்கும்மா தவர்க்குத்
தந்த தால்,அரன் கயிலையும் தனதுசா ரூபம். 4

205 ஆங்கு வெண்துகில் விரித்துஎன, கல்என ஆர்த்து,
வீங்கு கால்அரு வித்திரள் வெள்ளமே அன்றி,
ஓங்கு நான்மறைக் குடுமியின் உள்ஒளி நோக்கி,
தூங்கு மாதவர் கண்களும் சொரிவன வெள்ளம். 5

---

201. முதுவானவர்: பெரியதேவர்கள். முகிழ்த்திட: கூப்ப. அவிச்சை உரம் கடந்து: வலிய பாசங்களிலிருந்து நீங்கி. அருமறையின் சிரம் கடந்தவன்: வேதங்களின் முடிவைக் கடந்த இறைவன்.

202. புரந்தர் ஆதிவானவர்பதம்: இந்திரன் முதலிய இமையவர் உலகம். போதுஉறை புத்தேன்: பிரமன். பகவன்: திருமால். வாழ்பதம்: பரமபதம். நிலைகெட: அழிய. உரம் தவாது வலிஅழியாமல். ஊழிதோறு: ஊழிக்காலம்தோறும். ஓங்கும். வளரும். ஓங்கல்: கைலாய மலை.

203 அரவம்: ஒலி: நரம்பு: யாழ். முழவு: மத்தளம். சும்மை; ஓசை. நால்வாய்; யானை மாருது; நீங்காது.

204 கண்: இடம். அவண்: அம்மலையில். சாருபம்: சிவபெருமானது வடிவம். கைலையை அடைந்த மாதவர்க்கு, சிவபெருமான் தனது வடிவத்தைக் கொடுப்பதே அல்லாமல் அப் பெருமான் இருக்கும் கைலை மலையும் நீற்றொளி வெண்மை முதலியவற்றைக் கொண்டிருத் தலால், சாருப பதவியைக் கொடுத்தது என்க.

205. வீங்குகால் அருவித்திரள் வெள்ளம்: பருத்த கால்களை உடைய அருவிக் கூட்டமாகிய வெள்ளம். நான்மறைக்குடுமி: நான்கு வேதங்களின் உச்சி. தூங்கும்மாதவர்: அழுந்திக் கிடக்கும் முனிவர். அருவிமட்டும் நீர் சொரியவில்லை, அங்கிருக்கும் முனிவர்களும் ஆனந்த நீர் சொரிகின்றார்கள்.

206 கோட்டு மாமலர், நிலமலர், குண்டுநீர் எடுத்துக்
காட்டும் மாமலர், கொடிமலர், கொண்டும்உள் கரைந்த
பாட்டு மாமலர் கொண்டும்,நம் பரம்சுடர் அடியில்
சூட்டும் மாதவர் தொகுதியும் சூழ்வன ஒருபால். 6

207 கைய நாகமும் காய்சின உழுவையும் கடுவாய்ப்
பைய நாகமும் தம்கிளை பரவிய முக்கண்
ஐயன் ஆக,மெய் அருந்தவர் தமைஅடைந்து அன்பு
செய்ய நாகமும் வையமும் புகழ்வதுஅச் சிலம்பு. 7

## புராண வரலாறு

208 அளந்தி டற்குஅரி தாயஅக் குன்றின்மேல்
களம்க றுத்துவிண் காத்தவன் கோயில்முன்
விளம்புஅ ரும்சிவ தீர்த்தத்தின் மிக்கதாய்
வளம்பெ றும்சிவ தீர்த்தத்தின் மாடது. 1

209 தண்த ரும்கதிர்ச் சந்திர காந்தத்தில்
பண்த யங்க, நவமணி பத்திசெய்து
அண்டர் தச்சன் அநேக தவம்செய்து
கண்டது ஆயிரக் கால்மண் டபம்அரோ. 2

210 ஆன பான்மையி னால்அந்த மண்டபம்,
ஞான நாயகன் நாண்மலர்த் தாள்தொழ,
வான மீனொடு வந்து,பதம் குறித்து,
ஊனம் இல்மதி வைகுவது ஒத்ததே. 3

---

206. கோட்டுமாமலர்: மரப்பூ. குண்டுநீர் எடுத்துக் காட்டும் மாமலர்: நீர்ப்பூ உள் கரைந்த பாட்டு மாமலர்: உள் உருகிப்பாடுகின்ற பாட்டாகிய சிறந்தமலர். நால்வகைப் பூக்களோடு பாமாலையும் சூடுகின்ற மாதவர் சூழ்ந்திருக்கின்றனர் கைலையில்.
207. கையநாகம்: யானை. உழுவை: புலி. கடுவாய்ப் பைய நாகம்: நஞ்சுபொருந்திய படத்தை உடைய பாம்பு. முக்கண் ஐயன் ஆக: சிவபெருமானாகக் கருதி. அன்பு செய்ய: பணி செய்ய. நாகம்: வான் உலகம். சிலம்பு: கைலைமலை. யானையும், புலியும், பாம்பும் கைலையில் இருக்கும் மாதவர்களைச் சிவபெருமானாகக் கருதி வழிபட, கைலைமலையை விண்ணும் மண்ணும் புகழ்கின்றன.
208. அக்குன்று: கைலைமலை. களம்: கண்டம். விண் காத்தவன்: தேவர்களை ஆண்டவன். மாடு: பக்கம். அனைத்துச்சிவ தீர்த்தங்களினும் சிறப்புடையது மதுரையில் உள்ள சிவதீர்த்தம்என்க. அச்சிவ தீர்த்தத்தின் பக்கத்தில் ஆயிரக்கால மண்டபம் உளது என வருவித்துக்கொள்க.
209. தண்தரும்: குளிர்ச்சி பொருந்திய. சந்திர காந்தத்தில்: சந்திரக் காந்தக் கற்களினால். பண்தயங்க: அழகாக. பத்தி செய்து: வரிசையாகப் பதித்து அண்டர் தச்சன்: அமரர்சிற்பி.
210. ஞான நாயகன்: சிவ பெருமான். தாள்தொழ: திருவடியை வணங்க, வானமீன்: உடுக் கூட்டம். பதம்குறித்து: செவ்வி பார்த்து. ஊனம் இல்மதி. குற்றமற்ற திங்கள். நவமணிகள் பதிக்கப் பெற்ற ஆயிரக்கால் மண்டபம், இறைவனை வணங்க, பல வண்ண உடுக்களுடன் மதி வந்து வைகுவதை ஒக்கும்.

211 அன்ன மண்டபம் தன்னுள் அரும்தவம்
என்ன வேங்கை அதள்மேல் இருந்தனன்;
பன்னு கேள்விப் பதினெண் புராணமும்
சொன்ன மாதவச் சூத முனிவனே. 4

212 அந்த வேலையில், அச்சிவ தீர்த்தத்தில்,
வந்து மூழ்கிஅம் மண்டபத்து ஏறியே,
சந்தி ஆதி தவமுடித்து ஈறுஇலா
இந்து சேகரன் தாள்நினைந்து ஏத்தியே, 5

213 சம்பு பத்தன், சதானந்தன், உத்தமன்,
அம்பு யத்தன் அனைய மகோதரன்,
உம்பர் அஞ்சிய உக்கிர வீரியன்,
நம்பு கேள்விப் பிரசண்ட நல்தவன், 6

214 ஆதி மாதவர் யாவரும், அன்புஉமை
பாதி யாய்முற்றும் ஆகும் பராபரச்
சோதி பால்வைத்த சூதனைத் தோத்திரம்
ஓதி அஞ்சலித்து, ஒன்று வினவினர். 7

215 வேத ஆகம புராணமே மிருதியே முதலா
ஓது நூல்களின் துணிபொருள் உலகுஎலாம் பயந்த
பேதை பாகனே பரம்எனத் தேர்ந்து,உணர் பெரிய
போத மாதவ! உனக்குயாம் புகல்வதுஒன்று உளதால். 8

---

211. அருந்தவம் என்ன: அரிய தவமே உருவெடுத்தது போல். வேங்கை அதள்மேல்: புலித்தோலின் மீது.

212. சந்தி: கடன். ஈறிலா இந்துசேகரன்: முடிவில்லாத திங்களை அணிந்த சிவபெருமான்.

213. அம்புயத்தன்:பிரமன். சம்பு பத்தன் முதலிய மாதவர்களின் பெயர்.

214. ஆதி மாதவர்: மேற்பாடலில் சொல்லப்பெற்ற மாதவர். பராபரச்சோதி: சிவபெருமான். வைத்த மனத்தை வைத்த. சூதனை: சூதமுனிவனை. அஞ்சலித்து: கைகூப்பி. ஒன்று வினவினர்: ஒன்று கேட்பாராயினர்.

215. துணிபொருள்: முடிந்த பொருள். பேதை பாகன்: அம்பிகையைப் பங்கில் கொண்ட சிவபெருமான். பரம்: பரம்பொருள். பெரிய போத மாதவ: பேரறிவு படைத்த சிறந்த பெரிய முனிவனே.

216 மேரு மந்தரம், கயிலை,பர்ப் பதம்,முதல் விடைமேல்
ஊரும் அந்தர நாடவன் உறைபதி அனந்தம்;
ஆரும் அந்தம்இல் போகம்வீடு அடைவதுஎன்று அவற்றின்
கார ணங்களோடு உரைத்தனை, கருத்தினுக்கு இசைய, 9

217 ஐயம் ஆதிமுக் குற்றமும் அகலநீ அருளிச்
செய்ய வும்,தெளிந் திலேங்கள்,யாம் சிற்றறிவு உடையேம்;
மையல் நெஞ்சினேம்; ஆகையால் மயக்குஅற இன்னம்
உய்யு மாறுஅருள் செய்தி!என்று உரைத்தனர் மன்னோ. 10

218 தலங்கள் தம்மில்மிக்கு உள்ளதாய், தகுதிசால் தீர்த்தக்
குலங்கள் தம்மில்மிக்கு உள்ளதாய், குறையிரந் தோர்க்கு
நலங்கள் தந்துஅருள் மூர்த்தியாய், நாதவே தாந்தப்
புலம்க டந்தபேர் ஒளிஉறை தலன்ஒன்று புகலாய். 11

219 என்ற போது,எதிர் முகமலர்ந்து இருள்மல வலியை
வென்ற சூதனும், தலங்களின் விசேடம்ஆய்ந்து அம்பொன்
குன்ற வார்சிலை யான்இடம் கொண்டுஉறை பதியுள்
ஒன்று, கேட்கவீடு அளிப்பதாய் உளதுமற்று அதுதான், 12

220 முற்ற ஓதிய புராணம்மூ ஆறனுள் காந்தம்
பெற்றது ஆறுசங் கிதை;அவை ஆறும்தம் பெயரால்
சொற்ற பேர்சனற் குமரமா முனிவரன், சூதன்,
கற்றை வார்சடைச் சங்கரன், மால்,அயன், கதிரோன். 13

---

216. மேருமந்தரம்: மேருமலை. கைலை: திருக்கயிலாயம். பார்ப்பதம்: பருப்பதமலை என்னும் ஸ்ரீசைலம். அந்தர நாடவன்: சிவலோகத் தலைவனாகிய இறைவன். உறைபதிஅனந்தம்: எழுந்தருளியிருக்கும் திருப்பதிகள் பல.

217. ஐயம் ஆதி முக்குற்றம்: ஐயம், திரிபு, அறியாமை மையல் நெஞ்சினேம்: மயங்கிய உள்ளத்தை உடையேம். உய்யுமாறு: கடைத்தேறுமாறு.

218. நாதவேதாந்தப் புலம்: நாத தத்துவத்தின் முடிவையும், வேதத்தின் முடிவையும் கடந்த இடம். பேர் ஒளி: இறைவன்.

219. அம்பொன் குன்ற வார் சிலையான்: அழகியமேரு மலையை நீண்ட வில்லாகக்கொண்ட சிவபெருமான். ஒன்று: ஒன்று உளது.

220. காந்தம்: கந்தபுராணம். சங்கிதை; பிரிவு. சொற்ற: சொல்லிய.

221 இன்ன ஆறனுள், சங்கர சங்கிதை என்று
சொன்ன நூலினை, உணர்த்தினன் சங்கரன் துணைவிக்கு,
அன்ன போதுஅவள் மடியினில் இருந்துகேட்டு அதனை
மின்னு வேல்பணி கொண்டவேள் வெளிப்பட உணர்ந்தான். 14

222 குன்று எறிந்தவேள் வழிபடு குறுமுனிக்கு உரைத்தான்;
அன்று தொட்டுஅஃது அகத்திய சங்கிதை ஆகி
நின்றது; அன்னது கேட்பவர்க்கு அரன்அடி நிழல்
ஒன்றும் இன்பவீடு அளிப்பதா, ஒருதலன் உரைக்கும். 15

223 அதிக அப்பதி யாதுஎனின் ஆலவாய்; கேட்கக்
கதிஅளிப்பதுஎன்று ஓதிய சூதனை, கதியில்
மதியை வைத்தவர், அன்னதைப் பகர்என, வந்த
விதியினில்புகல் கின்றனன் வியாதன்மாணாக்கன். 16

224 புதிய தாமரை மேவிய பழமறைப் புத்தேள்,
விதியினுல்கடு நடப்பரி மகம்செய்வான் வேண்டி,
கதியை மாய்ந்தவர்க்கு உதவுதண் துறைகெழு காசிப்
பதியின் மைந்தரோடு எய்தினன், பண்டுஒரு வைகல். 17

225 அகத்தியன், வியாதன், நாரதன், சனகன்,
ஆதிநான் முனிவர், கோதமன், நூல்
சிகைத்தெளி உணர்ந்த பராசரன், வாம
தேவன், வான் மீகியே, வசிட்டன்,
சகத்துஇயல் கடந்த சுகன்முதல் முனிவர்
தம்மொடும் பத்துவெம் பரிமா
மகத்தொழில் முடித்து, மற்றவர்க்கு உள்ளம்
மகிழ்உற, வழங்குந வழங்கா, 18

---

221. சங்கரன்: சிவபெருமான். துணைவி: உமையவள். அன்னபோது: அந்தவேளை மின்னுவேல் பணிகொண்டவேள்: ஒளிவிடுகின்ற வேலாயுதத்தை ஏவல் கொண்ட முருகக் கடவுள்.

222. குறுமுனி: அகத்தியன். ஒன்றும்: பொருந்தும். அளிப்பதா: கொடுப்பதாக. ஒரு தலன்: ஒரு திருப்பதி.

223. அதிக: மேம்பட்ட. ஆலவாய்: மதுரை. கேட்கக் கதி அளிப்பது. கேட்டவுடன் வீடு பேற்றை அளிப்பது. கதியில் மதியை வைத்தவர்: வீட்டு உலகத்தில் கருத்தைச் செலுத்துகின்ற முனிவர்கள். வந்த விதியினில்: வந்த முறைப்படி. வியாதன் மாணாக்கன்: சூத முனிவன்.

224. புத்தேள்: பிரமன். பரிமகம்: குதிரை வேள்வி. கதியை: வீட்டின்பத்தை. தண் துறை கெழு காசிப்பதி: குளிர்ந்த நீர்க் கங்கை ஓடும் காசிமாநகர். வைகல்: நாள்.

2 5. அகத்தியன்முதல் சுகன் ஈருக, பத்து முனிவர்களைக் கொண்டு பிரமன் பத்து அசுவமேதயாகம் புரிந்து, அம்முனிவர்க்கு மனம் மகிழ, கொடுக்கத் தக்க தட்சிணைகளைக் கொடுத்து. இப்பாடல் குளகம்.

226 சத்திய உலகில் சரோருகக் கிழவன்
சார்ந்தபின், புலப்பகை சாய்த்த
அத்திரு முனிவர் அனைவரும் காசி
அடிகளை அடைந்தனர் பணிந்து,
முத்திமண் டபத்தில் அறமுதல் நான்கும்
மொழிந்துஅருள் மூர்த்திசந் நிதியில்
பத்தியாய் இருந்து நாரத முனியைப்
பார்த்து,ஒரு வினவுரை பகர்வார். 19

227 "தலமுதல் மூன்றும் சிறந்ததுஓர் சைவத்
தலம்உரை" என்ன,நா ரதன்தான்
கலைமுழுது உணர்ந்த சனற்குமா ரன்பால்
கற்றவன் வியாதனும்; அவன்பால்
நலம்உறக் கேண்மின் என,அவன் கதிர்வேல்
நம்பிபால் மறைமுதல் அனைத்தும்
அலைவுஅற உணர்ந்தோன் குறுமுனி ஆகும்;
அவனிடைக் கேண்மென விடுத்தான். 20

228 மலையமா தவனை அடைந்து,கை தொழுது,
வாழ்த்தி,வா தாவிவில் வலனைக்
கொலைபுரி தரும மூர்த்தியே! விந்தக்
குன்றுஅடக் கியதவக் குன்றே!
அலைகடல் குடித்த அருள்பெரும் கடலே!
அரும்தமிழ்க் கொண்டலே! தென்பார்
துலைபெற நிறுத்த களைகணே! என்று
சுருதிஆ யிரம்எனத் துதித்தார். 21

229 மூவகைச் சிறப்பும் உள்ளதுஓர் தானம்
மொழிகென, முகமலர்ந்து அருள்கூர்ந்து
யாவையும் உணர்ந்தோன், முத்திமண் டபத்தின்
ஈர்இரு தொகையில்வந்து இறக்கும்
சேவல்கள் தமையும், ஐங்கரன் தனையும்,
சேவல்அம் கொடிஉடை வடிவேல்
காவலன் தனையும், வடநிழல் அமர்ந்த
கண்நுதல் பரனையும் பணியா, 22

---

226. சத்திய உலகம்: பிரமலோகம். சரோருகம்: தாமரை. கிழவன்: பிரமன். புலப்பகை சாய்த்த: புலன்களின் பகையை வென்ற. காசி அடிகள்: காசிப்பதியில் எழுந்தருளி இருக்கும் விசுவநாதப் பெருமான். முக்தி மண்டபம். தட்சிணாமூர்த்தி எழுந்தருளியிருக்கும் மண்டபம்.

227. தலமுதல் மூன்று: தலம், தீர்த்தம், மூர்த்தி. கதிர்வேல்நம்பி: ஒளி பொருந்திய வேலைத் தாங்கிய முருகக் கடவுள். குறுமுனி: அகத்தியன். விடுத்தான்: ஏவினான்.

228. மலையமாதவன்: அகத்தியன். வாதாவி, வில்வலவன்: இரண்டு அசுரர்கள். அவ்விருவரைக்கொன்றமை, விந்தம் அடக்கியமை கடல்குடித்தமை, புவியைச் சமப்படுத்தியமை ஆகிய அருஞ்செயல் அனைத்தும் அருந்தமிழ்க் கொண்டலாகிய அகத்தியனுக்கு உரியவை. துலைபெற: சமம்பட. களைகண்: பற்றுக்கோடு. சுருதி: மறை.

229. மூவகைச் சிறப்பு: தலம், தீர்த்தம், மூர்த்தி. யாவையும் உணர்ந்தோன்: அகத்தியன் இறக்கும் சேவல்கள்: கொடுந்தொழில் புரிந்து சேவல்களாக வடிவு எடுத்து, காசிப்பதியை அடைந்து முத்திபெற்ற மாகனந்தன் முதலிய நால்வர். ஐங்கரன்: விநாயகன். வடிவேற் காவலன்: கந்தக்கடவுள். கண்நுதல் பரன்: தென்முகக் கடவுள். பணியா: பணிந்து. இப் பாடல் குளகம்.

230 அங்கயல் கண்ணி தன்னையும் எந்தை
ஆலவா யானையும் இதய
பங்கயத்து இருத்தி, சமாதியில் இருந்து,
பரவசம் அடைந்து, பார்ப்பதிக்குச்
சங்கரன் அருளிச் செய்தசங் கிதையை,
தாரகன் உடல்இரண்டு ஆகச்
செங்கைவேல் விடுத்த சேவகன் எனக்குத்
தெருட்டினன்; அனையசங் கிதையில். 23

231 பெறற்குஅரும் தவம்செய்து அகம்தெளிந்து அரிதில்
பெறும்கதி கேட்பவர்க்கு எளிதாய்
உறப்படும் தலம்,நீர் வினைய,மூச் சிறப்பும்
உள்ளதுஎத் தலத்தினும் கழிந்த
சிறப்பின்ஆங்கு, எண்எண் திருவிளை யாடல்
செய்து,அருள் வடிவுஎடுத்து, என்றும்
மறைப்பொருள் விளங்கும் ஆலவாய்; அதனை
மண்ணின்மேல் சிவன்உலகு என்னும். 24

232 அத்தலத்து. அனைய மூவகைச் சிறப்பும்,
அளவிலா உயிர்க்குஎலாம் கருணை
வைத்தவன் செய்த திருவிளை யாட்டும்,
வரைஉரம் கிழியவேல் எடுத்த
வித்தகன், எனக்கு விளம்பிய வாறே,
விளம்புவன் உமக்குஎன, அந்த
உத்தம முனிவர் யாவரும் கேட்க
உணர்த்துவான் கடல்எலாம் உண்டான். 25

---

230. சமாதி: தியான நிலை. தாரகன்: முருகனால் கொல்லப்பட்ட ஒரு அசுரன் சேவகன்: குமரவேள். தெருட்டினன்: தெளிவுபடுத்தினன். இது அகத்தியன் மொழி.

231. உறப்படும் தலம்: அடைதற்குரிய தலம் நீர்வினைய: நீவீர் கேட்ட. கழிந்த: மேம்பட்ட. மறைப்பொருள்: சிவபெருமான்.

232. வரைஉரம் கிழயவேல் எடுத்த வித்தகன்: மலையின் மார்பகம் பிளப்ப, வேல்விடுத்த, சதுரப்பாடு உடையவனாகிய முருகவேள். கடல எலாம் உண்டான்: அகத்தியன்.

## தலச்சிறப்பு

233 நாட்டம்ஒரு மூன்றுடைய நாயகனுக்கு
அன்புடையீர்! நயந்து, நீவிர்
கேட்டதலம் ஈண்டுரைத்த திருவால
வாய்;அதனுள் கிளைத்து, பொன்னந்
தோட்டலர்தா மரைமுளைத்தது ஒருதடமும்,
சுந்தரச்செஞ் சோதி ஞான
ஈட்டம்என முளைத்தசிவ லிங்கமொன்றும்
உள;இன்னும் இசைப்பக் கேண்மின்! 1

234 திருஆல வாய்க்குஇணையா ஒருதலமும்,
தெய்வமணம் செய்யப் பூத்த
மருஆர்பொற் கமலநிகர் தீர்த்தமும்,அத்
தீர்த்தத்தின் மருங்கில், ஞான
உருவாகி உறைசோம சுந்தரன்போல்
இகபரம்தந்து உலவா வீடு
தருவானும் முப்புவனத் தினும்இல்லை;
உண்மைஇது சாற்றின், மன்னே. 2

235 அவ்வகைய மூன்றின்முதல் தலப்பெருமை
தனைச்சுருக்கி, அறையக் கேண்மின்!
எவ்வகைய உலகத்தும் தருமதலம்
அதிகம்;அவற்று ஈறுஇ லாத
சைவதலம் அதிகம்;அவற்று அறுபத்தெட்டு
அதிகம்;அவை தமிழ்ஈ ரெட்டுத்
தெய்வதலம் அதிகம்;அவற்று அதிகதலம்
நான்கு;அவற்றைச் செப்பக் கேண்மின்! 3

---

233. நாட்டம்: கண். நாயகன்: இறைவன். நயந்து: விரும்பி. கிளைத்து: நிறைந்து. பொன்னம்தோட்டலர் தாமரை: பொன் இதழ்களையுடைய விரிந்ததாமரை. தடம்: தடாகம். சுந்தரம்:அழகிய.ஞானஈட்டம்: ஞானத்திரட்சி. இசைப்ப: சொல்ல கேண்மின்: கேளுங்கள்.

234. செய்ய: வீசுமாறு. மருஆர்: மணம் நிறைந்த. கமலம்: தாமரை. மருங்கில்: பக்கத்தில். உலவா: அழியாத. முப்புவனம்: மூவுலகம். சாற்றின்: சொல்லுமிடத்து.

235 அவ்வகைய மூன்றின்: அத்தன்மையுடைய மூன்றனுள் (மூர்த்தி, தலம், தீர்த்தம்) அறைய சொல்ல. தருமதலம்: புண்ணியத்தலங்கள். அதிகம்: உயர்ந்தன. அவற்று: அப் பதிகளுள். ஈறு இலாத; அழிவில்லாத, சைவதலம்; சிவத்தலம். ஈரெட்டுத் தெய்வ தலம்; பதினாறு சிவத்தலங்கள்.

236 அன்னமலி வயற்புலியூர், காசிநகர்,
காளத்தி, ஆலவாயாம்;
இன்னவளம் பதி,நான்கில், திருஆல
வாய்அதிகம்; எவ்வாறு என்னின்,
மின்அவிர்அம் பலம்காண, காசிநகர்
வதிந்துஇறக்க, வியன்கா ளத்திப்
பொன்னகரம் பத்தியினால் வழிபாடு
செய,அளிக்கும் போகம் வீடு. 4

237 அறம்தழையும் திருஆல வாய்கேட்ட
உடன்போகம் அளிக்கும்; மீண்டு
பிறந்துஇறவாப் பேரின்பக் கதிஅளிக்கும்;
இதுவன்றி, பிறழாது எங்கும்
நிறைந்தபரன் எத்தலமும் படைப்பான்,இத்
தலத்தைமுதல் நிருமித்து, இங்ஙன்
உறைந்தருளி னான்;அன்றி, இன்னம்உளது,
அதன்பெருமை; உரைப்பக் கேண்மின்! 5

238 திருஆல வாய்என்று கேட்டவரே
அறம்பெறுவர்; செல்வம் ஓங்கும்
திருஆல வாய்என்று நினைத்தவரே
பொருள்அடைவர்; தேவ தேவைத்
திருஆல வாயிடத்துக் கண்டவரே
இன்பநலம் சேர்வர்; என்றும்
திருஆல வாயிடத்து வதிந்தவரே
வீட்டுநெறி சேர்வர் அன்றே. 6

---

236. அன்னமலி: அன்னப்பறவைகள் மிகுந்த; அல்லது சோறு நிறைந்த. புலியூர்: சிதம்பரம். காளத்தி: திருக்காளத்தி. மின் அவிர்; ஒளி விளங்குகிற. அம்பலம்: சிதம்பரம். வதிந்து: தங்கி. வியன்: பெருமை மிக்க. பொன்னகரம்: அழகிய நகரம்.

237. தழையும்: மிகுகின்ற. மீண்டு: திரும்ப. பிறழாது: தவறாமல். நிருமித்து: படைத்து.

238. ஓங்கும்: மிகுந்த. தேவதேவு: சோமசுந்தரக்கடவுள். வதிந்தவர்: வசிப்பவர். வீட்டுநெறி: மோக்கவழி.

239 சுர நதிசூழ் காசிமுதல் பதி,மறுமைக்
கதிஅளிக்கும்; தூ நீர் வைகை
வர நதிசூழ் திருஆல வாய்,சீவன்
முத்திதரும்; வதிவோர்க்கு ஈது
திரன்அதிகம்; பரகதியும் பின்கொடுக்கும்;
ஆதலின்இச் சீவன் முத்தி
புரம்அதிகம் என்பதுஎவன்? அதற்கதுவே
ஒப்பாம்எப் புவனத் துள்ளும். 7

240 ஆதலின்,இப் பதிவிட்டுப் பிறபதியிற்
போய்நோற்போர், அங்கை கொண்ட
சீதள,வான் அமுதுஏய்ப்பத் தித்திக்கத்
தேம்பெய்து செய்த தீம்பால்
ஓதனத்தைக் கைவிட்டு, புறங்கையை
நக்குவார் ஒப்பார்; இந்த
மாதலத்தின் பெருமைதனை யாவரே
அளவிட்டு வழுத்தற் பாலார்! 8

241 மற்றைய தலங்கள் தம்மில் பரிமகம், வாச பேயம்,
அற்றம்இல் சோட சாகம், அக்கினிட் டோமம், யார்க்கும்
முற்றுஅரும் இராச சூயம், முதல்மகம் முடித்த பேறும்
செற்றம்இல் தரிச பூர்ணம் முதல்இட்டி செய்த பேறும், 9

242 எள்,இருது, அன்னம், கன்னி, இவுளி,தேர், யானை, இல்லம்,
வெள்ளி,ஆன், பொன்பூண் ஆடை, விளைவொடு பழனம்முன்னாத்
தள்ளரும் அடிமை ஆதி தானங்கள் செய்த பேறும்
வள்ளல்தன் காசி ஆதிப் பதிகளில் வதிந்த பேறும், 10

---

239. சுரநதி: கங்கையாறு. காசிமுதல்: காசிமுதலிய. பதி: தலம் தூநீர்: தூய்மையான நீர். வரநதி: சிறந்த ஆறு. வதிவோர்: வசிப்போர். திரன்: உறுதி.

240. நோற்போர்: தவம் செய்வார். அங்கை: உள்ளங்கை. சீதளவான் அமுதுஏய்ப்ப: குளிர்ந்த தேவாமுதத்தை ஒக்க. தேம்பெய்து: தேனைச்சொரிந்து. தீம்பால் ஓதனம்: இனிய பாற்சோறு. கைவிட்டு: தவறவிட்டு. வழுத்தற்பாலார்: வரையறுத்துக் கூறும் தகுதியுடையார்.

241. யாகத்தின் பலவகைகள் இப்பாடலில் கூறப் பெறுகின்றன. இப்பாடல் குளகம்.

242. இப்பாடலும் குளகம். இருது: நெய். இவுளி: குதிரை. இல்லம்: வீடு. ஆன்: பசு. விளைவொடு பழனம்: விளைவோடு கூடிய வயல். முன்னா: முதலாக. வள்ளல்: சிவபெருமான்.

243 கங்கை,கா ளிந்தி, வாணி, காவிரி, கண்ண வேணி,
துங்கபத் திரை.தீம் பாலி, தூயதண் பொருநை, முன்னாச்
சங்கையில் நதிகள் முற்றும் ஆடிய தவத்தின் பேறும்
மங்கல மதுரை தன்னில் வைகலும் வதிவோர்க்கு எய்தும். 11

244 அன்னிய தலங்கள் தம்மில் ஆற்றிய பிரம கத்தி,
பொன்னினைக் களவு செய்தல், கள்உண்டல், புனித ஆசான்
பன்னியைப் புணர்தல், இன்ன பாதகம் அனைத்தும் என்றும்
தன்னிகர் ஆலவாயில் வதிபவர் தமைவிட்டு ஏகும். 12

245 மற்றைய தலத்தில் சாந்தி ராயணம் மதியம் தோறும்
உற்றபேறு, இங்குக் கங்குல் உண்டியால் அடைபேறு ஆகும்;
மற்றைய தலத்தின் மாதப் பட்டினிப் பலத்தின் பேறு,இங்கு
உற்றுஒரு வைகல் உண்டி ஒழிந்தவர் பெறும் பேருகும். 13

246 அயல்நகர் அடைந்து நான்கு திங்கள்நோன்பு ஆற்றும்பேறு,இவ்
வியன்நகர் அடைந்து நோற்கும் அட்டமி விரதம் நல்கும்;
அயல்நகர் எய்தி ஆறு திங்கள்நோன்பு ஆற்றும் பேறு,இவ்
வியன்நகர்ச் சோம வார விரதமே அளிக்கும் அன்றே. 14

247 ஏனைய தலத்தில் ஓர்ஆண்டு
உணவுஒழிந்து இயற்றும் நோன்பால்
ஆனபேறு இங்கு நோற்கும்
சிவன்இரா அளிக்கும்; இங்கே
ஊனஐம் பொறியும் வென்றோன்
முப்பொழுது உண்டு வைகித்
தான்அமர்ந் தாலும் கால்உண்டு
இயற்றும்மா தவத்தோன் ஆகும். 15

---

243. வாணி: சரஸ்வதி. கண்ணவேணி: கிருஷ்ணாநதி. தீம்பாலி: இனிய பாலாறு. முன்னா முதலாக சங்கை: அளவு. இம்மூன்று பாடலும் ஒரு தொடர். பலவேள்விகள் செய்த பலனும், நிறைந்த பொருளகளைத் தானம் செய்த பலனும், தெய்வ நதிகள் பலவற்றில் ஆடிய தவத்தின் பயனும் மதுரையில் வாழ்வார் பெறுவர்,

244. பன்னி: மனைவி, என்றும் தனக்கு ஈடில்லாத மதுரையில் வாழ்பவரைப் பிரமகத்தி, களவு, கள்ளுண்டல், ஆசான் பத்தினியை அணைதல், ஆகியவற்றால் நேரும் இழுக்குவிட்டு ஓடிவிடும்.

245. பிற தலங்களில் மாதம் தோறும் சந்திரனை நோக்கி நோற்கும் விரதத்தின் பயன் மதுரையில் ஓர் இரவு நோற்கும் விரதத்தால் உண்டாகும். ஏனைய தலங்களில் மாதப் பட்டினியால் பெறும் பேற்றினை மதுரையில் ஒருபகல் உண்டியை ஒழித்தோர் அடைகுவர்.

246. வேறு தலத்தில் நான்கு மாதம் நோற்கும் விரதத்தின் பயனை மதுரையில் ஒரு அட்டமி விரதம் நல்கும். வேறுதலங்களில் ஆறுமாதம் நோற்கும் விரதத்தின் பயனை மதுரையில் சோமவார விரதம் ஒன்றுமே அளிக்கும்.

247. பிறபதிகளில் ஓராண்டு செய்யும் உண்ணா நோன்பால் அடையும் பேறு மதுரைநகரில் ஒரு சிவராத்திரி விரதத்தால் கிடைக்கும். இங்கே குற்றம் உள்ள ஐம்பொறிகளையும் வென்றவன் மூன்று பொழுது உணவு கொண்டாலும் காற்றை நுகர்ந்து ஆற்றும் தவம் உடையானுக்குச் சமம் ஆவான்,

248 இந்தநான் மாடம் ஓங்கும் ஆலவாய் இடத்து,யா ரேனும்
அந்தணர் தமக்கோர் முட்டி, அருந்தவர் தமக்குஓர் பிச்சை,
தந்தவர், புறம்பு செய்த சோடச தானம் தம்மால்
வந்தபேறுஅடைவர்; பல்வேறு உரைப்பதுஎன்!மதியால்மிக்கீர்!16

249 பல்வகைத் தலங்கள் எல்லாம் வைகிய பயனும், என்றும்
பல்வகைத் தீர்த்தம் எல்லாம் ஆடிய பயனும், என்றும்
பல்வகைத் தானம் எல்லாம் நல்கிய பயனும், என்றும்
பல்வகைத் தான பூசை பண்ணிய தவத்தின் பேறும், 17

250 பல்வகைத் தவங்கள் எல்லாம் முற்றிய பயனும், தூய
பல்வகை மந்திரத்தில் எய்திய பயனும், நூலின்
பல்வகைக் கேள்வி எல்லாம் ஆய்ந்துஉணர் பயனும், யோகம்
பல்வகை ஞானம் எல்லாம்பயின்றுஉணர்ந்துஅடங்கும்பேறும்,18

251 அனையதொல் பதியில் என்றும் வைகுவோர் அடைவர் என்றால்,
இனையதொல் பதிக்கு நேர்வேறு இல்லை,இப் பதியின் மேன்மை
தனைஅறி பவர்ஆர்? ஈசன் தான்அன்றி; ஆத லாலே
வினையைவெல் பவர்அங்கு எய்தி வதிவதே வேண்டும் மாதோ. 19

252 கைத்தலநான்கு இரண்டுஉடைய மலர்க்கடவுள்
மேலொருநாள், கயிலை ஆதி
எத்தலமும் ஒருதுலையிட்டு, இத்தலமும்
ஒருதுலையிட்டு, இரண்டும் தூக்க,
உத்தமமாம் திருவால வாய்மிகவும்
கனத்ததுகண்டு உலகின் மேலா
வைத்ததவம் இதுஎன்றால் இதன்பெருமை
யாவரே வழுத்தற் பாலார்? 20

---

248. முட்டி : பிடி அரிசி, புறம்பு : வெளியே, சோடசதானம் : பதினாறு வகையான அறம்.

249. இப்பாடல் குளகம்.

250. இதுவும் குளகம்.

251. மேற்குறித்த இரண்டு பாடல்களிலும் அடைகின்ற பேற்றை மதுரையில் வதிபவர் என்றும் அடைவர் என்றால் இப்பழம் பதிக்கு நேர் வேறு இல்லை என்பதும், இதன் சிறப்பை ஈசனே அறிவான் என்பதும் கருத்து.

252. கைத்தலம் நான்கு இரண்டு உடைய: எட்டுத் திருக்கரங்களையுடைய. மலர்க்கடவுள்: பிரமன் ஒருதுலையிட்டு: ஒரு தராசின் தட்டில் வைத்து. மேலாவைத்த: உயர்ந்ததாக அறுதியிட்டுவைத்த.

253 அத்திருமா நகரின்பேர் சிவநகரம்,
கடம்பவனம், அமர்ந்த சீவன்
முத்திபுரம், கன்னிபுரம், திருஆல
வாய்,மதுரை, முடியா ஞானம்
புத்திதரும் பூஉலகில் சிவலோகம்,
சமட்டிவிச்சா புரம்,தென் கூடல்,
பத்திதரு துவாதசாந் தத்தலம்என்று
ஏதுவினல் பகர்வர் நல்லோர். 21

254 என்றுதலச் சிறப்புஉரைத்த குறுமுனிவன்
எதிர்,அறவோர் இறும்பூது எய்தி,
நன்றுதலப் பெருமைஅருள் செய்தனை;கேட்டு
உடல்எடுத்த நயப்பாடு எல்லாம்
இன்றுஅடைந்தேம்; இனிச்சுவண புண்டரிகச்
சிறப்பதனை இசைத்தி! என்ன,
குன்றம்அடக் கியகருணைக் குன்றுஅனையான்
வரன்முறையால் கூறு கின்றான். 22

255 விரதமா தவத்தீர்! காணில்,
வெவ்வினை எல்லாம் வீட்டிச்
சரதமாப் போகம் நல்கும்,
தமனிய முளரி வந்த
வரவும்,அக் கனக கஞ்சப்
பெருமையும், வளனும், நன்கா
உரைசெய்தும்; கேண்மின்! என்னா
முனிவரன் உரைக்கும் மன்னோ. 23

---

253. மதுரைக்கு உரிய பல திருப்பெயர்களும் இப் பாடலில் சொல்லப் பெற்றிருக்கின்றன.

254. இறும்பூது: உள்ளக் களிப்பு. நயப்பாடு: பயன். சுவணம்: பொன். புண்டரிகம்: தாமரை. குன்றனையான்: அகத்தியன்.

255. காணில்: வணங்கினால், வீட்டி: அழித்து. சரதமா: உறுதியாக. தமனியமுளரி: பொன்தாமரை. கனகக் கஞ்சமும் பொற்றாமரையே. நன்கா: நன்றாக. முனிவரன்: அகத்தியன்.

## தீர்த்தச் சிறப்பு

256 கண்அகன் குடுமி மாடக் கடிபொழில் ஆல வாயின்
அண்ணல்அம் பெருமை யாரே அளப்பவர்? அவிர்தண் முத்த
வெண்நகை உமையாள் அன்பு விளைமுகச் செவ்வி போல,
தண்நறும் கமலம் பூத்த தடப்பெரும் தகைமை சொல்வாம். 1

257 ஆற்றினுக்கு அரசாம் கங்கை காவிரி ஆதி ஆறும்,
வேற்றுஉரு ஆய முந்நீர் வேலையும், பிறவும், காரும்,
தோற்றும்முன், தன்னை ஆட்டச் சுந்தர மூர்த்தி, செங்கண்
ஏற்றினன், கண்ட தீர்த்தம் ஆகும்ஈது; எவ்வாறு என்னின்? 2

258 அகளம்ஆய் உலகம் எல்லாம் ஒடுக்கி,அந் நெறியே யார்க்கும்
நிகளமாம் விருத்தி தோன்ற, நினைவுஅற நினைந்து நிற்கும்
துகள்இலா அறிவுஆ னந்த சுந்தரச் சோதி, மேல்நாள்
சகளமாம் உருவம் கொண்டு, தான்ஒரு விளையாட் டாலே, 3

259 முக்கணன், அரவப் பூண நூலினன், முகிழ்வெண் திங்கள்
செக்கர்அம் சடையன், சூல கபாலத்தன், செங்கண் ஏற்றன்,
மைக்கரும் கயல்உண் கண்ணி வாமத்தன், முன்னும் பின்னும்
பக்கமும் நந்தி ஆதி கணாதிபர் பரவிச் சூழ, 4

260 சென்றுதன் மேனித் தேசால், திசைஎலாம் விளங்க, செங்கண்
வென்றிகொள் உரக வேந்தன் நகரமும், விபுதர் வேந்தன்
பொன்திகழ் நகரும், வேதன் புரமும்,மால் புரமும், மேலைத்
தன்திரு நகரும், சென்று சஞ்சரித்து ஆடி மீள்வான். 5

---

256. கண்அகன் : இடம் அகன்ற. குடுமிமாடம் : சிகரங்களை உடைய மாளிகை கடிபொழில்: மணச் சோலை. அண்ணல் அம்பெருமை: மிக்க அழகிய சிறப்பு. முகச்செவ்வி: முகத்தின் அழகு.

257. முந்நீர்வேலை: கடல் பிற: வேறு நீர் நிலைகள். கார்: மேகம். தோற்றும்முன்: தோன்றுவதற்கு முன்னரேயே. தன்னை ஆட்ட: தனக்கு நீராட்ட. சுந்தரமூர்த்தி செங்கண் ஏற்றினன்: சோமசுந்தரக் கடவுளாகிய இடபவாகனன். கண்ட தீர்த்தம் : உண்டாக்கிய நீர் நிலை.

258. இப்பாடல் குளகம் அகளம்: நிட்களம்; அருவமாகிய சிவம். நிகளம் : பாசம். துகள்: குற்றம். சோதி: இறைவன். சகளமாம் உருவம் கொண்டு: உருவத்தைப் பெற்றுக் கொண்டு.

259. இப்பாடல் குளகம்: அரவப் பூண நூலினன்: பாம்பாகிய பூண்நூலினை உடையவன். செக்கர் அம் சடையன்: சிவந்த சடையை உடையவன். சூல கபாலத்தன். திரி சூலத்தை யும் மண்டை ஓட்டையும் உடையவன். கண்ணி வாமத்தன்: அம்பிகையை இடப் பக்கத்திலே உடையவன். கணாதிபர்: கணத்தலைவர்கள்.

260. தேசு: ஒளி. உரகவேந்தன் நகரம்: பாம்பரசனின் நாகலோகம். விபுதர்வேந்தன்: தேவேந்திரன். வேதன்: பிரமன். மால்: திருமால். மேலைத்தன் திருநகர்: எல்லாவற்றிற் கும் மேலே இருக்கின்ற தன்னுடைய சிவலோகம்.

261 அன்னபோது, அயனும், தேவர்க்கு அரசனும், ஆழி வேந்தும்,
முன்னர்வந்து இறைஞ்சி ஏத்த, முனிவுஅரும் பேறு நல்கி,
தன்னகர் அடைந்து, நீங்காத் தனிப்பெரும் கணத்தி னோரை
இன்னருள் சுரந்து நோக்கி, இலிங்கத்தில் புகுதும் எல்லை, 6

262 வேத்திரப் படையோன் ஆதி கணதிபர் வீழ்ந்து, பால
நேத்திர! அன்பர்க்கு அன்ப! நிரஞ்சன! நிருத்துஆ னந்த!
சாத்திர முடிவும் தேருத் தனிமுதல் ஒருவ! என்று,
தோத்திர வகையால் ஏத்தி, தொழுதுஒன்று விஇணவல்செய்வார். 7

263 ஐய! இவ் இலிங்க மூர்த்திக்கு ஆட்டவும், அடியேம் மூழ்கி
உய்யவும், கங்கை ஆதி நதிகளும் உலகத்து உள்ளோர்
மையறு தடாக நீரும் மற்றுஇலே; "இருமைப் பேறும்
செய்யஓர் தீர்த்தம் இங்குஉண் டாக்கு"எனச் செப்ப லோடும், 8

264 அத்தகை இலிங்க மூர்த்திக்கு அடுத்ததென் கீழ்சா ராக,
முத்தலை வேலை வாங்கி நாட்டினான்; முதுபார் கீண்டு,
பைத்தலைப் பாந்தள் வேந்தன் பாதலம் கீண்டு போய்,எண்
கைத்தலப் பிரமன் அண்ட கடாகமும் கீண்டது அவ்வேல். 9

265 அவ்வழி, புறம்பு சூழ்ந்து கிடந்தபேர் ஆழி, ஊழிப்
பௌவநீர் என்ன ஓங்க, பாணியால் அமைத்து, வேணித்
தெய்வநல் நீரைத் தூவி, கலந்து,மா தீர்த்த மாக்கி,
கைவரை கபாலி, நந்தி கணத்தினை நோக்கிக் கூறும். 10

---

261. ஆழிவேந்து: சக்கரப்படையை உடைய திருமால். முனிவு அரும்பேறு: வெறுப்பில்லாதவரம். தன்னகர்: மதுரைமாநகரம். இலிங்கத்தில் புகுதும் எல்லை: இலிங்கத்திற்குள் செல்லும்போது.

262. வேத்திரப் படையோன்: பிரம்பு கைக்கொண்ட நந்தியம் பெருமான். பாலநேத்திர: நெற்றிக் கண்ணனே, நிரஞ்சன: களங்கம் அற்றவனே. நிருத்து ஆனந்த: ஆனந்தத் தாண்டவனே. தனிமுதல் ஒருவ: ஒப்பற்ற முழுமுதற் கடவுளே.

263. உய்ய: கடைத்தேற. செய்ய: நல்க. செப்பலோடும்: விண்ணப்பித்துக்கொண்ட உடன்.

264. தென்கீழ்சாராக: தென்கிழக்குப் பக்கமாக. முதுபார்: பழைய உலகம். கீண்டு: பிளந்து. பாந்தள் வேந்தன்: நாகராசன். கீண்டது: ஊடுருவிச் சென்றது. அவ்வேல்: அம்முத்தலைச்சூலம்.

265. அவ்வழி: அந்தக்கிழித்த வழியில். பேர்ஆழி: பெரிய புறக் கடலானது. பாணி: கை. வேணி: சடை. தெய்வநல்நீர்: கங்கை. கைவரை கபாலி: கையில் கபாலத்தினை உடைய சிவபெருமான்.

266 இன்னமா தீர்த்தம் தன்னை, எனைப்பல தீர்த்தங் கட்கும்
முன்னம்யாம் இங்குக் கண்ட முதன்மையால் ஆதி தீர்த்தம்
என்னலாம்; இனிஉண் டாக்கும் தீர்த்தங்கள் எவைக்கும் மேலாய்
மன்னலால் பரம தீர்த்தம் எனப்பெயர் வழங்க லாகும். 11

267 மருள்கெட மூழ்கி னோர் நன் மங்கலம் பெறலால், நாமம்
அருள்சிவ தீர்த்தம் ஆகும்; புன்நெறி அகற்றி உள்ளத்து
இருள்கெட ஞானம் தன்னை ஈதலால், ஞான தீர்த்தம்;
தெருள்கதி தரலால், முத்தி தீர்த்தம்என்று இதற்கு நாமம். 12

268 குடைந்து,தர்ப் பணமும் செய்து,
தானமும் கொடுத்து,அம் மாடே
அடைந்து,எழுத்து ஐந்தும் எண்ணி
உச்சரித்து, அன்பால் எம்மைத்
தொடர்ந்துவந்து இறைஞ்சிச் சூழ்ந்து
துதித்து,எமை உவப்பச் செய்தோர்,
உடம்புஎடுத்து அதனால் எந்த
உறுதி,உண்டு அதனைச் சேர்வார். 13

269 இந்தநீர் எம்மை ஆட்டின் ஏழிரண்டு உலகின் மிக்க
அந்தம்இல் தீர்த்தம் எல்லாம் ஆட்டிய பயன்வந்து எய்தும்;
வந்துஇதின் மூழ்கி இங்கு வைகுநம் குறியை உங்கள்
சிந்தையில் ஆர்வம் பொங்கப் பூசனை செய்மின் என்று. 14

---

266. மன்னல்: நிலை பெறுதல்.

267. மருள்: மயக்கம். மங்கலம்: நன்மை. புன்னெறி: தீயவழி. தெருள்கதி: தெளிந்த முத்தி.

268. குடைந்து: நீராடி. அம்மாடே: அதன்அருகில். எழுத்து ஐந்தும் எண்ணி உச்சரித்து: திருஐந்தெழுத்தை நினைந்து சொல்லி. எமை உவப்பச் செய்தோர்: நாம் களிக்குமாறு செய்தவர்கள்.

269. ஆட்டின்: ஆட்டினால். அந்தம் இல்: முடிவில்லாத. நம்குறியை: நம் சிவலிங்கத் திருமேனியை. பூசனை செய்மின்: வழிபாடு செய்யுங்கள்.

270 விண்ணவர் தம்மின் மேலாம்
 வேதியன் ஆகி நின்ற
பண்ணவன், தான்அந் நீரில்
 படிந்து,தன் அனுஞை யாலே,
அண்ணல்அம் கணத்தி னேரை
 மூழ்குவித்து, அனுதி ஆய
புண்ணிய இலிங்கம் தன்னுள்
 புகுந்துஇனிது இருந்தான் மன்னே. 15

271 அந்தமா நீரால் நந்தி ஆதியோர், விதியால் சோம
சுந்தரன் முடிமேல் ஆட்டி, துகள்அறப் பூசை ஆற்றி,
சிந்தையில் விழைந்த எல்லாம் அடைந்தனர்; செம்பொன் கஞ்சம்
வந்தஆறு இது;இத் தீர்த்த மகிமையும் உரைப்பக் கேண்மின். 16

272 வளைஎறி தரங்க ஞான வாவியை நோக்கில், பாவத்
தளைஅறும்; மூழ்கில் வேண்டும் காமியம் எல்லாம் சாரும்;
உளம்உற மூழ்கும் எல்லை, முழுக்குஒன்றற்கு உலகத்து உள்ள
அளவறு தீர்த்தம் எல்லாம் ஆடிய பயன்வந்து எய்தும். 17

273 மெய்யைமண் ஆதி கொண்டு விதிவழி சுத்தி செய்து,
மைஅறு வருண சூத்த மந்திரம் நவின்று மூழ்கில்,
துய்யமா தீர்த்தம் எல்லாம் தோய்ந்து,நான் மறையும்ஆய்ந்தோர்
கையில்எப் பொருளும் ஈந்த காசுஅறு பேறு நல்கும். 18

---

270. பண்ணவன்: சிவபெருமான். படிந்து: மூழ்கி. அனுஞை: பணியினால்.

271. விதியால்: ஆகமமுறைப்படி. செம்பொன் கஞ்சம்: பொற்றாமரைத் தடாகம். மகிமை: சிறப்பு.

272. வளைஎறிதரங்கம்: சங்குகளை வீசுகின்ற அலை. ஞானவாவி: அருவித் தடாகமாகிய பொற்றாமரை. நோக்கில்: பார்த்தால். பாவத்தளை அறும். பாவமாகிய கட்டு நீங்கும். மூழ்கில்: ஆடினால். வேண்டும் காமியம்: விரும்பும் பொருள்.

273. மெய்யை மண் ஆதிகொண்டு: உடம்பை மண் முதலியவற்றைக் கொண்டு. நவின்று: சொல்லி. காசு அறு: குற்றமற்ற. பேறு: பயன்.

274 தெய்வஇத் தீர்த்தம் தன்னை நினைவுஇன்றித் தீண்டி னாலும்,
அவ்விய வினையின் நீந்தி அரும்பெறல் வீடு சேர்வர்;
இவ்வுரை மெய்யே யாகும்; என்எனில், மனத்துஆறு அன்றி
வெவ்அழல் தீண்டி னாலும் சுடும்அன்றி விடுமோ அம்மா. 19

275 ஆரும்அந் நீரில் என்றும் ஆடினார், சீவன் முத்தி
சேருவர். அந்நீர் ஆடும் சிறப்புறு பயனுக்கு ஒவ்வா;
வாருணம் ஆக்கி னேயம் மந்திரம் இவைமுன் ஆன
பேர்உணர்வுஅளிக்கும்நானம் செய்தவர்பெறும்பேறுஎல்லாம். 20

276 அன்னநீர் தனிலும் ஆடி, ஆலவாய் உடைய நாதன்
தன்னையும் பணிவோன், மேலைப் பரகதி தன்னைச் சாரும்,
என்ன நன் நூலில் சொன்ன பவித்திரம் எவைக்கும் மேலாய்ப்
பன்னரும் புனித மான பவித்திரம் ஆகி நிற்கும். 21

277 ஆதரவு இலனாய் அந்நீர் ஆடினோன் சுவர்க்கம் சேரும்;
ஆதரவு உளனாய் மூழ்கி, வானவர் ஆதி யானோர்க்கு
ஆதரவு அரிசி எள்ளுத் தருப்பணம் அமையச் செய்தோன்,
ஆதர வேள்வி முற்றும் ஆற்றிய பயனைச் சேரும். 22

278 ஏனைமா தலங்கள் தம்மில் இருந்துசெய் விரதம், பூசை,
தானமா, தருமம், ஓமம், தவம், செபம், தியானம், தம்மால்
ஆனமா பயனிற் கோடி அதிகமாம்; அடைந்து மூழ்கி,
ஞானமா தீர்த்த ஞாங்கர் இருந்துஅவை நயந்து செய்யின். 23

---

274. அவ்விய வினையின் நீந்தி: தீவினையினின்று நீக்கம் பெற்று. என் எனில்: எவ்வாறு என்றால். மனத்து ஆறு அன்றி: மனத்தால் நினையாமல். வெவ்வழல்: கொடிய நெருப்பு.

275. ஒவ்வா: ஈடாகா. வாருணம்: வருண நானம். ஆக்கினேயம்: அக்கினிநானம். மந்திரம்: மந்திரநானம். நானம் செய்தவர்: நீராடியவர்.

276. பவித்திரம்: புனிதம்.

277. ஆதரவு: அன்பு. ஆதரவேள்வி: விரும்பத்தகுந்த யாகம்.

278. பொற்றாமரைத் தடாகத்தில் மூழ்கி அக்கரையில் இருந்து செய்யும் நல்வினைகள், பிறதலங்களில் செய்யும் விரதம் பூசை முதலியவற்றை விடக் கோடி மடங்கு பயனைத் தரும்.

279 பிறந்தநாள் அந்நீர் மூழ்கின் மேலைவெம் பிறவிப் பௌவம்
மறிந்திடும்; மறி,தேள், கும்ப, மதிகளில் மூழ்கி, தென்பால்
உறைந்தவர் பொருட்டுப் பிண்டம் உதவினால்,அவர் தாம்,ஆழ்ந்து
நிறைந்திடு பிறவிப் பௌவம் நின்றுமேல் எழுவர் அன்றே. 24

280 அத்தட மருங்கின் யாவர் தென்புலம் அடைந்தோர் தங்கள்
சிந்தம்மாசு அகற்ற வேண்டி, செய்கடன் முடிக்கில், அன்னோர்
எத்தனை எள்நேர்ந் தாலும், எள்ளுக்குஆ யிரம்ஆண்டு ஆக
அத்தனை யாண்டு மட்டும் அவரைவிண் ஆள வைப்பர். 25

281 மூவகை உலகில் உள்ள தீர்த்தமும், முறையால் என்றும்
சேவகம் செய்யும் இந்தத் தீர்த்தம்,எந் நாளும் மூழ்கி,
ஏவர்அந் நீரால் என்றும் ஈசனைப் பூசை செய்வோர்
ஆவர்,இப் பிறவி தன்னில் அவர்கதிக் கரையைச் சார்வார். 26

282 விடுத்திடல் அரிய நித்த வேள்வி,மா விரதம், வேதம்
தடுத்திடல் அரிய தானம், தவம்,இவை தரும்பேறு எல்லாம்,
அடுத்ததன் கரையில் வைகி ஈசனை அருச்சிப் போர்க்குக்
கொடுத்திடு புண்ணி யத்தில் கோடியில் ஒன்றுக்கு ஒவ்வா. 27

283 உம்மையில் பிறவி தோறும் நியமநல் ஒழுக்கம் பூண்டு,
பொய்ம்மையில் விரதம், தானம், தவம்செய்து, புனித ராகி,
செம்மைநல் நெறியில் நின்ற சித்தருக்கு அலது,இத் தீர்த்தம்,
இம்மையில் அடைந்து நித்தம் ஆடுதற்கு எய்தாது அன்றே. 28

---

279. பிறந்த நாள்: தான் பிறந்த நாளில். பிறவிப் பௌவம் மறிந்திடும்: பிறவிக்கடல் வற்றும். மறி: சித்திரை. தேள்: கார்த்திகை. கும்பம்: மாசி. தென்பால் உறைந்தவர்: தென்புலத்தார். அவர் தாம்: அந்தப்பிதுரர்கள்.

280. சித்தம் மாசு: மனக்குற்றம்.

281. சேவகம் செய்யும்: பணிகேட்கும். கதிக்கரை: வீடாகிய கரை.

282. விடுத்திடல் அரிய: நீக்கமுடியாத. பேறு: பயன்.

283. உம்மையில் பிறவி: முற்பிறப்பு. முற்பிறப்பில் தவம் முதலியன செய்தார்க்கு அன்றி இத தீர்த்தம் ஆடக் கிடைக்காது.

284 மதிகதிரோன் இடத்துஒடுங்கு தினம்,திங்கள்
பிறப்பு,அரவம் வாய்அங் காந்து
கதிர்கள்தமை விழுங்குதினம், விதிபாதம்,
இந்நாளில் கருதி மூழ்கித்
துதிகள்,தருப் பணம்,தானம் புரிதல்,மனு
ஓதுதல்,அத் தொகைஒன் றற்குஒன்று
அதிகபலன் அம்முறை.நூறு ஆயிரம்நூறு
ஆயிரம்ஓர் அனந்தம் ஆகும். 29

285 பொருவுஅரிய தகர்த்திங்கள், துலாத்திங்கள்,
இவைஉதிக்கும் போது மூழ்கின்,
ஒருபதின யிரமடங்காம்; சுறவு,கவைத்
தாள்அலவன் உதிப்பின் மூழ்கின்,
இருபதின யிரமடங்காம்; இந்துஇரவி
இடத்துஒடுங்கும் இந்து வாரம்
வருவதுஅறிந்து ஆடி,மனு ஓதல்முதல்
செயின்அனந்த மடங்குஉண் டாகும். 30

286 பிரயாகை தனில்,மகர மதிநாள்முப்
பதும்குடைந்து பெறும்பேறு, இந்தத்
திரையார்பைந் தடத்து,ஒருநாள் மூழ்குவோன்
பெறும்;விரத சீலம் பூண்டு,
வரையாமல் ஒருவருடம் படிந்து,உமையை,
அமரர்சிகா மணியாம் வேத
உரையானை வழிபடுமேல் மலடிக்கு
நன்மகப்பேறு உண்டாம் மன்னே. 31

---

284. மதி கதிரோன் இடத்து ஒடுங்கு தினம்: அமாவாசை. திங்கள் பிறப்பு: மாதப் பிறப்பு. விழுங்குதினம்: கிரகணம். விதிபாதம்: ஒருநாள். அனந்தம்: அளவு கடந்தது.

285. பொருவுஅரிய: ஒப்பில்லாத. தகர்த்திங்கள்: சித்திரைமாதம். துலாத்திங்கள்: ஐப்பசி மாதம். சுறவு: தைமாதம். கவைத்தாள் அலவன்: (பிளவுபட்ட காலை உடைய நண்டு) ஆடிமாதம். உதிப்பின் மூழ்கின்: மாதப் பிறப்பில் மூழ்கினால். இந்து இரவி இடத்து ஒடுங்கு இந்துவாரம்: அமாவாசையில் வருகின்ற திங்கள்கிழமை.

286. பிரயாகை: (கங்கை. யமுனை, சரசுவதி என்ற மூன்று நதிகளும் கலக்கும் இடம்) திரிவேணி சங்கமம் என்னும் வடநாட்டுத்தலம். மகரமதி: தைமாதம். திரைஆர்பைந் தடத்து: அலைகளையுடைய பசிய தீர்த்தத்தில். விரதசீலம்: விரதஒழுக்கம். வரையாமல்: தவறாமல். படிந்து: நீராடி. அமரர்சிகாமணி: தேவர்கள் சூளாமணியாகிய ஆலவாய் அண்ணல்.

287 எண்திசைய நதிவாவி, வடிவான
மாதீர்த்தம் எல்லாம், இப்பொன்
புண்டரிக தடத்தில்ஒரு கோடியில்ஓர்
கூறுநிகர் போதா; ஈது
கண்டதனால் அறம், தீண்டப் பெற்றதனால்
நற்பொருள், அங் கையால் அள்ளிக்
கொண்டதனால் இன்பநலம், குடைந்ததனால்
பேரின்பம் கொடுக்கும் அன்றே. 32

288 முன்னவன் அருளிச் செய்த காரண முறையால் அன்றி
இன்னம்இப் புனித வாவிக்கு ஏதுவால் எய்து நாமம்,
மின்அவிர் சடையான் சென்னி மேவிய கங்கை நீரில்
பின்அது கலந்த நீராற் பெறும்சிவ கங்கை என்றும், 33

289 அலகுஇலாத் தீர்த்தம் தம்முள் அதிகஉத் தமமாய்த் தோன்றி
இலகலால், இதனைத் தீர்த்த உத்தமம் என்பர் ஆய்ந்தோர்;
பலஇதழ் விரித்துச் செம்பொன் பங்கயம் மலர்ந்த நீரால்,
உலகவர் யாரும் பொன்தா மரைஎன உரைப்பர் அன்றே. 34

290 தருமம்முன் ஆகும் நான்கும் தருதலால் தரும தீர்த்தம்,
அருமைசால் அருத்த தீர்த்தம், அரும்பெறல் காமதீர்த்தம்,
இருமைசேர் முத்தி தீர்த்தம், என்பதாம் இனைய தீர்த்தம்
வெருவரு பாவம் என்னும் விறகினுக்கு எரியாம் அன்றே. 35

291 இவ்அரும் தலத்தின் ஆன்ற பெருமையும், எரிகால் செம்பொன்
தெய்வத பதும தீர்த்தப் பெருமையும், செப்பக் கேட்டோர்,
எவ்வம்இல் போகம் வீடு பெறுவர்என்று இசைத்தான்; முந்நீர்ப்
பௌவம்உண்டு அமரர் வேந்தன் பரிபவ விழுமம் தீர்த்தோன். 36

---

287. நதி: ஆறு. வாவி: தடாகம். கூறு: பகுதி. பொற்றாமரையைக் கண்டால் அறப் பயனும், தொட்டால் பொருட்பயனும், அள்ளிக் கொண்டால் இன்பப் பயனும், குடைந்து ஆடினால் வீட்டு இன்பப் பயனும் பெறுவர்.

288. முன்னவன்: சிவபெருமான். ஏது: காரணம் – கங்கைநீர் கலந்ததால் சிவகங்கை என்ற பெயரைப் பெற்றது.

289. அலகுஇலா: அளவில்லாத. அதிக உத்தமம்: மேம்பட்ட சிறப்பு. இலகல்: விளங்குதல். ஆய்ந்தோர்: ஆராய்ந்து கண்டவர்.

290. அருத்தம்: பொருள். முத்தி: வீடு. பாவம் என்னும் விறகினுக்கு எரி: பாவம் என்று சொல்லுகின்ற விறகுக்கு நெருப்பு.

291. ஆன்ற பெருமை: நிறைந்த சிறப்பு. எரிகால்: ஒளி வீசும். செம்பொன் தெய்வப் பதும தீர்த்தம்: செம்பொன்னாலான கடவுள் தன்மை வாய்ந்த தாமரைத் தீர்த்தம். எவ்வம்: துன்பம். இசைத்தான்: பகர்ந்தான். பரிபவவிழுமம்: தோல்வியால் வரும் துன்பம். தீர்த்தோன்: அகத்திய முனிவன்.

## மூர்த்திச் சிறப்பு

292 ஆலவாய் அலர்ந்த செம்பொன் அம்புயப் பெருந்தீர்த் தத்தின்
மேல்அவாம் பெருமை தன்னை விளம்புவார் எவரே? அங்கண்
நீலமா மிடற்று முக்கண் நிராமயன் அறிவுஆ னந்த
மூலமா இலிங்க மேன்மை மறையினால் அறையல் உற்றும். 1

293 பொன்நெடு மேரு, வெள்ளிப் பொருப்பு,மந் தரம்,கே தாரம்,
வன்நெடும் புரிசை சூழ்ந்த வாரண வாசி, ஆதிப்
பன்அரும் தலங்கள் தம்மில் பராபர இலிங்கம் தோன்றும்
முன்னர்,இக் கடம்பின் மாடே, முளைத்ததுஇச் சைவ லிங்கம். 2

294 அப்பதி இலிங்கம் எல்லாம், அருள்குறி இதனில் பின்பு
கப்புவிட்டு எழுந்த; இந்தக் காரணம் இரண்டி னாலும்
ஒப்புஅரி தான ஞான ஒளிதிரண்டு அன்ன இந்தத்
திப்பிய இலிங்கம் மூல இலிங்கமாய்ச் சிறக்கும் மன்னோ. 3

295 இந்தமா இலிங்கத்து, எண்நான்கு இலக்கண, விச்சை மேனி
அந்தம்இல் அழகன், பாகத்து உமையொடும் அழகு செய்து,
சந்ததம் விளக்கம் செய்யும் தகைமையை நோக்கி, சோம
சுந்தரன் என்று நாமம் சாத்தினார்; துறக்க வாணர். 4

296 திறப்படும் உலகம் எங்கும் வியாபியாய்ச் சிறந்து நிற்கும்
அறப்பெரும் கடவுள், சோம சுந்தரன்; அதனால் அன்றோ!
கறைக்கதிர் வடிவேல் தென்னன் கையில்பொன் பிரம்பு பட்ட
புறத்துஅடித் தழும்பு, மூன்று புவனமும் பட்டது அன்றே. 5

---

292 மேல் அவாம்: வானவரும் விரும்பும். நிராமயன்: நோயில்லாதவன். மூலமா இலிங்க மேன்மை: ஆதியாகிய சிறந்த சிவலிங்கத்தின் சிறப்பை.

293 வெள்ளிப்பொருப்பு: கைலை. மந்தரம்: மந்தரமலை. கேதாரம்: திருக்கேதாரத்தலம். வாரணவாசி: காசி நகரம். பன்அரும்: சொல்லுதற்கு அரிய பராபரன்: அம்பிகை கணவன். கடம்பு: கடம்ப மரம். மாடே: பக்கத்தில். இச்சைவ லிங்கம்: சொக்கலிங்கம். மேற்குறித்த இடங்களிலுள்ள இலிங்கங்கள் தோன்றுவதற்கு முன்னரே மதுரையில் கடம்பமரத்தின் அடியில் சிவலிங்கம் தோன்றியது.

294 அப்பதி: மேரு முதலிய இடங்கள். அருள்குறி: மதுரை லிங்கம். கப்புவிட்டு: கிளைத்து. இந்தத் திப்பிய இலிங்கம்: இந்தத் திவ்வியமான சிவலிங்கம்.

295 விச்சை மேனி: ஞான வடிவம். துறக்கவாணர்: விண்ணுலகத்தார்.

296 வியாபியாய்: நிறைந்து. கறைக்கதிர் வடிவேல் தென்னன்: இரத்தக்கறை உடைய ஒளிமிக்க கூர்மையான வேல் கைக்கொண்ட பாண்டியன். புறத்து அடித்தழும்பு: முதுகில் பட்ட அடியின் சுவடு.

297 சொற்றஇச் சமட்டி யான
சோமசுந் தரனைக் காணப்
பெற்றவர், வியட்டி யான
பிறபதி இலிங்கம் காணல்
உற்றவர் ஆவர்; என்னென்று
உரைக்கின்,வேர் ஊட்டும் நீர்போய்
மற்றைய சினைகள் எல்லாம்
தழைவிக்கும் மரத்தின் மாதோ. 6

298 எத்தலத்து யாவன் எண்எண்
திருவிளை ஆடல் செய்தான்,
அத்தலத்து அவனுக்கு ஒப்பும்
அதிகமாம் சிறப்பும் பெற்ற
உத்தமன் என்றும் எந்த
உலகிலும் இல்லை; அந்த
வித்தகன் அதிகத் தன்மை
எனைத்துஎனின் விளம்பக் கேண்மின். 7

299 பொருப்பினுள் தலைமை எய்தும் பொன்நெடும் குடுமி மேரு;
தருக்களில் தலைமை சாரும் தண்நறும் தெய்வ தாரு;
விருப்புஉறு வேள்வி தம்முள் மேம்படும் புரவி மேதம்;
அருள்படு தானம் தம்முள் விழுமிதாம் அன்ன தானம். 8

300 மனிதரில் உயர்ந்தோர் ஆதி
மறையவர்; தேவர் தம்மில்
பனிதரு திங்கள் வேணிப்
பகவனே உயர்ந்தோன்; வேட்டோர்க்கு
இனிதுஅருள் விரதம் தம்முள்
அதிகமாம் இந்து வாரம்;
புனிதமந் திரங்கள் தம்முள்
போதஐந்து எழுத்து மேலாம். 9

---

297 சமட்டி: சூக்குமம். வியட்டி: தூலம் சூக்கும இலிங்கமாகிய மதுரைச் சொக்கலிங்கத்தைக் காணப்பெற்றவர், பிறபதியிலுள்ள எல்லா இலிங்கங்களையும் கண்டவர் ஆவர்; எப்படி எனில் மரத்தின் வேரில் ஊற்றும் நீர் எல்லாக் கிளைகளையும் தழையச் செய்யுமாப் போல.

298 அந்த வித்தகன்: அந்த மேம்பட்டவனுடைய. அதிகத் தன்மை: சிறந்த தன்மை.

299 பொருப்பு: மலை. தரு: மரம். தெய்வதாரு: கற்பகம். புரவிமேதம்: அசுவமேத யாகம். விழுமிது: மேம்பட்டது.

300 மறையவர்: வேதியர். வேணிப்பகவன்: சிவபெருமான். வேட்டோர்: விரும்பினவர்கள். இந்து வாரம்: திங்கட் கிழமை. போத ஐந்து எழுத்து: ஞானத்தைத் தரும் திரு ஐந்தெழுத்து.

301 மின்மைசால் மணியில் சிந்தா
மணி,வரம்; விழுப்பம் நல்கும்
தன்மைசால் அறங்கள் தம்மில்
மிகும்,சிவ தருமம் என்ப;
இன்மைசால் நெறிநின் றோருக்கு
ஏற்குநல் கலங்கள் தம்மில்,
நன்மைசான் றவரே, முக்கண்
நாதனுக்கு அன்பு பூண்டோர். 10

302 தீஅவாம் சுவைப்பால் ஆவில், தேவர்ஆ அதிகம்; பல்வேறு
ஆயமா தீர்த்தம் தம்முள் அதிகமாம், சுவண கஞ்சம்;
மாயமாசு அறுக்க, எல்லாத் தலத்திலும் வதிந்து மன்னும்
தூயவா னவரில், சோம சுந்தரன் சிறந்தோன் ஆகும். 11

303 அந்தமும் முதலும் இல்லா அகண்டபூ ரணமாய், யார்க்கும்
பந்தமும் வீடும் நல்கும் பராபரச் சோதி தானே,
வந்தனை புரிவோர்க்கு இம்மை மறுமைவீடு அளிப்பான், இந்தச்
சுந்தர இலிங்கத்து என்றும் விளங்குவான், சுருதி ஏத்த. 12

304 இத்தகு சயம்பு தன்னை ஏனைய சயம்பு எல்லாம்
நித்தமும் தரிசித்து ஏகும், நிருமல ஒளியாம் இந்த
உத்தம இலிங்கம் கண்டோர், உரைஉணர்வு ஒடுங்க உள்ளே
சித்தமாசு ஒழியத் தோன்றும் சிவபரம் சுடரைக் கண்டோர். 13

305 இத்தனிச் சுடரை நேர்கண்டு
இறைஞ்சினோர் பாவம் எல்லாம்,
கொத்துஅழல் பொறிவாய்ப் பட்ட
பஞ்சுபோல், கோபம் மூள
மெய்த்தவம் சிதையு மாபோல்,
மருந்தினால் வீயும் நோய்போல்,
உத்தம குணங்கள் எல்லாம்
உலோபத்தால் அழியு மாபோல், 14

---

301 மின்மை: ஒளி. சால்: மிகுந்த. வரம்: மேலானது. விழுப்பம் நல்கும்: உயர்வைக் கொடுக்கும். மிகும் சிவதருமம்: சிவதருமம் உயர்ந்தது. இன்மை சால் நெறி: இல்லறவழி. கலம்: பாத்திரம். இல்லறத்தார் நல்ல பாத்திரமாகக் கொள்ளத்தக்கவர் சிவனடியாரே.

302 தீ அவாம்: தித்திப்பை உடையதாகும். தேவர் ஆ: காமதேனு. சுவண கஞ்சம்: பொற்றாமரை மாய மாசு: பந்தமாகிய குற்றம். வதிந்து மன்னும்: நிலைபெற்றிருக்கும். பசுக்களுள் காமதேனு சிறந்தது; தீர்த்தத்தில் பொற்றாமரை சிறப்புடையது; மூர்த்திகளுள் சோமசுந்தரன் சிறப்புஉடையவன்.

303 அகண்ட பூரணம்: எங்கும் நிறைந்தது. சோதி: சிவபெருமான். சுருதி ஏத்த: மறைகள் துதிக்க.

304 சயம்பு: தானாகத் தோன்றிய இலிங்கம்.

305 இப்பாடல் குளகம். கொத்து அழல் பொறி: திரண்ட தீப்பொறி. வீயும்: அழியும். உலோபம்: ஈயாமைக்குணம்.

306 கலிகடல் இரவி தோன்றக் கருகுஇருள் உடையு மாபோல்,
ஒலிகெழு பெருங்கால் தள்ள உடைபடு மேகம் போல,
வலிகெழு மடங்கல் சீற மாயும்மால் யானை போல,
குலிசவல் ஏறு தாக்கப் பொடிபடும் குன்றம் போல, 15

307 மருட்சிசெய் காம நோயால் மதிகெடும் ஆறு போல,
அருள்சிவ ஞான நோக்கால் வலிகெடும் அவிச்சை போல,
தருக்குஉறும் உவணம் சீறத் தழல்அரா விளியு மாபோல்,
செருக்குஉற அழியும் கற்ற கல்விபோல் சிதையும் அன்றே. 16

308 புலரியில் சீவன் முத்தி புரேசனைக் காணப் பெற்றால்,
அலைகடல் நான்குள் பட்ட அவனிமா தானம் செய்த
பலன்உறும்; கதிர்கால் உச்சி வைகலில் பணியப் பெற்றால்,
கலைஞர்பால் நூற்றுப் பத்துக் கபிலைமா தானப் பேறும். 17

309 விண்ணிடைப் பரிதிப் புத்தேள் மேலைநீர் குளிக்கும் எல்லை,
அண்ணலை வணங்கில், கோடி ஆன்இனத் தானப் பேறும்;
பண்ணவர் பரவும் பாதி இருள்வயின் பணியப் பெற்றால்,
வண்ணவெம் புரவி மேத மகப்புரி பெரும்பேறு எய்தும். 18

310 இன்னன அதிகம் ஆம்பேறு
அறிந்துபோய், எத்தே வர்க்கும்
முன்னவன் சமட்டி விச்சா
புரம்முறை முதல்வன் தன்னை,
சொன்னஇக் காலம் தோறும்
இறைஞ்சியும், தொழுதும், சூழ்ந்தும்,
பொன்அடிக்கு அன்பர் ஆகி
வழிபடும் புனித சீலர், 19

---

306 இப்பாடலும் குளகம். கலி கடல்: ஒலிக்கும் கடல். பெருங்கால்: சூறவளிக்காற்று. வலி கெழுமடங்கல்: ஆற்றல்மிக்க சிங்கம். குலிசவல் ஏறு: வச்சிரப்படை ஆகிய வலிய இடியேறு.

307 மருட்சி: மயக்கம். மதி கெடுதல்: புத்தி அழிதல். அவிச்சை: அறியாமை. உவணம்: கருடன். தழல் அரா: நச்சுப்பாம்பு. விளியுமாபோல்: அழிவதைப் போல, செருக்கு உற: தருக்கு அடை வதால். சிதையும்: கெட்டுவிடும்.

308 புலரி: புலர் பொழுது. சீவன் முத்தி புரேசன்: சோமசுந்தரக் கடவுள். அவனிமா தானம்: பெரிய பூதானம். பலன் உறும்: பயன் கிடைக்கும். கதிர்கால் உச்சி வைகல்: இரவியின் ஒளி நிறைந்த நடுப்பகல். கலைஞர் பால்: அறிஞர்களுக்கு. நூற்றுப்பத்து: ஆயிரம். கபிலை: பசு.

309 பரிதிப் புத்தேள்: சூரியதேவன். மேலை நீர்: மேற்குக்கடல். கோடி ஆன் இனம்: கோடி பசுக்கள். பாதி இருள் வயின்: நடுச் சாமத்தில்.

310 இப்பாடல் குளகம்.

311 உம்மையில் வினைகள் என்னும் பிணிஅவிழ்ந்து ஒருவி, தூய
செம்மையர் ஆகி, ஆறாத் திருவொடு செல்வம் ஓங்க
வெம்மைஇல் போகம் மூழ்கி, மலஇருள் வீக்கம் நீந்தி,
மைம்மலி கண்டத்து எம்கோன் மலர்அடி நீழல் வாழ்வார். 20

312 அறஉருவன் ஆலவா யான்நாமம்
செவிமடுத்தால், அடைந்த பத்துப்
பிறவிவினை அறும்; நினைந்தால் நூறுபெரும்
பவப்பாவப் பிணிபோம்; கூடல்
இறைவனைஇன்று இறைஞ்சுதும்என்று எழுந்துமனைப்
புறம்போந்தால், ஈர்ஐஞ் நூறு
மறம்உறுவெம் பவத்துஇழைத்த பாதகவல்
வினைஅனைத்தும் மாயும் மன்னோ. 21

313 புழைக்கைவரை தொலைத்தானைத் தரிசித்தோர்,
ஆயிரவாம் புரவி வேள்வி
தழைத்தபெரும் பயன்பெறுவர்; உருத்திரசூத்
தம்அதனால் தவவா னோர்கள்
தொழற்குஅரியான் தனைத்துதித்தோர், கணத்துக்குஆ
யிரராச சூய யாகம்
இழைத்தபெரும் பயன்பெறுவர்; சமட்டிவடிவு
ஆகியஇவ் இலிங்கம் தன்னை. 22

314 அங்கைஅளவு ஆகியநன் நீர்ஆட்டிப்
பூசித்தோர், அளவுஇல் ஏனைத்
துங்கதலத்து உறைஇலிங்க மூர்த்திகளை,
சிவஆகமநூல் சொன்ன ஆற்றல்,
மங்கலம்ஆ கியமுகமன் ஈர்எட்டும்
வழுவாது வாசம் தோய்த்த
செங்கனக மணிக்கலசப் புனல்ஆட்டி
மாபூசை செய்தோர் ஆவார். 23

---

311 உம்மை: முற்பிறப்பு. பிணி: கட்டு. ஒருவி: நீங்கி. ஆறாத்திரு: குறையாத செல்வம். வெம்மைஇல் போகம்: தண்ணிய இன்பம். வீக்கம்: பெருக்கம். நீந்தி: கடந்து. மைம்மலி கண்டம்: நஞ்சு தங்கிய கழுத்து.

312 மனைப்புறம் போந்தால்: வீட்டுக்கு வெளியே வந்தால். ஈர் ஐந்நூறு: ஆயிரம். மறம் உறு: பாவம் மிகுந்த. மாயும்: அழியும்.

313 புழைக்கைவரை: யானை உருத்திர சூத்தம்: சிவனுக்கு உரிய மந்திரம். கணம்: கணப் பொழுது.

314 அங்கை அளவு ஆகிய நன்னீர்: குடங்கை நீர். சொன்ன ஆற்றல்: சொன்ன முறைப்படி. முகமன் ஈர் எட்டு: சோடச உபசாரம்' மாபூசை: சிறந்த வழிபாடு.

315 அவ்வண்ணம் சுந்தரனை ஐந்துஅமுதம்,
ஆன்உதவும் ஐந்து தீம்தேன்,
செவ்வண்ணக் கனி,சாந்தச் சேறுமுதல்
மட்டித்து, தேவர் தேரு
மெய்வ்வண்ணம் குளிர,விரைப் புனல்ஆட்டி,
மாபூசை விதியால் செய்தோர்,
மைவ்வண்ண வினைநீந்தி, அறமுதல்நாற்
பொருள்அடைந்து மன்னி வாழ்வார். 24

316 நல்லவகை முகமன்நீர் எட்டுள்ளும்
வடித்தவிரை நன்னீர் ஆட்ட
வல்லவர்,நூறு ஆயிரமா மேதமகப்
பயன்பெறுவர்; வாச நானம்
எல்அவிர்குங் குமம்சாந்தம் இவைபலவும்
மட்டித்தோர், எழிலார் தெய்வ
முல்லைநகை யாரோடும் விரைக்கலவை
குளித்துஇன்பம் மூழ்கி வாழ்வார். 25

317 நன்மலர்ஒன்று ஆலவா யான்முடிமேல்
சாத்திஞல், நயந்து நூறு
பொன்மலர்கொண்டு அயல்பதியில் பூசித்த
பயன்எய்தும்; புனித போகத்
தன்மைதரு சுந்தரற்கு, தூபம்ஒரு
கால் கொடுப்போர் தமக்கு, தாங்கள்
சொல்மனம்மெய் உறச்செய்த குற்றம்ஆ
யிரம்பொறுப்பன் சுருதி நாதன். 26

318 திருஅமுது நிவேதிப்போர், அவிழ்ஒன்றற்கு
உகம்ஒன்ருச் சிவலோ கத்தின்
மருவிநிறை போகமுடன் வைகுவர்;தாம்
பூலம்,முக வாசம் ஈந்தோர்,
பொருவரிய கடவுளர்ஆண்டு ஒருநூறு
கோடிசிவ புரத்து வாழ்வார்;
ஒருபளித விளக்கிடுவோர், வெண்ணிறமும்
கண்ணுதலும் உடையவர் ஆவார். 27

---

315 ஐந்து அமுதம்: பஞ்சாமிர்தம். ஆன்உதவும் ஐந்து தீம்தேன்: பஞ்ச கவ்வியம். மட்டித்து: கலந்து. விரைப்புனல்; மண நீர், மைவ்வண்ணம்; கரிய. மன்னி: நிலை பெற்று.

316 வாச நானம்: மணமுள்ள கத்தூரி. எல் அவிர் குங்குமம்: ஒளி விளங்குகின்ற குங்குமப்பூ.

317 சொல் மனம் மெய்: மொழி, உள்ளம், உடல். சுருதி நாதன்: வேதத்தின் தலைவனுகிய சிவ பெருமான்.

318 நிவேதிப்போர்: படைப்போர்' அவிழ்: பருக்கை. உகம்: யுகம். மருவி: பொருந்தி. தாம்பூலம்: வெற்றிலை. முகவாசம்: தக்கோலம், ஏலம். இலவங்கம், கர்ப்பூரம், சாதி என்ற ஐவகை வாசனைச் சாமான்கள். கடவுளர் ஆண்டு: தேவ ஆண்டு. ஒரு பளிதவிளக்கு: ஒரு கற்பூர விளக்கு.

319 நறும்திருமஞ் சனம்எடுக்கக் குடம்,ஆட்ட
மணிக்கலசம், நல்ல வாசம்
பெறும்தகைய தூபக்கால், தீபக்கால்,
மணி,இன்ன பிறவும், கங்குல்
தெறும்கதிர்கால் மணிமாட மதுரைநா
யகர்க்குஈந் தோர்,செய்த பாவம்
வெறும்துகள்செய்து, ஐம்பொறிக்கும் விருந்துஊட்டும்
பெரும்காம வெள்ளத்து ஆழ்வார். 28

320 கயல்இசைய கண்உமைகோன் திருமுன்னர்ப்
பல்லியமும் கல்என்று ஆர்ப்ப,
இயல்இசைய பாடலினோடு ஆடல்இவை
செய்விப்போர், இறுமாப்பு எய்திப்,
புயல்இசைய இயம்கலிப்ப, மூஉலகும்
தொழ,அரசாய், பொலன்கொம்பு ஆடும்
செயல்இசைய அணங்குஅனையார் ஆடுஅரங்கு
கண்டுஇன்பச் செல்வத்து ஆழ்வார். 29

321 ஒருகால்,அட் டாங்கம்உடன் பஞ்சாங்கம்
உடன்ஆதல், ஒண்செங் கால்வெண்
குருகுஆலும் மலர்த்தடம்சூழ் கூடல்நா
யகற்பணிவோர், கோல்ஒன்று ஓச்சி,
பொருகாலின் வருபரித்தேர் மன்னவராய்,
யாவரும்தம் புடைவந்து எய்தி,
இருகாலும் தலைவருட, எக்காலும்
தமைவணங்க இருப்பர் அன்றே. 30

322 இத்தகைய திருஆல வாய்உடையான்
திருமுன்னர் இயற்றும் ஓமம்,
மெய்த்தவம்,மந் திரம்,தானம், இன்னஅணு
அளவுஎனினும் மேரு ஆகும்;
உத்தமமாம் இவ்இலிங்கப் பெருமைஎலாம்
யாவர்அளந்து உரைப்பர்? வேத
வித்தகரே! சிறிதுஅறிந்த வாறுஉரைத்தேம்;
இனிப்பலகால் விளம்பு மாறுஎன்! 31

---

319 - நறும்: நல்ல. மணிக்கலசம்: ரத்தினம் பதித்த குடம் கங்குல் தெறும்: இருளை ஓட்டுகின்ற. வெறும் துகள் செய்து: வெற்றுப் பொடியாக்கி. காம வெள்ளம். இன்ப வெள்ளம்.

320 கயல் இசைய: மீனை ஒத்த. பல்லியம்: இசைக் கருவிகள். இறுமாப்பு எய்தி: செம்மாந்து புயல்: மேகம். அணங்கு: தேவமகளிர். ஆடு அரங்கு: நடன சாலை.

321 ஒருகால்: ஒரு முறை. அட்டாங்கம்: எட்டு உறுப்புக்கள் பட வீழ்ந்து வணங்குதல். பஞ்சாங்கம்: ஐந்து உறுப்புக்கள் பொருந்த வீழ்ந்து வணங்குதல். வெண்குருகு: வெள்ளை அன்னம். ஆலும்:ஒலிக்கும் பொருகாலின்: பொரும் காற்றைப்போல்;

323 இத்தலத்துக்கு ஒப்பாக ஒருதலமும்,
பொற்கமலம் என்னும் இந்த
உத்தமமா தீர்த்தத்துக்கு ஒப்பதொரு
தீர்த்தமும்,மெய் உணர்வுஆ னந்த
வித்தனைய இலிங்கம்இதற்கு ஒப்பானஓர்
இலிங்கமும்,பார், விண்,கீழ் என்னும்
முத்தலத்தும் இலை;அந்த மூர்த்திதிரு
நாமங்கள் மொழியக் கேண்மின்! 32

324 கருப்பூர சுந்தரன்,பூங் கடம்பவன
சுந்தரன்,உள் கரவாத் தொண்டர்
விருப்புஊரும் கலியாண சுந்தரன்,நல்
அறவடிவாய் விளங்கும் ஏற்றுப்
பொருப்பூரும் அபிராம சுந்தரன்,தேன்
புடைகவிழப் பொன்னிற் பூத்த
மருப்பூசும் சண்பகசுந் தரன்,மகுட
சுந்தரன்தான் வாழி மன்னோ. 33

325 மான்மதசுந் தரன்,கொடிய பழியஞ்சு
சுந்தரன்,ஓர் மருங்கில் ஞானத்
தேன்மருவி உறைசோம சுந்தரன்,தேன்
செவ்வழியாழ் செய்யப் பூத்த
கான்மருவு தடம்பொழில்சூழ் ஆலவாய்ச்
சுந்தரன்,மீன் கணங்கள் சூழப்
பால்மதிசூழ் நான்மாடக் கூடல்நா
யகன்,மதுரா பதிக்கு வேந்தன். 34

---

323 உத்தம மாதீர்த்தம்: சிறந்தபெருமை பொருந்திய தீர்த்தம். மெய்யுணர்வு ஆனந்த வித்து: உண்மை அறிவு இன்பங்களின் மூலம். முத்தலம்: மூவுலகம். நாமம்: திருப்பெயர்.

324 உள்கரவாத் தொண்டர்: உள்ளத்தில் வஞ்சனையில்லாத அடியார்கள். விருப்பு ஊரும்: அன்பு மிக்க. ஏற்றுப் பொறுப்பு ஊரும்: இடபமாகிய மலையைச் செலுத்தி அருளும். புடை கவிழ: பக்கத்தில் நிரம்பச் சொரிய. பொன்னில்: பொன்னைப் போல. மருப் பூசும்: மணம் நிறைந்த.

325 மருங்கில்: பக்கத்தில். ஞானத்தேன்: உமை அம்மை. மருவி: பொருந்தி. தேன்: வண்டுகள். செவ்வழியாழ். செவ்வழிப்பண். செய்ய; பாட. கான்மருவு: மணம் பொருந்திய. பொழில்: சோலை. மீன்கணங்கள்: நட்சத்திரக் கூட்டங்கள். பால்மதி: வெண்மையான சந்திரன். நான்மாடக்கூடல்: மதுரை நாயகன்: மன்னன்.

326 சிரநாலோன் பரவரிய, சமட்டிவிச்சா
புரநாதன், சீவன் முத்தி
புரநாதன், பூவுலக சிவலோகா
திபன்,கன்னி புரேசன், யார்க்கும்
வரநாளும் தருமூல இலிங்கமென
இவைமுதலா மாடக் கூடல்
அரன்நாமம் இன்னம்அளப் பிலஆகும்;
உலகுய்ய அவ்இ லிங்கம். 35

327 பாதாளம் ஏழ்உருவ முளைத்துஎழுந்தது,
அவ்இலிங்கப் படிவம் தன்னுள்,
ஆதார மாகஅமர்ந்து, அறுபத்து
நாலுவிளை யாடல் செய்த,
போதானந் தன்பெருமை, நம்குரவன்
மொழிப்படியே புகன்றேம் என்றான்;
வேதாதி கலைதெரிந்த மலையமுனி;
கேட்டுஅறவோர் வினுதல் செய்வார். 36

328 அருள்கடலே! இறைவிளையாட்டு அறுபத்து
நான்குஎன்றாய்; அவைஆ னந்தப்
பொருட்கடவுள் எக்காலத்து யாவர்பொருட்டு
ஆடினன்?எம் போதம் தேறித்
தெருள்படர வரன்முறையால் செப்புக!எனக்
கரம்குவித்தார்; தென்பால் வெற்பில்
இருப்பவனும், வினயபடிக்கு இறைநிரம்பத்
தொகுத்துவிரித்து இயம்பு கின்றான். 37

---

326 சிரநாலோன்: நான் முகனாகிய பிரமன். பரவ: துதிக்க. நாளும்: எப்போதும். வரம்தரு: வரம் தருகின்ற . மாடக்கூடல்: மதுரை. அளப்பில: அளவிறந்தன.

327 உருவ: ஊடுருவ. போதானந்தன்: அறிவும் களிப்பும் உடைய இறைவன். நம் குரவன்: நம் ஆசானாகிய முருகக்கடவுள். மலையமுனி: அகத்தியன். அறவோர்: முனிவர்.

328 ஆனந்தப் பொருட்கடவுள்: ஆலவாய் அண்ணல். தேறித் தெருள்படர: தெளிந்து விளக்கம் பெற. கரம் குவித்தார்: கை கூப்பி வணங்கினர். வெற்பில் இருப்பவன்: அகத்தியன். இறை: விடை.

## பதிகம்

329 வானவர்கோன் பழிதொலைத்த விளையாட்டும்,
கரிசாபம் மாய்த்த வாறும்,
மீனவர்கோன் காடுஎறிந்து புரம்கண்ட
பெருஞ்சிறப்பும், மீன நோக்கி
ஆனதடா தகை,அழல்வாய் அவதரித்துப்
பார்ஆண்ட அருளும், ஈசன்
தான்அவளை மணம்செய்து, முடிதரித்து
மண்காத்த தகைமைப் பாடும், 1

330 புலிமுனியும் பணிமுனியும் தொழவெள்ளி
மன்றுள் நடம் புரிந்த வாறும்,
வலிகெழுதோள் குண்டுஅகட்டுக் குறட்குஅன்னக்
குன்றுஅளித்த வகையும், பின்னும்
நலிபசிநோய் கெடஅன்னக் குழிஅழைத்துக்
கொடுத்து,நீர் நசைக்கு வைகை
அலைபுனல்கூய் அருத்தியதும், பொன்மலைக்கு
எழுகடலும் அழைத்த வாறும், 2

331 அந்தரர்கோன் ஆதனத்தில் உறை,மலயத்
துவசனைமீண்டு அழைத்த வாறும்,
சுந்தரஉக் கிரகுமரன் அவதரித்த
வாறும்,வளை சுடர்வேல் செண்டு
தந்தையிடத்து அவன்பெற்ற வாறும்,அவன்
அவ்வடிவேல் சலதி வீறு
சிந்தவிடுத் ததும்,மகவான் முடியைவளை
எறிந்துஇறைவன் சிதைத்த வாறும், 3

332 பொன்அசலம் தனைச்செண்டால் புடைத்துநிதி
எடுத்துதவும், புரிதர்க்கு ஈசன்
பன்அரிய மறைப்பொருளைப் பகர்ந்துதவும்,
மாணிக்கம் பகர்ந்த வாறும்,
தொல்நகர்மேல் நீர்க்கிழவன் வரவிடுத்த
கடல்சுவறத் தொலைத்த வாறும்,
அன்னதனித் தொல்மதுரை நான்மாடக்
கூடல்நகர் ஆன வாறும், 4

333 வட்டம்கொள் சடைஉடைய சித்தர்விளை
யாடியதோர் வனப்பும், கையில்
கட்டங்கம் தரித்தபிரான் கல்ஆனை
கரும்புஅருந்தக் காட்டு மாறும்,
உள்தங்கு வஞ்சனையால் அமணர்விடு
வாரணத்தை ஒழித்த வாறும்,
இட்டம்கொள் கௌரிமுனம் விருத்தன்இளை
யோன்குழவி ஆன வாறும், 5

334 செய்யதாள் மாறிநடம் ஆடியதும்,
பழிஅஞ்சு திறனும், தாயை
மையலால் புணர்ந்தமகன் பாதகத்தை
மாற்றியதும், மதியாது ஆசான்
தையலாள் தனைவிரும்பும் மாணவனை
வாள்அமரில் தடிந்த வாறும்,
பைஅரா எய்ததுவும், படிற்று அமணர்
விடுத்தபசுப் படுத்த வாறும், 6

335 அறஏற்றுப் பரிஉகைத்து மெய்க்காட்டுக்
கொடுத்தவினை யாட்டும், காட்டுச்
சுறவுஏற்றுக் கொடிஅரசன் தனக்குஉலவாக்
கிழிகொடுத்த தொடர்பும், நாய்கர்
நறவுஏற்ற மலர்க்குழலார் மனம்கவர்ந்து
வளைபகர்ந்த நலனும், மாறும்
மறவேல்கண் மாதரார்க்கு அட்டமா
சித்திபெற வகுத்த வாறும், 7

336 சென்னிபொருட்டு எயில்வாயில் திறந்துஅடைத்து
விடைபொறித்த செயலும், சென்னி
மன்இகல்இட்டு அமர்விளைப்ப மீனவற்கு
நீர்ப்பந்தர் வைத்த வாறும்,
பொன்அனையாள் பொருட்டுஇரத வாதவினை
முடித்ததுவும், புகார்க்கு வேந்தன்
தன்னைஅகன் குழிவீட்டித் தென்னவற்கு
மறவாகை தந்த வாறும், 8

337 மனக்கவலை கெடஉலவாக் கோட்டைஅடி
யாற்குஅளித்த வகையும், மாமன்
எனக்கருணை வடிவாகி வழக்குரைத்துப்
பொருள்வணிகற்கு ஈந்த வாறும்,
சினக்கதிர்வேல் வரகுணற்குச் சிவலோகம்
காட்டியதும், திவவுக் கோலான்
தனக்குஅடிமை எனவிறகு திருமுடிமேல்
சுமந்துபகை தணித்த வாறும், 9

338 அப்பாணற்கு இருநிதியம் சேரன்இடைத்
திருமுகம்ஈந்து அளித்த வாறும்,
அப்பாணன் பாடமழை அரைஇரவில்
பொன்பலகை அளித்த வாறும்,
அப்பாணன் மனைவியிசைப் பகைவெல்ல
அண்ணல்அவை அடைந்த வாறும்,
அப்பாணன் ஆள்என்றேன் முலைஅருத்திப்
பன்றிஉயிர் அளித்த வாறும், 10

339 வயஏனக் குருளைகளை மந்திரிகள்
ஆக்கியதும், வலிஉண் டாகக்
கயவாய்க்குக் குருமொழிவைத்து அருளியதும்,
நாரைக்குக் கருணை நாட்டம்
தயவால்வைத்து அருள்முத்தி நல்கியதும்,
கூடல்நகர் தன்னைச் சித்தர்
புயநாகம் போய்வளைந்து திருஆல
வாய்ஆக்கிப் போந்த வாறும், 11

340 சுந்தரன்என்று எழுதியகூர் அம்புஎய்து
செம்பியன்போர் தொலைத்த வாறும்,
செந்தமிழோர்க்கு இயற்பலகை அருளியதும்,
தருமிக்குச் செம்பொன் பாடித்
தந்ததுவும், மாறுபடு கீரற்குக்
கரைஏற்றம் தந்த வாறும்,
விந்தம்அடக் கியமுனியால் கீரன்இயல்
தமிழ்தெளிய விடுத்த வாறும், 12

341 ஊமனல் புலவர்இகல் அகற்றியதும்,
இடைக்காடன் உடன்போய்க் கொன்றைத்
தாமனார் வடஆல வாய்அமர்ந்த
பரிசும்,வலை சலதி வீசிப்
பூமன்ஆய் குழவியைவேட்டு அருளியதும்,
வாதஊர்ப் புனிதர்க்கு ஏறத்
தேமன்நாள் மலர்அடிகள் முடிசூட்டி
உபதேசம் செய்த வாறும், 13

342 நரிகள்பரி ஆக்கியதும், பரிகள்நரி
ஆக்கியதும், நாகம் பூண்டோன்
அரியதிரு மேனியின்மேல் அடிசுமந்து
மண்சுமந்த அருளும், தென்னன்
எரிஅடுவெம் சுரம்தணித்த வாறும்,அம
ணரைக்கழுவில் இட்ட வாறும்,
கரிஅதுஎன வன்னிகிணறு இலிங்கம்கூய்
வணிகமகள் காத்த வாறும், 14

343 எனத்தொகையால் அறுபத்து நான்கு,இவற்றை
நிறுத்தமுறை ஈறு இலாத
வினைத்தொகையாறு அகன்றீர்!எக் காலம்எவர்
பொருட்டுஎன நீர் வினவ ஆற்றல்,
மனத்துஅளவுஇல் அன்புமடை உடைந்துஒழுகத்
திருஆல வாயான் தாளை
நினைத்தஅளவில் ஆனந்தம் பெருகவிரித்து
உரைப்பல்என நெறியால் கூறும். 15

## 1. இந்திரன் பழிதீர்த்தது



பைஅரா அணிந்த வேணிப் பகவனே அனைய தங்கள்
ஐயனும், வியாழப் புத்தேள், ஆயிடை அடைந்தா னாக,
செய்யதாள் வழிபாடு இன்றித் தேவர்கோன் இருந்தான்; அந்தோ!
தையலார் மயலிற் பட்டோர் தமக்குஒரு மதிஉண் டாமோ? 347

## இந்திரன் பழிதீர்த்த படலம்

344 மின்பயில் குலிசப் புத்தேள் விருத்திரா சுரனைக் கொன்ற
வன்பழி விடாது பற்ற, கடம்பமா வனத்தில் எய்தி,
என்பு அரவு ஆரம் பூண்ட இறைவனை அருச்சித்து ஏத்தி,
பின்பு அது கழிந்து பெற்ற பேற்றினை எடுத்துச் சொல்வாம். 1

345 முன்னதாம் உகத்தில், வண்டு
மூசும்மந் தார நீழல்
பொன்அவிர் சுணங்குஉண் கொங்கைப்
புலோமசை மணாளன்; பொற்பூண்
மின்அவிர்ந்து இமைப்ப, சிங்கம்
சுமந்தமெல் அணைமேல் மேவி,
அன்னமென் நடையார் ஆடும்
ஆடல்மேல் ஆர்வம் வைத்தான். 2

346 மூவகை மலரும் பூத்து வண்டுளோ முழங்கத் தெய்வப்
பூ அலர் கொடியேர்ந் தன்ன பொன்அனார் கூத்தும், அன்னார்
நாஅலர் அமுதம் அன்ன பாடலும், நாக நாட்டுக்
காவலன், கண்டு கேட்டுக் களிமதுக் கடலுள் ஆழ்ந்தான். 3

347 பைஅரா அணிந்த வேணிப்
பகவனை அனைய தங்கள்
ஐயனும், வியாழப் புத்தேள்,
ஆயிடை அடைந்தா னாக,
செய்யதாள் வழிபாடு இன்றித்
தேவர்கோன் இருந்தான்; அந்தோ!
தையலார் மயலிற் பட்டோர்
தமக்குஒரு மதிஉண்டு ஆமோ?. 4

---

344. குலிசப்புத்தேள். இந்திரன். கடம்பமாவனம்: மதுரை. என்பு, அரவு, ஆரம்பூண்ட: எலும்பையும் பாமபையும் மாலையாக அணிநத. பேற்றினை: பயனை.

345. முன்னதாம் உகம்: கிரேதாயுகம். மூசும், மொய்க்கின்ற. சுணங்கு: தேமல். புலோமசை: இந்திராணி. மணாளன: கணவன்.

346. மூவகை மலா: கோட்டுப் பூ, கொடிப் பூ, நிலப் பூ. தெய்வப்பூ: தாமரை. கூத்து: ஆடல. நாகநாட்டுக் காவலன். தேவேந்திரன்.

347. பை: படம். அரா: பாம்பு வேணிப்பகவன்' சடையையுடைய சிவபெருமான். அனைய: ஒத்த. ஐயனும் குருவாம். வியாழப்புததேள வியாழதேவன் ஆயிடை : ஆங்கு. தையலார்; மகளிா. மயலில்; மயக்கததில. ஒருமதி; நலலறிவு.

348 ஒல்எனக் குரவன் ஏக, உம்பர்கோன் திருவின் ஆக்கம்
புல்லெனச் சிறிது குன்ற, புரந்தரன் அறிந்து, இக்கேடு
நல்லதொல் குரவற் பேணு நவையினுல் விளைந்தது என்ஞு,
அல்லல்உற்று, அறிவன் தன்னைத் தேடுவான் ஆயினுனே. 5

349 அங்குஅவன் இருக்கை புக்கான்; கண்டிலன்; அவித்த பாசப்
புங்கவர் உலகும் ஏனோர் பதவியும் புவனம் மூன்றில்
எங்கணும் துருவிக் காணுன்; எங்குற்றுன் குரவன் என்னும்
சங்கைகொள் மனத்தன் ஆகி, சதுர்முகன் இருக்கை சார்ந்தான். 6

350 துருவினன்; அங்கும் காணுன்; திசைமுகற் தொழுது, தாழ்ந்து,
பரவி,முன் பட்ட எல்லாம் பகர்ந்தனன்; பகரக் கேட்டுக்
குரவனை இகழ்ந்த பாவம் கொழுந்துபட்டு அருந்தும் செவ்வி
வருவது நோக்கிச் சூழ்ந்து, மலர்மகன் இதனைச் சொன்னுன். 7

351 அனையதொல் குரவற் காணும் அளவும்நீ, துவட்டா ஈன்ற
தனையன்,முச் சென்னி உள்ளான், தானவர் குலத்தில் வந்தும்
வினையினுல் அறிவால் மேலான், விச்சுவ உருவன் என்னும்
இனையனைக் குருவாக் கோடி, என்னலும், அதற்கு நேர்ந்தான். 8

352 அழல்அவிர்ந்து அனைய செங்கேழ் அடுக்குஇதழ் முளரிவாழ்க்கைத்
தொழுதகு செம்மல் தன்னைத் தொழுதுமீண்டு அகன்று நீங்கா,
விழைதகு காதல் கூர, விச்சுவ வுருவன் தன்னை
வழிபடு குருவாக் கொண்டான்; மலர்மகன் சூழ்ச்சி தேருன். 9

353 கைதவக் குரவன் மாயம் கருதிலன், வேள்வி ஒன்று
செய்திடல் அடிகள் என்ன, தேவர்கட்கு ஆக்கம் கூறி
வெய்தழல் வளர்ப்பான், உள்ளம் வேறுபட்டு,அவுணர்க்கெல்லாம்
உய்திறம் நினைந்துவேட்டான்; தனக்குமேல் உறுவது ஓரான். 10

---

348. ஒல்என: விரைந்து. குரவன்: வியாழ பகவான். உம்பர் கோனும் புரந்தரனும்: இந்திரன். குரவற்பேணு: ஆசிரியனைப் போற்ருத. நவை: குற்றம். அல்லல்: வருத்தம். அறிவன்: குரவன்.

349. அவித்த பாசப் புங்கவர்; பாசத்தை நீத்த முனிவரர்கள். சங்கை: ஐயம். சதுர்முகன் இருக்கை: சத்தியலோகம்.

350. துருவினன்: தேடினுன். மலர்மகன்: பிரமன்.

351. துவட்டா ஈன்ற தனையன்: ஓர் அரக்கன். வினை: தொழில். கோடி: கொள்வாயாக. நேர்ந்தான்: உடன்பட்டான்.

352. செங்கேழ்: செந்நிறம். முளரி வாழ்க்கைச் செம்மல்: பிரமன். நீங்கா: நீங்கி. காதல்: அன்பு. சூழ்ச்சி தேருன். கபடத்தை அறியமாட்டான்.

353. கைதவக்குரவன்: வஞ்சக ஆசான். ஆக்கம்; செழிப்பு. அவுணர்: அசுரர். உய்திறம்: ஆக்கம். ஓரான்: உணரமாட்டான்.

354 வாக்கினுல் மனத்தால் வேருய் மகம் செய்வான் செயலை யாக்கை
நோக்கினுன், ஓதி தன்னுல் நோக்கினுன்: குலிச வேலால்
தாக்கினுன்; தலைகண் மூன்றும் தனித்தனி பறவை யாகப்
போக்கினுன்: அலகை வாயில் புகட்டினுன்; புலவுச் சோரி. 11

355 தெற்றெனப் பிரம பாவம்
சீறிவந்து அமரர் வேந்தைப்
பற்றலும், அதனைத் தீர்ப்பான்,
பண்ணவர் மரம்மேல் மண்மேல்
பொற்றொடி யார்மேல் நீர்மேல்
வேண்டினர்; புகுத்த லோடும்
மற்றவர் இஃதுயாம் தீர்க்கும்
வண்ணம்யாது? என்ன, விண்ணோர், 12

356 அப்புஇடை நுரையாய், மண்ணில்
அருவருப்பு உவராய், அம்பொன்
செப்புஇளம் கொங்கை யார்பால்
தீண்டுதற்கு அரிய பூப்பாய்,
கப்புஇணர் மரத்தில் காலும்
பயினதாய், கழிக என்றார்;
இப்பழி சுமந்த எங்கட்கு
என்னலம் என்றார்; பின்னும், 13

357 கருவின் மாதர் கருவுயிர்க்கும் அளவும் முறையால் கணவர்தோள்
மருவி வாழ்க; மண் அகழ்ந்த குழியும் அதனுல் வடுவொழிக;
பொருவில் நீரும் இறைதோறும் ஊறிப் பொலிக; மரம்குறைபட்டு
ஒருவி னுலும் தழைக; என ஒழியா நலனும் உதவினர். 14

---

354. வாக்கினுல் மனத்தால் வேருய்: மொழியும் உள்ளமும் வேறுபட்டு. யாக்கை நோக்கினுன்: உடம்பெல்லாம் கண்ணுக உடைய இந்திரன். ஓதி: அறிவுக்கண். நோக்கினுன்: கண்டான். குலிசவேல்: வச்சிரப்படை. அலகை: பேய். புலவுச்சோரி: ஊனும் குருதியும்.

355. இப்பாடல் குளகம். தெற்றென: விரைந்து. பிரம பாவம்: பிரமக் கொலைப்பாவம். பற்றலும்: பிடித்துக்கொள்ளவும். அதனைத் தீர்ப்பான்: அதை நீக்கும் பொருட்டு. பண்ணவர்: தேவர். பொற்றொடி: பெண். வேண்டினர்: விரும்பினர். புகுத்தலோடும்: செலுத்தியவுடன். மற்றவர்: அந்நால்வர் (மரம் முதலிய நால்வர்). வண்ணம்: வகை. விண்ணோர்: அமரர்.

356. (இப்பாடலும் குளகம்). அப்பு: நீர். உவர்: உவர்மண். தீண்டுதற்கு அரிய பூப்பு: தொடத்தகாத விலக்கு. கப்பு: கிளை. காலும் பயின்: கக்குகின்ற பிசின். கழிக: வெளிப்படுக.

357. கருவின் மாதர்: கருவுற்ற பெண்கள். அகழ்ந்த குழி: தோண்டிய பள்ளம். குறைபட்டு: வெட்டுண்டு. ஒருவினுல்: வளம் குன்றினுல்.

358 மாசிற் கழிந்த மணியேபோல்
வந்த பழிதீர்ந்து இந்திரனும்
தேசில் திகழ, துவட்டா,தன்
செல்வன் தன்னைத் தேவர்பிரான்
வீசிக் குலிசத்து உயிருண்ட
விழுமம் கேட்டு, வெகுண்டு,உயிர்த்து,
கூசி, பழிகோள் கருதி,யொரு
கொடிய வேள்வி கடிதுஅமைத்தான். 15

359 அந்தக் குண்டத்து, எரிசிகைபோல்
அழலும் குஞ்சி அண்டமுகடு
உந்த, கொடிய தூமம்போல்
உயிர்த்து, செங்கண் சினச்செந்தீச்
சிந்த, பிறைவாள் எயிறு அதுக்கி,
திசைவான் செவிடு படநகைத்து,
வந்தஅக் கொடிய விடம்போல
எழுந்தான், ஒருவாள் மறவீரன். 16

360 ஈங்குஇவன் விருத்திரன் என்ப; ஆர்அழல்
தூங்குவன் கணைவிடு தூரம் நீண்டுநீண்டு
ஓங்குவன்; ஓங்குதற்கு ஒப்ப வைகலும்
வீங்குவன், அறன்இலார் வினையின் என்பவே. 17

361 வீங்குஉடல் விருத்திரன் தன்னை, விண்ணவர்
ஏங்குற வருதுவட்டா எனும் பெயர்த்
தீங்குஉறு மனத்தினேன்,தேவர் கோன்உயிர்
வாங்குதி பொருதுஎன வரவிட் டான்அரோ. 18

---

358. தேசில்திகழ: ஒளியோடு விளங்க. துவட்டா: விச்சுவ வுருவனின் தந்தை. விழுமம்: துன்பம். பழிகோள் கருதி: பழிவாங்க எண்ணி.

359. எரிசிகை: எரிகின்ற நெருப்பு. குஞ்சி: குடுமி. தூமம்: புகை எயிறுஅதுக்கி: பற்களைக் கடித்து. திசைவான் செவிடுபட: திக்கும் வானும் நடுங்க.

360. அறன் இலார் வினையின் என்பவே: அறவினை இல்லார் பாபம் போல என்று கூறுவர்.

361. ஏங்குற: வருந்த. தீங்குஉறு மனத்தினேன்: துவட்டா என்பவன், பொருது: போர்செய்து.

362 மதித்துணி எயிற்றினேன், வடவை போல்சினை இ,
கொதித்துஎதிர் குறுகினன்; கொண்டல் ஊர்தியும்
எதிர்த்தனன், களிற்றின்மேல் இமயத்து உச்சிமேல்
உதித்ததோர் கருங்கதிர் ஒக்கும் என்னவே. 19

363 அறத்தொடு பாவம்நேர்ந்து என்ன ஆர்த்துஇரு
திறத்தரும் மூண்டுஅமர் செய்ய, கல்சிறை
குறைத்தவன் தகுவன்மேல் குலிச வேல்எடுத்து
உறைத்திட வீசினன்; உடன்று கள்வனும், 20

364 இடித்தனன், கையில்ஓர் இருப்பு உலக்கையைப்
பிடித்தனன், வரையெனப் பெயர்ந்து தீயெனத்
துடித்தனன், சசிமுலைச் சுவடு தோய்புயத்து
அடித்தனன், இந்திரன் அவசம் ஆயினன். 21

365 அண்டர் ஏறுஅனையவன் அவசம் ஆறிப்பின்
கண்டகன் கைதவம் நினைந்து, இக்கள்வன்நேர்
மண்டுஅமர் ஆற்றுவான் வலி யிலோம்,என,
புண்டரீ கத்தவன் உலகிற் போயினன். 22

366 தாழ்ந்துதான் படுதுயர் சாற்ற, தாமரை
வாழ்ந்தவன், வலாரியோடு அணைந்து,மாமகள்
வீழ்ந்தமார் பினன்அடி வீழ்ந்து செப்ப,மால்
சூழ்ந்துவான் நாடனை நோக்கிச் சொல்லுவான். 23

367 ஆற்றவும் பழையதுஉன் அங்கை வச்சிரம்,
மாற்றவர் உயிர்உண வலியின்று, ஆதலால்
வேற்றொரு புதியது வேண்டு மால்;இனிச்
சாற்றுதும் அதுபெரும் தகைமை கேட்டியால். 24

---

362 மதித்துணி: பிறைச்சந்திரன். எயிறு: பல். வடவை: வடவைத்தீ. சினைஇ: கோபித்து. கொண்டல் ஊர்தி: மேகவாகனனாகிய இந்திரன். களிற்றின்மேல்: வெள்ளை யானை மீது. கருங்கதிர்: கரிய சூரியன்.

363. (இப்பாடல் குளகம்). ஆர்த்து: ஆரவாரித்து. கல்சிறை குறைத்தவன்: மலைகளின் இறகுகளை வெட்டிய இந்திரன். தகுவன்மேல்: விருத்திராசுரன் மீது. கள்வன் விருத்திரா சுரன்.

364. சசி: இந்திராணி. அவசம் ஆயினன்: மூர்ச்சித்தான்.

365. அண்டர் ஏறு அனையவன்: இந்திரன் கண்டகன் கைதவம். கொடியவனது வஞ்சகம். புண்டரீகத்தவன் உலகு: சத்தியலோகம்.

366. தாமரை வாழ்ந்தவன்: பிரமன், வலாரியோடு அணைந்து: இந்திரனோடும் சென்று. மாமகள் வீழ்ந்த மார்பினன்: திருமால். சூழ்ந்து: ஆராய்ந்து.

367. ஆற்றவும்: மிகவும். மாற்றவர்: பகைவர். தகைமை. தன்மை.

368 தொடைஅகல் மார்ப! நாம் தூய பாற்கடல்
கடையும்நாள், அசுரரும் சுரரும் கையில்வெம்
படையொடும் அடையன்மின்! பழுதென்று அப்படை
அடையவும் ததீசிபால் அடைவித் தார்அரோ. 25

369 சேட்படு நாள்நனி செல்ல, தேவரா,
வாட்படை அவுணரா, வந்து கேட்டிலர்;
ஞாட்புஅடை படையெலாம் ஞான நோக்கினால்
வேள்படை வென்றவன் விழுங்கி னான்அரோ. 26

370 விழுங்கிய படையெலாம் வேறுஅறத் திரண்டு
ஒழுங்கிய தால்முது கந்தண்டு ஒன்றியே;
எழுங்கதிர்க் குலிசமாம் அதனை எய்துமுன்
வழங்குவன், கருணையோர் வடிவம் ஆயினான். 27

371 என்று மாதவன் இயம்ப, உம்பர்கோன்
ஒன்றும் வானவர் தம்மொடு ஒல்லெனச்
சென்று, மாயையின் செயலை நோன்பினால்
வென்ற மாதவன் இருக்கை மேவினான். 28

372 அகம்மலர்ந்து அருந்தவன், அமரர்க்கு அன்புகூர்
முகம்மலர்ந்து இன்னுரை முகமன் கூறி,நீர்
மிகமெலிந்து எய்தினீர்! விளைந்தது யாது?அது
தகமொழிந் திடல்என, வலாரி சாற்றுவான். 29

373 அடிகள்!நீர் மருதது ஒன்று அதனை வேண்டி,இம்
முடிகொள் வானவரொடு முந்தி னேன்,அது
செடிகொள்கார் இருள்உடல் அவுணர்த் தேய்த்துஎமர்
குடியெலாம் புரப்பதோர் கொள்கைத்து ஆயது. 30

---

368. அடையன்மின்: வாராதீர்கள். அடையவும்: முழுதையும். ததீசிபால்: ததீசி முனிவர் இடத்து.

369. சேட்படுநாள்: நீண்டநாள். தேவரா: தேவராதல். அவுணரா: அசுரராதல். ஞாட்பு: போர். வேள்படை வென்றவன்: மன்மதன் அம்புகளை வென்ற ததீசி முனிவன்.

370. வேறுஅற: வேறுவேறாக இல்லாமல். ஒழுங்கியது: ஒழுங்குபட்டது. ஒன்றி: பொருந்தி. எய்துமுன்: நீ சென்று அடைவதற்குமுன். கருணையோர் வடிவம் ஆயினான்: ததீசி முனிவன்.

371. மாதவன்: திருமால். ஒல்லெனா: விரைந்து. வென்ற மாதவன்: ததீசி முனிவன்.

372. அருந்தவன்: ததீசி. மொழிந்திடல்: மொழியுங்கள். வலாரி: இந்திரன்.

373. மருதது ஒன்று: மருது அளிப்பதாகிய ஒன்று செடி கொள்கார் இருள்உடல் அவுணர்: முடைநாற்றம் வீசுகின்ற கரிய இருள்போன்ற உடலை உடை அசுரர். புரப்பது: காப்பது.

374 யாதுஎனின் இனையதுஉன் யாக்கை உள்ளதுஎன்று
ஓதலும், யாவையும் உணர்ந்த மாதவன்,
ஆதவற் கண்டதா மரையின், ஆனனப்
போதுஅலர்ந்து, இன்னன புகல்வது ஆயினன். 31

375 நாய்நமது என,நரி நமது என,பிதா
தாய்நமது என,நமன் தனதுஎன,பிணி
பேய்நமது என,மனம் மதிக்கும் பெற்றிபோல்
ஆய்நமது எனப்படும் யாக்கை யாரதே? 32

376 விடம்பயில் எயிற்றுஅரவு உரியும், வீநுழை
குடம்பையும் தான்எனும் கொள்கைத் தேகொலாம்,
நடம்பயில் கூத்தரின் நடிக்கும் ஐவர்வாழ்
உடம்பையும் யானென உரைக்கற் பாலதோ. 33

377 நடுத்தயா இலார்தமை நலிய, துன்பநோய்
அடுத்தயா வரும்திரு அடைய, யாக்கையைக்
கொடுத்து,அயா! அறம்புகழ் கொள்வனேயெனில்,
எடுத்தயாக் கையின் பயன் இதனின் யாவதே. 34

378 என்றனன்; கரணம் ஒன்றி எழுகருத்து அறிவை ஈர்ப்ப
நின்றனன்; பிரம நாடி நெறிகொடு கபாலம் கீண்டு
சென்றனன்; விமானம் ஏறிச் சேர்ந்தனன்; உலகை நோன்பால்
வென்றவன், துறக்கம் புக்கு வீற்றுஇனிது இருந்தான் அம்மா. 35

379 அம்முனி வள்ளல் ஈந்த அடுபடை முதுகந் தண்டை,
தெம்முனை அடுபோர் சாய்க்கும் திறல்கெழு குலிசம் செய்து,
கம்மியப் புலவன் ஆக்கம் கரைந்துகைக் கொடுப்ப, வாங்கி,
மைம்முகில் ஊர்தி ஏந்தி, மின்விடு மழைபோல் நின்றான். 36

---

374. உன்யாக்கை உள்ளது: உன் உடம்பினுள் இருக்கின்றது. ஆனனப்போது: முகமாகிய தாமரை. இன்னன: பின்வருமாறு.

375. பிதா: தகப்பன். நமன்: எமன். பெற்றி: தன்மை. யாக்கை: உடம்பு. (தேவேந்திரன் விருத்திராசுரனைக் கொல்லத் ததீசி முனிவர் தமது முதுகெலும்பையே நல்கி யாக்கை நிலையாமையை அவனுக்கு எடுத்துரைத்தார்).

376. உரி: தோல். வீ: பறவை. குடம்பை: கூடு. ஐவர்: ஐம்பொறி. உரைக்கற்பாலதோ: சொல்லும் தகுதி உடையதோ.

377. நடுத்தயா: நடுநிலைமையும் கருணையும். அடுத்த யாவரும்: அடைந்த எல்லோரும். யாக்கையைக் கொடுத்து: என் உடம்பை அளித்து. அயா: அய்யா என்பதன் மரூஉ.

378. எழுகருத்து: தோன்றுகின்ற எண்ணங்கள். பிரமநாடி நெறி: சுழுமுனை நாடியின் வழி. கபாலம் கீண்டு: தலை கீறி. உலகை நோன்பால் வென்றவன்: உலக மாயையைத் தவத்தால் வென்ற ததீசி முனிவன். துறக்கம்: சிவலோகம்.

379. அம்முனி வள்ளல்: அந்த ததீசி முனிவனாகிய வள்ளல். தெ: பகைவர். கம்மியப் புலவன்: தேவதச்சன். ஆக்கம் கரைந்து: வாழ்த்துச்சொல்லி,

380 மறுத்தவா வஞ்சப் போரால்
வஞ்சித்து வென்று போன
கறுத்தவாள் அவுணற் கொல்வான்,
கடும்பரி, நெடுந்தேர், நீழல்
வெறுத்தமால் யானை, மள்ளர்
வேலைபுக்கு எழுந்து, குன்றம்
அறுத்த வானவர்கோன், அந்த
அவுணர் கோமகனைச் சூழ்ந்தான். 37

381 வானவர் சேனை மூண்டு வளைத்தலும், வடவைச் செந்தீ
ஆனது வரையின் ஓங்கி அழன்றுஉருத்து எழுந்தால் என்ன,
தானவர் கோனும் மானம் தலைக்கொள எழுந்து பொங்கிச்
சேனையும் தானும் மூண்டு சீறிநின்று அடுபோர் செய்வான். 38

382 அடுத்தனர்; இடியேறு என்ன ஆர்த்தனர்; ஆக்கம் கூறி
எடுத்தனர்; கையில் சாபம் எறிந்தனர்; சிறுநாண் ஓசை
தொடுத்தனர்; மீளி வாளி தூர்த்தனர்; குந்தம்நேமி
விடுத்தனர்; வானோர் சேனை வீரர்மேல் அவுண வீரர். 39

383 கிட்டினர்; கடகக் கையால் கிளர்வரை அனைய திண்தோள்
கொட்டினர், சாரி மாறிக் குதித்தனர்; பலகை நீட்டி
முட்டினர்; அண்டம் விள்ள முழங்கினர்; வடிவாள் ஓச்சி
வெட்டினர் அவுணச் சேனை வீரரை வான வீரர். 40

384 வீழ்ந்தனர் தோளும் தாளும், விண்டனர் சோரி, வெள்ளத்து
ஆழ்ந்தனர், போரும் தாரும் அகன்றனர், அகன்ற மார்பம்
போழ்ந்தனர், சிரங்கள் எங்கும் புரண்டனர், கூற்றூர் புக்கு
வாழ்ந்தனர், அடுபோர் ஆற்றி வஞ்சகன் சேனை மள்ளர். 41

385 தாளொடு கழலும் அற்றார், தலையொடு முடியும் அற்றார்,
தோளொடு வீரம் அற்றார், தும்பையோடு அமரும் அற்றார்,
வாளொடு கரமும் அற்றார், மார்பொடு கவசம் அற்றார்,
கோளொடும் ஆண்மை அற்றார், குறைபடக் குறையா மெய்யர். 42

---

380. மறுத்தவா: குற்றத்தின் நீங்காத. கறுத்தவாள் அவுணன்: விருத்திராசுரன். கடும்பரி: விரைந்த குதிரை. நெடுந்தேர்: நீண்ட தேர். நீழல் வெறுத்த மால் யானை: தன் நிழலையே கோபிக்கின்ற பெரிய யானை. மள்ளர்: காலாட்படை. வேலை: சேனைக்கடல்.

381. வரையின் ஓங்கி: மலைபோல் வளர்ந்து. தானவர்கோன்: அசுரர் தலைவன்

382. அடுத்தனர்: நெருங்கினார்கள். ஆக்கம்: வஞ்சினம். சாபம்: வில். மீளிவாளி: வலிய அம்பு. குந்தம்: கைவேல்.

383. சாரிமாறி: வலம் இடம் மாறி. பலகை: கேடகம். அண்டம் விள்ள: அண்டமுகடு பிளக்க

384. விண்டனர் சோரி: குருதியைக் கொட்டினார்கள். வெள்ளத்து ஆழ்ந்தனர்: அக் குருதி வெள்ளத்து அமிழ்ந்தனர்.

385. தும்பை: போர்கருதி அணியும் தும்பை மாலை, கோள்; வலிமை. குறையா மெய்யர்; தேவ வீரர்கள்.

386 தொக்கன கழுகு சேனம், சொரிகுடர் பிடுங்கி ஈர்ப்ப,
உக்கன குருதி மாந்தி ஒட்டல்வாய் நெட்டைப் பேய்கள்
நக்கன பாடல் செய்ய, ஞாட்பினுள் கவந்தம் ஆடப்
புக்கன பிணத்தின் குன்றம் புதைத்தபார் சிதைத்தது அண்டம்.

387 இவ்வகை மயங்கிப் போர்செய்து
இறந்தவர் ஒழிய, பின்னும்
கைவ்வகை அடுபோர் ஆற்றிக்
கரையிறந் தார்கள் மாண்டார்;
அவ்வகை அறிந்து, வானத்து
அரசனும் அவுணர் வேந்தும்
தெய்வதப் படைகள் வீசி,
சீறிநின்று அடுபோர் செய்வார். 44

388 அனற்படை விடுத்தான் விண்ணோர்
ஆண்டகை; அதனைக் கள்வன்
புனற்படை விடுத்துச் சீற்றம்
தணித்தனன்; புனிதன் காற்றின்
முனைப்படை விடுத்தான்; வெய்யோன்
முழுங்குகால் விழுங்கும் நாகச்
சினப்படை தொடுத்து வீசி
விலக்கினன், தேவர் அஞ்ச. 45

389 நாகமாப் படைபட்டு ஆர்த்தான்
நாகர்கோன்; உவணச் செல்வன்
வேகமாப் படையை வீசி
விலக்கினன் தருவர் வேந்தன்;
மோகமாப் படையைத் தொட்டு
முடுக்கினன் முனைவன்; அன்னது
ஏகமாப் படிறன் ஞானப்
படைவிடுத்து இருள்போல் நின்றான். 46

---

386. சேனம்: பருந்து. ஈர்ப்ப: இழுக்க. உக்கன குருதி மாந்தி: சிந்திய ரத்தத்தைக் குடித்து. ஒட்டல்வாய்: ஒட்டிய வாய். நக்கன பாடல் செய்ய: சிரித்துக்கொண்டு பாட. ஞாட்பு: போர்க்களம். கவந்தம்: தலையற்ற உடல்.

387. கைவ்வகை: கைத்திறத்தைக் காட்டி. கரையிறந்தார்: எண்ணற்றார்.

388. அனற்படை: தீக்கணை. விண்ணோர் ஆண்டகை: தேவேந்திரன். கள்வன்: விருத்திரன். புனற்படை: நீர்க்கணை புனிதன்: இந்திரன். வெய்யோன்: விருத்திரன். கால்: காற்று. நாகச் சினப்படை: கோபம்கொண்ட பாம்புக்கணை.

389. நாகமாப்படை: பெரிய பாம்புக்கணை. நாகர்கோன்: இந்திரன். உவணச் செல்வன்: கருடன். தருவர் வேந்தன்: அசுரர் தலைவன். மோகமாப்படை: பெரிய மோக அம்பு. முனைவன்: இந்திரன். மாப்படிறன்: பெரிய வஞ்சகன். ஞானப்படை: அறிவுக் கணை,

390 மட்டுஇடு தாரான் விட்ட வானவப் படைக்கு மாறு
விட்டுஉடன் விலக்கி, வேறும் விடுத்துஇட, கனன்று வஞ்சன்
முட்டிட, மான வெம்கால் மூட்டிடக் கோபச் செந்தீச்
சுட்டிடப் பொருது பொங்கி, சுராதிபன் இதனைச் செய்தான். 47

391 வீங்குஇருள் ஒதுங்க, மேகம் மின்விதிர்த் தென்ன, கையில்
ஓங்குஇருங் குலிச வேலை, ஒல்லென விதிர்த்த லோடும்,
தீங்குஉளம் போன்று இருண்ட திணியுடல் கள்வன், அஞ்சி,
வாங்குஇருங் கடலில் வீழ்ந்தான்; மறைந்த மைநாகம் ஒத்தான். 48

392 ஒக்கஇந் திரனும் வீழ்ந்தான்; உடல்சின உரும்ஏறு அன்னான்,
புக்கிடம் தேடிக் காணான்; புண்ணிய முளரி அண்ணல்
பக்கம்வந்து, அனைய செய்தி பகர்ந்தனன்; பதகன் மாளத்
தக்கதோர் சூழ்ச்சி முன்னி, சராசரம் ஈன்ற தாதை, 49

393 விந்தவெற்பு அடக்கி னாற்கு ஈதுரையென விடுப்ப, மீண்டு
சந்தவெற்பு அடைந்தான்; வானோர் தலைவனை முகமன் கூறி,
பந்தவெற்பு அறுத்தான் வந்தது எவனென, பறைகள் எல்லாம்
சிந்தவெற்பு அறுத்தான், வந்த செயலெலாம் முறையால்செப்பி, 50

394 யாவையும் உணர்ந்த எந்தைக்கு
யானெடுத்து உணர்த்து கின்றது
ஆவதென்? அமருக்கு ஆற்றாது
ஆழிபுக்கு ஒளித்தான் ஆவி
வீவதும், அவனால் வந்த
விழுமநோய் எல்லாம் இன்று
போவதும் கருதி, நும்பால்
புகுந்தனம் அடிகள்! என்றான். 51

---

390. மட்டுஇடு தாரான்: இந்திரன். கனன்று: சினந்து. வஞ்சன் முட்டிட: விருத்திரன் நெருங்க. மான வெம்கால்: மானமாகிய கொடுங்காற்று. சுராதிபன்: இந்திரன். இதனை: பின்வரும் செயலை.

391. குலிசவேல்: வச்சிராயுதம். விதிர்த்தலோடும்: அசைத்தவுடன். வாங்கு இருங் கடல்: வளைந்த பெரிய கடல்.

392. இப்பாடல் குளகம். ஒக்க: கூட. முளரிஅண்ணல்: பிரமன். பதகன்: விருத்திராசுரன். முன்னி: நினைந்து. சராசரம் ஈன்ற தாதை: உலகத்தைப் பெற்ற பிரமன்.

393. இப்பாடலும் குளகம். விந்தவெற்பு அடக்கினாற்கு: விந்தமலையை அடக்கிய அகத்தியனுக்கு சந்தவெற்பு: சந்தன மரங்கள் நெருங்கிய பொதிகை மலை. பந்த வெற்பு அறுத்தான். பாச பந்தமாகிய மலையைத் தொலைத்தவன். பறைகள் எல்லாம் சிந்த வெற்பு அறுத்தான்: மலைகளின் சிறகுகள் எல்வாம் ஒழிய அறுத்த இந்திரன்.

394. ஆவி வீவதும்: உயிர் அழிவதும்.

395 என்றவன் இடுக்கண் தீர்ப்பான்
இகல்புரி புலன்கள் ஐந்தும்
வென்றவன் நெடியோன் தன்னை
விடையவன் வடிவம் ஆக்கி
நின்றவன் அறிவான் அந்த
மெய்ம்மையாய் நிறைந்த வெள்ளி
மன்றவன் ஊழிச் செந்தீ
வடிவினை மனத்துள் கொண்டான். 52

396 கைதவன் கரந்து வைகும்
கடலைவெற்பு அடக்கும் கையில்
பெய்து,உழுந்து எல்லைத்து ஆக்கிப்
பருகினன்; பிறைசேர் சென்னி
ஐயனது அருளைப் பெற்றார்க்கு
அதிசயம் இதுஎன்கொல்! மூன்று
வையமுத் தொழிலும் செய்ய
வல்லவர் அவரே யன்றே. 53

397 அறம்துறந்து ஈட்டுவார்தம் அருப்பெறல் செல்வம் போல
வறந்தன படுநீர்ப் பௌவம்; வடவைகண் புலப்பட் டாங்கு,
நிறைந்தசெம் மணியும் அத்தீ நீண்டுஎரி சிகைபோல் நீண்டு
சிறந்துஎழு பவளக் காடும் திணியிருள் விழுங்கிற்று அம்மா. 54

398 பணிகளின் மகுட கோடிப் பரப்பென விளங்கி, பல்காசு
அணிகலப் பேழை பேழ்வாய் திறந்தனைத்து ஆகி, ஒன்பான்
மணிகிடந்து இமைக்கும் நீரால், மகபதி வேள்விக்கு ஆவாய்,
திணியுடல் அவுணன் பட்ட செங்களம் அனையது அன்றே. 55

---

395. என்றவன்: இந்திரன். வென்றவன்: அகத்தியன். நெடியோன்: திருமால். விடையவன்: சிவபிரான். நின்றவன்: அகத்தியன். வெள்ளி மன்றவன்: வெள்ளியம்ப வாணன்.

396. கைதவன்: விருத்திரன். கரந்து: மறைந்து. உழுந்து எல்லைத்து ஆக்கி: உழுந்தின் அளவினதாகச் செய்து. பருகினன்: குடித்தான். (பாடலின் பிற்பகுதி வேற்றுப்பொருள்: வைப்பு அணி).

397. பௌவம்: கடல். வடவை கண் புலப்பட் டாங்கு: வடவைத் தீ கண்ணுக்குத் தோன்றியதுபோல. சிகை: கொழுந்து. திணிஇருள்: பேரிருள்.

398. பணி: பாம்பு. பேழை: பெட்டி. பேழ்வாய்: பெரிய வாய். நீரால்: தன்மையால்; மகபதி: இந்திரன். ஆவாய்: பசுவாகி,

399 வறந்தநீர் தன்னில் மின்னும் வாள்விதிர்த் தென்னப் பன்மீன்
எறிந்தன; நெளிந்த நாகம்; இமைத்தன வளையும் முத்தும்;
செறிந்தன கரந்த யாமை; சேர்ந்தபல் பண்டம் சிந்தி
முறிந்தன வங்கம்; கங்கம் முக்கின சிறுமீன் எல்லாம். 56

400 செருவினில் உடைந்து போன
செங்கண்வாள் அவுணன், அங்கோர்
அருவரை முதுகில், கார்போல்
அடைந்து,வான் நாடர் செய்த
உருகெழு பாவம் தானோர்
உருவெடுத்து இருந்து நோற்கும்
பரிசுஎன நோற்ருன்; இன்னும்
பரிபவ விளைவு பாரான். 57

401 கைதவ நோன்பு நோற்கும் கள்வனைக் கண்டு, வானோர்
செய்தவம் அனையான், யாணர் வச்சிரம் சீரிப் பான்போல்,
பொய்தவன் தலையைக் கொய்தான்; புணரிவாய் நிறையச் சோரி
பெய்தது; வலாரி தன்னைப் பிடித்தது பிரமச் சாயை. 58

402 உம்எனும், மார்பைத் தட்டும்,
உருத்துஎழும், அதிர்க்கும், போர்க்கு
வம்மெனும், வாய்ம டிக்கும்,
வாள்எயிறு அதுக்கும், வீழும்,
கொம்மென ஓடும், மீளும்,
கொதித்துஅழும், சிரிக்கும், சீறும்,
இம்எனும் அளவும் நீங்காது!
என்செய்வான் அஞ்சி ஞனே. 59

---

399. வறந்த நீர் தன்னில்: நீர் வற்றிய இடத்தில். விதிர்த்தென்ன: அசைத்ததைப் போல. பன்மீன் எறிந்தன: பல மீன்கள் துள்ளின. நெளிந்த நாகம்: பாம்புகள் அசைந்தன. இமைத்தன: ஒளிவிட்டன. கரந்த: ஒளித்தன. வங்கம்: கப்பல். கங்கம்: பருந்து. முக்கின: விழுங்கின.

400. செரு: போர். அவுணன்: விருத்திரன். முதுகில்: உச்சியில். கார்: மேகம். உருகெழு பாவம்: அஞ்சத்தக்க பாவம். நோற்கும் பரிசு: தவம்செய்யும் தன்மை. பரிபவ விளைவு: துன்பத்தின் வரவு.

401. கைதவ நோன்பு: வஞ்சகத் தவம். கள்வன்: விருத்திரன். வானோர் செய்தவம் அனையான்: இந்திரன். யாணர் வச்சிரம்: புதிய வச்சிரப்படை. சீரிப்பான்போல்: பதம் பார்ப்பவனைப் போல பொய்தவன்: விருத்திரன். புணரி: கடல். சோரி: குருதி. வலாரி: இந்திரன். பிரமச் சாயை: கொலைப் பாவம்.

402. வம்எனும்: வாருங்கள் எனும். எயிறு அதுக்கும்: பல்லைக் கடிப்பான்,

403 விரைந்துஅரன் திசைஓர் வாவி வீழ்ந்துஒரு கமல நூலுள்
கரந்தனன் மகவான், இப்பால்; கற்பக நாடு புல்லென்று
இருந்ததால், இருக்கும் எல்லை; இம்பரின் நகுடன் என்போன்
அரும்பரி மேத வேள்வி ஆற்றினன்; ஆற்றும் எல்லை, 60

404 அரசுஇலா வறுமை நோக்கி அவனைவான் நாடர் யாரும்
விரைசெய்தார் மகுடம் சூட்டி வேந்தனைக் கொண்டார்; வேந்தாய்
வருபவன், சசியை ஈண்டுத் தருகென மருங்கு ளார்போய்த்
திரைசெய்நீர் அமுதுஅ னாட்குச் செப்ப,அக் கற்பின் மிக்காள், 61

405 பொன்உயிர்த்து அனைய காட்சிப்
புண்ணரியக் குரவன் முன்போய்
மின்உயிர்த்து அனையாள் நின்று
விளம்புவாள், இதுஎன்கொல்? கெட்டேன்!
என்உயிர்த் துணைவன் ஆங்கே
இருக்க,மற்று ஒருவன் என்னைத்
தன்உயிர்த் துணையாக் கொள்கை
தருமமோ? அடிகள்! என்றாள். 62

406 மாதவர் எழுவர் தாங்க மாமணிச் சிவிகை மீது,
போதரின் அவனே வானோர் புரந்தரன்: அவனே உன்றன்
காதலன் ஆகும் என்றான்; கைதொழுது, அதற்கு நேர்ந்துஅம்
மேதகு சிறப்பால் இங்கு வருகஎன விடுத்தாள் தூது. 63

407 மனிதரின் மகவான் ஆகி வருபவன், சிவிகை தாங்கும்
புனிதமா தவரை எண்ணான், புன்கண்நோய் விளைவும் பாரான்,
கனிதரு காமம் துய்க்கும் காதலால் விரையச் செல்வான்,
இனிதுஅயி ராணிபால்கொண்டு ஏகுமின், "சர்ப்ப" என்றான்.64

---

403. இப்பாடல் குளகம் அரன் திசை: ஈசான திக்கு. வாவி: தடாகம். கமல நூலுள் கரந்தனன்: தாமரைத் தண்டுள் மறைந்தான். புல்லென்று இருந்தது: பொலிவு இழந்து இருந்தது. இம்பரில்: இவ்வுலகத்தில். நகுடன்: ஓர் அரசன் (இவன் சந்திரவம்சத்து, புகழ்பெற்ற யயாதியின் தந்தை). ஆற்றும் எல்லை: செய்துவரும்பொழுது.

404. இப்பாடலும் குளகம். வேந்தாய் வருபவன்: நகுடன். சசி: இந்திராணி. ஈண்டுத் தருக: இங்கு கொணர்க: கற்பின் மிக்காள்: இந்திராணி ஆகிய சசி.

405 குரவன்: ஆசிரியன். மின்உயிர்த்து அனையாள்: மின்னலே ஒரு வடிவு எடுத்ததைப் போன்றவளாகிய சசி.

406. சிவிகை மீது: பல்லக்கின்மேல். போதரின்: வந்தால். நேர்ந்து: உடன்பட்டு. விடுத்தாள் தூது: தூது போக்கினள்.

407. புன்கண்: துன்பம். விரையச் செல்வான்: விரைந்து செல்லும் பொருட்டு. சர்ப்ப என்றான்: விரைந்து செல்லுங்கள் என்று கூவினன்.

408 "சர்ப்பம் ஆகுஎன" முன் கொம்பு
 தாங்கிமுன் அடக்குந் தென்றல்
வெற்பனும் முனிவன் சாபம்
 விளைத்தனன்; விளைத்த லோடும்
பொற்பமா சுணமே ஆகிப்
 போயினன்; அறிவி லாத
அற்பர் ஆனவர்க்குச் செல்வம்
 அல்லது பகைவேறு உண்டோ? 65

409 பின்னர்த்தம் குரவன் ஆன பிரான்அடி பணிந்து, வானோர்
பொன்நகர் வேந்தன் இன்றிப் புலம்புஅடை கின்றது ஐய!
என்னலும், குரவன் போய்அவ் இலஞ்சியுள் ஒளித்தாற் கூவி,
தன்னுரை யறிந்து போந்த சதமகற் கொண்டு மீண்டான் 66

410 கொடும்பழி கோட்பட் டான்தன் குரவனை வணங்கி, என்னைச்
சுடும்பழி கழிவது எங்ஙன்? சொல்என, தொலைவது ஓர்ந்தான்
"அடும்பழி மண்மேல் அன்றி அருது; நீ வேட்டைக்கு என்னைப்
படும்பழி இதனைத் தீர்ப்பான் பார்மிசை வருதி" என்றான். 67

411 ஈசனுக்கு இழைத்த குற்றம் தேசிகன் எண்ணித் தீர்க்கும்;
தேசிகற்கு இழைத்த குற்றம் குரவனே தீர்ப்பது அன்றி,
பேசுவது எவனோ தன்பால் பிழைத்த காரணத்தால் வந்த
வாசவன் பழியைத் தீர்ப்பான் குரவனே வழியும் கூற, 68

412 வாம்பரி உகைத்துத் தன்னால் வழிபடு குரவன் வானோர்
தாம்பரி வோடும் சூழத் தராதலத்து இழிந்து செம்பொன்
காம்புஅரி தோளி பங்கன் கயிலைமால் வரையைத் தாழ்ந்து
தேம்பரி அலங்கல் மார்பன் தென்திசை நோக்கிச் செல்வான். 69

---

408. சர்ப்பம் ஆகுஎன: பாம்பாகக் கடவாய் என்று. தென்றல் வெற்பனும் முனிவன்: தென்றலின் பிறபபுக்கு இடமாகிய பொதிகைமலைத் தலைவன். மாசுணம்: பாம்பு. (ஈற்றுப் பகுதி வேற்றுப்பொருள் வைப்பு அணி.)

409. குரவன்: வியாழ பகவான். புலம்பு அடைகின்றது. வருந்துகின்றது. இலஞ்சி: தடாகம். ஒளித்தாற்கூவி: ஒளிந்துகொண்ட இந்திரனை அழைத்து. சதமகன்: இந்திரன்.

410. கோட்பட்டான்: ஆட்பட்டவனாகிய இந்திரன். தொலைவது ஓர்ந்தான்: பழி தீரும் வழியை அறிந்தவனாகிய ஆசான். அருது: நீங்காது. பார்மிசை: நிலவுலகத்தில்.

411. இப்பாடல் குளகம். தேசிகன்: குரு. தன்பால் பிழைத்த காரணத்தால்: தன்பால் தீங்கு இழைத்த காரணத்தால். வாசவன் பழியை: இந்திரனுக்கு நேர்ந்த பழியை

412. உகைத்து: செலுத்தி. தராதலம்: பூவுலகம். இழிந்து: இறங்கி. காம்பு: மூங்கில். தோளி பங்கன்: உமை ஒருகூறுடைய சிவபெருமான். தாழ்ந்து: வணங்கி.

413 கங்கைமுதல் அளவிறந்த தீர்த்தம் எலாம்
போய்ப்படிந்து, காசி, காஞ்சி,
அம்கனக கேதாரம், முதல்பதிகள்
பலபணிந்தும், அவுணற் கொன்ற
பொங்குபழி விடாதுஅழுங்கி, அராவுண்ண
மாசுண்டு பொலிவு மாழ்கும்
திங்கள்அனை யான்,கடம்ப வனத்துஎல்லை
அணித்தாகச் செல்லும் ஏல்வை, 70

414 தொடுத்தபழி வேறாகி விடுத்துஅகன்றது;
இந்திரன்தான் சுமந்த பாரம்
விடுத்தவன்ஒத்து, அளவிறந்த மகிழ்வுஎய்தி,
தேசிகன்பால் விளம்ப, பாசம்
கெடுத்தவன்மா தலம்புனித தீர்த்தம்உள
இவண்நமக்குக் கிடைத்தல் வேண்டும்;
அடுத்துஅறிக எனச்சிலரை விடுத்துஅவ்வேறு
நிலைநின்று அப்பாற் செல்வான். 71

415 அருவிபடிந்து, அருவிஎறி மணிஎடுத்து,
பாறையில்இட்டு, அருவி நீர்தூய்,
கருவிரல்கொய்து அலர்சூட்டி, கனியூட்டி,
வழிபடுவ, கல்லா மந்தி;
ஒருதுறையில் யாளிகரி புழைக்கை முகந்து
ஒன்றற்குஒன்று ஊட்டி ஊட்டிப்
பருகுவன; புலிமுலைப்பால் புல்வாய்க்கன்று
அருத்திஇடும் பசிநோய் தீர. 72

---

413. அம்கனகம்: அழகிய பொன்வடிவமான. அழுங்கி: வருந்தி. அரா உண்ண: பாம்பு கௌவ. திங்கள் அனையான்: இந்திரன். கடம்பவனம்: மதுரை. ஏல்வை: பொழுது. இப்பாடல் குளகம்.

414. விடுத்து அகன்றது: விட்டு நீங்கியது. தேசிகன்: ஆசிரியன். இவண்: இவ்விடத்து.

415. கருவிரல்: கருவிரலால். யாளி. சிங்கம் போன்ற முகமும் யானைத் துதிக்கை போன்ற கையும் உடைய ஓர் விலங்கு கரி: யானை. புழைக்கை: துவாரமுள்ள கை. புல்வாய்க் கன்று: மான் கன்று. அருத்தி இடும்: ஊட்டும்.

416 நெளிஅராக் குருளை,வெயில் வெள்ளிடையில்
கிடந்துஉயங்கி நெளிய, புள்ஏறு,
ஒளியுருச் சிறைவிரித்து நிழல்பரப்ப,
பறவைநோய் உற்ற தே,கொல்
அளியவாய், அச்சோவென்று ஓதிஅயல்
மடமந்தி அருவி ஊற்றும்
துளியநீர் வளைத்தசும்பின் முகந்துஎடுத்துக்
கருங்கையினுல் சொரிவ மாதோ. 73

417 படஅரவம் மணிஈன்று, நொச்சிப்பா
சிலையன்ன பைந்தாள் மஞ்ஞை,
பெடைதழுவி மணம்செய்ய, மணவறையில்
விளக்குஇடுவ; பெருந்தண் கானத்து
அடர்சிறைமென் குயில்ஓமென்று ஆர்ப்ப,மடக்
கிள்ளைஎழுத்து ஐந்தும் ஓசைத்
தொடர்புபெற உச்சரிப்ப, குருமொழிகேட்டு
ஆங்குஉவப்ப, தொடிக்கண் பூவை. 74

418 இன்னவிலங் கொடுபுள்ளின் செயற்கரிய
செயல்நோக்கி, இறும்பூது எய்தி,
பொன்நகரான், புளகம்உடல் புதைப்ப,நிறை
மகிழ்ச்சியுளம் புதைப்ப, போவான்,
அன்னபொழுது, ஒற்றுவர்மீண்டு அடிவணங்கி,
இன்சுவைப்பால் அருந்து வான்முன்,
பின்னரிய தேன்சொரிந்தாங்கு உவகைமேல்
பேருவகை பெருகச் சொல்வார். 75

---

416. நெளிஅராக் குருளை: நெளிகின்ற பாம்புக்குட்டி. உயங்கி: வாடி. புள்ஏறு: கருடன். அளியவாய்: கருணையினுல். அச்சோ: ஐயோ. ஓதி: சொல்லி. துளியநீர்: நீர்த்துளியை வளைத்தசும்பு: சங்காகிய குடம்.

417. பட அரவம்: படத்தினை உடைய பாம்பு மணிஈன்று: இரத்தினங்களைக் கக்கி. நொச்சிப்பாசிலைஅன்ன: நொச்சிச்செடியின் பசிய இலைகளை ஒத்த. மஞ்ஞை: மயில். பெடை' பெண்மயில். ஆர்ப்ப: ஒலிசெய்ய. எழுத்து ஐநது: திருஐந்தெழுத்து குருமொழிகேட்டாங்கு: ஆசான் சொல்லைக் கேட்பதுபோல் தொடிக்கணபூவை: வளை அனைய வட்டமான கண்களை உடைய நாகணவாய்ப்புள்.

418. இறும்பூது: மகிழ்ச்சி. பொன்நகரான்: தேவேந்திரன். புளகம்: மயிர்க்கூச்சு. ஒற்றுவர்: தூதுவர்.

419 "எப்புவனத் திலும்என்றும் கண்டறியா
அதிசயமும், எண்ணுக்கு எய்தாத்
திப்பியமும் இக்கடம்ப வனத்துஇன்று
கண்டுஉவகை திளைத்தேம்; அங்கண்
வைப்பனைய ஒருபுனித வாவிமருங்கு
ஒருகடம்ப வனத்தின் நீழல்
ஒப்பில்ஒளி யாய்முளைத்த சிவலிங்கம்
ஒன்றுஉளது" என்று உரைப்பக் கேட்டான். 76

420 செவித்துளையில் அமுதுஒழுக்கும் உழையரொடும்
வழிக்கொண்டு, சென்னி மேல்கை
குவித்து,உளம்மெய் மொழிகரணம் குணம்மூன்றும்
ஒன்றி,தன் கொடிய பாவம்
அவித்துஉள்அயர் ஒழிக்கமுளைத்தி அருள்குறிமேல்
அன்புஈர்ப்ப அடைவான், கானம்
கவித்துஉளபூந் தடம்படிந்து, கடம்பவனத்து
உழைநுழைந்தான், கவலை தீர்வான். 77

421 அருவாகி, உருவாகி, அருஉருவம்
கடந்து,உண்மை அறிவுஆ னந்த
உருவாகி, அளவிறந்த உயிராகி,
அவ்வுயிர்க்கோர் உணர்வாய், பூவின்
மருவாகி, சராசரங்கள் அகிலமும்தன்
இடைஉதித்து மடங்க நின்ற
கருவாகி முளைத்தசிவக் கொழுந்தை,ஆ
யிரங்கண்ணும் களிப்பக் கண்டான். 78

---

419. புவனம்: உலகம். எண்ணுக்கு: அளவைக்கு. எய்தா: எட்டாத. திப்பியம். சிறப்பு. வைப்பு: சேமநிதி. வரவி மருங்கு: தீர்த்தக்கரை, (இந்திரன் தூதுவர் கடம்ப வனத்தில் உவமையில்லாது தேசுடன் முளைத்த சிவலிங்கம் ஒன்றைத் தாங்கள் கண்டதைக் கூறுவது)

420. உழையர்: ஒற்றர். ஒன்றி: ஒன்றுபட்டு. குறி: சிவலிங்கம் கவித்து: சூழ்ந்து. பூந்தடம்: பொற்றாமரை. படிந்து: நீராடி.

421. அரு: உருவமில்லாதது அளவிறந்த: எண்ணிறந்த பூவின் மருவாகி: மலரின் மணம்போலாகி. மடங்கநின்ற: அடங்கநின்ற. கரு: மூலகாரணம்.

422 கண்டுவிழுந்து எழுந்துவிழி துளிப்பஎழு
களிப்புஎன்னும் கடலில் ஆழ்ந்து,
விண்டுமொழி தழுதழுப்ப, உடல்பனிப்ப,
அன்புருவாய் விண்ணோர் வேந்தன்
அண்டர்பிரான் அருச்சனைக்கு வேண்டும்உப
கரணமெலாம், அகல்வான் எய்திக்
கொண்டுவரச் சிலரைவிடுத்து, அவர்ஏக,
பின்னும்ஒரு குறைவு தீர்ப்பான், 79

423 தம்குடிமைத் தச்சனைஓர் விமானம்அமைத்
திடவிடுத்து,அத் தடத்தின் பால்போய்
அங்கணனைக் கடிதுஅருச்சித் திட,நறிய
மலர்கிடையாது அயர்வான், அந்தச்
சங்குஎறிதண் திரைத்தடத்தில் அரன்அருளால்
பலபரிதி சலதி ஒன்றில்
பொங்குகதிர் பரப்பிமுளைத் தால்என்ன,
பொற்கமலம் பூப்பக் கண்டான். 80

424 அன்புதலை சிறப்பமகிழ்ந்து ஆடினன்;
காரணத்தால் அதற்கு நாமம்
என்பதுபொன் தாமரைஎன்று ஏழுலகம்
பொலிகவென இசைத்து, பின்னும்
மின்பதுமத் தடம்குடைந்து, பொற்கமலம்
கொய்துஎடுத்து, மீண்டு, நீங்காத்
தன்பிணிநோய் தணியமுளைத்து எழுந்தமுழு
முதல்மருந்தின் தன்பால் வந்து, 81

---

422. விழிதுளிப்ப: கண்ணீர் அரும்ப. விண்டுமொழி தழுதழுப்ப: நாத் தழுதழுக்கத் துதிகள் சொல்லி. அண்டர்பிரான்: சோமசுந்தரக்கடவுள். உபகரணம்: பொருள்கள். குறைவு தீர்ப்பான்: ஒரு குறையைத் தீர்க்கக் கருதி. (இப்பாடல் குளகம்).

423. தடம்: பொற்றாமரைத் தடாகம். நறிய: நல்ல. அயர்வான்: வருந்துவான். பலபரிதி: பலஇரவிகள். சலதி: கடல். பொற்கமலம்: பொற்றாமரை.

424. (இப்பாடல் குளகம்). பொலிக: விளங்குக. பின்னும் மின்பதுமத் தடம் குடைந்து: மறுபடியும் பொற்றாமரையில் குளித்து. தணிய: கெட. முழுமுதல் மருந்து: சிவபெருமான்

425 மொய்த்தபுனக் காடுஎறிந்து, நிலம்திருத்தி,
வரும்அளவில், முளைத்த ஞான
வித்தனைய சிவக்கொழுந்தின் திருமுடிமேல்
பரிதிகரம் செல்லத் தீண்ட,
சித்தம்நெகிழ்ந்து இந்திரன்தன் வெண்கவிகைத்
திங்கள்நிழல் செய்வான் உள்ளம்
வைத்தனன்;அப் போதுஇரவி மண்டிலம்போல்
இழிந்ததுஒரு மணிவி மானம். 82

426 கிரிஎட்டும் எனமழையைக் கிழித்துஎட்டும்
புழைக்கைமதிக் கீற்றுக் கோட்டுக்
கரிஎட்டும், சினமடங்கல் நாலெட்டும்,
எட்டெட்டுக் கணமும் தாங்க,
விரிஎட்டுத் திசைபரப்ப மயன்நிருமித்து
உதவியஅவ் விமானம் சாத்தி,
அரி,எட்டுத் திருவுருவப் பரஞ்சுடரை
அருச்சிப்பான் ஆயி ஞனே. 83

427 முந்தஅமர் உலகுஅடைந்து பூசனைக்கு
வேண்டுவன முழுதும் தேர்வார்
வந்து,தரு ஐந்தீன்ற பொன்ஞடை,
மின்உமிழும் மணிப்பூண், வாசச்
சந்தனம்,மந் தாகினிமஞ் சனம்,தூபம்,
திருப்பள்ளித் தாமம், தீபம்,
அந்தமில்ஆன் ஐந்து,நறும் கனி,தீம்தேன்,
திருஅமுதம் அனைத்தும் தந்தார். 84

---

425. காடுஎறிந்து: காடுகளை வெட்டி. பரிதிகரம்: சூரியஒளி. கவிகை: குடை. உள்ளம் வைத்தனன்: எண்ணினுன். இழிந்தது: இறங்கியது. ஒருமணி விமானம்: ஒப்பற்ற மாணிக்க விமானம்.

426. கிரி: மலை. மழை: மேகம். மதிக்கீற்றுக்கோடு: பிறைச்சந்திரன் போன்ற கொம்பு. கரி: யானை. சினமடங்கல் நாலெட்டு: 32 கோபத்தை உடைய சிஙகங்கள். எட்டெட்டுக் கணம்: 64 தேவகணங்கள். பரப்ப: பரவி நிற்க. சாத்தி: பொருத்தி. அரி: இந்திரன். எட்டுத் திருவுருவப் பரஞ்சுடர்: அட்டமூர்த்தியாகிய கடவுள்.

427. தேர்வார்: ஆராய்ந்தவராகி. தருஐந்தீன்ற பொன்ஞடை: ஐந்து தருக்களும் தந்த பொன்ஞடை. மந்தாகினி மஞ்சனம்: கங்கை நீர். ஆன்ஐந்து: பஞ்சகவ்யம்.

428 தெய்வத்தா மரைமுளைத்த தடம்படிந்து,
பவம்தொலைக்கும் திருநீறு ஆடி,
சைவத்தாழ் வடந்தாங்கி, அன்புஉருவாய்,
அருள்உருவம் தானாய்த் தோன்றும்
பைவைத்துஆடு அரவுஆர்த்த பசுபதியை,
அவனுரைத்த பனுவல் ஆற்றின்
மெய்வைத்துஆ தரம்பெருக அருச்சனைசெய்து
ஆனந்த வெள்ளத்து ஆழ்ந்தான். 85

429 பார்ஆர அட்டாங்க பஞ்சாங்க
விதிமுறையால் பணிந்து,உள் வாய்மெய்
நேராகச் சூழ்ந்து,உடலம் கம்பித்து,
கும்பிட்டு, நிருத்தம் செய்து,
தார்ஆரும் தொடைமிதப்ப, ஆனந்தக்
கண்அருவி ததும்ப நின்று,அன்பு
ஆராமை மீக்கொள்ள, அஞ்சலித்துத்
துதிக்கின்றான்; அமரர் கோமான். 86

430 அங்கணா போற்றி! வாய்மை ஆரணா போற்றி! நாக
கங்கணா போற்றி! மூல காரணா போற்றி! நெற்றிச்
செங்கணா போற்றி! ஆதி சிவபரம் சுடரே போற்றி!
எங்கள்நா யகனே போற்றி! ஈறிலா முதலே போற்றி! 87

431 யாவையும் படைப்பாய் போற்றி!
யாவையும் துடைப்பாய் போற்றி!
யாவையும் ஆனாய் போற்றி!
யாவையும் அல்லாய் போற்றி!
யாவையும் அறிந்தாய் போற்றி!
யாவையும் மறந்தாய் போற்றி!
யாவையும் உணர்ந்தாய் போற்றி!
யாவையும் பிரிந்தாய் போற்றி! 88

---

428. பவம் தொலைக்கும் திருநீறு ஆடி: பிறவியை அழிக்கும் வெண்ணீற்றை அணிந்து. சைவத்தாழ்வடம்: அக்கமணிமாலை. பனுவல்: ஆகமம்.

429. பார்ஆர: நிலம் தோய. உடலம் கம்பித்து: உடல் நடுங்கி. நிருத்தம் செய்து: கூத்தாடி. மீக்கொள்ள: மேலோங்க.

430. அங்கணா: அழகிய கண்களை உடையவனே. ஆரணா: மறைகளை அருளியவனே. நாக கங்கணா: அரவக் கங்கணம் அணிந்தவனே. செங்கணா: சிவந்த கண்களையுடையவனே. ஆதி: முதல். ஈறிலா: முடிவில்லாத. (இது முதல் நான்கு பாடல்கள் சிவலிங்கம் கண்டு மகிழ்ந்து இந்திரன் துதித்தவை).

431. துடைப்பாய்: அழிப்பாய். பிரிந்தாய்: நீங்கினாய்.

432 இடர்உறப் பிணித்த இந்தப் பழியினின்று என்னை ஈர்த்துஉன்
அடியிணைக்கு அன்பன் ஆக்கும் அருட்கடல் போற்றி! சேல்கண்
மடவரல் மணாள போற்றி! கடம்பமா வனத்தாய் போற்றி!
சுடர்விடு விமானம் மேய சுந்தர விடங்க போற்றி! 89

433 பூசையும் பூசைக்கு ஏற்ற பொருள்களும் பூசை செய்யும்
நேசனும் பூசை கொண்டு நியதியின் பேறு நல்கும்
ஈசனும் ஆகிப் பூசை யான்செய்தேன் எனும்என் போத
வாசனை அதுவும் ஆன மறைமுதல் அடிகள் போற்றி! 90

434 என்ன நின்று ஏத்தி னானை,
இன்னகை சிறிது தோன்ற
முன்னவன், அடியார் எண்ணம்
முடிப்பவன், அருட்கண் நோக்கால்,
"உன்னது வேட்கை யாது?" இங்கு
உரையென, விரையத் தாழ்ந்து,
சென்னிமேல் செங்கை கூப்பித்
தேவர்கோன் இதனை வேண்டும். 91

435 ஐய! நின் இருக்கை எல்லைக்கு
அணியனும் அளவில், நீங்கா
வெய்யஎன் பழியி னோடும்
மேலைநாள் அடியேன் செய்த
மையல்வல் வினையும் மாய்ந்துஉன்
மலர்அடி வழுத்தி, பூசை
செய்யவும் உரியன் ஆனேன்;
சிறந்தபேறு இதன்மேல் யாதோ? 92

---

432. இடர்: துன்பம். உற: அடைய. பிணித்த: பற்றிய. ஈர்த்து: இழுத்து. அடிஇணை: இரண்டு திருவடிகள். சேல்கண்மடவரல்: மீனாட்சியம்மை. சுடர்விடு விமானம்: ஒளிவீசும் விமானம். மேய: பொருந்திய. விடங்கன்: உளியினால் செய்யப் படாதவன்.

433. ஏற்ற: தகுதியான. நேசன்: அன்பன். நியதி: முறை. பேறு: பயன். போத வாசனை: தற்போத வாசனை. மறைமுதல் அடிகள்: வேதமுதலாகிய திருவடிகள்.

434. முன்னவனும் முடிப்பவனும் இறைவன். வேட்கையாது: விருப்பம் என்ன. விரைய: விரைந்து. வேண்டும்: கேட்பான்.

435. அணியனும் அளவில்: நெருங்கிய உடனே. வெய்ய: கொடிய. உரியன் ஆனேன்: உரிமை பெற்றேன், சிறந்த பேறு: பெரும்பயன்,

436 இன்னநின் பாதப் போதே
இவ்வாறே என்றும் பூசித்து,
உன்அடி யாருள் யானும்
ஓர்அடித் தொண்டன் ஆவேன்;
அன்னதே அடியேன் வேண்டத்
தக்கதுஎன்று அடியில் வீழ்ந்த
மன்னவன் தனக்கு, முக்கண்
வரதனும் கருணை பூத்து, 93

437 இருதுவில் சிறந்த வேனிலும், மதிஆறு
இரண்டினில் சிறந்தவான் தகரும்,
பொருவில்தா ரகையில் சிறந்தசித் திரையும்,
திதியினில் சிறந்தபூ ரணையும்,
மருவுசித் திரையில் சித்திரை தோறும்
வந்துவந்து அருச்சி!ஓர் வருடம்
தெரியும்நாள் முந்நூற்று அறுபதும் ஐந்தும்
செய்தஅர்ச் சனைப்பயன் எய்தும். 94

438 துறக்கநாடு அணைந்து சுத்தபல் போகம்
துய்த்து,மேல் மலபரி பாகம்
பிறக்க,நான் முகன்மால் முதற்பெரும் தேவர்
பெரும்பதத்து ஆசையும் பிறவும்
மறக்க,நாம் வீடு வழங்குதும், என்ன
வாய்மலர்ந்து அருளி,வான் கருணை
சிறக்க,நால் வேதச் சிகையெழும் அநாதி
சிவபரம் சுடர்,விடை கொடுத்தான். 95

436. (இப்பாடல் குளகம்). பாதப்போது: திருவடித்தாமரை. அடித்தொண்டன்: தாழ்ந்த தொண்டன். மன்னவன்: இந்திரன். முக்கண் வரதன்: நெற்றிக் கண்ணை உடைய கடவுள். கருணைபூத்து: அருள்சுரந்து.

437. இருது: பருவம். வேனில்: வேனிற்காலம். மதி: மாதம். வான்தகர்: சிறந்த சித்திரை மாதம். பொருவில்: ஒப்பற்ற. தாரகை: நாள்மீன் சித்திரை: சித்திரைநாள். பூரணை: பௌர்ணமி. மருவு: ஒன்றுசேரும். சித்திரையில் சித்திரைதோறும்: சித்திரை மாதத்து சித்திரை நாட்களில். அருச்சி: வழிபடுவாயாக. அப்படிச் செய்தால் ஆண்டு முன்னூற்று அறுபத்து ஐந்து நாட்களிலும் வழிபட்ட பயனை அடையலாம்.

438. மலபரிபாகம் பிறக்க: மலங்கழியும் நிலை உண்டாக. பதத்து ஆசையும் பிறவும் மறக்க: பதவி ஆசையும் அன்னபிறவும் மறந்துபோக. வீடுவழங்குதும்: வீடுபேற்றை நல்குவோம், அநாதி சிவபரம் சுடர்: அநாதியாகிய சிவபெருமான்.

439 மூடினன் புளகப் போர்வையால் யாக்கை;
முடிமிசை அஞ்சலிக் கமலம்
சூடினன்; விழ்ந்தான்; எழுந்துகண் அருவி
துளும்பினன்; பன்முறை துதிசெய்து
ஆடினன், ஐயன் அடிபிரிவு ஆற்ருது
அஞ்சினன்; அவன்அருள் ஆணை
நாடினன்; பிரியா விடைகொடு துறக்கம்
நண்ணினன்; விண்ணவர் நாதன். 96

440 வந்தஅரமங் கையர்கவரி மருங்கு வீச,
மந்தார கற்பகப்பூ மாரி தூற்ற,
அந்தரநாட் டவர்முடிகள் அடிகள் சூட,
அயிராணி முலைத்தடந்தோய்ந்து அகலத் திண்தோள்
விந்தமெனச் செம்மாந்து, விம்மு காம
வெள்ளத்துள் உடல்அழுந்த, உள்ளம் சென்று,
சுந்தரநா யகன்கருணை வெள்ளத்து ஆழ்ந்து,
தொன்முறையின் முறைசெய்தான் துறக்க நாடன். 97

---

439. புளகம்: மயிர்க்கூச்சு. அஞ்சலிக்கமலம்: கைத்தாமரை. நாடினன்: விரும்பினன். துறக்கம்: விண்ணுலகம். விண்ணவர் நாதன்: இந்திரன்.

440. அரமங்கையர்: தேவமகளிர். பூமாரி: மலர்மழை. தூற்ற: பொழிய. அந்தர நாட்டவர்: துறக்க நாட்டவர். அயிராணி. இந்திரன் மனைவி. அகலம்: மார்பு. திண் தோள்: வலியதோள். விந்தம்: விந்தியமலை. செம்மாந்து: இறுமாந்து. விம்மு: பெருகிய. அழுந்த: மூழ்க. தொல்முறை: பழையமுறைப்படி. முறைசெய்தான்: அரசு செய்தான். துறக்கநாடன்: தேவேந்திரன்.

# வெள்ளையானைச் சாபம் தீர்த்த படலம்

441 மட்டுஅவிழும் கொன்றைச் சடையான், மகவானைத்
தொட்ட பழியின் தொடக்குஅறுத்த வாறுஈது;
பட்டமத வேழம், பரனைப் பராய்,முனிவன்
இட்டகொடும் சாபம்நீத்து, ஏகியவாறு ஓதுவாம். 1

442 கருவா சனைகழிக்கும் காசிநகர் தன்னில்,
துருவாச வேதமுனி, தொல்ஆக மத்தின்
பெருவாய்மை யால், நன் பெயர்விளங்க, ஈசன்
ஒருவா இலிங்க ஒளிஉருவம் கண்டான் 2

443 இன்புற்று அருச்சனைசெய்து ஏத்துவான், அவ்வேலை
அன்புக்கு எளியன் அருளால், திருமுடிமேல்
மின்பொன் கடிக்கமலப் போது தொன்று வீழ்ந்திடலும்,
தன்பொற் கரகமலப் போதுஅலர்த்தித் தாங்கினன்; 3

444 தாங்கி,கண் சென்னி தடமார்பு அணைத்து,உடலம்
வீங்கி, தலைசிறந்த மெய்யுவகை மேற்கொள்ள
நீங்கி, கழிந்த கருணை நிதிஅனையான்,
பூங்கற் பகநாட்டில் போகின்றான்; அவ்வேலை, 4

445 சங்குஅலறச் செங்களத்துத் தானவரைத் தேய்த்து,விறல்
கொங்குஅலர்தார் வேய்ந்து,அமரர் கோமான்தன் கோநகரில்,
செங்கண் அமரர்பெரும் சேனைக் கடல்கலிப்ப
மங்கலப்பல் லாண்டு மறைமுழங்க வந்துஅணைவான். 5

---

441. மட்டு: மணம். கொன்றைச்சடையான்: சிவபெருமான். மகவான்: இந்திரன். பட்டம்: நெற்றிப்பட்டம். பராய்: வழிபட்டு. முனிவன்: துருவாச முனிவன்.

442. கருவாசனை: கருப்ப வாசனை. கழிக்கும்: போக்குகின்ற. தொல்: பழைய. ஒருவா: நீங்காத. ஒளிஇலிங்கம்: ஒளிவடிவாகிய சிவலிங்கம். கண்டான்: நிறுவினன்.

443. ஏத்துவான்: துதிப்பானாகிய துருவாசமுனிவன். அவ்வேலை: அப்பொழுது. எளியன்: இறைவன். கடி: மணம். திருமுடிமேல்: திருமுடியினின்றும். கரகமலப்போது: கையாகிய தாமரை மலர். அலர்த்தி: விரித்து.

444. தாங்கி: ஏந்தி. உடலம் வீங்கி: மெய் பூரித்து. கழிந்த: சென்ற. நிதிஅனையான்: துருவாச முனிவன். (இப்பாடல் குளகம்).

445. அலற: முழங்க. செங்களம்: போர்க்களம். தானவர்: அவுணர்கள். தேய்த்து: அழித்து. கோநகர்: அமராவதி. வந்தணைவான்: வருகின்றவன். (இப்பாடலும் குளகம்).

## 2. வெள்ளை யானைச் சாபம் தீர்த்தல்



சேட்டுஆனை வானவ!நின் சென்னி, செழியரில்ஓர்
வாள்தானை வீரன் வளையால் சிதறுக;நின்
கோள்தானம் நால்கோட்டு வெண்ணிறத்த குஞ்சரமும்,
காட்டுஆனை ஆக;என விட்டான் கடுஞ்சாபம்.

446 எத்திக்கும் கல்லென்று இயம்கலிப்ப, ஏந்திழையார்
தித்தித்த அமுதொழுகும் கீதம் செவிமடுப்ப.
பத்திக் கவரிநிரை தானைப் படுகடலில்
தத்திப் புரளும் திரைபோல் தலைபனிப்ப, 6

447 அங்கண் கடலின் நெடுங்கூம்பு அகம்நிமிர்ந்த
வங்கத் தலையுய்க்கும் மீகான் தனைமான,
திங்கள் குடைநிழற்ற, தீந்தேம் மதம்கவிழ்க்கும்
வெங்கண் களிற்றின் மிசைப்பவனி போந்தணைந்தான். 7

448 அத்தலை,விண் ணுடர் அருகுஅணைந்து, வெவ்வேறு
தத்தம் மனக்கிசைந்த கையுறைகள் தாம்கொடுத்து,
கைத்தலங்கள் கூப்பினர்; கண்டான், கடவுளரில்
உத்தமனை அர்ச்சித்துப் போந்தமுனி உத்தமனும், 8

449 தீங்குஅரிய ஆசிமொழி செப்பி,தன் செங்கரத்தின்
நீங்குஅரிய தாமரையை நீட்டினன்; மற்றுஅதனை,
தாங்குஅரிய செல்வத் தருக்கால்,ஓர் கைஓச்சி
வாங்கி,மத யானையின்மேல் வைத்தான் மதியில்லான். 9

450 கீறிக் கிடந்த மதிஅனைய கிம்புரிக்கோட்டு
ஊறிக் கடம்கவிழ்க்கும், மால்யானை, உச்சியின்மேல்
நாறிக் கிடந்த நறுமலரை வீழ்த்தி,உரல்
சீறிக் கிடந்தநெடும் தாளால் சிதைத்தன்றே. 10

---

446. (இப்பாடலும் குளகம்). பத்தி: வரிசை. கவரி நிரை: சாமரைக் கூட்டங்கள். திரை: அலை. தலைபனிப்ப: அசைய.

447. கூம்பு: பாய்மரம். வங்கம்: கப்பல். தலைஉய்க்கும்: தலையிலிருந்து செலுத்தும். மீகான்: மாலுமி. மான: ஒப்ப. திங்கட்குடை: சந்திரவட்டக்குடை. மிசை: மேல். பவனி: திருஉலா. யானைக்கு வங்கமும், குடைக்குக் கூம்பும், யானையின் பிடர்மேல் இருப்போனுக்கு மீகாமனும் உவமமாம்.

448. (இப்பாடல் குளகம்). அத்தலை: அவ்விடத்து. விண்ணுடர்: தேவர்கள். கையுறை: காணிக்கை. கடவுளரில் உத்தமன்: சிவபெருமான். முனிஉத்தமன்: துருவாசன். கண்டான்: அதனைக் கண்டு.

449. தீங்கு அரிய: குற்றமில்லாத. ஆசிமொழி: வாழ்த்துஉரை. நீங்கு அரிய: நீங்குதல் இல்லாத. தருக்கு: செருக்கு. ஓர்கை ஓச்சி: ஒருகையை நீட்டி. மதியில்லான்: அறிவில்லாதவனாகிய இந்திரன்.

450. கீறி. பிளவுண்டு. கிம்புரி: பூண். கடம்: மதநீர். கவிழ்க்கும்: கொட்டும். நாறிக் கிடந்த. மணம்வீசிக்கிடந்த. வீழ்த்தி: கீழே தள்ளி, உரல்சீறி: உரலோடு மாறுபட்டு. சிதைத்தன்று: தேய்த்தது.

451 கண்டான் முனி,காமன் காய்ந்தான் நுதற்கண்போல்
விண்டுஆர் அழல்சிதற நோக்கினான்; வெங்கோபம்
கொண்டான்; அமரர் ஒதுங்கக் கொதித்துஆலம்
உண்டான் என நின்று, உருத்தான் உரைக்கின்றான். 11

452 புள்ளியதோல் ஆடை புனைந்து,அரவப் பூண்அணிந்த,
வெள்ளிய செங்கண் விடையான், அடிக்கமலம்
உள்ளிய மெய்அன்பு உடையார், அருவருத்துத்
தள்ளிய, செல்வத் தருக்கினாய்! என்செய்தாய்? 12

453 கதித்தார் முடிஅமரர் கையுறையே நன்கு
மதித்தாய்,எம் ஈசன் மதிமுடிமேல் சாத்தும்
பொதித்தாது அவிழ்மலரைப் போற்றாது, வாங்கி,
மிதித்துஆனை சிந்த,அதன் மேல்வைத்தாய் பேதாய்! 13

454 வண்டுஉளரும் தண்துழாய் மாயோன் இறுமாப்பும்
புண்டரிகப் போதுஉறையும் புத்தேள் இறுமாப்பும்
அண்டர்தொழ வாழ்உன் இறுமாப்பும், ஆலாலம்
உண்டவனைப் பூசித்த பேறுஎன்று உணர்ந்திலையால். 14

455 சேட்டுஆனை வானவ! நின் சென்னி, செழியரில்ஓர்
வாள்தானை வீரன் வளையால் சிதறுக; நின்
கோள்தானம் நால்கோட்டு வெண்ணிறத்த குஞ்சரமும்,
காட்டுஆனை ஆக;என விட்டான் கடுஞ்சாபம். 15

---

451. காமன் காய்ந்தான்: மன்மதனை அழித்த சிவபெருமான். நுதற்கண்: நெற்றிக்கண். விண்டு. வெளிப்பட்டு. அழல் சிதற: நெருப்பு வெளிப்பட. ஆலம் உண்டான்: இறைவன். உருத்தான்: வெகுண்டான்.

452. புள்ளிய: புள்ளிகளை உடைய. அரவம்: பாம்பு. விடையான்: சிவபெருமான். உள்ளிய: நினைக்கின்ற. மெய்அன்பு உடையார்: அடியவர்கள் தள்ளிய: ஒதுக்கிய.

453. தாது: மகரந்தம். வாங்கி: ஒரு கையினால் வாங்கி.

454. வண்டு உளரும்: வண்டுகள் கிண்டுகின்ற. தண் துழாய் மாயோன்: குளிர்ந்த துளசி மாலையையுடைய திருமால். இறுமாப்பு: செருக்கு. புண்டரிகப்போது உறையும் புத்தேள்: தாமரைப்பூவில் இருக்கும் பிரமன். அண்டர்: தேவர். ஆலாலம் உண்டவன்: நஞ்சை உண்டவனான சிவபெருமான். பேறு: பயன்.

455. சேட்டுஆனை: பெரிய யானை. வானவ: இந்திரனே. செழியர்: பாண்டியர். வீரன்: உக்கிர குமார பாண்டியன். கோள்: வலிமை. தானம்; மதம். நால்கோட்டு: நான்கு கோடுகளை உடைய ஐராவதம்,

456 சவித்தமுனி பாதம் தலைக்கொண்டு, செங்கை
குவித்து,அமரர் தம்கோன், குறைஇரப்பார் ஐய!
அவித்தபொறி யாய்!எம் அரசும்கால் தள்ளும்
செவித்தறுகண் வேழமும், தீங்குடையர் அன்றோ? 16

457 அத்தகைய நீரால் சபித்தீர்; அடிகேள்!"மற்று
இத்தகைய சாபம் இனிவிடுமின்" என்றுஇரந்து,
கைத்தலங்கள் கூப்பிக் கரைந்தார்க்கு, இரங்கிஅருள்
வைத்தமுனி, பிறிது சாபம் வகுக்கின்றான். 17

458 சிந்தனை வாக்கிற்கு எட்டாச்
சிவன்அருள் அளித்த சேட
நிந்தனை, பரிகா ரத்தால்
நீங்காது; தலைமட் டாக
வந்தது முடிமட்டு ஆக;
மத்தமா வனம்மா ஆகி,
ஐந்திரு பஃதுஆண்டு எல்லை
அகன்றபின் பண்டைத்து ஆக. 18

459 என்றனன்; பிறிது சாபம்
இந்திரன் மகுட பங்கம்
ஒன்றிய செய்கை பின்னர்
உரைத்தும்;மற்று அஃது நிற்க,
நின்றவெள் ளானை வானம்
நீத்து,அறிவு இழந்து, நீலக்
குன்றுஎன, வனத்து வேழக்
குழாத்தொடு குழீஇயது அன்றே. 19

---

456. முனி: துருவாசன். அவித்த பொறியாய்: ஐம்பொறிகளைக் கெடுத்தவனே. கால் தள்ளும்: காற்றை வீசும். தறுகண்: அஞ்சாமை

457. நீரால்: குற்றத்தால். விடுமின்: நீக்கி அருளுக. கரைந்தார்க்கு: முறையிட்ட தேவர்களுக்கு. பிறிது சாபம்: வேறொரு சாபம்.

458. சிந்தனை: மனம் சேடம்: பிரசாதம். நிந்தனை: நிந்தித்த குற்றம். பரிகாரம்: பிராயச்சித்தம். தலைமட்டாக வந்தது முடிமட்டாக: தலை அளவில் வந்தது முடி அளவாகக் கடவது. மத்தமா: மதத்தைஉடைய யானை. வனம்மா: காட்டுயானை. பண்டைத்துஆக: முன் இயல்பினைஉடையதாகுக.

459. மகுடம்: முடி. செய்கை: செய்தி உரைத்தும்: கூறுவேம். வானம் நீத்து: தேவர் உலகினை அகன்று. நீலக்குன்று என: நீலமலை போலக் கருநிறமுடையதாகி. வேழக்குழாம்: யானைக் கூட்டம். குழீஇயது: கலந்தது.

460 மாவொடு மயங்கி, செங்கண்
மறம்பயில் காடும், முல்லைப்
பூவொடு வழங்கும் நீத்தப்
புறவமும், குறவர் தங்கள்
தேவொடு பயிலும் கல்லும்,
திரிந்துநூறு ஆண்டும் செல்ல,
காவொடு பயிலும் தெய்வக்
கடம்பமா வனம்புக்கு அன்றே. 20

461 புக்கு,உரல் வட்டத் திண்கால்
பொருவுஇல்தேவு இயலில் தீர்ந்த
மைக்கரும் களிறு, முக்கண்
மாதவன் அருள்வந்து எய்தத்
தக்கதோர் அமையம் சார,
மரகதம் தழைத்து மின்னும்
நக்கபொன் முளரி பூத்த
நளிர்கயம் தலைக்கண் டன்றே. 21

462 கண்டபோது அறிவு தோன்ற,
கயம்தலை குடைந்த போது
பண்டைய வடிவம் தோன்ற,
பரஞ்சுடர் அருட்கண் தோன்றக்
கொண்டதோர் பரமா னந்தக்
குறிஎதிர் தோன்ற, கும்பிட்டு,
அண்டர்நா யகனைப் பூசை
செய்வதற்கு அன்பு தோன்ற, 22

---

460. மாவொடு: காட்டானைகளோடு மயங்கி: கலந்து. மறம்பயில்: மறவர்கள் தங்கிய. காடு: பாலைநிலம். நீத்தம்: கான்யாறு. புறவம்: முல்லை நிலம். தே: தெய்வம். கல்: குறிஞ்சிநிலம். கா: சோலை கடம்ப மாவனம்: கடம்பவனம். புக்கன்று: புகுந்தது.

461. உரல் வட்டத்திண்கால்: உரலைப்போன்று வட்டமாகிய வலியகால். தேவுஇயல்: தெய்வத்தன்மை. தீர்ந்த: நீங்கிய. களிறு: வெள்ளையானை. முக்கண் மாதவன்: சிவ பெருமான். அமையம்: காலம். சார: பொருந்த. பொன்முளரி: பொற்றாமரை. நளிர்: குளிர்ந்த. தலைக்கண்டன்று: கண்டது

462. (இப்பாடல் குளகம்). ஆனந்தக்குறி: சிவலிங்கமூர்த்தி. அண்டர் நாயகன்: சொக்க லிங்கப் பெருமான். காட்சி அறிவுக்கும், அறிவு குடைதற்கும், குடைதல் வடிவம் தோன்ற லுக்கும், அருட்கண் தோன்றல் குறி எதிர்தோன்றலுக்கும் காரணங்களாம்,

463 தூம்புடைக் கையால் மொண்டு
மஞ்சனத் தூநீர் ஆட்டி,
தேம்புடை ஒழுகப் பள்ளித்
தாமமும் தெரிந்து சாத்தி,
பாம்புஉடைத்து ஆய வேணிப்
பரனைஅர்ச சிக்க, உள்ளத்து
ஆம்புடை அறிந்த எந்தை
யானையை நோக்கிக் கூறும். 23

464 "வந்தனை எவன்? நீ வேண்டும்
வரம்எவன்? உரைத்தி'' என்ன,
சிந்தையில் அன்பு கூர்ந்த
தெய்வத வேழம், தாழ்ந்து
முந்தையில் விளைவும் வந்த
முறைமையும் முறையால் கூறி,
எந்தையை அடையப் பெற்றேற்கு
இனிஒரு குறையுண் டாமோ. 24

465 என்புஅரவு, ஆரம் பூண்ட
எந்தை! இக் கரிகள் எட்டோடு
ஒன்பதாய், அடிய னேனும்
உன்னடி பிரியாது உன்தன்
முன்பதாய் இவ்வி . மானம்
முதுகுஉறச் சுமப்பல், என்றுஓர்
அன்பதாய் ஒன்றுஎன் உள்ளத்து
அடுத்ததால் அஃதே வேண்டும். 25

463. தூம்பு: தொளை. தேம்: தேன். பள்ளித்தாமம்: திருப்பள்ளித்தாமம். தெரிந்து. ஆராய்ந்து. வேணி: சடை. ஆம்புடை: (அன்பின்) திரட்சி. எந்தை: சிவபெருமான்.

464. எவன்: 1. எதன் பொருட்டு, 2. என்ன முந்தையில்: முற்பொழுதில். ஓகாரம்: எதிர்மறை.

465. என்பு: எலும்பு. அரவு: பாம்பு. கரி. யானை. முன்பதாய்: முன்பாக. அடுத்த தால்: பொருந்துதலால்.

466 இடையறு அன்பின் வேழம்
இங்ஙனம் கூற, விண்ணாடு
உடையவன் நம்பால் மெய்யன்பு
உடையவன்; அவனைத் தாங்கி
அடைவதே நமக்கு வேண்டும்
அகமகிழ்வு” என்னாப் பின்னும்
விடையவன் வரங்கள் நல்கி,
விடைகொடுத்து அருளி னானே. 26

467 விடைகொடு வணங்கி ஏகும்வெள் ளானை,
மேல்திசை அடைந்து,தன் பெயரால்
தடமும்,மற்று அதன்பால் அரனையும் கணேசன்
தன்னையும் கண்டு,அருச் சனைசெய்து,
இடையறு அன்பும் தானும்அங்கு இருக்கும்
எல்லை,இச் செய்திகேட்டு அருள்கூர்
கடவுளர் பெருமான் உழையரை விளித்துஎம்
களிற்றினைக் கொணர்கஎன விடுத்தான். 27

468 வல்லைவந்து அழைத்தார் தம்மைமுன் போக்கி,
வருவல்என்று எழுந்துகீழ்த் திசைஓர்
எல்லைவந்து ஓர்ஊர் தனதுபே ரால்கண்டு,
இந்திரேச் சுரம்என இறைவன்
தொல்லைவண் பெயரால் ஒன்றுகண்டு,அரனைத்
தூயபூ சனைசெய்துஅங்கு இருப்ப,
கல்லைவன் சிறகு தடிந்தவன் இன்னும்
களிறுவந் திலதுஎனப் பின்னும், 28

---

466. இடையறு: நீங்கா. வேழம்: (இங்கே) வெள்ளையானை. விண்ணாடு உடையவன்: தேவலோகத்தை உடையனான இந்திரன். நம்பால்: நம்மிடம். தாங்கி அடைவதே: சுமந்து செல்வதே. அகமகிழ்வு: உள்ளக்களிப்பு. விடையவன்: இடபவாகனத்தையுடைய இறைவன்.

467. தடம்: பொய்கை அரன்: சிவபிரான். கண்டு: பிரதிட்சைசெய்து. எல்லை: பொழுதில். கடவுளர் பெருமான்: தேவேந்திரன். உழையர்: அருகுளோர். கொணர்க: கொண்டுவருக.

468. வல்லை: விரைந்து. தனதுபேரால் கண்டு: தனது பேரால் அமைத்து. ஒன்று கண்டு: ஓர் சிவலிங்கம் அமைத்து. கல்; மலை. சிறகு தடிந்தவன்: சிறகுகளை வெட்டினவனாகிய இந்திரன். பின்னும்: மீளவும். (இப்பாடல் குளகம்).

469 மனத்தினும் கடிய தூதரை விடுப்ப,
வான்அடைந்து, இறைவனை வணங்கி,
புனத்தினும் கடிய கல்லினும் பன்னாள்
புன்கண்நோய் உறவரு சாபம்
கனத்தினும் கரிய கண்டனைக் கண்டு
களைந்ததும், கிளந்து,திக் கயத்தின்
இனத்தினும் கழிந்த தெய்வத வேழம்
இனிதுவீற்று இருந்தது மாதோ. 29

470 குடவயின் அயிரா வதப்பெரும் தீர்த்தம்
குடைந்து,அயி ராவத கணேசக்
கடவுளைத் தொழுது,ஐ ராவதேச் சுரத்துக்
கடவுளைப் பணிந்தவர், சாபத்
தொடர்பினும் பாவத் தொடர்பினும் கழிவர்;
சுராதிபன் களிறுசெல் நெறிபோய்
இடர்கெட வைகை படிந்துதென் கரையில்
இந்திரேச் சுரன்அடி பணிவோர், 30

471 இம்மையில் அறமுன் மூன்றால்
எய்திய பயனை எய்தி,
அம்மையின் மகவான் ஈர்ஏழ்
அரும்பதம் அளவும், வானில்
வெம்மைஇல் போக மூழ்கி
வெறுப்புவந்து அடைய, உள்ளச்
செம்மையில் விளைபே ரின்பச்
சிவகதிச் செல்வர் ஆவார். 31

---

469. கடிய: விரைந்த கடிய கல்: வலிய மலைகள். புன்கண்: துன்பம். கனத்தினும்: மேகத்தைக் காட்டிலும். கரியகண்டன்: கரியமிடற்றினை உடைய சோமசுந்தரக் கடவுள். களைந்தது: போக்கியது. கிளந்து: கூறி. கழிந்த: மிக்க

470. குடவயின்: மேற்குத் திசையிலுள்ள. பணிந்தவர்: தொழுதவர்கள். கழிவர்: நீங்குவர். சுராதிபன்: இந்திரன். இடர்கெட: துன்பம் நீங்க. படிந்து: நீராடி. (இப்பாடல் குளகம்).

471. இம்மை: இப்பிறவி. அறமுன் மூன்று; அறம், பொருள், இன்பம். அம்மை: மறுமை. மகவான்; இந்திரன். ஈர்ஏழ் பதினான்கு வெம்மைஇல்; வெப்பமில்லாத உள்ளச் செம்மை: மனத்தூய்மை.

## திருநகரம் கண்ட படலம்

472 தான ஆறு இழி புகர்முகத்து அடுகரி சாபம்
போன வாறுஉரை செய்தும்;மேல் புதுமதி முடிமேல்
வான ஆறினன் கடம்பமா வனம்,முது நகரம்
ஆன வாறுஅது தனைச்சிறிது அறிந்தவாறு இசைப்பாம். 1

473 இன்நரம்புஉளர் ஏழிசை எழால்மிடற்று அளிகள்
கின்னரம்பயில் கடம்பமா வனத்தினின் கீழ்சார்,
தென்னர் சேகரன் எனும்குல சேகரன் உலக
மன்னர் சேகரன் அரசுசெய்து இருப்பது மணவூர். 2

474 குலவும் அப்பெரும் பதிஇளம் கோக்களில் ஒருவன்,
நிலவும் மாநிதி போல்அநந் தனைமுதல் நியதி
பலவு மாம்சிவ தருமமும் தேடுவான்; பரன்பால்
தலைமை சான்றமெய் அன்பினன்; தனஞ்சயன் என்பான். 3

475 செல்வ மாநகர் இருந்து,மேல் திசைப்புலம் சென்று,
மல்லல் வாணிகம் செய்து,தன் வளம்பதி மீள்வான்,
தொல்லை ஏழ்பவக் கடற்கரை தோற்றுவித்து அடியார்
அல்லல் தீர்ப்பவன் கடம்பமா வனம்புகும் அளவில், 4

476 இரவி கண்மறைந்து ஏழ்பரி இரதமும் தானும்
உரவு நீர்க்கரும் கடலில்வீழ்ந்து ஒளித்தனன் ஆக,
இரவு நீள்மயங்கு இருள்வயின் தமியனாய் மெலியும்
அரவு நீர்ச்சடை அண்ணலுக்கு அன்பினோன் அங்கண், 5

---

472. தானம்: மதநீர். புகர்: புள்ளி. அடுகரி சாபம்: வெள்ளையானைச் சாபம். புதுமதி: பிறைச்சந்திரன். வான ஆறினன் கங்கை ஆற்றினை உடைய இறைவன். முதுநகரம்: பழைய நகரம்.

473. உளர்: தடவுதல. எழால்: எழுகின்ற. மிடறு: கண்டம். அளி. வண்டு. கின்னரம்: இசை.

474. குலவும்: விளங்குகின்ற. இளம்கோக்கள். வணிகர்கள். மாநிதி. பெருஞ்செல்வம். நியதி கடமைகள். பரன்பால்: சிவபெருமானிடத்து.

475. மல்லல். வளப்பம் ஏழ்பவக்கடல். ஏழுபிறப்பாகிய கடல். அல்லல்: துன்பம். (இப்பாடல் குளகம்).

476. இரவி. சூரியன். உரவு: வலிய. அரவு: பாம்பு. அங்கண: அவ்விடத்து. இதுவும் குளகமே.

## 3. திருநகரம் கண்டது



பொன்மய மான சடைமதிக் கலையின்
புத்தமுது உகுத்தனர்; அதுபோய்ச்
சின்மய மான தம்அடி அடைந்தார்ச்
சிவமயம் ஆக்கிய செயல்போல்
தன்மயம் ஆக்கி அந்நகர் முழுதும்
சாந்திசெய் தது;அது மதுர
நன்மயம் ஆன தன்மையால் மதுரா
நகரென உரைத்தனர் நாமம்.

477 வாங்கு நான்மருப்பு ஏந்திய மதமலை எருத்தம்
தாங்கி ஆயிரம் கரங்களால் தடவிஎண் திசையும்
தூங்கு காரிருள் துரத்துசெம் சுடர்எனச் சூழ்போய்
வீங்கு காரிருள் ஒதுக்கிய விமானநேர் கண்டான். 6

478 அடுத்து அணைந்தனன், அவிர்சுடர் விமானம்மீது அமர்ந்த
கடுத்த தும்பிய கண்டனைக் கண்டுதாழ்ந்து உவகை
மடுத்த நெஞ்சினன், அங்ஙனம் வைகிருள் கழிப்பான்
எடுத்த சிந்தையின் இருந்தனன்; இருக்கும்அவ் இருள்வாய், 7

479 சோம வாரம்அன்று; ஆதலால் சுரர்கள்அங்கு எய்தி,
வாம மேகலை மலைமகள் தலைமகன் மலர்ந்த
காமர் சேவடி பணிந்து,அவன் கங்குல்போல் கருதி,
யாமம் நான்கினும் அருச்சனை இன்புறப் புரிவார். 8

480 அண்டர் வந்ததும், அருச்சனை புரிவதும் அனைத்தும்,
தொண்டர் அன்பினுக்கு எளியவன் சுரர்தொழக் கறுத்த
கண்டன் இன்அருள் கண்ணினால், கண்டனன். நுதலில்
புண்டரம்பயில் அன்புடைப் புண்ணிய வணிகன், 9

481 நான மென்,பனி நறும்புனல், நாயகன் பூசைக்கு
ஆன நல்விரை வருக்கமும் அமரர்கைக் கொடுத்து,
ஞான வெண்மதிச் சடையவன் கோயிலின் ஞாங்கர்த்
தான்அமர்ந்து,அருச் சனைசெய்வான் தங்கள்நாயகனை. 10

---

477. வாங்கு: வளைந்த. நான் மருப்பு: நான்கு தந்தங்கள். மதமலை: யானை. எருத்தம்: பிடரி. துரத்து: ஓட்டுகின்ற. செஞ்சுடர்: சூரியன்.

478. அவிர்: விளங்குகின்ற. கடு: நஞ்சு. கண்டன்: திருமிடற்றினை உடைய இறைவன். இருள்வாய்: இருட்பொழுதில். அணைந்தனன், நெஞ்சினன், முற்றெச்சங்கள். (இப்பாடல் குளகம்).

479. சுரர்: தேவர். வாமம்: அழகு. மலைமகள் தலைமகன்: சிவபெருமான். காமர்: விருப்பம். அவன்கங்குல்: சிவராத்திரி.

480. அண்டர்: தேவர். கண்ணினால்: பார்வையால்.. நுதல்: நெற்றி. புண்டரம்: திருநீற்றுக்கீற்று. வணிகன் கண்டனன் என்று முடிபு கொள்க.

481. நானம்: கத்தூரி· விரை: மணம். ஞானம்: அறிவு வடிவாகிய. ஞாங்கர்: திருமுன்.

482 வள்ளல் தன்னைமெய் அன்பினால் அருச்சிசெய் வானோர்
உள்ள வல்வினை ஈட்டமும், கங்குலும் ஒதுங்க,
கள்ளம் இல்லவன் யாரையும் கண்டிலன், கண்டான்
தள்ள ரும்சுடர் விமானமேல் தனித்துறை தனியை. 11

483 ஆழ்ந்த சிந்தையன் அதிசயம் அடைந்து,சே வடிக்கீழ்த்
தாழ்ந்துள மூழ்ந்துஇரு கைகளும் தலைமிசைக் கூப்பி,
சூழ்ந்து தன்பதிக்கு ஏகுவான் ஒருதலை துணிந்து,
வாழ்ந்த அன்பினன் விடைகொடு வழிக்கொடு வந்தான். 12

484 முக்க டம்படு களிற்றினன் முகில்தவழ் கோயில்
புக்கு,அ டங்கலர்ச் சிங்கம்அன் னான்எதிர் புகழ்வான்,
திக்குஅ டங்கலும் கடந்தவெம் திகிரியாய்! நெருநல்
அக்க டம்பமா வனத்திலோர் அதிசயம் கண்டேன். 13

485 வல்லை வாணிகம் செய்துநான் வருவழி, மேலைக்
கல்அ டைந்தது வெம்கதிர்; கங்குலும் பிறப்பும்
எல்லை காணிய, கண்டனன் இரவிமண் டலம்போல்
அல்அ டும்சுடர் விமானமும் அதிற்சிவக் குறியும். 14

486 மாஅ லம்புதார் மணிமுடிக் கடவுளர் வந்து,அத்
தேவ தேவனை இரவெலாம் அருச்சனை செய்து,
போவது ஆயினர்; யானும்அப் பொன்னெடுங் கோயில்
மேவும் ஈசனை விடைகொடு மீண்டனன் என்றான். 15

---

482. வள்ளல்: சோமசுந்தரக் கடவுள். அருச்சி செய்: அருச்சித்த. உள்ள வல்வினை: மனத்தை ஈர்க்கும் வலிய தொழில். ஈட்டம்: கூட்டம். கங்குல்: இரவு. கள்ளம் இல்லவன்: வணிகன். தள்ளரும்: நீங்காத. தனி: சொக்கலிங்கப் பெருமான். கண்டிலன்: முற்றெச்சம்.

483. சிந்தையன்: வணிகன், சூழ்ந்து: வலமாக வந்து. ஒருதலை: ஒருவாறு. விடை கொடு: விடைபெற்று.

484. கடம்: மதம். களிற்றினன்: பாண்டியன். கோயில்: அரண்மனை. அடங்கலர்: பகைவர். திகிரி: ஆணை.

485. வல்லை: விரைவாக. மேலைக்கல்: மேற்கிலுள்ள மலை. வெம் கதிர்: சூரியன். இரவி மண்டலம்: சூரிய மண்டலம். அல்: இருள். கண்டனன்: பார்த்தேன்.

486. மா: வண்டு. தார்: மாலை. கடவுளர்: தேவர்கள். தேவதேவன்: சோமசுந்தரக் கடவுள்.

487 மூளும் அன்பினன் மொழிந்திட, முக்கண்எம் பெருமான்,
தாளும் அஞ்சலி கரங்களும் தலையில்வைத்து உள்ளம்,
நீளும் அன்பும்அற் புதமுமே நிரம்பநீர் ஞாலம்
ஆளும் மன்னவன் இருந்தனன்; போயினன் அருக்கன். 16

488 ஈட்டு வார்வினை ஒத்தபோது இருள்மலம் கருக
வாட்டு வார்,அவர் சென்னிமேல் மலரடிக் கமலம்
சூட்டு வார்,மறை கடந்ததம் தொல்உரு விளங்கக்
காட்டு வார்ஒரு சித்தராய்த் தோன்றினர் கனவில். 17

489 வடிகொள் வேலினய்! கடம்பமா வனத்தினைத் திருந்தக்
கடிகொள் காடுஅகழ்ந்து அணிநகர் காண்க!என உணர்த்தி,
அடிகள் ஏகினர்; கவுரியர் ஆண்தகை கங்குல்
விடியும் வேலைகண் விழித்தனன்; பரிதியும் விழித்தான். 18

490 கனவில் தீர்ந்தவன் நியதியின் கடன்முடித்து, அமைச்சர்
சினவில் தீர்ந்தமா தவர்க்கும்தன் கனத்திறம் செப்பி,
நனவில் கேட்டதும் கனவினில் கண்டதும் நயப்ப
வினவித்தேர்ந்துகொண்டு,எழுந்தனன்மேற்றிசைச்செல்வான்.19

491 அமைச்ச ரோடும்அந் நீபமா
வனம்புகுந்து, அம்பொன்
சமைத்து அவிழ்ந்தபொற் றுமரைத்
தடம்படிந்து, ஒளிவிட்டு
இமைத்து அலர்ந்தபொன் விமானம்மீது
இனிதுவீற்று இருந்தோர்
தமைச்ச ரண்பணிந்து, அஞ்சலி
தலையின்மேல் முகிழ்த்தான். 20

---

487. அன்பினன்: வணிகனாகிய தனஞ்சயன். நீளும்: ஓங்குகின்ற. அருக்கன். சூரியன்.

488. இருள் மலம்: ஆணவ மலம். மறை: வேதம். காட்டுவார்: காட்டுகின்ற இறைவன்.

489. திருந்த: திருத்தமாக. கடி: காவல். காடு அகழ்ந்து: காட்டினை அழித்து. அடிகள்: சிவபெருமான். கவுரியர்: பாண்டியர். விழித்தனன்: துயில் நீத்தான். பரிதி: சூரியன்.

490. தீர்ந்தவன்: பாண்டிய அரசன். நியதியின் கடன்: நாட்கடமைகள், சினவில் தீர்ந்த: கோபத்தினின்றும் விடுபட்ட. நயப்ப: விருப்பமுடன்.

491. நீபமா வனம்: கடம்பவனம். தடம்: குளம்: படிந்து: நீராடி. சரண்தமை: திருவடிகளை. முகிழ்த்தான்: கைகூப்பி வணங்கினன்.

492 அன்பு பின்தள்ள, முன்புவந்து அருட்கண்நீர்த்து ஏக,
என்பு நெக்கிட ஏகி,வீழ்ந்து இணையடிக் கமலம்
பொன்பு னைந்ததார் மௌலியில் புனைந்துஎழுந்து, இறைவன்
முன்பு நின்றுசொல் பதங்களால் தோத்திரம் மொழிவான். 21

493 சரணம் மங்கைஓர் பங்குஉறை சங்கர! சரணம்;
சரணம் மங்கலம் ஆகிய தனிமுதல்! சரணம்;
சரணம் மந்திர வடிவமாம் சதாசிவ! சரணம்;
சரணம் உம்பர்கள் நாயக! பசுபதி! சரணம். 22

494 ஆழி ஞாலம்மேல் ஆசையும், அமரர்வான் பதம்மேல்
வீழும் ஆசையும் வெறுத்தவர்க்கு அன்றி,மண் ஆண்டு
பீழை மூழ்கிவான் நரகொடு பிணிபடச் சுழலும்
ஏழை யேங்களுக்கு ஆவதோ? எந்தைநின் கருணை. 23

495 சூளது ஆம்மறைச் சென்னியும் தொடத்தொட நீண்ட
நீளல் நீ;உனக்கு அன்பிலம் ஆயினும், நீயே
மூள அன்புதந்து, எம்குடி முழுவதும் பணிகொண்டு
ஆள வேகொல்இக் கானகத்து அமர்ந்தனை என்று, 24

496 சுரந்த அன்புஇரு கண்வழிச் சொரிவபோல் சொரிந்து
பரந்த ஆறொடு, சிவானந்தப் பரவையுள் படிந்து,
வரந்த வாதமெய் அன்பினால் வலங்கொடு புறம்போந்து,
அரந்தை தீர்ந்தவன் ஒருசிறை அமைச்சரோடு இருந்தான். 25

---

492. பின் தள்ள: பின்னே நின்று முன்நோக்கித்தள்ளவும். என்பு: எலும்பு. நெக்கிட: கரைந்து உருகுமாறு.

494. ஆழி: கடல். வான்பதம்: உயர்ந்த பதவிகள். பீழை: துன்பம். வான்: சுவர்க்கம். நரகு: நரகம். ஏழையேங்கள்: அறிவிலேமாகிய எங்கட்கு.

495. சூளது: சூளத்தக்கது. மறை: வேதம். தொடத்தொட: தொடும்படி அணுகும் தோறும். நீளல்நீ: நீண்டுசெல்கின்ற நீ. தந்து: அருள்செய்து, என்று: என்று கூறி. (இப்பாடல் குளகம்).

496. ஆறு: கண்ணீராகிய நதி. பரவை: கடல். வரம்: மேன்மை. தவாத: குறையாத. அரந்தை: துன்பம். தீர்ந்தவன்: நீங்கியவனாகிய பாண்டியன். சிறை: பக்கம்.

497 ஆய வேலையின் மன்னவன் ஆணையால், அமைச்சர்
மேய ஏவலர் துறைதுறை மேவினர் விடுப்ப,
பாய வேலையின் ஆர்த்தனர் வழிக்கொடு படர்ந்தார்
சேய காடுஎறிந்து அணிநகர் செய்தொழில் மாக்கள். 26

498 வட்ட வாய்மதிப் பிளவின்வெள் வாய்க்குயம் நவியம்
இட்ட தோளினர், யாப்புடைக் கச்சினர், இரும்பின்
விட்ட கார்ஒளி மெய்யினர், விசிகொள்வார் வன்தோல்
தொட்ட காலினர், வனம்எறி தொழிலினர் ஆனார். 27

499 மறியும் ஓதைவண்டு அரற்றிட மரம்தலை பனிப்ப
எறியும் ஓதையும், எறிபவர் ஓதையும், இரங்கி
முறியும் ஓதையும், முறிந்துவீழ் ஓதையும், முகில்வாய்ச்
செறியும் ஓதையும், கீழ்ப்பட, மேற்படச் செறியும். 28

500 ஒளிறு தாதொடு போதுசெந் தேன்உக ஒலித்து
வெளிறுஇல் வன்மரம் சினைஇற வீழ்வ,செங் களத்துப்
பிளிறு வாயதாய் நிணத்தொடு குருதிநீர் பெருகக்
களிறு கோடுஇற மாய்ந்துவீழ் காட்சிய அனைய. 29

501 பூஅ டைந்தவண்டு இனம்அயல் புறவொடும் பழனக்
காஅ டைந்தன; பறவைவான் கற்பகம் அடைந்த:
கோஅ டைந்திட ஒதுங்குறும் குறும்புபோல் செறிந்து,
மாஅ டைந்தன மாடுஉள வரைகளும் காடும். 30

---

497. மேவினர் விடுப்ப: செல்லுமாறு அனுப்ப. பாய வேலை: பரந்த கடல். எறிந்து: அழித்து. தொழில் மாக்கள்: வினைஞர்கள்.

498. மதிப்பிளவு: சந்திரனது பிளவு போன்று. குயம்: கொடுவாள். நவியம்: கோடரி. வன்தோல்: வலிய செருப்பு

499. மறியும்: திரும்பத் திரும்ப. ஓதை: ஓசை. பனிப்ப: நடுங்க. எறியும்: வெட்டும். இரங்கி: கலங்கி. முகில்: மேகம். செறியும் ஓதை: இடிக்கும் இடிஓசை. மேற்படச் செறியும்: மேற்பட்டு ஒலிக்கும்.

500. தாது: மகரந்தம். போது: மலர். உக: சிந்த. வெளிறுஇல்: வயிரம்பாய்ந்த. சினை. கிளைகள். இற: முறியும்படி. செங்களம்: போர்க்களம். கோடு: தந்தம். மரம் வீழ்வது களத்தில் யானை வீழ்வதைப் போன்றது. போதுக்கு நிணமும், தேனுக்குக் குருதியும், கிளைக்குக் கோடும், மரம் ஒலித்தலுக்குப் பிளிறலும் உவமை.

501. வண்டு இனம்: வண்டுக் கூட்டங்கள். புறவு: முல்லை நிலம். பழனம்: மருதநிலம். கா; சோலை, குறும்பு: குறுநில மன்னர்கள், மா: விலங்கு, மாடு: பக்கம், வரை: மலை·

502 இருள்நி ரம்பிய வனமெலாம் எறிந்து,மெய் உணர்ந்தோர்
தெருள்நி றைந்தசிந் தையின்வெளி செய்து,பல் உயிர்க்கும்
அருள்நி றைந்துபற்று அறுத்துஅரன் அடிநிழல் அடைந்த
கருணை அன்பர்தம் பிறப்புஎன, வேரொடும் களைந்தார். 31

503 களைந்து, நீள்நிலம் திருத்தி,செந் நெறிபடக் கண்டு,
வளைந்து நன்னகர் எடுப்பதுஎவ் வாறு?என, தேறல்
விளைந்து தாதுஉகு தார்முடி வேந்தன்மந் திரரோடு
அளைந்து அளாவிய சிந்தையோடு இருந்தனன்; அங்கண், 32

504 மெய்யர் அன்புதோய் சேவடி வியன்நிலம் தீண்ட,
பொய்அ கன்றவெண் நீறுஅணி மேனியர், பூதிப்
பையர், நள்ளிருள் கனவில்வந்து அருளிய படியே
ஐயர் வல்லைவந்து அருளினர் அரசுஉளம் களிப்ப. 33

505 கனவி லும்பெரும் கடவுளர் காண்பதற்கு அரியார்,
நனவி லும்வெளி வந்தவர் தமைஎதிர் நண்ணி,
நினைவில் நின்றதாள் இறைஞ்சிநேர் நின்றுநல் வரவு
வினவி, ஆதனம் கொடுத்தனன் மெய்யுணர் வேந்தன். 34

506 தென்னர் அன்பினில் அகப்படு சித்தர்,தாம் முன்னர்ச்
சொன்ன ஆதிநூல் வழிவரு சார்புநூல் தொடர்பால்,
நன்னர் ஆலயம் மண்டபம் கோபுரம் நகரம்
இன்ன வாறுசெய் எனவகுத்து இம்மென மறைந்தார். 35

---

502. எறிந்து: அழித்து. மெய்: மெய்ப்பொருள். தெருள்: தெளிவு. பற்று: இருவகைப் பற்றும். கருணை அன்பர்: அடியார்கள். பிறவியை வேரொடும் களைதல் போல, மரங்களை வேரொடும் அகழ்ந்தார்கள்.

503. தேறல்: தேன். தார்: மாலை. மந்திரர்: அமைச்சர். அங்கண்: அவ்விடத்து. (இப்பாடல் குளகம்).

504. மெய்யர்: உண்மை அடியார்கள். மேனியர்: திருமேனி உடையராய். பூதிப்பையர்: திருநீற்றுப்பை உடையராய். ஐயர்: சோமசுந்தரக் கடவுள். வல்லை: விரைந்து.

505. பெருங்கடவுளர்: அரி அயன் முதலியோர். நினைவில்: மனத்தில். ஆதனம்: இருக்கை.

506. ஆதிநூல்: முதல் நூல். வழிவரு: வழிவந்த. இம்மென; விரைந்து.

507 மறைந்து எவற்றினும் நிறைந்தவர் மலர்அடிக்கு, அன்பு
நிறைந்த நெஞ்சுஉடைப் பஞ்சவன், நிலத்துமேம் பட்டுச்
சிறந்த சிற்பநூல் புலவரால் சிவபரம் சுடர்வந்து
அறைந்து வைத்தவாறு ஆலயம் அணிநகர் காண்பான். 36

508 மறைபயில் பதும மண்டபம், அருத்த
மண்டபம், மழைநுழை வளைவாய்ப்
பிறைபயில் சிகைமா மண்டபம், அறுகால்
பீடிகை, திசையெலாம் பிளக்கும்
பறைபயில் நிருத்த மண்டபம், விழாக்கொள்
பன்மணி மண்டபம், வேள்வித்
துறைபயில் சாலை, திருமடைப் பள்ளி
சூழ்உறை தேவர்தம் கோயில், 37

509 வலவயின் இமய வல்லிபொற் கோயில்,
மாளிகை அடுக்கிய மதில்,வான்
நிலவிய கொடிய நெடியசூ ளிகைவான்
நிலாவிரி தவளமா ளிகை,மீன்
குலவிய குடுமிக் குன்றுஇவர் செம்பொன்
கோபுரம், கொண்டல்கண் படுக்கும்
சுலவுஎயில், அகழிக் கிடங்குகம் மியநூல்
தொல்வரம்பு எல்லைகண்டு அமைத்தான். 38

510 சித்திரம் நிரைத்த பீடிகை மறுகும்,
தெற்றிகள், வாள்நிலாத் தெளிக்கும்
நித்திலம் நிரைத்த விழாவரு வீதி,
நிழல்மணிச் சாளர ஒழுக்கப்
பித்திகை மாடப் பெருந்தெரு, கவலை,
பீடுசால் சதுக்கம்,நற் பொதியில்,
பத்தியில் குயின்ற மன்று,செய் குன்று,
பருமணி மேடை,ஆடு அரங்கு, 39

---

507. பஞ்சவன்: பாண்டியன். காண்பான்: உண்டாக்குகின்றான்.

508. மழை: மேகம். பறை: பல்இயங்கள். வேள்வித் துறைபயில் சாலை: யாகசாலைகள். சூழ்உறைதேவர்: சுற்றிவாழும் பரிவாரத் தெய்வங்கள். (இப்பாடல் குளகம்)

509. வலவயின்: வலப்பக்கத்தில். சூளிகை: இறப்பு. இவர்: உயர்ந்த. கொண்டல்: மேகம். கண்படுக்கும்: உறங்கும் சுலவுஎயில்: சுற்று மதில். கம்மிய நூல்: சிற்பநூல்.

510. பீடிகைமறுகு: கடைவீதிகள். தெற்றி: தெற்றியம்பலம். நித்திலம்: முத்து. பித்திகை: சுவர். கவலை: முச்சந்தி: சதுக்கம். நாற்சந்தி. பொதியில்: பொதுஇடங்கள். பத்தி: வரிசை. ஆடு அரங்கு: நாடக அரங்கம். (இப்பாடல் குளகம்)

511 அருந்தவர் இருக்கை, அந்தணர் உறையுள்,
அரசர்ஆ வணம்,ஒல வணிகப்
பெருந்தெரு, நல்வே ளாளர்பேர் அறம்சால்
பெருங்குடி, ஏனைய கரிதேர்
திருந்திய பரிமா நிலைக்களம், கழகம்,
தீம்சுவை ஆறுநான்கு உண்டி
இரந்தவர்க்கு அருத்தும் நல்லறச் சாலை,
இனையன பிறவும்நன்கு அமைத்தான். 40

512 துணிகயம், கீழ்நீர்க் கூவல்,பூ ஓடை,
தொடுகுளம், பொய்கை,நந் தவனம்,
திணிமலர்ச் சோலை, துடவை, உய்யானம்,
திருநகர்க்கு அணிபெறச் செய்து,
மணிமலர்த் தாரோன் மாளிகை தனக்குஅம்
மாநகர் வடகுண பாற்கண்டு
அணிநகர் சாந்தி செய்வது குறித்தான்;
அண்ணலார் அறிந்துஇது செய்வார். 41

513 பொன்மய மான சடைமதிக் கலையின்
புத்தமுது உகுத்தனர்; அதுபோய்ச்
சின்மய மான தம்அடி அடைந்தார்ச்
சிவமயம் ஆக்கிய செயல்போல்
தன்மயம் ஆக்கி அந்நகர் முழுதும்
சாந்திசெய் தது;அது மதுர
நன்மயம் ஆன தன்மையால் மதுரா
நகரென உரைத்தனர் நாமம். 42

---

511. ஆவணம்: வீதி. கழகம்: கல்விச்சாலைகள். நான்கு உண்டி: உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன.

512. துணி: தெளிந்த. கயம்: குளம். கூவல்: கிணறு. துடவை: தோட்டம். வடகுணம்: வடகிழக்கு. அண்ணலார்: சிவபெருமான். செய்வார்: செய்வாராயினர்.

513. உகுத்தனர்: சிந்தினர். சின்மயம்: ஞானமயம். சாந்தி: தூய்மை.

514 கீழ்த்திசைக் கரிய சாத்தனும், தென்சார்
கீற்றுவெண் பிறைநுதல் களிற்றுக்
கோட்டுஇளம் களபக் கொங்கைஅன் னையரும்,
குடவயின் மதுமடை உடைக்கும்
தோட்டுஇளம் தண்அம் துழாய்அணி மௌலித்
தோன்றலும், வடவயின் தோடு
நீட்டுஇரும் போந்தின் நிமிர்குழல் எண்தோள்
நீலியும் காவலா நிறுவி, 43

515 கைவரை எருத்தில் கனவரை கிடந்த
காட்சியில், பொலிந்துஒளிர் கோயில்
மைவரை மிடற்று மதுரைநா யகரை
மரபுஉளி அருச்சனை புரிவான்,
பொய்வரை மறைஆ கமநெறி ஒழுகும்
புண்ணிய முனிவரை ஆதி
சைவரைக் காசிப் பதியினில் கொணர்ந்து
தலத்தினில் தாபனம் செய்தான். 44

516 உத்தம குலத்து நாற்பெரும் குடியும்,
உயர்ந்தவும் இழிந்தவும் மயங்க
வைத்தவும் ஆன புறக்குடி மூன்றும்,
மறைவழுக் காமனு வகுத்த
தத்தம நெறிநின்று ஒழுக,வை திகமும்
சைவமும் தருமமும் தழைப்ப,
பைத்துஎழு திரைநீர் ஞாலமேல் திலகம்
பதித்தென நகர்வளம் படுத்தான். 45

---

514. சாத்தன்: ஐயனர். நுதல்: நெற்றி. அன்னையர்: சத்தமாதர்கள். குடவயின்: மேற்குத் திசையில். மது: தேன். தோடு: இதழ். துழாய்: துளசி. தோன்றல்: திருமால். தோடு: மடல். இரும்: கரிய. போந்து: பனை. குழல்: கூந்தல். நீலி: காளிதேவி. (இப்பாடல் குளகம்)

515. கை வரை: யானை. எருத்து: பிடரி. கனவரை: பொன்மலை. காட்சியில்: காட்சிபோல். பொய் வரை: பொய்மை நீங்குகின்ற.

516. நாற்பெருங்குடி: அந்தணர், அரசர், வணிகர், வேளாளர். பைத்து: பசுமை உடையதாய்.

517 அன்றுதொட்டு அரசன் அந்நகர் எய்தி,
அணிகெழு மங்கலம் இயம்ப,
என்றுதொட்டு இமைக்கும் மனையின்மங் கலநாள்
எய்தினான் இருந்து,முப் புரமும்
குன்றுதொட்டு எய்தான் கோயில்மூன்று உறுப்பும்
குறைவில்பூ சனைவழாது ஓங்க,
கன்றுதொட்டு எறிந்து கனிஉகுத் தான்போல்
கலிதுரந்து அரசுசெய் நாளில், 46

518 பவநெறி கடக்கும் பார்த்திவன், கிரணம்
பரப்புஇளம் பரிதிபோல், மலயத்
துவசனைப் பயந்து, மைந்தன்மேல் ஞாலம்
சுமத்தி,நாள் பலகழித்து, ஒருநாள்,
நவவடிவு இறந்தோன் ஆலயத்து எய்தி,
நாதனைப் பணிந்து,மூ வலம்செய்து,
உவமைஇல் இன்ப அருள்நிழல் எய்தி,
ஒன்றிஒன் றுநிலை நின்றான். 47

---

517. என்று: சூரியன். எய்தினான்: முற்றெச்சம். எய்தான்: இறைவன். மூன்றுஉறுப்பு: நித்தியம், நைமித்திகம், பிராயச்சித்தம். கனி: விளங்கனி. உகுத்தான்: திருமால். (இப்பாடல் குளகம்).

518. பவநெறி: பிறவிக்குக் காரணமான வழி. பார்த்திவன்: குலசேகர பாண்டியன். கிரணம்: ஒளி. பரப்பி: வீசி. பரிதி: சூரியன். மலயத்துவசன்: மலயத்துவசபாண்டியன். பயந்து: பெற்று. ஞாலம் சுமத்தி: அரசுப் பாரத்தைச் சுமத்தி. நவவடிவு இறந்தோன்: ஒன்பது வடிவங்களையும் கடந்த சோமசுந்தரக் கடவுள். மூ: மும்முறை. ஒன்றி ஒன்றுநிலை: சேர்ந்தும் சேராத இரண்டற்ற நிலை.

## 4. தடாதகைப் பிராட்டியார் திருஅவதாரம்



தெள்அமுத மென்மழலை சிந்த,இள மூரல்
முள்எயிறு அரும்ப,முலை மூன்றுடையது ஓர்பெண்
பிள்ளைஎன, மூஒரு பிராயமொடு நின்றாள்;
எள்ளரிய பல்உயிரும் எவ்வுலகும் ஈன்றாள். 537

# தடாதகைப் பிராட்டியார் திருஅவதாரப் படலம்

519 கன்னிஒரு பங்கினர் கடம்பவனம் எல்லாம்
நன்னகரம் ஆனது நவின்றும்;உலகு ஈன்ற
அன்னைமகள் ஆகி,மல யத்துவச னாகும்
தென்னன்இடை வந்துமுறை செய்தது,உரை செய்வாம். 1

520 மனுஅறம் உவந்துதன் வழிச்செல நடத்தும்
புனிதன்;மல யத்துவசன்; வென்றிபுனை பூணான்;
கனிஅமுதம் அன்னகரு ணைக்குஉறையுள்; காட்சிக்கு
இனியன்;வட சொல்கடல், தமிழ்க்கடல் இகந்தோன். 2

521 வேனில்விறல் வேள்வடிவன்; வேட்கைவிளை பூமி
ஆனமட வார்கள்,பதி னாயிரவர் உள்ளான்;
வான்ஒழுகு பானுவழி வந்துஒழுகு சூர
சேனன்மகள் காஞ்சனையை மன்றல்வினை செய்தான். 3

522 கண்ணுதலை முப்பொழுதும் வந்துபணி கற்றான்;
எண்ணில்பல நாள்மகவுஇ லாவறுமை எய்திப்
பண்ணரிய தானதரு மம்பலவும் ஆற்றி,
புண்ணியம் நிரம்புபரி வேள்விபுரி குற்றான். 4

523 ஈறுஇல்மறை கூறும்முறை எண்ணிஒரு தொண்ணூற்று
ஆறினொடு மூன்றுமகம் ஆற்ற,அம ரேசன்
நூறுமக மும்புரியின் என்பதம்நொ டிப்பின்
மாறும்என, மற்றுஅதனை மாற்றிஇது சாற்றும். 5

---

519 கன்னி ஒரு பங்கினர்: உமையொருபாகன். நவின்றும்: கூறினோம். உலகு ஈன்ற அன்னை: உலகனைத்தையும் பெற்ற உமாதேவியார் மகளா ஆகி: புதல்வியாய்த் தோன்றி மலயத்துவசனாகும் தென்னன் இடை: மலயத்துவச பாண்டிய மன்னனிடத்து. முறை செய்தது: அரசாட்சி செய்தது.

520. மனுஅறம்: மனுதருமம். உவந்து: மகிழ்ந்து. நடத்தும்: செங்கோலோச்சும். புனிதன்: தூய்மையன். வென்றி புனை பூணான் வெற்றியையே தான் அணியும் அணிகலனாக உடையவன் கனி அமுதம்: சுவைமுதிர்ந்த அமுதம். உறையுள்: தங்குமிடம். வடசொல்: வடமொழி. இகந்தோன்: கடந்தவன். 'தென்சொல் கடந்தான், வடசொற் கடற்கு எல்லை தேர்ந்தான்' என்ற கம்பராமாயணப் பாடல் ஈண்டு நோக்கற்பாலது.

521. வேனில்விறல் வேள். வேனில் காலத்து வெற்றி கொள்ளும் மன்மதன். வடிவன்: உருவன் வேட்கை விளைபூமி: காமப்பயிர் விளைகின்ற பூமி. மடவார்கள்: காமக்கிழத்தியர். வான் ஒழுகு: வானில் செல்லும். பானுவழி: சூரியன் மரபில். ஒழுகு: கடைப்பிடிக்கும். மன்றலவினை: திருமணம். தயரதன் அறுபதினாயிரம் காமக் கிழத்தியரைப் பெற்றிருந்தான் என்ப.

522. கண்ணுதல்: சோமசுந்தரக்கடவுள். எண்ணில்: அளவிறந்த. மகவு: பிள்ளைப்பேறு. பண்ணரிய: செய்வதற்கு அரிய. ஆற்றி· செய்து நிரம்பு· நிரம்பிய. பரிவேள்வி: அசுவமேத யாகம். புரிகுற்றான்: செய்யலுற்றான்.

523. ஈறுஇல்: அழிவில்லாத. மகம்: வேள்வி. அமரேசன்: இந்திரன். பதம்; இந்திரப் பதவி,

524 நன்பொருள் விரும்பினை; அதற்குஇசைய நூலம்
இன்புறு மகப்பெறும் மகத்தினை இயற்றின்,
அன்புறு மகப்பெறுதி என்று,அமரர் நாடன்
தன்புலம் அடைந்திடலும், நிகும்பநகு தாரான், 6

525 மிக்கமக வேள்விசெய் விருப்புடையன் ஆகி,
அக்கணம் அதற்குஉரிய யாவையும் அமைத்து,
தக்கநிய மத்து,உரிய தேவியோடு சாலை
புக்கனன், இருந்துமக வேள்விபுரி கிற்பான். 7

526 ஆசுஅறும றைப்புலவர் ஆசிரியர் காட்டும்
மாசுஅறுச டங்கின்வழி மந்திரம், உதாத்தம்,
ஓசைஅனு தாத்தம்,சொரி தம்தழுவ ஓதி,
வாசவன் இருக்கையில் இருந்துஎரி வளர்ப்பான். 8

527 விசும்புநில னும்திசையும் வேள்விஅடு சாலைப்
பசும்புகை படர்ந்துஒரு படாம்என மறைப்ப,
தசும்புபடு நெய்பொரி சமித்தினெடு வானோர்க்கு
அசும்புபடும் இன்அமுதின் ஆகுதி மடுத்தான். 9

528 ஐம்முகன் அனாதிபர மாத்தன்உரை ஆற்றல்,
நெய்முக நிறைத்து,அழல் நிமிர்ந்துவரும் எல்லை,
பைம்முக அராஅணி பரஞ்சுடர் தனிப்ப,
மைம்முக நெடுங்கண்இம வான்மனைவி நாண, 10

---

524. நன்பொருள்: நன்மகப்பேறு. நிகும்பம்: வேம்பு. இப்பாடல் குளகம்.

525. மிக்க: நலமிக்க. மகவேள்வி: புத்திரகாமேட்டியாகம். தக்க: தகுந்த. நியமத்து: நியமத்துடன். தேவி: மனைவி. சாலை: வேள்விச்சாலை. புரிகிற்பான்: செய்யத் தொடங்கினன்.

526. ஆசுஅறு: குற்றமற்ற. உதாத்தம்: எடுத்தல் ஓசை. அனுதாத்தம்: படுத்தல் ஓசை. சொரிதம்: நலிதல் ஓசை. வாசவன் இருக்கை: கீழ்த்திசை.

527. விசும்பு: ஆகாயம். படாம்: போர்வை. தசும்பு: குடம். சமித்து: ஓமவிறகு. அசும்பு: ஊற்று. ஆகுதி: வேள்விப்பொருள்

528. ஐம்முகன், அனாதி, பரமாத்தன்: சிவபெருமான். உரை ஆற்றல்: சொன்னவாறு. நெய் முகநிறைத்து: நெய்யை ஓமகுண்டத்தில் நிறைத்து. அழல்: தீ. நிமிர்ந்து: வளர்ந்து. எல்லை: பொழுது பைம்முக அரா அணி பரஞ்சுடர்: படத்தையுடைய பாம்பை அணிந்த சிவ பரஞ்சோதி. தனிப்ப: தனிமையாக. மைம்முக நெடுங்கண்: மைதீட்டிய நீண்ட கண். இப்பாடல் குளகம்.

529 வள்ளல்,மலய த்துவச மீனவன் வலத்தோள்
துள்ள,மனை காஞ்சனை சுருங்கிய மருங்குல்
தள்ள,எழு கொங்கைகள் ததும்ப,நிமிர் தீம்பால்
வெள்ளம்ஒழு க,கரிய வேல்கண் இடன் ஆட, 11

530 இவ்உலகம் அன்றி,உலகு ஏழும்மகிழ்வு எய்த,
சைவமுதல் ஆயின தவத்துறை நிவப்ப,
ஔவியம் மறம்கெட, அறம்குது கலிப்ப,
தெய்வமறை, துந்துபி திசைப்புலன் இசைப்ப, 12

531 மைம்மலர் நெடுங்கண்அர மங்கையர் நடிப்ப,
மெய்ம்மன மொழிச்செயலின் வேறுபடல் இன்றி,
அம்மதுரை மாநகர்உ ளார்அக மகிழ்ச்சி
தம்மைஅறி யாதன தலைத்தலை சிறப்ப, 13

532 மாந்தர்பயில் மூஅறுசொல் மாநில வரைப்பில்
தீம்தமிழ் வழங்குதிரு நாடுஅது சிறப்ப,
ஆய்ந்ததமிழ் நாடுஅரசு அளித்துமுறை செய்யும்
வேந்தர்களின் மீனவர் விழுத்தகைமை எய்த, 14

533 நொய்துஅழல் எரிக்கடவுள் நோற்றபயன் எய்த,
கொய்தளிர் எனத்தழல் கொழுந்துபடு குண்டத்து,
ஐதுஅவிழ் இதழ்க்கமலம் அப்பொழுது அலர்ந்துஓர்
மொய்தளிர் விரைக்கொடி முளைத்துஎழுவது என்ன, 15

---

529. மீனவன்: பாண்டியன். துள்ள: துடிக்க. மனை. மனைவி. சுருங்கிய மருங்குல்: நுண்ணிய இடை. தள்ள: வளைய. ததும்ப: தளும்ப. நிமிர்: பெருகிய. தீம்பால்: இனிய பால். வேல்கண்: வேல்போன்ற கண். இடன் ஆட: இடக்கண் துடிக்க. (இப்பாடலும் குளகம்).

530. தவத்துறை: தவநெறி. நிவப்ப: மேலோங்க. ஔவிய மறம்: பொறாமை முதலிய பாவங்கள். துந்துபி: தேவதுந்துபி. திசைப்புலன்: திசையிடங்கள். இசைப்ப: ஒலிக்க. (இப்பாடல் குளகம்).

531. (இப்பாடல் குளகம்)

532. பயில்: வழங்குகின்ற. மூ அறு சொல்: பதினெட்டு மொழிகள். ஆய்ந்த: சங்கம் இருந்து ஆராய்ந்த. மீனவர்: பாண்டியர். விழுத்தகைமை: சிறந்த பெருமை. (இப்பாடலும் குளகம்).

533. எரிக்கடவுள்: தீக்கடவுள். குண்டம்: வேள்விக்குண்டம். ஐது: அழகிதாக. விரை: மணம். (இப்பாடலும் குளகம்)

534 விட்டுஇலகு சூழியம் விழுங்குசிறு கொண்டை
வட்டமதி வாய்க்குறு முயற்கறையை மான,
கட்டிஅதில் நாற்றிய கதிர்த்தரள மாலை
சுட்டியதில் விட்டொழுகு சூழ்கிரணம் ஒப்ப, 16

535 தீம்குதலை இன்அமுதம் மார்பின்வழி சிந்தி
யாங்கு,இள நிலாஒழுகும் ஆரவடம் மின்ன,
வீங்குஉடல் இளம்பரிதி வெம்சுடர் விழுங்கி,
வாங்குகடல் வித்துருமம் மாலைஒளி கால, 17

536 சிற்றிடை வளைந்தசிறு மென்துகில் புறம்சூழ்
பொன்திரு மணிச்சிறிய மேகலை புலம்ப,
வில்திரு மணிக்குழை விழுங்கிய குதம்பை
சுற்றுஇருள் கடிந்துசிறு தோள்வருடி ஆட, 18

537 தெள்அமுத மென்மழலை சிந்த,இள மூரல்
முள்எயிறு அரும்ப,முலை மூன்றுடையது ஓர்பெண்
பிள்ளைஎன, மூஒரு பிராயமொடு நின்றாள்;
எள்ளரிய பல்உயிரும் எவ்வுலகும் ஈன்றாள். 19

538 குறுந்தளிர்மெல் அடிக்கிடந்த சிறுமணிநூ
புரம்சதங்கை குழறி ஏங்க,
நறுந்தளிர்போல் அசைத்து,தளர் நடைஒதுங்கி,
மழலை,இள நகையும் தோன்ற,
பிறந்தபெரும் பயன்பெறுபொன் மாலைமடி
இருந்தொருபெண் பிள்ளை ஆனாள்;
அறந்தழுவு நெறிநின்றோர்க்கு இகம்,போகம்,
வீடுஅளிக்கும் அம்மை அம்மா! 20

---

534. இலகு: விளங்குகின்ற. சூழியம்: கொண்டை அணி. நாற்றிய: தொங்கவிட்ட. தரளமாலை: முத்து மாலை. சுட்டியது: மேற்கூறப்பட்ட சந்திரன். சூழியம் மதியையும், கொண்டை களங்கத்தையும், முத்துமாலை சந்திர கிரணங்களையும் ஒக்கும். (இப்பாடலும் குளகம்)

535. அமுதம்: வாயூறல். வித்துருமம். பவளம். (இப்பாடலும் குளகம்)

536. துகில்: ஆடை. புலம்ப: ஒலிக்க. வில்: ஒளி. குதம்பை: காதணி. கடிந்து: ஓட்டி. (இப்பாடலும் குளகம்)

537. தெள் அமுத: தெளிந்த அமுதம் போன்ற. சிந்த: தோன்ற. இளமூரல்: புன்னகை. முள்எயிறு: கூரிய பற்கள். அரும்ப: வெளிப்பட. மூஒரு பிராயம்: மூன்றுவயது. எள்அரிய: இகழ்தலில்லாத.

538. தளிர்குறுமெல் அடி: தளிர்போன்ற சிறிய மெல்லிய திருவடி. நூபுரம்: சிலம்பு. குழறி ஏங்க கலந்து ஒலிக்க. நறும்· நறிய. இளநகை: புன்னகை. பொன்மாலை: காஞ்சன மாலை. அறம் தழுவுநெறி நின்றோர்: அறத்தொடு பொருநதிய நன்னெறியில் ஒழுகுவோர். அம்மை: உமையம்மை.

539 செய்யவாய் வெளிருது, துணைமுலைக்கண்
 கருகாது, சேல்போல் நீண்ட
மையவாய் மதர்த்தகருங் கண்பசவாது,
 ஐயிரண்டு மதியம் தாங்காது,
ஐயஆ லிலைவருந்தப் பெருது,பெறு
 மகவைஎடுத்து அணைத்தாள்; மோந்தாள்;
துய்யவாய் முத்தங்கொண்டு இன்புற்ருள்;
 முன்பெற்ற தோகை அன்னுள். 21

540 பரை,ஆதி விருப்பு,அறிவு, தொழிலாகி,
 உலகமெலாம் படைத்து, காத்து,
வரையாது துடைத்து,மறைத்து, அருளி,அவை
 நின்றும்தன் வடிவு வேருய்,
உரைஆதி மறைகடந்த ஒருமுதல்வி
 திருமகளாய் உதித்தற்கு, இந்தத்
தரையாளும் மன்னவன்செய் தவமிதுவோ?
 அதற்குரிய தவந்தான் மன்னே! 22

541 கள்ளமா நெறிஒழுகும் பொறிகடந்து
 கரணம்எல்லாம் கடந்துஆ னந்த
வெள்ளமாம் பரஞான வடிவுடையாள்,
 தன்அன்பின் வெளிவந்து இன்றுஓர்
பிள்ளையாய் அவதரித்த கருணையும்,தன்
 மணுட்டிதவப் பேறும் தேருன்,
பள்ளமா கடல்தானைப் பஞ்சவர்கோன்
 நெஞ்சத்துப் பரிவு கூர்ந்தான். 23

---

539. செய்ய: சிவந்த. வெளிருது: வெளுப்படையாமல். துணை: இரண்டு. சேல்போல்: சேல் மீன்போல். மையவாய்: மையையுடையவாய். மதர்த்த: கொழுத்த. பசவாது: பசக்காமல். ஐயிரண்டு மதியம்: பத்து மாதம். ஐய ஆலிலை: நொய்மையாகிய ஆலிலை போன்ற வயிறு. மோந்தாள்: உச்சி மோந்தாள். துய்ய: தூய்மையான. முன்பெற்ற தோகை அன்னுள். (உமை அம்மையை) முன்னர் பெற்ற மயில்போன்ற மேனையை ஒத்த காஞ்சனமாலை.

540. பரை: பராசத்தி. ஆதி: ஆதிசத்தி. விருப்பு, அறிவு, தொழிலாகி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி என்பவைகளாகி. வரையாது: ஒழிவின்றி. உரை ஆதி: வாக்கு மனங்களையும். கடந்த: தாண்டி நிற்கிற. ஒரு முதல்வி: ஒப்பற்ற தலைவி. தரை. நிலம். மன்னே. பெரிதாகும்.

541. கள்ளம்: வஞ்சகம். கரணம்: அந்தக் கரணம். பரஞான வடிவுடையாள்: உமையம்மை. தேருன்: தெளியாதவனுய். தானை: சேனை. பஞ்சவர்கோன்: பாண்டிய மன்னன்.

542 மகவுஇன்றிப் பலபகல்யான் வருந்தி,அரும்
தவம்புரிந்தேன்; மைந்தன் பேறு
தகஇந்த மகம்செய்தேன்; அதுவும்ஒரு
பெண்மகவைத் தந்தது; அந்தோ!
முகஇந்து நிலவுஒழுக வருபெண்ணும்
முலைமூன்றாய் முகிழ்த்து, மாற்றார்
நகவந்தது என்னேயோ? என்றுஉவகை
இலன்ஆகி, நலியும் எல்லை, 24

543 "மன்னவ!நின் திருமகட்கு மைந்தர்போல்
சடங்குஅனைத்தும் வழாது வேதம்
சொன்னமுறை செய்து,பெயர் தடாதகைஎன்று
இட்டு,முடி சூட்டு வாய்,இப்
பொன்அனையாள் தனக்கு,இறைவன் வரும்பொழுதுஓர்
முலைமறையும், புந்தி மாழ்கேல்"
என்ன,அரன் அருளால்ஓர் திருவாக்கு
விசும்பிடைநின்று எழுந்தது அன்றே. 25

544 அவ்வாக்குச் செவிநிரம்ப, அன்புவகை
அகம்நிரம்ப, அகிலம் எல்லாம்
மெய்வாக்கு மனம்என்ற விழிவாக்கும்
புனல்நிரம்ப, விமலன் போற்றி
நெய்வாக்கு மகம்நிரப்பி, எழுந்துமனை
ஓடும்சாலை நீத்து,இ ரண்டு
கைவாக்கும் இயம்கலிப்பக் கடிமாட
மனைபுகுந்தான் கழற்கால் வேந்தன். 26

542. பல பகல்: பலகாலம். மைந்தன் பேறு தக: புதல்வற்பேறு பொருந்த. மகம்: வேள்வி. முகஇந்து: முகமாகிற சந்திரன். முகிழ்த்து: அரும்பப்பெற்று. மாற்றார் நக: பகைவர் சிரிக்க. உவகை: மகிழ்ச்சி. நலியும் எல்லை: வருந்தும்பொழுது.

543. மைந்தர்: புதல்வர். சடங்கு: மறைவழி மங்கலச் செயல்கள். வழாமல்: தவறாது. பொன் அனையாள்: பொன்போன்ற வடிவுடையாள். புந்திமாழ்கேல்: மனம் வருந்தாதே. விசும்பு: வான்.

544. விழி: கண். வாக்கும்: பொழியும். நிரப்பி: முடித்து.

545 முரசுஅதிர்ப்ப மங்கலம்கொண்டு எதிர்வருவார்
முகத்துஉவகை முறுவல் பூப்ப,
அரசுஇருக்கும் மண்டபம்புக்கு இனிதுஅமர்ந்து
கனகமழை ஆன்ற கேள்வி
விரசிஇருக்கும் மறையவர்கைப் பெய்து,எவர்க்கும்
அம்முறையால் வெறுப்ப நல்கி,
பரசுஇருக்கும் கரதலத்துஎம் பரன்கோயில்
நனிசிறப்புப் பல்க நல்கா, 27

546 சிறைவிடுமின்; சிறைக்களமும் சீத்திடுமின்;
ஏழ்ஆண்டு தேயத்து ஈட்டும்
இறைவிடுமின்; அயல்வேந்தர் திறைவிடுமின்;
நிறைநிதியம் ஈட்டும் ஆயத்
துறைவிடுமின்; ஆலயமும் அறப்புறமும்
பெருக்கும்என, தொழாரைக் காய்ந்த
கறைவிடு,மின் அயில்வேலான் வள்ளுவனைக்
கூய்,முரசம் கறங்கச் சாற்றி, 28

547 கல்யாண மணிமௌலி வேந்தரையும்
கால்யாப்புக் கழல நீத்து,
கொல்யானைப் பரிநெடுந்தேர் அரசுஉரிமை
தொல்முறையால் கொடுத்துப் போக்கி,
பல்லாரும் கொள்கஎனப் பண்டாரம்
தலைதிறந்து, பசும்பொன் ஆடை
வில்ஆரும் மணிக்கொடும்பூண் வெறுக்கைமுதல்
எனைப்பலவும் வெறுப்ப வீசி, 29

---

545. மங்கலம்: எண்வகை மங்கலப் பொருட்கள். கனகம்: பொன். ஆன்ற: நிறைந்த. விரசி: பொருந்தி. வெறுப்ப: (மிகுதியினால்) வெறுக்கும்படி. பரசு: மழுப்படை. பல்க: பெருகும்படி. நல்கா: கொடுத்து (இப்பாடல் குளகம்).

546. விடுமின்: விடுதலை செய்யுங்கள். சீத்தல்: செதுக்குதல். இறை: வரிப்பணம். திறை: கப்பப் பொருள். ஆயத்துறை: சுங்கத்துறை. அறப்புறம்: அறச்சாலை. தொழார்: பகைவர். காய்ந்த: கொன்ற. மின்விடும் அயில் வேல் எனக் கூட்டுக. கறங்க: ஒலிக்கும்படி. சாற்றி: ஆணையிட்டு. (இப்பாடலும் குளகம்).

547. கல்யாணம்: பொன். கால் யாப்பு: கால் தளை: பண்டாரம்: கருவூலம். வில்: ஒளி. ஆரும்: நிறைந்த. வெறுக்கை: செல்வம். வீசி: கொடுத்து. (இப்பாடலும் குளகம்).

548 தூமரபின் வருபெருமங் கல,கவிகட்கு
இருநிதியம் துகில்பூண் பாய்மா
காமர்கரி பரித்தடம்தேர் முதலாய
பலபொருளும் களிப்ப நல்கி,
கோமறுகு களிதூங்கச் சுண்ணமொடும்
எண்ணெய்விழாக் குளிப்ப நல்கி,
மாமதுரா நகர்அன்றி மற்றும்உள
நகர்எங்கும் மகிழ்ச்சி தூங்க, 30

549 இவ்வண்ணம் நகர்களிப்ப இறைமகனும்
களிப்புஎய்தி, இறைவர் சொன்ன
அவ்வண்ணம் சாதம்முதல் வினைநிரப்பித்
தடாதகைஎன்று அழைத்து, தேவி
மெய்வண்ண மறைஉணரா இறைவிதனை
மேனைபோல் மேல்நாள் நோற்ற
கைவண்ணத் தளிர் தீண்டிவளர்ப்ப,இம
வான்போலக் களிக்கும் நாளில், 31

550 திருந்தாத இளம்குதலை ஆயமொடு
புறம்போந்து சிறார்க்குச் சிற்றில்
விருந்தாக மணற்சிறுசோறு அட்டும்,வரை
உரம்கிழித்த வேளும் வாய்வைத்து
அருந்தாத இளமுலைவாய் வைத்துஅருந்தப்
பாவைதனக்கு அளித்தும், போதுஇல்
வரும்தாதை அண்டம்எலாம் சிற்றில்இழைப்
பாள்ஆய்க்கு மகிழ்ச்சி செய்தாள். 32

548. தூ: தூய. மங்கல கவி: மங்கலப் பாடகர். இரு: பெரிய. பாய்மா: குதிரை. காமர் அழகிய. களிப்ப: (பெற்றவர்கள்) மனம் மகிழும்படி. கோ மறுகு: அரச வீதி. தூங்க: மிக விழா: நெய்யணி விழா. (இப்பாடலும் குளகம்).

549. சாதம்: சாதகன்மம், பிறப்பு. இறைவி: தடாதகைப் பிராட்டி. மேல்நாள்: முற்பிறப்பில். (இப்பாடலும் குளகம்)

550. குதலை: மழலைச்சொல். ஆயம்: சிறுமியர். அட்டும்: சமைத்தும். உரம்: மார்பு. வேள்: முருகக்கடவுள். பாவை: மரப்பாவை. தாதை: பிரமன். ஆய்: தாய்.

551 தீட்டுவாள் இரண்டுஅனைய கண்களிப்பத்
தோழியர்க்குத் தெரிய ஆடிக்
காட்டுவாள் என,கழங்கு பந்துபயின்று,
அம்மனையும் கற்று, பாசம்
வீட்டுவாள் மேலொடுகீழ் தள்ளளமை
வினைக்கயிறு வீக்கி ஊசல்
ஆட்டுவாள் காட்டுதல்போல், ஆடினள்
நித்திலத்தாம்பு அசைத்த ஊசல். 33

552 இம்முறையால் தாயர்க்கும் தோழியர்க்கும்
அகத்துஉவகை ஈந்தாள் ஆகி,
அம்முறையால் தாதைக்கும் அகத்துஉவகை
ஈவாளாய் யாத்த வாய்மைச்
செம்மறைஆ ரணம்முதல்நால் ஈரெட்டுக்
கலைமுழுதும் தெளிந்தாள்; அந்த
மெய்ம்மறைஆர் கலைஅனைத்தும் மேகலையா
மருங்குஅசைத்த விமலை அம்மா. 34

553 சொல்வாய்மைக் கலைத்தெளிவு, முழுமதியைப்
பிளந்து,இருபால் சொருகி அன்ன
பல்,வாய்,மைக் கடகரி,தேர், பரிஉகைக்கும்
திறனும்,அழல் பகழி தூர்க்கும்
வில்,வாள்,வச் சிரம்முதற்பல் படைத்தொழிலும்
கண்டு,இளமை விழுங்கு மூப்பில்
செல்வாய்மைத் திறல்அரசன், திருமகட்கு
முடிசூட்டும் செய்கை பூண்டான். 35

---

551. தீட்டுவாள்: தீட்டப்பெற்ற வாட்படை. வீட்டுவாள்: போக்குபவள். வீக்கி: கட்டி. ஊசல் ஆடினள் எனக் கூட்டுக, நித்திலத்தாம்பு: முத்துவடம்.

552. தாதை: தந்தை. வாய்மை: வாய்மொழி. நால் ஈரெட்டுக்கலை: அறுபத்து நான்கு கலைகள்.

553. வாய்மைச்சொல் கலைத்தெளிவு: உண்மையைக் கூறும் கலைகளின் தெளிவு. முழு மதி: பூரண சந்திரன். பால்: பக்கம். பல். தந்தங்கள். மை கட கரி: கரிய மதத்தினை யுடைய யானை. பரி உகைக்கும்: குதிரையைச் செலுத்தும். திறன்: திறமை. அழல்பகழி: தீக்கணை. இளமை விழுங்கு மூப்பு: இளமையைப் போக்கிய மூப்பு. திறல்: வெற்றி.

554 முடிகவிக்கும் மங்கலநாள் வரையறுத்து,
திசைதோறும் முடங்கல் போக்கி,
கடிகெழுதார் மணிமௌலிக் காவலரை
வருவித்துக் காவல் சூழ்ந்த
கொடிஅணிமா நகரெங்கும் விழாஎடுப்ப
அழகுஅமைத்து, குன்றம் அன்ன
தொடிகெழுதோள் சுமதிதிரு மணத்தினுக்கு
வேண்டுவன சூழ்ந்து செய்தான். 36

555 மங்கலதூ ரியம்முழங்க, மால்யானை
உச்சிமிசை வந்த பூத
கங்கைமுதல் ஒன்பதுதீர்த் தமும்நிரப்பி,
கதிர்விடுபொற் கடம்பூ சித்து,
புங்கவரை மந்திரத்தீ வளர்த்து,அமுதம்
அருத்தி,எரி பொன்னுற் செய்த
சிங்கமணி ஆதனத்தை நேசித்துப்
பூசித்துத் தெய்வம் ஏத்தி, 37

556 திருமுடியை மதயானை மிசைவைத்து
நகரைவலம் செய்து பூசித்து,
அருமணியால் சுடிகைஇழைத்து ஆடகத்தால்
குயிற்றியதுஓர் ஐவாய் நாகம்
பெருமணிநீள் படம்பரப்பி மிசைகவிப்ப,
அச்சிங்க பீடத்து ஏற்றிக்
குருமணிவாள் நகைமயிலைக் கும்பத்துப்
புண்ணியநீர் குளிர ஆட்டி, 38

---

554. முடிகவிக்கும்: முடி சூட்டுதற்குரிய. மங்கல நாள்: நன்னாள். வரையறுத்து: நிச்சயித்து. முடங்கல்: ஓலை. கடிகெழுதார் மணிமௌலி: மணம் பொருந்திய மாலையை அணிந்த மணிமுடி. காவலர்: மன்னர்கள். காவல் சூழ்ந்த: மதில் சூழ்ந்த. கொடி அணி: கொடிகளையுடைய. அழகிய தொடி கெழு: வீரவளை அணிந்த. சுமதி: சுமதி என்னும் அமைச்சன்.

555. தூரியம்: வாத்தியங்கள். மால்: பெரிய. மிசை: முடியில். பூதகங்கை: தூய்மையான கங்கை நீர். கதிர்விடு பொற்குடம்: ஒளிவீசும் பொன்குடம். புங்கவரை: தேவர்களை. அருத்தி: உண்பித்து. எரிபொன்: ஒளிவீசும் பொன். சிங்கமணி ஆதனம்: மணிகள் இழைத்த சிம்மாதனம். ஏத்தி: வழிபட்டு. (இப்பாடல் குளகம்)

556. சுடிகை: தலைச்சூட்டு. ஆடகம்: பொன்னில் ஒருவகை. குயிற்றியது: செய்யப் பட்டது. கவிப்ப: கவிக்கும்படி (அமைத்து). குரு: நிறம். நகைமயில்: தடாதகைப் பிராட்டியார். (இப்பாடல் குளகம்)

557 புங்கவர்மந் தாரமழை பொழிய,அருந்
தவர்ஆக்கம் புகல, தெய்வப்
பங்கயமென் கொம்பனையார் ஆட,முனி
பன்னியர்பல் லாண்டு பாட,
மங்கலதூ ரியம்முழங்க, மறைதழங்க,
மாணிக்க மகுடம் சூட்டி,
எம்கருணைப் பெருமாட்டிக்கு அரசுஅமைச்சர்
பணியும்தன் இறைமை நல்கா, 39

558 பால்அனைய மதிக்கவிகை மிசைநிழற்ற,
மதிகிரணம் பரப்பி அன்ன
கோலமணிக் கவரிபுடை இரட்ட,மலர்
மழைதேவர் குழாங்கள் தூற்ற,
காலைஇளம் கதிர்கயிலை உதித்துஎன,வெண்
கடாயானைக் கழுத்தில் வேப்ப,
மாலைமுடிப் பெண்ணரசை, மங்கலதூ
ரியம்முழங்க வலஞ்செய் வித்தான். 40

559 விண்நாடு மொழிகேட்ட மகிழ்ச்சியினும்
திருமகள்தன் விளக்கம் நோக்கி,
உள்நாடு பெரும்களிப்புத் தலைசிறப்ப,
சிலபகல்சென்று ஒழிய, மேனாள்
புண்நாடு வேல்மங்கை குதுகலித்து
நடிப்ப,தன் புயமேல் வைத்த
மண்நாடு மகட்குஅளித்து, வான்நாடு
பெற்றான்அம் மகவு பெற்றான். 41

---

557. புங்கவர்: தேவர். மந்தாரம்: மந்தார மலர். ஆக்கம்: வாழ்த்து. பங்கயம்: தாமரை. மென்கொம்பு அனையார்: மெல்லிய பூங்கொம்பினை ஒத்த மகளிர். முனிபன்னியர்: முனி பத்தினிகள். தழங்க: முழங்க, எம்கருணைப் பெருமாட்டி: தடாதகைப் பிராட்டியார். தன் இறைமை: தன் தலைமையை. நல்கா: கொடுத்து. (இதுவும் குளகம்)

558. பால்அனைய மதிக்கவிகை: பால்போலும் வெண்ணிறமுடைய சந்திரவட்டக் குடை. மிசைநிழற்ற: மேலே நிழலைச்செய்ய. மதி: சந்திரன். கோலமணிக் கவரி: அழகிய வெண் கவரிகள். புடை: இரு பக்கங்களிலும். வெண்கடா யானை: வெண்மையான மத முடைய யானை. கழுத்து: பிடரி.

559. விண் நாடுமொழி: அசரீரி. உள்: உள்ளத்தில். நாடு: விரும்புகின்ற. புண் நாடு வேல் மங்கை: (பகைவர்களின்) தசையினை நாடுகின்ற வேலையுடைய வீரமங்கை. குது கலித்து நடிப்ப: மகிழ்ந்து கூத்தாடுமாறு. புயம்: தோள். வான் நாடு: வானுலகம். அம்மகவு பெற்றான்: அப்புதல்வியைப் பெற்றவனாகிய மலயத்துவசன்,

560 விரதநெறி அடைந்துஈற்றுக் கடன்பிறவும்
தாதைக்கு விதியால் ஆற்றி,
அரதனமெல் அணைமேற்கொண்டு உலகம்எலாம்
ஒருகுடைக்கீழ் ஆள்வாள் ஆளுள்;
சரதமறை யாய்,மறையின் பொருள்ஆய்,அப்
பொருள்முடிவு தான்ஆய், தேனின்
இரதம்என, பூவின்மணம் எனப்பரமன்
இடம்பிரியா எம்பி ராட்டி, 42

561 மண்அரசு இறைஞ்ச, ஞாலம்,
மநுவழி புரந்து, மாறன்
விண்அரசு இருக்கை எய்தப்
பெற்றபின், விடையோன் உள்ளத்து
எண்அரசு அன்னம் என்ன,
தென்னவன் ஈன்ற கன்னிப்
பெண்அரசு இருந்து, நேமி
உருட்டிய பெருமை சொல்வாம். 43

562 இன்னியம் இயம்பு மாக்கள் எழுப்ப,வான் இரவி தோன்ற,
கன்னல்ஐந்து என்னப் பள்ளித் துயில்எழீஇக் கடிநீர் ஆடி,
தன்இறை மரபுக்கேற்ற நியதி,மா தானம், அன்பு
துன்னிய கடவுள் பூசைத் தொழில்முதல் அனைத்தும் முற்று, 44

563 திடம்படும் அறிஞர் சூழ, சிவபரன் கோயில் முன்னி,
கடம்புஅடி முளைத்த முக்கண் கரும்பினை, மறைவண்டு ஆர்க்கும்
விடம்பொதி கண்டத் தேனை, விதிமுறை வணங்கி, மீண்டு
குடம்பயில் குடுமிச் செம்பொற் குருமணிக் கோயில் நண்ணி, 45

---

560. ஈற்றுக்கடன்: இறுதிச் சடங்கு. தாதை: தந்தை விதியால்: முறைப்படி. ஆற்றி: செய்து. அரதனமெல் அணை: மணிகள் இழைத்த மெல்லிய சிம்மாசனம் சரதம்: உண்மை. தேனின் இரதம்: தேனின் சுவை. பரமன் இடம்பிரியாஎம்பிராட்டி: இறைவனிடமிருந்து நீங்காத அம்பிகையான தடாதகைப் பிராட்டி. (இப்பாடல் குளகம்)

561 மண் அரசு: நில உலகத்து அரசர்கள். இறைஞ்சி: வணங்க. ஞாலம்: மண்ணுலகம். புரந்து: ஆண்டு. மாறன்: மலயத்துவச பாண்டியன். விண்ணரசு இருக்கை எய்த: விண்ணுலகத்தில் இந்திரன் இருக்கை அடைய. விடையோன்: இடப வாகனத்தையுடைய இறைவன். எண் அரசு அன்னம்: திருவுள்ளத்தின்கண் கருதுகின்ற அரச அன்னம். தென்னவன்: பாண்டியன். நேமி உருட்டிய: ஆணையாகிய திகிரியைச் செலுத்திய.

562. இன்னியம்: இனிய வாத்தியங்கள். இயம்பு: ஒலிக்கும். மாக்கள்: மக்கள் வான் இரவி: சூரியன். கன்னல் ஐந்து: நாழிகை ஐந்து. துயில் எழீஇ: உறக்கம் நீத்து எழுந்து. கடிநீர்ஆடி: மணமுள்ள நீரில் மூழ்கி. தன் இறை மரபு: தன் மன்னர் மரபு. ஏற்ற: தக்க நியதி: செய்கடன்கள். அன்பு துன்னிய: அன்புமிக்க. முற்று: செய்து முடித்து. (இப்பாடல் குளகம்)

563 திடம்படு: கலங்காத சிவபரன்: சோமசுந்தரக் கடவுள். முன்னி: அடைந்து. கடம்பு அடி: கடம்பமரத்தின் அடியில். முக்கண் கரும்பு: முக்கண்ணனுன இறைவன். மறைவண்டு: வேதமாகிற வண்டு ஆர்க்கும்: ஒலிக்கும். விடம்பொதிகண்டத் தேனை: நஞ்சு பொதிந்த கழுத்தையுடைய தேனுகிய பெருமானை. குடம்படுகுடுமி: கலசங்கள் பொருந்திய முடியினையுடைய. குருமணி: நிறம்பொருந்திய மணிகள். கோயில்: மாளிகை. கரும்பென்றும் தேனென்றும் இறைவனை உவமித்தார் 'கண்கள் மூன்றுடையதோர் கரும்பு' என்கிறது திருவிசைப்பா. (இதுவும் குளகம்)

564 அரசுஇறை கொள்ளும் செம்பொன் அத்தாணி இருக்கை எய்தி
நிரைசெறி மடங்கல் ஆறு முடங்கின நிமிர்ந்து தாங்க,
விரைசெறி மலர்மீப் பெய்த வியன்மணித் தவிசின் மேவித்
திரைசெறி அமுதில் செய்த பாவைபோல் சிறந்து மாதோ, 46

565 அனிந்திதை அமுதின் சாயல்
கமலினி அணங்கு காதல்
கனிந்தபார் மகளி ராய்வந்து
அடைப்பைபொன் களாஞ்சி ஏந்த,
இனம்திரி பதுமக் கோயில்
இருவரும் அனையர் ஆகிப்
புனைந்தவெண் கவரிக் கற்றை
இருபுடை புரட்டி வீச, 47

566 செடிஉடல் எயினச் செல்வன் சென்னிமேல் சுமந்து சாத்தும்
கடிஅவிழ் மலரில், பொன்னிக் காவலன் குடக்கோன் ஏனை
முடிகெழு வேந்தர் உள்ளார் முடிமிசை மிலைந்த தாமம்
அடிமிசைச் சாத்தி, நங்கை ஆணைஆறு ஏவல் செய்ய, 48

567 வைஉடை வாளர் ஆகி மார்புஉறப் பின்னி ஆர்த்த
கையினர் ஆகி, அன்னை என்றுதன் கருணை நோக்கம்
செய்யும்என்று இமையார் நோக்கி, நோக்குமேல் செங்கை கூப்பி
உய்குநம் எனவாய் பொத்தி உழையர்தம் பணிகேட்டு உய்ய, 49

568 ஆங்குஅவன் மராடர் வேந்தன், அவன்கரு நாடர் வேந்தன்,
ஈங்குஇவன் விராடர் வேந்தன், இவன்குரு நாடர் வேந்தன்,
ஊங்குஉவன் சேரன், சென்னி உவன்எனக் கோலால் சுட்டிப்
பாங்குஇரு மருங்கும் காட்டக் கஞ்சுகப் படிவ மாக்கள், 50

---

564. இறைகொள்ளல்: தங்குதல். நிரை: வரிசை. மடங்கல்: சிங்கம். விரை: மணம். மீ: மேலே. வியன்: பெரிய. (இப்பாடல் குளகம்).

565. அனிந்திதை, கமலினி இருவரும் சங்கிலி நாச்சியாராகவும், பரவை நாச்சியாராகவும் தோன்றியவர்கள். பார் மகளிர்: மானிட மகளிர். களாஞ்சி: படிக்கம். இனம்: நிறம். பதுமக்கோயில்: தாமரை மலர். இருவர்: திருமகளும் கலைமகளும். கவரி: சாமரை. (இப்பாடலும் குளகம்).

536. செடி: முடைநாற்றம். எயினன்: வேட்டுவன் (கண்ணப்பன்). கடி: மணம். மலரில்: மலர்போல. பொன்னிக் காவலன்: சோழன். குடக்கோன்: சேரன். முடிமிசை அடிமிசை: முரண்தொடை. (இப்பாடலும் குளகம்).

537. வை: கூர்மை. உழையர்: ஏவல் செய்வோர். (இப்பாடலும் குளகம்).

568. ஊங்கு: நடுவில். கஞ்சுகம்: சட்டை. (இப்பாடலும் குளகம்).

569 செந்தமிழ் வடநூல் எல்லை தெரிந்தவர், மறைநூல் ஆதி
அந்தம்இல் எண்எண் கேள்வி அனந்தவர், சமயம் ஆறும்
வெந்தவர், துறந்தோர், சைவ மாதவர், போதம் மாண்ட
சிந்தனை உணர்வால் மாயை வலிகெடச் செற்ற வீரர், 51

570 முன்இருந்து இனியது ஏற்றும் மூத்தவர், எண்ணி எண்ணிப்
பன்னும்ஐந்து உறுப்பில் காலம் அளந்துஅறி பனுவல் மாந்தர்,
பின்னும்முன் நோக்கும் சூழ்ச்சிப் பெரும்தகைச் சுமதி யோடும்
இன்அமுது அனைய கேள்வி மந்திரர் யாரும் சூழ, 52

571 கற்றுஅறி அந்த ணாளர்
விருத்திகள், கடவுள் தானத்து
அற்றம்இல் பூசைச் செல்வம்,
அறப்புறம் நடக்கை, ஏனைச்
செற்றம்இல் குடிகள், மற்றும்
அமைச்சரால் தெளிந்தும், வெவ்வேறு
ஒற்றுவிட்டு உணர்ந்தும், வேறு
குறைஉண்டேல் ஒறுத்துத் தீர்த்தும், 53

572 ஆதிஉத் தேசத் தானும், இலக்கண அமைதி யானும்,
சோதனை வகைமை யானும், சொன்னநூல் அனுவா தித்து,
நீதியின் அவற்றுல் கண்டித்து அவ்வழி நிறுத்தி, தம்மில்
வாதிகள் வாதம் செய்யும் கோட்டிமேல் மகிழ்ச்சி கூர்ந்தும், 54

573 பைஉள பகுவாய் நாகப் பள்ளியோன் ஆதி வானோர்
கைஉள வலியால் அட்ட கடல்அமுது அனைத்தும் வாரி,
பொய்உளம் அகலக் கற்ற புனிதநூல் புலவர் நாவில்
செய்யுளின் விளைவித்து ஊட்டத் திருச்செவி தெவிட்ட உண்டும்,

569. எண்எண் கேள்வி: அறுபத்து நான்கு கலைகள். போதம்: பசுபோதம். வீரர்: மெய்ஞ்ஞானிகளாகிய வீரர்கள். (இப்பாடலும் குளகம்).

570. மூத்தவர்: அறிவால் மூத்தவர். ஐந்து உறுப்பு: திதி, வாரம், நாள், யோகம், கரணம். பனுவல் மாந்தர்: சோதிட நூல் வல்லார். சுமதி: முதலமைச்சன். மந்திரர்: அமைச்சர் (இப்பாடலும் குளகம்).

571. விருத்தி: மானியம். அறப்புறம்: அறச்சாலை. நடக்கை: நிகழ்ச்சி. செற்றம்: வெறுப்பு. ஒறுத்து: தண்டித்து. (இப்பாடலும் குளகம்).

572. அனுவாதித்து: எடுத்து மொழிந்து. (இப்பாடலும் குளகம்).

573. பை: படம். பகுவாய்: பிளந்த வாய். பள்ளியோன்: திருமால். அட்ட: கடைந்த. அமுதம் போன்ற செய்யுட்களின் சுவைநலம் கண்டும் என்றவாறு. (இப்பாடலும் குளகம்)

574 தொல்லைநான் மறையோர் சைவர் துறந்தவர் யார்க்கும் இன்பம்
புல்ல,வான் அமுதும் கைப்ப, பாகநூல் புலவர் அட்ட
முல்லைவான் முகையின் அன்ன அறுசுவை, முரியா மூரல்
நல்லஊண் அருத்தி, அன்னோர் நாவிருந்து அமுது செய்தும், 56

575 எல்லவன் உச்சி நீந்தும் எல்லையில், நான்கும் ஆறும்
வல்லவர் சூதன் ஓதி வகுத்தமூ ஆறு கேள்வி
சொல்லஉள் மலர்ந்தும், ஏனை மனுமுதல் துறைமாண் கேள்வி
நல்லன நயந்து கேட்டும், நண்பகல் போது நீத்தும், 57

576 கலைக்குஉரை விரிப்பார் என்ன வறுமையில் கல்வி போலப்
புலப்படா மருங்குல் நல்லார், எந்திரப் புலவன் பூட்டி
அலைத்திடு பாவை போல்நின்று ஆடல்செய் ஆடற் கண்ணும்,
நலத்தகு பாடற் கண்ணும், நல்அருள் நாட்டம் செய்தும், 58

577 இல்நிலை ஒழுகும் தொல்லோர் இயற்றிய தருமம், வேறும்,
அந்நிலை நிறுத்தும் வேள்வி, அறம்பல, ஆக்கம் செய்ய
நல்நிதி அளித்தும், வேள்வி நடாத்தியும், செல்வம், கல்வி,
தன் இரு கண்கள் ஆகத் தனைழந்திட வளர்க்கும் நாளும். 59

578 ஒப்புஉரு முதல்ஈறு இல்லா ஒருத்திதன் சத்தி பெற்ற
முப்பெரும் தேவ ராலே முத்தொழில் நடாத்தும் என்று
செப்பலும், புகழ்அன்று என்னில் தென்னவன் கன்னி ஆகி
இப்புவி மனுவில் காக்கும் என்பதுஎன் பேதை மைத்தே. 60

---

574. புல்ல: பொருந்த. பாகநூல்: சமையற்கலை நூல். முகை: அரும்பு. நாவிருந்து: நாவால் புகழும் சொல்விருந்து. அமுது செய்தும்: தாம் நுகர்ந்தும். (இப்பாடல் குளகம்).

575. எல்லவன்: சூரியன். எல்லை: காலம். நான்கும் ஆறும்: நான்கு வேதம், ஆறு அங்கம். சூதன்: சூதமுனிவன். மூஆறு கேள்வி: 18 புராணங்கள். (இப்பாடலும் குளகம்).

576. கலை: ஆடற்கலை. வறுமையில் கல்வி போல: வறுமைக் காலத்தில் கல்வி விளங்காதது போல. புலப்படா. தோன்றாத. மருங்குல்: இடை. நல்லார்: பெண்கள். (இப்பாடலும் குளகம்).

577. இல்நிலை: இல்லற நிலை. அந்நிலை: அந்த இல்லறநிலை. வளர்க்கும்: வளர்த்து வருவார்.

578. ஒப்பு: ஒப்புமை. உரு: வடிவம். முப்பெரும் தேவர்: அயன், அரி, அரன். தென்னவன் கன்னி: பாண்டியன் மகள் மனுவில் மனு முறையால்.

579 வரைசெய் பூண்முலைத் தடாதகை மடவரல் பிராட்டி,
விரைசெய் தார்முடி வேய்ந்து,தண் குடைமநு வேந்தன்
கரைசெய் நூல்வழி கோல்செலக் கன்னியாம் பருவத்து
அரசு செய்தலால் கன்னிநாடு ஆயதுஅந் நாடு, 61

580 இன்ன வாறுஉமை அவதரித்து இருந்தனள் என்று,
பொன்அ வாவினர் பெற,எறி பொருநைகால் பொருப்பன்
சொன்ன வாய்மைகேட்டு, அகம்களி தூங்கினர் தொழுது,
மின்னு வார்சடை முனிவரர் வினவுரை செய்வார். 62

581 திருந்து நான்மறைச் சென்னியும் தீண்டுதற்கு அரிதாய்
இருந்த நாயகி, யாவையும் ஈன்றஎம் பிராட்டி,
விரிந்த அன்புகூர் தக்கனும், வெற்பனும், பன்னாள்
வருந்தி நோற்றலால், அவர்க்குஒரு மதலையாய் வந்தாள். 63

582 மனித்தன் ஆகிய பூழியன் மகள்என ஈங்குத்
தனித்த காரணம் யாதுஎன, தமனியப் பொதுவில்
குனித்த சேவடிக்கு அன்புடைக் குடமுனி அருள்கூர்ந்து
இனித்தது ஓர்கதை கேண்மின்!என்று எடுத்துஉரை செய்வான். 64

583 விச்சு வாவசு எனும்ஒரு விச்சையன் பயந்த
நச்சு வாள்விழி மடந்தை;விச் சாவதி நாமம்;
அச்சு வாகத மொழியினள் அம்பிகைக்கு அன்பு
வைச்சு வாழ்வுறு மனத்தினள், தாதையை வணங்கா, 65

---

579. வரைசெய்: மலையையொத்த. மடவரல்: இளம்பெண். விரைசெய்: மணம் வீசுகின்ற. தார்முடி வேய்ந்து: மாலையணிந்த முடியைத் தாங்கி. மநுவேந்தன் கரைசெய் நூல்வழி: மனு அரசனால் வரையறை செய்யப்பட்ட நீதிநூலின்படி. கோல்: செங்கோல்.

580. பொன் அவாவினர் பெற: பொன்னை விரும்பினவர்கள் பெறுமாறு. எறி பொருநை கால்பொருப்பன்: வீசுகின்ற தாமிரபன்னி நதியைப்பெற்ற பொதிய மலையில் வசிக்கும் அகத்திய முனி. வாய்மை: உண்மை. அகம்களி தூங்கினர்: மனம் களிப்புற்றவராய். மின்னுவார் சடை: மின்னலைப்போன்ற நீண்ட சடையையுடைய.

581. திருந்து: திருத்தமாகிய. நான்மறைச் சென்னி: நான்கு வேதங்களின் முடிபு. விரிந்த அன்பு கூர் தக்கன்: அளவில்லாத அன்புமிகுந்த தக்கன். வெற்பன்: மலைஅரசன். மதலை: மகவு.

582. மனித்தன்: மானிடன். பூழியன்: பாண்டியன். தனித்த: தனித்துவந்த. தமனியப் பொதுவில்: பொன்னம்பலத்தில். குனித்த: ஆடுகின்ற. குடமுனி: அகத்தியன்.

583. விச்சையன்: கந்தருவன். அச்சுவாகதம்: அழகிய கிளி. வணங்கா; வணங்கி, (இப்பாடல் குளகம்).

584 ஐய! அம்பிகை தன்னையான் அன்பினால் வழிபட்டு
உய்ய வேண்டும்என் றான்;அவன் உலகுஎலாம் பயந்த
தையல் மந்திரம் தனைமகள் தனக்குஉப தேசம்
செய்ய, அந்நெறி ஒழுகுவாள் செப்புவாள் பின்னும், 66

585 இறைவி தன்னைஆ தரிப்பதற்கு இம்பரில் சிறந்த
குறைவுஇல் நன்நகர் யாதுஎன, கூறுவான்; கேள்வித்
துறைவி ளங்கினோர் பயில்வது துவாதச முடிவுஎன்று
அறைவ ளம்பதி அவனிமேல் சிவபுரம் ஆமால். 67

586 சேடு தாங்குறு உலகினில் சிறந்தன சத்தி
பீடம் மூஇரு பத்துநான்கு; அவற்றின்முன் பீடம்
மாடம் ஓங்கிய மதுரையாம்; மற்றுஅது போகம்
வீடும் வேண்டிய சித்தியும் விளைப்பதுஎன்று எண்ணு, 68

587 அல்லும் எல்லும்வான் நகர்க்கதவு அடைப்பின்றிச் சுவர்க்கச்
செல்வர் அங்கு அடைந்து உமைஅருள் சித்தியால் வினையை
வெல்லு வார்;அதான்று எந்தையோடு ஐவர்கள் வேண்டி
நல்வ ரம்பல அடைந்தனர் நமர்கள்அந் நகரில். 69

588 எம்மை யாரையும் யாவையும் ஈன்றஅம் கயற்கண்
அம்மை, யாவரே யாயினும் அன்பின்ஆ தரிப்போர்
இம்மை ஆகிய போகம்வீடு எண்ணியாங்கு எய்த,
செம்மை ஆகிய இன்அருள் செய்துவீற்று இருக்கும். 70

589 என்ற தாதையை இறைஞ்சினள், அனுஞைகொண்டு எழுந்தாள்,
மன்றல் மாமலர் வல்லிபோல் வழிக்கொடு கானம்
குன்றம் ஆறுபின் கிடப்பமுன் குறுகினள் அன்பின்
நின்ற ஆதிஎம் பரைஅருள் நிறைந்தஅந் நகரில். 71

---

584. தையல்: உமாதேவி. ஒழுகுவாள்: விச்சாவதி. (இப்பாடல் குளகம்).

585. ஆதரிப்பதற்கு: வழிபடுதற்கு. அவனி: உலகு.

586. சேடு: பெருமை. போகம்: இன்பம். (இப்பாடல் குளகம்).

587. அல்லும் எல்லும்: இரவும் பகலும். சுவர்க்கச் செல்வர்: தேவர்கள். அதான்று: அதுவேயன்றி:

588. எம்மை: எம்மையும். எய்த: அடையுமாறு. வீற்றிருக்கும்: வீற்றிருப்பாள்.

589 அனுஞை: விடை. எம்பரை: பராசக்தி. இறைஞ்சினள், எழுந்தாள்: முற்றெச்சங்கள்.

590 அடைந்துஇ ளம்பிடி ஆடல்போல்
    ஆடகக் கமலம்
குடைந்து, நான்மறைக் கொழுந்துஇடம்
    கொண்டு உறை குறிப்பால்
படர்ந்த பொன்மலை வல்லியைப்
    பணிந்து,வெம் கதிரோன்
தொடர்ந்த வான்சுறு மதியமே
    ஆதியாய்த் தொடங்கா, 72

591 பெரும்பகல் நல்ஊண், கங்குல்ஊண், உதவப்
    பெற்றஊண், இலைமுதல் பல்ஊண்,
அரும்பொடி எள்ஊண், சாந்திரா யணம்,ஆன்
    ஐந்து,பால், நறியநீர், தருப்பை
இரும்புதல் நுனிநீர், கால்இவை நுகர்ந்தும்,
    இயற்றுஅரும் பட்டினி உற்றும்,
வரம்புஉற இராறு திங்களும் நோற்று
    ஆடிமேல் அரும்சுறு மதியில், 73

592 சந்நிதி அடைந்து தாழ்ந்துநின்று, இளமாந்
    தளிர்அடி, காஞ்சிசூழ் கிடந்த
மின்நிகர் மருங்குல், இழைஇடை நுழையா
    வெம்முலை, செம்மலர்க் காந்தள்
பொன்நிரை வளைக்கை, மங்கலக் கழுத்தில்
    பூரண மதிக்கலை முகத்தின்,
இன்னிசை அளிசூழ் இருள்குழற் கற்றை,
    இறைவியை இம்முறை நினையா, 74

593 கோலயாழ்த் தெய்வம் பராய்,கரம் குவித்து,
    கொழும்சுடர்ப் பசுங்கதிர் விளக்கம்
போலநூல் பொல்லம் பொத்துபொன் நிறத்த
    போர்வைநீத்து, அவிழ்கடி முல்லை
மாலைமேல் வீக்கி, பத்தர்பின் கிடப்ப
    மலர்க்குழல் தோய்சுவல் கிடத்தி,
சேலைநேர் விழியாள் மாடகம் திரித்துத்
    தெறித்தனள் பண்அறிந்து இசைப்பாள். 75

---

590. ஆடல்போல்: நீராடுதல் போல. ஆடகக்கமலம்: பொற்றாமரை. பொன்மலை. இமயமலை. வான்: பெரிய. சுறு: மகரராசி. மதியம்: தைமாதம். தொடங்கா: தொடங்கி. (இப்பாடல் குளகம்).

591. தைமாதம் தொடங்கி மார்கழி முடிய உண்ணும் உணவு வகை கூறப்பட்டுள்ளது: (இப்பாடல் குளகம்).

592. இப்பாடலும் குளகம். தேவியின் அழகு புனையப்பட்டுள்ளது.

593. பராய்: பராவி. பொல்லம்: பொன். பொத்து: இணைத்து. போர்வை நீக்கி, மாலை சூட்டி, பத்தர் தோள்மேல் கிடத்தி, முறுக்காணியை முறுக்கி, பண் அறிந்து வீணையை மீட்டினள்.

594 ஒளியால் உலகுஈன்று உயிர்அனைத்தும்
மீன்போல் செவ்வி உறநோக்கி,
அளியால் வளர்க்கும் அங்கயற்கண்
அன்னே! கன்னி அன்னமே!
அளியால், இமவான் திருமகளாய்,
ஆவி அன்னம், மயில்,பூவை,
தெளியா மழலைக் கிளிவளர்த்து,
விளையாட்டு அயரும் செயல்என்னே! 76

595 அண்டக் குவைவெண் மணற்சிறுசோறு
ஆக்கி, தனியே விளையாடும்
கொண்டல் கோதாய்! படிஎழுதல்
ஆகா உருவக் கோகிலமே!
கொண்டல் குடுமி இமயவரை
அருவி கொழிக்கும் குளிர்முத்தால்
வண்டல் குதலை மகளிரொடும்
விளையாட்டு அயரும் வனப்புஎன்னே! 77

596 வேத முடிமேல் ஆனந்த
உருவாய் நிறைந்து விளையாடும்
மாதர் அரசே! முத்தநகை
மானே! இமய மடமயிலே!
மாதர் இமவான் தேவி,மணி
வடம்தோய் மார்பும், தடம்தோளும்
பாத மலர்சேப் புறமிதித்து,
விளையாட்டு அயரும் பரிசுஎன்னே! 78

---

594. ஒளியால்: (அம்பிகை தனது) ஒளியினால். செவ்வி: பக்குவம். அளி: கருணை. அங்கயற்கண் அன்னே: மீனாட்சித் தாயே. இமவான்: மலையரசன். ஆவிஅன்னம்: தடாகத்தின்கண் உள்ள அன்னம். தெளியா: பொருள் தெரியாத. விளையாட்டு அயரும்: விளையாடுகின்ற. (விச்சுவாசு என்னும் விஞ்சையன் மகள் விச்சாவதி என்பவள் மீனாட்சி அம்மையை அன்புடன் துதிக்கும் பாடல்கள் இதுவும், அடுத்துவரும் இரண்டும்):

595. அண்டக்குவை: அண்டக் கூட்டங்களை. வெண்மணல் சிறுசோறு ஆக்கி: வெண் மணலால் சிறுசோறு ஆக்குவதுபோல் ஆக்கி. கொண்டல் கோதாய்: மேகம் போன்ற கூந்தலுடைய அன்னாய் படி: ஒப்பு. கோகிலம்: குயில் போன்றவளே. கொண்டல் குடுமி: முகில் தழுவும் முடியுடைய. இமயவரை: இமயமலை. வண்டல்: ஒருவகை மகளிர் விளையாட்டு. குதலை: மழலை. வனப்பு: அழகு.

596. முடி: உச்சி. மாதர் அரசே: பெண்ணரசே. முத்தநகை மானே: முத்துப் போன்ற பற்களையுடைய பெண் மானே. மடமயில்: இளமயில். மாதர் இமவான் தேவி: அழகிய மலையரசன் மனைவியாகிய மேனை. மணிவடம் தோய்மார்பு: முத்துவடம் பொருந்திய மார்பு. தடம்: பருத்த. சேப்புற: சிவக்குமாறு. பரிசு: தன்மை.

597 யாழ்இயல் மொழியால் இவ்வழி பாடி
ஏத்தினுள் ஆக,மெய் உள்ளத்து
ஆழிய அன்பின் வலைப்படு, கருணை
அங்கயற் கண்மட மான்ஓர்
சூழிய நுழைமெல் இளங்குழல் குதலை,
தொண்டைவாய் அகவைமூன்று எய்தி,
வாழ்இளங் குழவி ஆகிஆ லயத்து
வந்துநின் றுள்,வரம் கொடுப்பாள். 79

598 இறைஞ்சிஅஞ் சலித்தாள் தன்னை,எம் அன்னை
"யாதுவேண் டினை"என "என்றும்
நிறைந்தபேர் அன்பு நின்அடிப் போதின்
நீங்கலா நிலைமைதந்து அருள்"என்று
அறைந்தனள்; "இன்னும் வேண்டுவது ஏது"என்று
அருள,"இம் மகஉருவு ஆகிச்
சிறந்துவந்து, என்பால் அருள்சுரந்து இருக்கத்
திருவுளம் செய்"எனப் பணிந்தாள். 80

599 சிவபரம் பரையும் அதற்குநேர்ந்து அருள்வாள்,
"தென்னவர் மன்னனுய், மலயத்
துவசன்என்று ஒருவன் வரும்;அவன் கற்பின்
துணைவியாய் வருதி!அப் போதுஉன்
தவமக வாக வருவல்"என்று அன்பு
தந்தனள்; வந்தவாறு இதுஎன்று
உவமைஇல் பொதியத் தமிழ்முனி, முனிவர்க்கு
ஓதினுன், உள்ளவாறு உணர்ந்தார். 81

---

597. யாழ் இயல் மொழியால்: யாழில் அமைத்த இசைப் பாட்டால். ஆழிய: ஆழ்ந்த. வலைப்படு: வலையில் அகப்படுகின்ற. அங்கயற்கண் மடமான்: மீனுட்சியம்மை. சூழிய நுழை மெல் இளம் குழல்: கொண்டை அணி பொருந்திய மெத்தென்ற சிறிய கூந்தல். தொண்டை வாய்: கொவ்வைக்கனி போன்ற வாய். அகனவ· வயது. குழவி: குழந்தை.

598. இறைஞ்சி: வணங்கி. அஞ்சலித்தாள்: கைகுவித்தாள். அன்னை: திருத்தாயாகிய மீனுட்சியம்மை. அடிப்போது: திருவடிமலர். நீங்கலா: நீங்காத. அறைந்தனள்: வேண்டினள். சிறந்து: சிறப்புடன். அருள்சுரந்து: கருணை கூர்ந்து.

599. சிவபரம்பரை: சிவசக்தியாகிய மீனுட்சி. நேர்ந்து: உடன்பட்டு. தென்னவர் மன்னன்: பாண்டியகுலத்து அரசன். கற்பின் துணைவி: கற்பின் மிக்க மனைவி. வருதி: வருவாய். வருவல்: வருவேன். அன்புதந்தனள்: கருணைசெய்தாள். உவமை இல்: ஒப்பில்லாத. ஓதினுள்: கூறினுள். (காஞ்சனமாலை முற்பிறப்பில் விச்சாவதி என்று விளங்கினுள்).

## 5. மீனாட்சி திருமணம்



சுற்றும்நான் மறைகள் ஆர்ப்ப, தூரியம் சங்கம் ஏங்க,
கற்றநான் முகத்தோன் வேள்விச் சடங்குநூல் கரைந்த ஆற்றால்,
முற்ற,மங் கலநாண் சாத்தி, முழுதுலகு ஈன்றாள் செங்கை
பற்றினன், பற்றி லார்க்கே வீடுஅருள் பரம யோகி. 784

## திருமணப் படலம்

600 தரைபுகழ் தென்னன் செல்வத்
தடாதகைப் பிராட்டி, தானே
திரைசெய்நீர் ஞாலம் காத்த
செயல்சிறிது உரைத்தேன்; தெய்வ
விரைசெய்பூங் கோதை மாதை
விடையவன் மணந்து, பார்ஆண்டு
அரசுசெய்து இருந்த தோற்றம்,
அறிந்தவாறு இயம்பல் உற்றேன் 1

601 காய்இரும் பரிதிப் புத்தேள் கலியிருள் துமிப்ப, சோதி
பாய்இருங் குடைவெண் திங்கள் படர்ஒளி நீழல் செய்ய,
மாஇரும் புவனம் எல்லாம் மநுமுறை உலகம் ஈன்ற
தாய்,இளங் குமரி ஆகித் தனிஅரசு அளிக்கும் நாளில், 2

602 மருங்குல்தேய்ந்து ஒளிப்ப, செம்பொன் வனமுலை இறுமாப்புஎய்த,
கருங்குழல் கற்றை, பாலுநாள் கங்குலை வெளிறு செய்ய,
இரங்குநல் யாழ்மென் தீஞ்சொல் இன்னகை எம்பிராட்டிக்கு,
அருங்கடி மன்றல் செய்யும் செவ்விவந்து அடுத்த தாக, 3

603 பனிதரு மதிக்கொம்பு அன்ன பாவையைப் பயந்தாள் நோக்கி,
"குனிதர நிறையப் பூத்த கொம்பனுய்க்கு இன்னும் கன்னி
கனிதரு செவ்வித்து ஆயும் கடிமணப் பேறுஇன்று" என்னுத்
துனிதரு நீரள் ஆகிச் சொல்லினுள்; சொல்லக் கேட்டாள். 4

---

600. தரை: புவியிலுள்ளோர். திரைசெய் நீர்ஞாலம்: அலைகளை வீசும் கடல் சூழ்ந்த நிலவுலகம். தெய்வ விரைசெய் பூங்கோதை மாதை: தெய்வமணம் வீசும் மலரை அணிந்த கூந்தலையுடைய பிராட்டியாரை. விடையவன்: இடபவாகனத்தையுடைய சிவபெருமான்.

601. காய்இரும்பரிதிப்புத்தேள்: ஒளிவீசும் பெரிய திகிரியாகிய சூரியதேவன். கலிஇருள் துமிப்ப: துன்பமாகிய இருளைக்கெடுக்க. சோதிபாய் இருங்குடை வெண் திங்கள்: ஒளிபரந்த பெரிய குடையாகிய வெள்ளிய சந்திரன். படர்: படர்ந்த. தனி அரசு அளிக்கும்: தனிமையாக அரசாட்சிபுரியும்

602. மருங்குல்: இடை, ஒளிப்ப: மறைய. வனமுலை: அழகிய கொங்கைகள். இறுமாப்பு எய்த: பணைத்து அண்ணாந்திருக்க. குழல்கற்றை: கூந்தல் தொகுதி பாலநாள்: நள்ளிரவு. கங்குல்: இரவு. இரங்கும்: ஒலிக்கின்ற. இன்னகை: இனிய புன்முறுவல். அருங்கடிமன்றல். அரிய திருமணம். செவ்வி: பருவம்.

603. பனிதரு மதிக்கொம்பு அன்ன பாவையை: குளிர்ந்த சந்திரனை ஏந்திய கொம்பினை ஒத்த பிராட்டியாரை. பயந்தாள்: பெற்ற காஞ்சனமாலை. குனிதர: வளையுமாறு கன்னி கனிதரு செவ்வித்து ஆயும்: கன்னிப் பருவமானது முதிர்ந்த அழகுடையதாயும். கடிமணப் பேறு: திருமணப்பேறு. இன்று: இல்லையே. துனிதரு நீரளாகி: வருந்தும் தன்மையை உடையவளாய்.

604 "அன்னை! நீ நினைந்த எண்ணம்
ஆம்பொழுது ஆகும்; வேறு
பின்னை நீ இரங்கல்; யான்போய்த்
திசைகளும், பெருநீர் வைப்பும்
என்னது கொற்றம் நாட்டி,
மீள்வல் இங்கு இருத்தி" என்னப்
பொன்அவிர் மலர்க்கொம்பு அன்னாள்,
பொருக்கென எழுந்து போனாள். 5

605 தேம்பரி கோதை மாதின் திருவுளச் செய்தி நோக்கி,
ஆம்பரிசு உணர்ந்த வேந்தர், அமைச்சரும் பிறரும் போந்தார்;
வாம்பரி கடாவித் திண்தேர் வலவனும் கொணர்ந்தான்; வையம்
தாம்பரிவு அகல வந்தாள், ஏறினாள் சங்கம் ஆர்ப்ப. 6

606 ஆர்த்தன தடாரி பேரி, ஆர்த்தன முருடு மொந்தை.
ஆர்த்தன உடுக்கை தக்கை, ஆர்த்தன படகம் பம்பை,
ஆர்த்தன முழவம் தட்டை, ஆர்த்தன சின்னம் தாரை,
ஆர்த்தன காளம் தாளம், ஆர்த்தன திசைகள் எங்கும். 7

607 வீங்கிய கொங்கை ஆர்த்த கச்சினர்; விழிபோல் தைப்ப
வாங்கிய சிலை ஏறிட்ட கணையினர், வட்டத் தோல்,வாள்
தாங்கிய கையர்; வைவேல் தளிர்க்கையர்; பிணாத்தெய் வம்போல்
ஓங்கிய ஆயத் தாரும் ஏறினர், உடன்அத் திண்தேர். 8

---

604. பெருநீர் வைப்பும்: கடல்சூழ்ந்த இந்நில உலகத்திலும். கொற்றம் நாட்டி: வெற்றியை நிலைநிறுத்தி. மீள்வல்: திரும்புவேன். பொன்அவிர் மலர்க்கொம்பு அன்னாள்: பொன்போல விளங்கும் மலர்களையுடைய கொம்பினையொத்த தடாதகைப் பிராட்டியார்.

605. தேம்பரிகோதை மாது: மணமிக்க மாலையை அணிந்த பிராட்டி. ஆம்பரிசு: ஆக்கம் உண்டாகும் தன்மை. போந்தார்; வந்தார்கள். வாம்பரி: தாவிச்செல்லும் குதிரைகள். கடாவி: செலுத்தி. வலவன்: நேர்ப்பாகன். வையம்: உலகம். பரிவு அகல: துன்பம் நீங்க. ஆர்ப்ப: ஒலிக்க.

606. எண் திசைகளிலும் பல்வேறு இசைகருவிகளின் இன்னிசை நிறைந்தன.

607. வீங்கிய: பருத்த. ஆர்த்த: கட்டிய. தைப்ப. தைக்குமாறு. வாங்கிய: வளைந்த. சிலை: வில். ஏறிட்ட: பூட்டிய. கணையினர்: அம்பினையுடையவர். வட்டத்தோல்: கேடயம். வைவேல்: கூரிய வேல். பிணாத்தெய்வம்: பெண் தெய்வம். ஓங்கிய; சிறந்த. ஆயத்தார்; மகளிர் கூட்டங்கள். (மெய்க்காவலர்)

608 கிடைப்பன, உருளால் பாரைக் கீண்டுபா தலத்தின் எல்லை
அடைப்பன, பரந்த தட்டால் அடையவான் திசைகள் எட்டும்
உடைப்பன, அண்டம் முட்டி ஓற்றிவான் கங்கை நீரைத்
துடைப்பன கொடியால், சாரி சுற்றுவ பொன்திண் தேர்கள். 9

609 செருவில்மா தண்டம் தாங்கிச் செல்லும்வெங் கூற்றம் என்ன,
அருவிமா மதநீர் கால, அரத்தவெம் குருதிக் கோட்டால்
கருவிவான் வயிறு கீண்டு கவிழும்நீர் வாய்அங் காந்து
பருகி,மால் வரைபோல், செல்வ பரூஉப்பெரும் தடக்கை யானை.

610 ஒலியவார் திரையின் அன்ன ஒழுங்கின, யோக மாக்கள்
வலியகால் அடக்கிச் செல்லும் மனம்எனக் கதியில் செல்வ;
கலியநீர் ஞாலம் காப்பான் கடைஉகம் முடிவில் தோற்றம்
பொலியும்வாம் புரவி ஒன்றே போல்வன புரவி வெள்ளம். 11

611 காலினும் கடிது செல்லும் செலவினர், கடுங்கண் கூற்றம்
மேலினும் மிகைஉண் டாயின் வெகுண்டுவெந் கண்டு மீளும்
பாலினர், பகுவாய் நாகப் பல்லினும் பில்கும் ஆல
வேலினர், வீயா வென்றி வீக்கிய கழற்கால் வீரர். 12

612 எண்புதைத்து எழுந்த வீரர், இவுளி,தேர், யானை வெள்ளம்
மண்புதைத் தன;ப தாகை, மாலைவெண் கவிகை, பீலி
விண்புதைத் தன;நுண் தூளி வெயில்விடு பரிதிப் புத்தேள்
கண்புதைத் தன;பேர் ஓதை கடல்ஒலி புதைத்தது அன்றே. 13

---

608. கிடைப்பன: பூண்டன, உருள். சக்கரங்கள். பார்: பூமி, கீண்டு: பிளந்து அடைய: முற்றும். வான்: பெரிய. சாரி: இடதுசாரி, வலது சாரியாக. தேர்கள் எல்லை அடைப்பன, திசைகள் உடைப்பன, நீரைத்துடைப்பன என முடிபு கொள்க.

609. செருவில்: போரில். மா பெரிய. கூற்றம்: யமன். என்ன: போல. அருவி: அருவிபோல. கால: பொழிய. அரத்த சிவந்த கோடு தந்தம் கருவி: தொகுதி கவிழும்: ஒழுகும். அங்காந்து திறந்து மால: பெரிய. வரை. மலை. பரூஉ பருத்த. கூற்றுவனைப் போலவும மலையினைப் போலவும் யானைகள் சென்றன.
யானைப் படைகளின் இயல்பு குறிக்கப்பட்டது

610. ஒலிய: ஓசை உடைய. திரை: அலை. அன்ன: போன்ற கால்: காற்று. கதி: நெறி. கலிய: ஒலி உடைய. காப்பான் காக்குமபொருட்டு. கடைஉகம் கலியுகம். பொலியும்: தோன்றும். வாம்புரவி. தாவுகின்ற குதிரை புரவி வெள்ளம்: குதிரைக் கூட்டங்கள். குதிரைப்படைகளின் இயலபு கூறப்பட்டது.

611. கால்: காற்று கடிது: விரைந்து. கடுங்கண்: தறுகண்மை. மிகை கூற்றம். பாலினர்: தன்மையர். பகுவாய்: பிளவுபட்ட வாய் பில்கும்: சிந்தும் ஆலம்: நஞ்சு. வீயா: கெடாத வென்றி. வெற்றி காலாட்படையினர் தன்மை கூறபபட்டது.

612. எண்புதைத்து: எண்ணின் அளவைக் கடந்தது இவுளி குதிரை. பதாகை கொடி கவிகை: குடை. தூளி. புழுதி. பரிதிபபுததேள: சூரியதேவன் பேர்ஓதை இவற்றால் ஏற்பட்ட பெரிய ஓசை. புதைத்தது: மறைத்தது.

613 தேர்ஒலி, கலினப் பாய்மான்
செலவுஒலி, கொலைவெண் கோட்டுக்
கார்ஒலி, வீரர் ஆர்க்கும்
கனைஒலி, புனைதார்க் குஞ்சி
வார்ஒலி கழல்கால் செங்கண்
மள்ளர்வன் திண்தோள் கொட்டும்
பேர்ஒலி, அண்டம் எல்லாம்
பிளந்திடப் பெருத்த அன்றே. 14

614 பரந்துஎழு பூழி போர்ப்பப்
பகலவன் மறைந்து முந்நீர்க்
கரந்தவன் போன்றான் ஆக,
கங்குல்வந்து இறுத்தது ஏய்ப்ப,
சுரந்துஇருள் நிறைய முத்தின்
சோதிவெண் குடையும், வேந்தர்
நிரந்தபூண் வயிர வாளும்
நிறைநிலா எறிக்கும் மன்னோ. 15

615 தேர்நிரை கலனாய்ச் செல்ல, பரிநிரை திரையாய்த் துள்ள,
வார்முரசு ஒலியாய்க் கல்ல, வாள்கலன் மீனாய்க் கொட்ப,
தார்நிரை கவரிக் காடு நுரைகளாய்த் ததும்ப, வேழம்
கார்நிரை ஆக, தானைக் கடல்வழிக் கொண்டது அன்றே. 16

616 கள்அவிழ் கோதை மாதர்
எடுத்துஎறி கவரிக் காடு
துள்ள,அந் தணர்வாய் ஆசி
ஒருபுறம் துவன்றி ஆர்ப்ப,
தெள்விளி அமுத கீதம்
ஒருபுறம் திரண்டு விம்ம,
வள்ளைவார் குழைஎம் அன்னை
மணித்திண்தேர் நடந்தது அன்றே. 17

---

613. கலினம்: கடிவாளம். பாய்மான்: பாய்ந்துசெல்லும் குதிரை. கார்: யானையை உணர்த்தும் ஈண்டு ஆர்க்கும்: ஆரவாரிக்கும். குஞ்சி: சிகை. வார்ஒலி: மிக்க ஒலி. மள்ளர்: வீரர். பெருத்த: மிககன.

614. பரந்துஎழு: மேலே கிளம்பிய. பூழி: புழுதி. போர்ப்ப. மறைத்தலால். பகலவன்: சூரியன். கரந்தவன்: ஒளிநதவன். கங்குல: இரவு இறுத்தது: தங்கியது. ஏய்ப்ப: ஒக்க. நிரந்த: அமைந்த. எறிக்கும்: வீசும். முத்துக்குடையும், வயிர அணிகளும் ஒளியை வீசின.

615. தேர்நிரை: தேரின் வரிசை. கலன்: மரக்கலன்கள். பரிநிரை: குதிரையின் வரிசை. திரை: அலை. ஒலியாய்: கடல் ஒலியாய். கல்ல. ஒலிக்க. வாள்கலன்: வாட்படை. கொட்ப: சுழல. தார்நிரை: யாலைவரிசை. ததும்ப: மேல் எழ. வேழம்: யானைகள். கார்: மேகம். அரசனின் பல்வேறு உறுப்புக்களும் உருவகிக்கப்பட்டுள.

616. கள்: தேன். கோதை: மாலை. ஆசி: வாழ்த்துரைகள். துவன்றி: மிக்கு. தெள்: தெளிந்த. வள்ளை: வள்ளைத்தண்டு போன்ற. வார்குழை: நீண்ட காது. அன்னை: தடாதகைப் பிராட்டி.

617 மீனவன் கொடியும், கான
வெம்புலிக் கொடியும், செம்பொன்
மானவில் கொடியும், வண்ண
மயில்தழைக் காடும், தோட்டுப்
பானல்அம் கருங்கண், செவ்வாய்,
வெள் நகை, பசுந்தோள், நிம்பத்
தேன்அலம்பு அலங்கல் வேய்ந்த
செல்விதேர் மருங்கில் செல்ல, 18

618 மறைபல முகம்கொண்டு ஏத்தி, வாய்தடு மாறி எய்ப்ப,
"நிறைபரம் பரை! நீ எங்கள் நிருபர்கோன் மகளாய் வையம்
முறைசெய்து மாசு தீர்ப்பாய்; அடியனேன் முகத்து மாசும்
குறை"என நிழற்றும் திங்கட் கொள்கைபோல் கவிகை காப்ப. 19

619 அம்கயல் நோக்கி மான்தேர்க்கு
அணித்துஒரு தடம்தேர் ஊர்ந்து
வெம்கதிர் வியாழச் சூழ்ச்சி
மேம்படு சுமதி என்போன்,
நங்கைதன் குறிப்பு நோக்கி
நாற்பெரும் படையும் செல்ல,
செம்கையில் பிரம்பு நீட்டிச்
சேவகம் செலுத்திச் செல்ல, 20

620 அலகுஇல்நால் கருவிச் சேனை
ஆழ்கடல் அனைத்தும், தன்போல்
மலர்தலை உலகம் அன்றி
மகபதி உலகம் ஆதி
உலகமும் பிறவும் செல்ல,
உலப்புஇலா வலியது ஆக்கி,
திலகவாள் நுதலாள் மன்னர்
திருஎலாம் கவரச் செல்வாள். 21

---

617. மயில்தழை: மயிற்பீலி. காடும்: கூட்டமும். தோடு: இதழ். பானல்: நீலோற்பலம். அம்: அழகிய. நிம்பம்: வேம்பு அலங்கல்: மாலை. (இப்பாடல் குளகம்).

618. ஏத்தி. துதித்து. எய்ப்பு: இளைக்க. நிறைபரம்பரை: எங்கும் நிறைந்த பராசக்தி. நிருபர்கோன்: மன்னர் மன்னனான மலையத்துவசன். மாசு: குற்றம். நிழற்றும்: நிழலைச் செய்யும். திங்கள்: சந்திரன். கவிகை: வெண்கொற்றக்குடை. (இதுவும் குளகம்)

619. நோக்கி: பிராட்டி. வியாழன்: வியாழ பகவான், பிரகஸ்பதி. சுமதி: சுமதி எனும் முதல் அமைச்சன். (இதுவும் குளகம்).

620. அலகுஇல்: அளவற்ற. மலர்தலை உலகம்: பரந்த நிலவுலகம். மகபதி உலகம்: இந்திரன் உலகம். உலப்புஇலா: அழியாத. திலகவாள் நுதலாள்: தடாதகைப் பிராட்டியார். திரு: செல்வம்,

621 கயபதி ஆதி ஆய
 வடபுலக் காவல் வேந்தர்
புயவலி அடங்க வென்று
 புழைக்கைமான் புரவி மான்தேர்
பயல்மதி நுதல்வேல் உண்கண்
 பாவையர் ஆய மோடு,
நயம்மலி திறையும் கொண்டு
 திசையின்மேல் நாட்டம் வைத்தாள். 22

622 வார்கழல் வலவன் தேரை வலியகால் உதைப்ப, முந்நீர்
ஊர்கலன் ஒப்பத் தூண்ட, உம்பர்கோன் அனிகத்து எய்திப்
போர்விளை யாடு முன்னர், புரந்தரன் மிலைந்த தும்பைத்
தார்விழ, ஆற்றல் சிந்த, தருக்கழிந்து அகன்று போனான். 23

623 இழைஇடை நுழையா வண்ணம் இடைஇற வீங்கு கொங்கைக்
குழையிடை நடந்து மீளும் கொலைக்கணார் குழுவும்; தான
மழைகவிழ் கடாத்து வெள்ளை வாரணம் மாவும், கோவும்
தழைகதிர் மணியும் தெய்வத் தருக்களும் கவர்ந்து மீண்டாள். 24

624 இவ்வாறு மற்றைத் திசைக்காவலர் யாரை யும்போய்த்
தெவ்ஆண்மை சிந்தச் செருச்செய்து திறையும் கைக்கொண்டு
அவ்வாறு வெல்வாள் என,மூன்றுஅரண் அட்ட மேருக்
கைவார் சிலையான் கயிலைக்கிரி நோக்கிச் செல்வாள். 25

---

621. கயபதி: கஜபதி எனும் வடஅரசன். புழக்கைமான்: யானை. மான்தேர்: குதிரை பூட்டிய தேர். பயல்மதி: அரைமதி. நுதல்: நெற்றி. பாவையர்: மகளிர். ஆயம்: கூட்டம். நயம் மலி: நலம் மிக்க. திசையின்மேல்: திசை காப்பாளர் மேல்.

622. வலவன்: தேர்ப்பாகன். வலியகால்: வலியகாற்று. உதைப்ப: தள்ள. முந்நீர்: கடல். கலன்: கப்பல். அனிகம்: படை. விளையாடுமுன்னர்: தொடங்கும் முன்னர். புரந்தரன்: இந்திரன். தும்பை: போர்குறித்துச் சூடும் மாலை. தருக்கு: மனஎழுச்சி. சாதாரண விளையாட்டுப்போல, அவ்வளவு எளிதாகப் போரிட்டாள்.

623. இழை இடை நுழையா வண்ணம்: நூல் இடையில் புகாதவாறு. இற: ஒடியுமாறு. வீங்கு: பருத்த. குழையிடை நடந்து மீளும் கொலைக்கணார்: செவிவரையில் சென்று திரும்பும் கொல்லத்தக்க கண்களைப்பெற்ற மகளிர். குழு: கூட்டம். தானமழை கவிழ் கடாத்து: முகில்போலும் மதத்தைக் கொட்டுகின்ற சுவட்டினையுடைய. வெள்ளைவாரணம்: வெள்ளை யானை. மா: குதிரை. கோ: காமதேனு. தழைகதிர்மணி: சிந்தாமணி· தெய்வத்தரு: கற்பகம் முதலிய மரங்கள். கவர்ந்து: பற்றி.

624. திசைக் காவலர்: திசைக் காப்பாளர். தெவ்ஆண்மை: பகைவரின் வீரம். சிந்த: கெடுமாறு. செருச்செய்து: போர்செய்து. திறை: கப்பம். மூன்று அரண் அட்ட மேருக்கைவார் சிலையான்: மும்மதிலையும் அழித்த நீண்ட மேருமலையாகிய வில்லைக் கையி லுடைய சிவபெருமான்.

625 சலிக்கும் புரவித் தடந்தேருடைத் தம்பி ராட்டி,
கலிக்கும் பலதூ ரியம்கைவரை, தெய்வத் திண்தேர்
வலிக்கும் பரி,மள் ளர்வழங்குஒலி வாங்கி, நேரே
ஒலிக்கும் படிகிட் டினள்ஊழிதோறு ஓங்கும் ஓங்கல். 26

626 வானார் கயிலை, மலையான்மகள், தன்னை நீத்துப்
போனாள், வந்தாள்என்று, அருவிக்கண் புனல்உக்கு அந்நீர்
ஆனா ஒலியால், "அன்னை!வா!"என்று அழைஇத்தன் தேசு
தானும் நகையாள் தழீஇ,எதிர் ஏற்பச் சென்றாள். 27

627 கிட்டிப் பொருப்பை, கிரியோடு கிரிகள் தாக்கி
முட்டிப் பொருதால் எனவேழம் முழங்கிப் பாய,
புட்டில் புறத்தார் மறத்தார்,கணை பூட்டு வில்லார்
வட்டித்து உரும்ஏறு என ஆர்த்து வளைந்து கொண்டார். 28

628 ஓடித் திருமா மலைகாவலர், உம்ப ரார்க்கும்
நாடிப் பணிதற்கு அரிதாகிய, நந்தி பாதம்
கூடிப் பணிந்து,இத் திறம்கூறலும், கொற்ற ஏனம்
தேடிக் கிடையான் உளம்தேர்ந்தனன், நந்தி எந்தை. 29

629 வென்றிக் கணத்தை விடுத்தான்; கனம்மீது பெய்த
குன்றிக் கணம்போல் சுழல்கண்அழல் கொப்ப ளிப்ப,
சென்றுஇக்கு அனைய மொழியாள்பெரும் சேனை யோடும்
ஒன்றி, கடலும் கடலும்பொருது ஒத்தது அன்றே. 30

---

625 சலிக்கும்: செல்லுகின்ற. புரவி: குதிரை. தடம்தேர்: பெரிய தேர். தம்பிராட்டி: தடாதகைப்பிராட்டி. கலிக்கும்: ஒலிக்கின்ற. கைவரை: யானைகள். திண்தேர்: வலிய தேர். வலிக்கும் பரி: இழுக்கும் குதிரைகள்: மள்ளர்: வீரர். வாங்கி: ஏற்றுக்கொண்டு. நேரே ஒலிக்கும்படி: எதிரொலி செய்யுமாறு. கிட்டினள்: அடைந்தாள். ஊழிதோறும் ஓங்கும் ஓங்கல்: ஊழிக்காலம்தோறும் வளர்கின்ற கயிலைமலை.

626. வான்ஆர்: விண்பொருந்திய. மலையான்மகள்: மலையரசன் புதல்வியாகிய பார்வதி தேவியார். நீத்து: நீங்கி. அருவிக்கண் புனல்உக்கு: அருவியாகிய கண்ணீரைச் சிந்தி. ஆனாஒலியால்: அந்நீரின் நீங்காத ஒலியினால். அன்னைவா: அன்னையே வா. அழைஇ: அழைத்து தேசு: (இங்கே) வெள் ஒளி. தழீஇ: தழுவி. எதிர் ஏற்ப: எதிர்கொள்ளுமாறு.

627. பொருப்பு: திருக்கயிலை. கிரி: மலை. வேழம்: யானை. புட்டில்: அம்புக்கூடு. மறத்தார்: வீரர்கள். வட்டித்து: சுழன்று. உரும்ஏறு: இடிஏறு. ஆர்த்து: ஆரவாரித்து.

628. திருமாமலை: சிறந்த பெரிய கயிலைமலை. உம்பரார்க்கும்: தேவர்களுக்கும் நந்தி: திருநந்தித்தேவர். இத்திறம்: இச்செய்தியை. கொற்றஏனம் தேடிக்கிடையான்: வெற்றி பொருந்திய திருமாலாகிய பன்றி தேடிக் காணப்படாத இறைவன். உளம் தேர்ந்தனன்: திருவுள்ளக்குறிப்பை ஆராய்ந்து அறிந்தான்.

629. வென்றி: வெற்றி. கணம்: பூதகணம். கனம்: மேகம். குன்றி: குன்றிமணி: இக்கு: கரும்பு. ஒன்றி: கலந்து (போர்செய்தலால்). பொருதது என்பது பொருது என வந்தது. இரு படைகளும் தம்முட்கலத்தல் கடல் கடலோடு பொருதுவதைப்போல் இருந்தது.

630 சூலங்கள், மழுப்படை, தோமரம், நேமி, பிண்டி
பாலங்கள், கழுக்கடை, வாள்படை, தண்டம், நாஞ்சில்,
ஆலம் கவிழ்க்கின்ற அயில்படை, வீசி ஊழிக்
காலம் கலிக்கும் கடல்போன்ற களமர் ஆர்ப்பு. 31

631 எறிகின்றன, ஓச்சுவ, எய்வன ஆதி யாகச்
செறிகின்றன பல்படை, செந்நிறப் புண்நீர் மூழ்கிப்
பறிகின்றன வும், பிழைக் கின்றனவும், பட்டுத் தாக்கி
முறிகின்றன வும், முயன் றோர்வினைப் போகம் ஒத்த. 32

632 தெரிசிக்க வந்த சிலசேவர் சிறைப்புள் ஊர்தி
வெருவிப் பறந்தஒழிந்தோர் விலங்குஊர்தி மானம்
கருவிப் படையால் சிதைபட்டன; காலன் ஊர்தி
குருதிப் புனல்உக் கதுகொற்றவை உண்டது என்ன. 33

633 பொருகின்றது கண்டுவிச் சாதரர் போகம் வீடு
தருகின்றவ னைத்தொழ, வான்நெறி சார்ந்து நேரே
வருகின்றவர் வேறு வழிக்கொடு போவர்; அன்புக்கு
உருகுஇன் தளிர் மெல்லடி யாரொடும் ஊற்றம் அஞ்சா 34

634 திங்கள்படை செங்கதி ரோன்படை, சீற்றம் ஏற்ற
அங்கிப்படை தீம்புன லான்படை, நார சிங்கத்
துங்கப்படை சிம்புள் நெடும்படை, சூறைச் செல்வன்
வெங்கண்படை பன்னக வெம்படை மாறி விட்டார். 35

---

630. தோமரம்: ஈட்டி. நேமி: சக்கரப்படை. பிண்டி பாலங்கள்: எறிபடைகள். கழுக்கடை: சிறிய ஈட்டி. நாஞ்சில்: கலப்பை. ஆலம்: நஞ்சு. அயில்: வேல். கலிக்கும்: ஒலிக்கும். களமர்: வீரர்கள்.

631. புண்நீர்: இரத்தம் பறிகின்றன: கழன்று ஓடுவன. பிழைக்கின்றன: தவறிப் போனவை. பட்டு: உடம்பிலே பட்டு. ஒத்த: ஒத்தன.

632 சிறை: இறகு. புள்: பறவை. வெருவி: அஞ்சி. பறந்த: பறந்தன. விலங்கு ஊர்தி: ஐராவதம் முதலிய. காலன் ஊர்தி: யமனது ஊர்தியாகிய எருமைக்கடா. உக்கது: சிந்தியது. கொற்றவை: காளிதேவி. உண்டது என்ன மகிடாசுரன் (கடா) உயிரை உண்டது போல.

633. பொருகின்றது கண்டு: போர் செய்தலைக் கண்டு. மெல்லடியார்: பெண்கள். ஊற்றம்; இடையூறு. அஞ்சா: அஞ்சி. வருகின்றவர் ஊற்றம் அஞ்சி, வேறு வழிக்கொடு போவர் எனக் கூட்டுக.

634. தாக்கும் படையும் எதிர்க்கும் படையும் கூறப்பட்டது. அங்கி: அக்கினிக்கணை; சிம்புள்: சரபக்கணை. சூறைச் செல்வன்; வாயு. பன்னகம்: பாம்பு.

635 கொட்புற்று அமர்ஆடும்இக் கொள்கையர் தம்மில், நந்தி
நட்புஉற்றவர் கைப்படை தூள்பட,ஞான மூர்த்தி
பெட்புஉற்று அருள வரும்எங்கள் பிராட்டி, வெய்ய
கண்புற்று அரவின் கணைமாரிகள் தூற்றி நின்றாள். 36

636 கையில் படைஅற்றனர் கற்படை தொட்டு,வீரர்
மெய்யில் படுகென்று விடுக்குமுன், வீரக் கன்னி
பொய்யில் படுநெஞ்சு உடையார்தவம் போல மாய,
நெய்யில் படுவச் சிரவேலை நிமிர்ந்து வீசி, 37

637 துண்டம் படவே துணித்துஅக்கண வீரர் தம்மைத்
தண்டம் கொடுதாக் கினள்;சாய்ந்துஅவர் சாம்பிப் போனார்;
அண்டங் கள்சரா சரம்யாவையும் தானே ஆக்கிக்
கொண்டுஎங்கும் நின்றாள் வலிகூற வரம்பிற்று ஆமோ? 38

638 படைஅற்று, விமானமும் பற்றுஅற அற்று, சுற்றும்
தொடைஅற்று, இகல்மூண்டு எழுந்தோள்வலி அற்று, செற்றம்
இடைஅற்று, வீர நகையற்று,அடல் ஏறு போலும்
நடைஅற்று, அடைவார் நிலைகண்டனன், நந்தி அண்ணல். 39

639 உடையான் அடிதாழ்ந்து இவைஓதலும், ஓதம் நீத்தச்
சடையான், இளவாள் நகைசெய்து, தருமச் செங்கண்
விடையான், சிலையான், இகல்வென்றி விளக்கும் தெய்வப்
படையான் எழுந்தான்; அமராடிய பாரிற் சென்றான். 40

---

635. கொட்புற்று: சுழன்று: அமர்ஆடும்: போர்செய்யும். நந்தி: நந்தி எம்பெருமான். தூள்பட: தூளாகுமாறு. ஞானமூர்த்தி: சிவபெருமான். பெட்பு: விருப்பம். பிராட்டி: தடாதகை. வெய்ய: கொடிய. தூற்றி: பொழிந்து.

636 படைஅற்றனர்; படைக்கலன்களை இழந்த வீரர்கள். வீரர்: பிராட்டியாரின் வீரர்கள். மாய: அழிய. வச்சிரவேல்: வச்சிரப்படை. (இப்பாடல் குளகம்).

637. சாம்பி: கூம்பி . நின்றாள்: பராசக்தி. வரம்பு: அளவு.

638. அற்று: ஒழிய. விமானம்: ஊர்தி. பற்றுஅற: சிறிதுமின்றி. சுற்றும் தொடை: அணிந்த மாலைகள். இகல்: போர். செற்றம்: சினம். அடல்ஏறு: வலிமை பொருந்திய சிங்கம். அடைவார்: (திரும்பி) வருவார்.

639. உடையான்: இறைவன். ஓதலும்: கூறுதலும். ஓதம்நீத்தச் சடையான்: அலைகளை யுடைய கங்கையைச் சடையிலுள்ள இறைவன். இளவாள் நகை: ஒளிபொருந்திய புன்னகை. தருமச்செங்கண் விடையான்: சிவந்த கண்களையுடைய அறமெனும் ஏற்றினை உடையான். இகல்; போர். வென்றி: வெற்றி. அமர் ஆடியபார்: போர்செய்யும் களம்.

640 மேவி ஆகவப் பாரிடைப்
பாரிட வீரரை அமராடி,
ஓவி லாவலி கவர்ந்ததும்
அன்றினி உருத்துஎவர் எதிர்ந்தாலும்,
தாவி லாவலி கவரவும்,
மடங்கலின் தனிப்பிறை எனநிற்கும்
தேவி யார்திரு உருவமும்
சேவகச் செய்கையும் எதிர்கண்டான். 41

641 ஒற்றை வார்கழல் சரணமும்,
பாம்புஅசைத்து உடுத்தவெம் புலித்தோலும்,
கொற்ற வாள்மழுக் கரமும்,வெண்
ணீறுஅணி கோலமும், நூல்மார்பும்,
கற்றை வேணியும், தன்னையே
நோக்கிய கருணைசெய் திருநோக்கும்,
பெற்ற தன்வலப் பாதியைத்
தடாகைப் பிராட்டியும் எதிர்கண்டாள். 42

642 கண்ட எல்லையில் ஒருமுலை
மறைந்தது; கருத்தில்நாண், மடன்,அச்சம்
கொண்டுஅ மைந்திட, குனிதர
மலர்ந்தபூங் கொம்பரின் ஒசிந்து,ஒல்கிப்
பண்டை அன்புவந்து இறைகொள,
கருங்குழற் பாரமும் பிடர்தாழ,
கெண்டை உண்கணும் புறஅடி
நோக்க,மண் கிளைத்துமின் எனநின்றாள். 43

---

640. மேவி: சென்று. ஆகவப்பாரிடை: போர்க்களத்தில். பாரிட வீரரை: பூதகண வீரரோடு. அமராடி: போராடி. ஓவிலாவலி: நீங்காத வலிமை. கவர்ந்ததும்: கொண்டதும். உருத்து: சினந்து. தாவிலா: கெடாத. மடங்கலின் தனிப்பிணை என: ஒப்பற்ற பெண் சிங்கத்தைப் போல. தேவியார்: தடாதகைத் தேவியார். சேவகச் செய்கை: வீரச் செயல். எதிர்: நேரில்.

641. ஒற்றைவார்கழல் சரணம்: ஒன்றுகிய வீரகண்டையை அணிந்த திருவடி. அசைத்து: பிணித்து கொற்றவாள் மழு: வெற்றியையும் ஒளியையுமுடைய மழுப்படை. கற்றை வேணியும்: திரண்ட சடையையும் பெற்ற: உடைய. வலப்பாதி: வலப்பாதியாகிய சிவ பெருமான்.

642. எல்லையில்: அளவில். கருத்தில்: உள்ளத்தின்கண் (நாண், மடன், அச்சம் இவை பெண்மைக்குரிய இயல்புகள்). அமைந்திட: பொருந்திட. குனிதர: வளையும்படி: மலர்ந்த: பூத்த. பூங்கொம்பரின்: பூங்கொம்பைப் போல. ஒசிந்து ஒல்கி: வளைந்து துவண்டு. பண்டை: முன்னைய. இறைகொள: தங்க. பிடர்தாழ: பிடரியிற் தாழ. கெண்டை உண்கண்: கெண்டைமீன் போன்ற மையுண்ட கண்கள். மண்கிளைத்து: மண்ணைத் திருவிரலால் கீறிக்கொண்டு. மின்என: மின்னலை ஒத்து.

643 நின்ற மென்கொடிக்கு அகல்விசும்பு
இடை,அரன் நிகழ்த்திய திருமாற்றம்
அன்றுஅ றிந்தமூ தறிவனும்
சுமதிசீ றடிபணிந்து,"அன் ணய்! இக்
கொன்றை அம்சடைக் குழகனே
நின்மணக் குழகன்" என்றலும்அன்பு
துன்ற நின்றவட் பார்த்து,அருள்
சிவபரஞ் சோதிமற்று இதுகூறும். 44

644 "என்று தொட்டுநீ திசையின்மேல்
சயங்குறித்து எழுந்துபோந் தனை,யாமும்
அன்று தொட்டு,நம் மதுரைவிட்டு
உனைவிடாது அடுத்துவந் தனைப்;உன்னைத்
தொன்று தொட்டநான் மறைஉரை
வழி,வரு சோமவா ரத்துஓரை
நன்று தொட்டநாள் மணஞ்செய
வருதும்;நின் நகர்க்குநீ ஏகு''என்றான். 45

645 என்ற நாதன்மேல், அன்பையும்
உயிரையும் இருத்திஆ யம்சூழக்
குன்றம் அன்னதேர் மேற்கொடு,
தூரியம் குரைகடல் எனஆர்ப்ப,
நின்ற தெய்வமால் வரைகளும்
புண்ணிய நீத்தமும் நீத்துஏகி,
மன்றல் மாமது ராபுரி
அடைந்தனள், மதிக்குல விளக்குஅன்னாள். 46

---

643. மென்கொடிக்கு: மெல்லிய கொடியைப் போன்ற பிராட்டியாருக்கு. அகல் விசும்பு இடை: அகன்ற ஆகாயத்திலிருந்து. அரன்: சிவபெருமான். திருமாற்றம்: திருவாக்கினை. மூதறிவனும் சுமதி: பேரறிவாளனான சுமதி என்னும் மந்திரி. சீறடி: சிறிய திருவடி. கொன்றை அம்சடைக்குழகன்: கொன்றை மாலையை அணிந்த சடையையுடைய பேரழகன். மணக்குழகன்: மணவாளன். அன்புதுன்ற: அன்பு நிறைய.

644. என்றுதொட்டு: எந்தக்காலம்முதல். போந்தனை: போயினையோ. அடுத்து: உடன். தொன்றுதொட்ட: பழைய. வழி: கூறியவாறு. சோமவாரம்: திங்கட்கிழமை. நன்று ஓரை தொட்டநாள்: நல்ல முகூர்த்தம்கூடிய வேளையில்: வருதும்: வருவேம். ஏகு: செல்வாயாக.

645. நாதன்: தலைவன். ஆயம்: மகளிர் கூட்டம். குரைகடல்: ஆர்க்கின்ற கடல். ஆர்ப்பு: ஒலிக்க. மால்: பெரிய. வரை: மலை. நீத்தம்: நதிகள். மன்றல்மா மதுராபுரி: மணம்மிக்க பெருமையுடைய மதுரைநகர். மதிக் குலவிளக்கு அன்னாள்: சந்திர குலத்துக்கு விளக்குப் போன்ற தடாதகைப் பிராட்டியார்.

646 மங்கை நாயகி மங்கலம்
எதிர்கொள வந்து,வான் இழிசெல்வம்
பொங்கு மாளிகை புகுந்தனள்
ஆக,மேல் புதுமணத் திறம்தீட்டி,
எங்கும் ஓலைஉய்த்து, அமைச்சர்மங்
கலவினைக்கு இயைவன அமைக்கின்றார்;
அம்கண் மாநகர் எங்கணும்
கடிமுரசு ஆனைமேல் அறைவித்தார். 47

647 கன்னிதன் மணமுரசு அறைதலும்,
கடிநகர் உறைபவர் கரைகெடத்
துன்னிய உவகையர், கடவுளைத்
தொழுகையர், உடலம் முகிழ்ப்புஎழப்
பன்னிய துதியினர், இயல்எழில்
மகளிரை அழகுசெய் பரிசுஎன
இன்இயல் எழில்வள நகர்எலாம்
செயல்வினை அணிபெற எழில்செய்வார். 48

648 கோதையொ டும்பரி சந்தனக்
குப்பைக ளைந்தனர் வீசுவார்,
சீதள மென்பனி நீர்கள்தூய்ச்
சிந்தின பூழிஅ டக்குவார்,
மாதரும் மைந்தரும் இறைமகள்
மன்றல் மகிழ்ச்சி மயக்கினால்
காதணி குழை,தொடி, கண்டிகை,
கழல்வன தெரிகிலர் தொழில்செய்வார். 49

---

646. மங்கைநாயகி: மங்கையர்க்கரசியாகிய பிராட்டியார். வான்இழி: வானுலகத்தினின்றும் உய்த்த. மேல்: பின்னர். புதுமணத் திறம் தீட்டி: கடிமணச்செயலை எழுதி ஓலை உய்த்து: ஓலை அனுப்பி இயைவன: ஏற்றவற்றை அம்கண்: அழகிய இடத்தினையுடைய. கடிமுரசு: மணமுரசு. அறைவித்தார்: சாற்றுவித்தார்.

647. கன்னி: தடாதகைப் பிராட்டியார். கரைகெட: எல்லைஅற துன்னிய: ஓங்கிய. முகிழ்ப்பு: புளகம். இயல் எழில்; இயற்கை அழகு பரிசுஎன: தன்மைபோல. இயல்பிலேயே அழகுடைய நகரை மேலும் அழகுபெறச் செய்தனர்.

648. பரி: நீங்கிய. வீசுவார்: வெளியே எறிவார்கள். சீதளம்: குளிர்ந்த. தூய்: தெளித்து. பூழி: புழுதி. இறைமகள்: மீனாட்சி குழை: காதில் அணியப்படும் காதணி. தொடி: வளைகள். கண்டிகை: கழுத்தணி, பல்வேறு அணிகலன்கள் கழல்வன உணராராய் அழகு செய்கின்றனர்.

649 "மங்கலம் என்று" என வினவுவார்;
"வரும்மதி நாள்" என உரைசெய்வார்;
தங்களை ஒல்லை தழீஇக்கொள்வார்;
தாங்குஅரும் ஓகை தலைக்கொள்வார்;
திங்களின் எல்லையும் ஆறுநாள்
ஆறுஉகம் என்று செலுத்துவார்;
நங்கைஅருங்கடி காணவோ
துடித்தன தோள்கள் நமக்குஎன்பார். 50

650 பித்திகை வெள்ளை புதுக்குவார்;
பெட்புஉறுவார்களும் பெட்புஉறச்
சித்திர பந்தி நிறுத்துவார்;
தெற்றிகள் குங்குமம் நீவுவார்;
வித்திய பாலிகை, மென்தழை
விரிதலை நீர்நிறை பொற்குடம்,
பத்தியின் வேதி நிரப்புவார்:
தோரணம் வாயில் பரப்புவார். 51

651 நீள்இடை மணிமறுகு எங்கணும்
நெடுநடைக் காவணம் நாட்டுவார்;
பாளைகொள் கமுகு, சுவைக்கழை,
பழுக்குலை வாழை ஒழுக்குவார்;
கோள்இறை கொண்டுஎன ஆடிகள்
கோத்துஅணி வார்;மிசை கொடிநிரை
வாள்அரி எழுபரி அடிபட
மத்திகை நிரைஎன வைப்பரால். 52

---

649. மதிநாள்: திங்கட்கிழமை. ஒல்லை: விரைவாக. தழீஇ: தழுவி. ஓகை: உவகை. தலைக்கொள்வார்: அடைவார்கள். எல்லையும் வரும்வரை. அருங்கடி: திருமண விழா மகளிர்க்கு இடத்தோள் துடித்தல் நன்மைக்காம் என்ப.

650. பித்திகை: சுவர். பெட்புஉற: விருப்பம்கொள்ள பந்தி. வரிசை தெற்றி: திண்ணை. நீவுவார்: மெழுகுவார்கள். வித்திய: விதைத்த மென்தழை: மாங்கொத்து. பொற்குடம்: பூரண கும்பம் பத்தியின்: வரிசையாக. வேதி: திண்ணை.

651. மணி: அழகிய. மறுகு: வீதி. காவணம்: பந்தர். சுவைக்கழை: கரும்பு. ஒழுக்குவார்: வரிசையாகக் கட்டுவார்கள். இறைகொண்டுஎன: தங்கிஇருத்தல் போல. ஆடி: கண்ணாடி. மிசை: மேலே. வாள்அரி: ஒளிஉடைய. எழுபரி: (சூரியனுடைய) ஏழு குதிரைகள். மத்திகைநிரை' சம்மட்டி வரிசை பந்தரைப் பல்வேறு பொருள் கொண்டு அணிசெய்கின்றனர்.

652 பூவொடு தண்பனி சிந்துவார்;
பொரியொடு பொன்சுணம் வீசுவார்;
பாவைவி ளக்குநி றுத்துவார்;
பைந்தொடை பந்தரில் நாற்றுவார்;
ஆவணம் என்னஅ யிர்ப்புற
அணிமறுகு எங்கணும் அரதனக்
கோவையும், மரகத மாலையும்,
கோப்புஅமை ஆரமும் தூக்குவார். 53

653 அடுகரி சிந்துரம் அப்புவார்;
அழல்மணி ஓடை மிலைச்சுவார்;
கடுநடை இவுளி கழுத்துஅணி
கால்அணி கலனைத் திருத்துவார்;
சுடர்விடு தேர்பரி பூட்டுவார்;
தொடையொடு கவரிகள் தூக்குவார்;
வடுஅறு பொன்கல நவமணி
மங்கல தீபம் இயற்றுவார். 54

654 பழையன கலனை வெறுப்பரால்;
புதியன பணிகள் பரிப்பரால்;
குழைபனி நீர்அளை குங்குமம்
குவிமுலை புதைபட மெழுகுவார்;
மெழுகிய ஈரம் புலர்த்துவார்;
விரைபடு கலவைகள் அப்புவார்;
அழகிய கண்ணாடி நோக்குவார்;
மைந்தரை ஆகுலம் ஆக்குவார். 55

---

652. தண்பனி: குளிர்ந்த நீர். பொன்சுணம்: பொற்பொடி. பைந்தொடை: பசிய மாலைகள். நாற்றுவார்: கட்டி விடுவார்கள். ஆவணம். வீதி. அயிர்ப்புற: ஐயுறுமாறு. அரதனம். இரத்தினம். கோப்பு: கோவை. ஆரம்: முத்து, தூக்குவார்: தொங்க விடுவார்கள்.

653. கரி: யானை. அழல்மணி: மாணிக்கம். ஓடை: முகபடாம். மிலைச்சுவார்: சூட்டுவார்கள். இவுளி குதிரை. கலன் சேணம். வடுஅறு: குற்றமற்ற.

654. கலன்: அணிகலன்கள். வெறுப்பர்: வெறுத்துக் களைவர். பரிப்பர்: அணிவார்கள். விரைபடு: மணம் பொருந்திய. ஆகுலம்: இன்பம் (வேட்கை நோய்).

655 அஞ்சனம் வேல்விழி தீட்டுவார்;
ஆடவர் மார்பிடை நாட்டுவார்;
பஞ்சுகள் பாதம் இருத்துவார்;
பரிபுரம் மீது திருத்துவார்;
வஞ்சியர் தேறல் அருந்துவார்;
மருங்குல்த ளாட வருந்துவார்;
கொஞ்சிய கனிமொழி கழறுவார்;
குழுவொடு குரவைகள் குழறுவார். 56

656 கின்னர மிதுனம் எனச்செல்வார்;
கிளைகெழு பாணேடு விறலியர்
கன்னியர் அரசை வணங்குவார்;
கடிமணம் எய்தும் களிப்பினல்
இன்னிசை யாழொடு பாடுவார்;
ஈந்தன துகில்விரித்து ஏந்துவார்;
சென்னியின் மீதுகொண்டு ஆடுவார்;
தேறலை உண்டு செருக்குவார். 57

657 மன்னர் மகளிரும், மறையவர்
மகளிரும், வந்துபொன் மாலையைத்
துன்னினர், சோபனம் வினவுவார்;
தோகைதன் மணவணி நோக்குவார்;
கன்னிதன் ஏவலர் வீசிய
காசறை கர்ப்புர வாசமென்
பொன்நறும் கலவையின் மெய்எலாம்
புதைபட வளனெடும் போவரால். 58

---

655. அஞ்சனம்: மை. பஞ்சு: செம்பஞ்சுக் குழம்பு. பரிபுரம்: சிலம்பு. தேறல்: மது. மருங்குல்: இடை. குழு: கூட்டம். குரவை: குரவைப் பாட்டு. குழறுவார்கள்: பாடுவார்கள்.

656. கின்னர மிதுனம்: ஆணும் பெண்ணுமாகிய கின்னரப் பறவைகள். கிளை: சுற்றம். கெழு: பொருந்திய. பாண்: பாணர்கள். விறலியர்: பாண்மகளிர். ஈந்தன: பரிசாகக் கொடுத்தவை. சென்னி: முடி. செருக்குவார்: களிப்பார்கள்.

657. பொன் மாலை: காஞ்சன மாலை. சோபனம்: நன்மணம். காசறை: மயிர்ச் சாந்து. கர்ப்புரம்; பச்சைக் கர்ப்பூரம். வளன்: (ஈண்டு) மகிழ்ச்சி.

658 அம்க னகம்செய்ய தசும்பின,
ஆடை பொதிந்தன, தோடுஅவிழ்
தொங்கல் வளைந்தன, மங்கையர்
துள்ளிய கவரியின் உள்ளன,
கங்கையும் வாணியும் யமுனையும்
காவிரி யும்பல துறைதொறும்
மங்கல தூரியம் ஆர்ப்பன
மதமலை மேலன வருவன. 59

659 அங்குஅவர் மனைதொறும் மணவினை
அணுகிய துழனியர் என,மறைப்
புங்கவர் இனிதுஉண அறுசுவைப்
போனகம் அடுவினை புரிகுவார்;
இங்குஅடு வனபலி அடிகளுக்கு
என,யதி களைஎதிர் பணிகுவார்;
சங்கரன் அடியரை எதிர்கொள்வார்
சபரியை விதிமுறை புரிகுவார். 60

660 இன்னணம் நகர்செயல் அணிசெய,
இணைஇலி மணமகன், மணவினைக்
கன்னியும் அனையவள் என்னின்,இக்
கடிநகர் செயும்எழில் வளனையாம்
என்னஅ ரியநகர் செயல்எழில்
இணைஎன உரைசெய்வது எவன்;இதன்
முன்இறை மகள்தமர் மணஅணி
மண்டப வினைசெயும் முறைசொல்வாம். 61

---

658. அம்: அழகிய. கனகம்: பொன். தசும்பு: குடம். தோடு: இதழ். தொங்கல்: மாலை. வாணி: சரசுவதியாறு. யமுனை: காளிந்தி. துறை: நீர்த்துறை. மதமலை: யானை. தூரியம்: இசைக் கருவிகள். தசும்பின, பொதிந்தன, வளைந்தன, உள்ளன, ஆர்ப்பன முதலிய முற்றெச்சங்கள்.

659 துழனி: ஆரவாரம். போனகம்: உண்டி. பலி: பிச்சை (திருஅமுது), யதி: துறவிகள். சபரி: பூசை.

660, இணைஇலி: ஒப்பற்றவன். இறைமகள்: தடாதகைப் பிராட்டியார், தமர்: சுற்றத்தார்.

661 கருவி வான்முகில் ஊர்தியைப்
பொருதநாள் கலைமதி மருமாட்டி
செருவில் வாங்கிய விமானமா
லைகள்என, தெய்வத வரைஎலாம்
மருவி அந்நகர் வைகிய
தம்இறை மடமகள் தனைக்காண்பான்
துருவி நின்றுஎன நட்டனர்
எட்டிவான் தொடுநிலை நெடும்தேர்கள். 62

662 பளிக்கின் ஏழ்உயர் களிறுசெய்து
அமைத்தபொன் படியது, பசும்சோதி
தெளிக்கும் நீலத்தின் ஆளிகள்
நிரைமணித் தெற்றியது, உற்றோர்சாய்
வெளிக்குள் ஆடிய ஓவியப்
பாவைபோல் மிளிர்பளிங் கால்சோதி
தளிர்க்கும் பித்தியது, இடைஇடை
மரகதச் சாரளத் ததுமாதோ. 63

663 பல்உருச் செய்த பவளக்கால்
ஆயிரம் படைத்தது, இந் திரநீலக்
கல்உ ருத்தலைப் போதியது,
ஆடகக் கவின்கொள்உத் தரம்மேலது,
அல்உ ருக்கிய செம்மணித்
துலாத்ததால், அமுதுஉடல் பசும்திங்கள்
வில்உ ருக்குகல் மாடமது
ஆகிய வேள்விமண் டபம்செய்தார். 64

---

661. முகில் ஊர்தி: இந்திரன். கலைமதிமருமாட்டி: சந்திர குலத்திலே தோன்றிய பிராட்டி. வாங்கிய: திறையாகப் பெற்ற மாலைகள்: வரிசைகள். மருவி: பொருந்தி. தம் இறை மடமகள்: தம் இறைவனாகிய மலையரையனின் புதல்வி. துருவி: தேடி. நட்டனர்: நிறுத்தினர். எட்டி: தாவி.

662. ஏழ் உயர்களிறு: ஏழு முழம் உயர்ந்தகளிறு. பொன்படியது: பொன்னாலாகிய படிகளை உடையது. தெளிக்கும்: வீசும். தெற்றி: திண்ணை. உற்றோர்: நெருங்கினவர் கள். சாய்: சாயல். பித்தி: சுவர்.

663. உரு: உருவங்கள். போதி: போதிகை. கவின்: அழகு. அல் உருக்கிய: இருளை ஓட்டிய. வில்உருக்கு கல்: ஒளிவிடும் சந்திரகாந்தக்கல். வேள்வி மண்டபம்: திருமண மண்டபம்.

664 முத்திற் பாளைசெய்து, அவிர்மர
கதத்தினார் மொய்த்தபா சிலை,துப்பின்
கொத்தின் தீம்பழம், வெண்பொனால்
கோழ்அரை குயின்றபூ கமும்,துப்பின்
தொத்தின் தூங்குபூ, செம்பொனால்
பழுக்குலை தூக்கி,பொன் னால்தண்டு
வைத்துப் பாசொளி மரகத
நெட்டிலை வாழையும் நிரைவித்தார். 65

665 பித்தி, மாதவி, சண்பகம்,
பாதிரி, பிறவும்மண் டபம்சூழப்
பத்தி யாவளர்த்து, அளிகள்வாய்
திறந்துபண் பாட,இன் மதுக்காலத்,
தத்தி ஆய்மணம் கவர்ந்துசா
ரளம்தொறும் தவழ்ந்துஒழுகு இளம்தென்றல்,
தித்தி யாநிற்கும் மதுத்துளி
தெளித்திடச் செய்தனர் உய்யானம். 66

666 வேள்விச் சாலையும், வேதியும்,
குண்டமும், மேகலை யொடுதொல்நூல்
கேள்விச் சார்பினால் கண்டு,கண்
ணாடி,விடை கிளர்சுடர் சீவற்சம்,
நீள்வில், சாமரம், வலம்புரி,
சுவத்திகம், நிறைகுடம், எனஎட்டு
வாள்விட்டு ஓங்கும்மங் கலத்தொழில்
செய்பொறி வகையினால் நிருமித்தார். 67

---

664. அவிர்: விளங்குகின்ற. துப்பு: பவளம். வெண்பொன்: வெள்ளி. கோழ்: கொழுத்த. குயின்ற: செய்தமைத்த. பூகம்: கமுகு. தொத்து: கொத்து. நிரைவைத்தார்: வரிசையாக வைத்தார்கள்.

665. பத்தி: வரிசை. அளிகள்: வண்டுகள். உய்யானம்: பூங்காக்கள்.

666. வேதி: மேடை. குண்டம்: ஓமகுண்டம். மேகலை: வரம்பு. கேள்வி: வேதம். விடை: இடபம். சீவற்சம்: பாவை. சுவத்திகம்: மண்டப வடிவப்பொருள். பொறி வகையினால்: இயந்திர வகையினால்.

667 மணம்கொள் சாந்தொடு குங்குமப்
போதுஅளாய், மான்மதம் பனிநீர்தோய்த்து,
இணங்கு சேறுசெய்து, இருநிலம்
தடவிவான் இரவிமண் டலம்நாணப்
பணம்கொள் நாகமா மணிவிளக்கு
இருகையும் பாவைகள் எடுத்துஏந்த,
கணம்கொள் தாரகை எனநவ
மணிகுயில் கம்பலம் விதானித்தார். 68

668 செம்பொன் கோயில்முன் சேண்தொடு
காவணம் திசைஎலாம் விழுங்கச்செய்து,
அம்பொன் பாலிகைப் பாண்டில்வாய்
முளைதெளித்து, அம்புயத் தவன்ஆதி
உம்பர்க்கு ஏற்றபொன் கம்பலம்
மேல்விரித்து, உள்ளுறத் தவிசுஇட்டு,
தும்பைத் தாழ்சடை யான்தமர்க்கு
ஆதனம் சூழவிட்டு அதன்நாப்பண். 69

669 கற்ப கம்தரு வயிரவாள்
அரிப்பிடர் கதுவ,பொன் குறடுஏற்றி,
எல்ப டும்துகி ரால்குடம்
சதுரமா இயற்றிய எருத்தத்தூண்,
வில்ப டும்பனிக்கு உத்தரம்,
துப்பினல் விடங்கம்,மேல் நிலம்மூன்றுப்
பொற்ப, நூல்வழி விமானம்பன்
மணிகளால் பொலியச்செய்து, உள்ளாக. 70

---

667. சாந்து: சந்தனம். மான்மதம்: கத்தூரி. சேறு செய்து: குழம்பாக்கி. இருகையும்: இரண்டு பக்கங்களிலும். கணம்: கூட்டம். விதானித்தார்: விரித்துக்காட்டினார்கள்.

668. கோயில்: திருமணமண்டபம். பாண்டில்: வட்டில். அம்புயத்தவன்: பிரமன். உம்பர்: தேவர். ஆதனம்: இருக்கை. நாப்பண் நடுவில். (இப்பாடல் குளகம்)

669. அரிப் பிடர்: சிங்கத்தின் பிடரி. எல்: ஒளி. துகிர்: பவளம். எருத்தம்: கழுத்து. துப்பு: பவளம். விடங்கம்: கொடுங்கை. நிலம் மூன்று: மூறன்டுக்கு. பொற்ப: அழகு செய்ய. நூல்வழி: நூல் முறைப்படி உள்ளாக: அதன் உள்ளிடத்தே. (இதுவும் குளகம்).

670 அங்கம் ஆறுமே கால்களாய்,
முதல்எழுத்து அம்பொன்பீ டிகையாகி,
துங்கம் நான்மறை நூல்களே
நித்திலம் தொடுத்துஅசை தாம்புஆகி,
எங்கள் நாயகன் எம்பெரு
மாட்டியோடு இருப்பதற்கு உருக்கொண்டு
தங்கி னல்என, நவமணி
குயின்றபொன் தவிசுஅது சமைத்திட்டார். 71

671 புரந்த ரன்தரு கற்பகம்,
பொலம்துகில், பூண்முத லியநல்க,
சுரந்து அரும்பெறல் அமுதுஅமை
வகைஅறு சுவைஉண முதலாகப்
பரந்த தெய்வஆன் பயப்ப,சிந்
தாமணி பற்பலவும் சிந்தித்து
இரந்து வேண்டுவ தரத்தர,
ஈட்டினர் இந்திரன் நகர்நாண. 72

672 தென்னர் சேகரன் திருமகள்
திருமணத் திருமுகம் வரவேற்று,
மன்னர் வந்துஎதிர் தொழுது,கைக்
கொண்டு,தம் மணிமுடி மிசைஏற்றி,
அன்ன வாசகம் கேட்டனர்,
கொணர்ந்தவர்க்கு அரும்கலம் துகில்நல்கி,
முன்னர் ஈர்த்துஎழு களிப்புஉற
மனத்திலும் முந்தினர் வழிக்கொள்வார், 73

670. அங்கம் ஆறு: படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் ஆகிய ஆறு. முதல் எழுத்து: பிரணவ எழுத்து. துங்கம்: உயர்ந்த. நித்திலம்: முத்து. உருக்கொண்டு: வடிவங்கொண்டு. குயின்ற: இழைக்கப்பட்ட. சமைத்திட்டார்: அமைந்தார்கள்.

671. பொலம: பொன். துகில்: ஆடை, பீதாம்பரம். அரும்பெறல்: பெறுதற்கு அரிய. தெய்வ ஆன்: காமதேனு. நாண: நாணம் அடையுமாறு.

672. அன்னவாசகம்: திருமணச் செய்தி. ஈர்த்து: இழுத்து. கேட்டனர், முந்தினர் எச்சப் பொருளுடையன.

673 கொங்கர், சிங்களர், பல்லவர்,
வில்லவர், கோசலர், பாஞ்சாலர்,
வங்கர், சோனகர், சீனர்கள்,
சாளுவர், மாளவர், காம்போசர்,
அங்கர், மாகதர், ஆரியர்,
நேரியர், அவந்தியர், வைதர்ப்பர்,
கங்கர், கொங்கணர், விராடர்கள்,
மராடர்கள், கருநடர், குருநாடர். 74

674 கலிங்கர், சாவகர், கூவிளர்,
ஒட்டியர், கடாரர்கள், காந்தாரர்,
குலிங்கர், கேகயர், விதேகர்கள்,
பௌரவர், கொல்லர்கள், கல்யாணர்,
தெலுங்கர், கூர்ச்சரர், மச்சர்கள்,
மிலேச்சர்கள், செஞ்சையர், முதல்ஏனைப்
புலம்கொள் மன்னரும் துறைதொறும்
மிடைந்துபார் புதைபட வருகின்றார். 75

675 இத்த கைப்பல தேயமன்
னவர்களும் எள்இடம் பெறுதுஈண்டி,
பைத்த ஆழிபோல் நிலமகள்
முதுகுஇறப் பரந்ததா னையராகி,
தத்தம் நாட்டுஉள பலவகை
வளனொடும் தழீஇப்பல நெறிதோறும்,
மொய்த்து வந்தனர் செழியர்கோன்
திருமகள் முரசுஅதிர் மணமூதூர். 76

---

673. நேரியர்: சோழர் (இப்பாடல் குளகம்).

674. பௌரவர்: பூருமரபினர். திருமணம் காணவந்த பல்வேறு நாட்டு அரசர்கள் குறிக்கப்பெற்றுள்ளனர்.

675. ஈண்டி: நெருங்கி. ஆழி: கடல். முதுகு இற: முதுகு ஒடியுமாறு. தானை: சேனை. தழீஇ எடுத்துக்கொண்டு. மணமூதூர்: மணங்காணும் பழைய மதுரை நகர். மூதூருக்கு மொய்த்துவந்தனர் எனக் கூட்டுக.

676 வந்த காவலர் உழையர்சென்று
உணர்த்தினர் வருகென அருகுஉய்ப்ப,
சந்த வாள்அரிப் பிடர்அணை
மீது,அறம் தழைத்துஅருள் பழுத்துஓங்கும்
கந்தம் நாள்மலர்க் கொம்பினை,
கண்டுகண் களிப்புற முடித்தாமம்
சிந்த வீழ்ந்துஅருள் சுரந்திடத்
தொழுதுபோய்த் திருந்துதம் இடம்புக்கார். 77

677 வரைவ ளங்களும், புறவினில்
வளங்களும், மருதத்தண் பணைவேலித்
தரைவ ளங்களும், சலதிவாய்
நடைக்கலம் தருவளங் களும்ஈண்டி,
உரைவ ரம்புஅற மங்கலம்
பொலிந்தது;இவ் ஊர்;இனி நால்வேதக்
கரைக டந்தவன் திருமணம்
செயவரு காட்சியைப் பகிர்கின்றேன். 78

678 ஏக நாயகி மீண்டபின்,
ஞாட்புஇகந்து, இரசத கிரிஎய்தி,
நாக நாயகன் மணிஅணி
சுந்தர நாயகன், உயிர்க்குஎல்லாம்
போக நாயகன் ஆகி,போ
கம்புரி புணர்ப்புஅறிந்து அருள்நந்தி,
மாக நாயகன், மால்அயன்
உருத்திரர் வரவின்மேல் மனம்வைத்தான். 79

---

676. காவலர்: அரசர்கள். உழையர்: வாயில் காப்பார். சந்த: அழகிய. வாள் அரிப் பிடர் அணை: சிம்மாதனம். கந்தம்: மணம். கொம்பு: பூங்கொடி போன்ற பிராட்டியார். அருள் சுரந்திட: திருவருள் பாலிக்க.

677 வரை: மலை. புறவு: காடு. சலதி: கடல். உரை வரம்புஅற: சொல்லமுடியாதபடி எல்லைமிக. நால் வேதக் கரைகடந்தவன்: நான்மறைகளின் வரம்பு கடந்தவனாகிய சிவபிரான்.

678. ஏகநாயகி: ஒப்பற்ற தலைவியாகிய தடாதகைப்பிராட்டி. ஞாட்புஇகந்து: போர்க்களத்திலிருந்து நீங்கி. இரசதகிரி: வெள்ளிமலை நாகநாயகன்: ஆதிசேடன். மணிஅணி சுந்தரநாயகன்: அழகிய அணியைத் தரித்த சோமசுந்தரக் கடவுள். புணர்ப்பு: திருக்குறிப்பு. மாகநாயகன்: இந்திரன்.

679 சங்கு கன்னனை ஆதியா
கணாதிபர் தமைவிடுத் தனன்;அன்னார்
செங்கண் ஏற்றவர் மால்அயன்
முதற்பெரும் தேவர்வான் பதம்எய்தி,
எங்கள் நாயகன் திருமணச்
சோபனம் இயம்பினார்; அதுகேட்டுப்
பொங்கு கின்றபேர் அன்புபின்
தள்ளுறப் பொள்ளென வருகின்றார். 80

680 அஞ்சு கோடியோ சனைபுகைந்து
இருமடங்கு அழன்றவர், தமைப்போல்சூர்
அஞ்சு தீஉருத் திரர்,புடை
உடுத்தவர், அழல்கண்நால் பூதங்கள்,
அஞ்சு நாறுஉருத் திரர்அண்டத்து
உச்சியர், அரிஅயன் முதல்தேவர்
அஞ்சும் ஆணையும் ஆற்றலும்
படைத்தவர் அடுகுறள் படைவீரர். 81

681 புத்தி அட்டகர், நால்இரு
கோடிமேல் புகப்பெய்த நரகங்கள்
பத்துஇ ரட்டியும் காப்பவர்,
பார்இடப் படைஉடைக் கூர்மாண்டர்,
சத்தி யச்சிவ பரம்சுடர்
உதவிய சதஉருத் திரர்,அன்னார்
உய்த்துஅ ளித்தசூர் ஐம்பது
கோடியர் உருத்திரர், கணநாதர். 82

679. கணாதிபர்: கணத்தலைவர்கள். செங்கண் ஏற்றவர்: சிவந்த கண்களை உடைய உருத்திரர். வான்பதம்: உயர்ந்த உலகங்கள். பொள்ளென: விரைந்து.

680. இருமடங்கு: பத்துக்கோடி. அழன்றவர்: காலாக்கினி உருத்திரர். புடை: சுற்றிலும். அடுகுறள் படைவீரர்: கொல்லும் பூதப்படை வீரர்கள். (இப்பாடல் குளகம்).

681. அட்டகர்: எட்டு வித்தியேச்சுரர்கள். பார்இடப்படை: பூதப்படை, சதம்: நூறு. கணநாதர்: கணத் தலைவர்கள். (இதுவும் குளகம்).

682 பட்ட காரிவாய் அரவு அணி
பவர்,பசு பதிஉருத் திரர்ஆதி
அட்ட மூர்த்திகள், மேருவின்
அவிர்சுடர் ஆடகர், தோடுஏந்து
மட்டுஅ ருமலர் மகன்செருக்கு
அடங்கிட, மயங்கிய விதிதேற்ற
நிட்டை யால்அவன் நெற்றியில்
தோன்றிய நீலலோ கிதநாதர். 83

683 பாலம் ஏற்றசெந் தழல்விழி
உருத்திரர் பதினொரு பெயர்,வாகைச்
சூலம் ஏற்றகங் காளக
பாலியர், துரகத நெடும்காரி,
நீலம் ஏற்றபைங் கஞ்சுகப்
போர்வையின் நெடியவர், திருவாணக்
கோலம் ஏற்றவர், எண்மர்ஞா
ளிப்புறம் கொண்டகேத் திரபாலர். 84

684 செய்ய தாமரைக் கண்ணுடைக்
கரியவன், செம்மலர் மணிப்பீடத்து
ஐயன், வாசவன் ஆதிஎண்
திசைப்புலத்து அமரர்,எண் வசுதேவர்,
மைஇல் கேள்விசால் எழேழு
மருத்துகள், மருத்துவர் இருவோர்,வான்
வெய்ய வாள்வழங்கு ஆறிரண்டு
அருக்கர்ஓர் வெண்சுடர் மதிச்செல்வன். 85

---

682. காரிபட்டவாய்: நஞ்சு பொருந்திய வாய். ஆடகர்: ஆடகேச்சுரர்கள். மட்டுஅரு: தேன் நீங்காத. மலர்மகன்: பிரமன். விதிதேற்ற: ஆக்கல் தொழிலைத் தெளிவிக்க. (இதுவும் குளகம்).

683. பாலம்: நெற்றி. வாகைச்சூலம்: வெற்றியை உடைய சூலம். கங்காளர்: எலும்பு அணிந்தவர். பாலியர்: கபாலத்தை ஏந்தியவர். துரகதம்: குதிரை. காரி: சாத்தன். கஞ்சுகம்: சட்டை. நெடியவர்: சிவகணத் தலைவர்கள். ஞாளி: நாய். (இப்பாடலும் குளகம்).

684. செய்யதாமரைக் கண்ணுடைக் கரியவன்: திருமால்: செம்மலர் மணிப்பீடத்து. ஐயன்: பிரமன் வாசவன்: இந்திரன். மைஇல்: குற்றமற்ற. கேள்விசால்: நூற்கேள்வி மிக்க. எழேழு மருத்துகள்: நாற்பத்தொன்பது மருத்துக்கள், மருத்துவர் இருவர்: அசுவினி தேவர்கள் இருவர். வான்வெய்ய வாள்வழங்கு: வானினின்றும் வெப்பமாகிய ஒளியை வீசும் ஆறிரண்டு அருக்கர்: பன்னிரண்டு சூரியர். மதிச்செல்வன்: சந்திரன்.

685 கையும் கால்களும் கண்பெற்றுக்
கதிபெற்ற கடும்புலி முனிச்செல்வன்,
பைஅ ராமுடிப் பதஞ்சலி
பாற்கடல் பருகிமா தவன்சென்னி
செய்ய தாள்வைத்த சிறுமுனி,
குறுமுனி, சிவம்உணர் சனகாதி
மெய்உ ணர்ச்சியோர், வாமதே
வான்சுகன் வியாதன் நாரதன்மன்னே. 86

686 எழுவர் அன்னையர், சித்தர்,விச்
சாதரர், இயக்கர்,கின் னரர்,வேத
முழுவ ரம்புஉணர் முனிவர்,யோ
கியர்,மணி முடித்தலைப் பாலநாகர்,
வழுவில் வான்தவ வலிஉடை
நிருதர்,வாள் வலியுடை அசுரேசர்,
குழுவொ டும்பயில் பூதவே
தாளர்,வெம் கூளிகள், அரமாதர், 87

687 ஆண்டி னேடுஅய னம்பரு
வம்திங்கள் ஆறுஇரண்டு இருபக்கம்,
ஈண்டும் ஐம்பொழுது யோகங்கள்
கரணங்கள் இராப்பகல் இவற்றோடும்,
பூண்ட நாழிகை கணமுதல்
காலங்கள் பொருகடல் நதிதிக்கு,
நீண்ட மால்வரை, திக்கயம்,
மேகம்,மின், நிமிர்ந்தஐம் பெரும்பூதம், 88

---

685. கதிபெற்ற: வீடுபேறு அடைந்த. கடும்புலி முனிச் செல்வன்: புலிக்கால் முனிவன். பை: படம். அரா: பாம்பு. மாதவன்: திருமால். செய்ய: சிவந்த. சிறுமுனி: உபமன்னியு முனிவன். குறுமுனி: அகத்தியன். (இப்பாடலும் குளகம்).

686. எழுவர் அன்னையர்: சத்தமாதர் எழுவர். (இதுவும் குளகம்).

687. அயனம்: உத்திராயனம், தட்சிணாயனம். இருபக்கம்: சுக்கில, கிருட்டிண பக்கங்கள். ஐம்பொழுது: ஐந்து சிறு பொழுதுகள். (இதுவும் குளகம்).

688 மந்தி ரம்,புவ னம்,கள்,தத்
துவம்,கலை, வருணங்கள், பதம்,வேதம்,
தந்தி ரம்,பல சமயநூல்,
புறம்தழீஇச் சார்ந்தநூல், தருமம்ஆதி
முந்துஇ ரங்கிய சதுர்விதம்,
சரியையே முதலிய சதுட்பாதம்,
இந்துஇ ரங்குநீர் முடியவர்
அடியவர் இச்சியா எண்சித்தி, 89

689 ஆயி ரம்கடல் அலையவாய்ப்
பரந்துஎழும் ஆயிரம் அனிகத்துள்,
ஆயி ரம்கதிர் அனையராய்
உருத்திரர் அந்தரத் தவர்,அண்டம்
ஆயி ரம்தகர் பட்டெனத்
துந்துபி ஆயிரம் கலந்துஆர்ப்ப,
ஆயி ரம்சத கோடியோ
சனைவழி அரைக்கணத்து இடைச்செல்வார், 90

690 சித்தம் தேர்முனி வேந்தரும்
தேவரும், சிவன்உருத் தரித்தோரும்,
தத்தம் தேர்முதல் ஊர்தியர்,
வார்திகழ் சந்தனம் மணிகொங்கைக்
கொத்துஅம் தேமலர்க் குழல்மனை
யாரொடும், குளிர்விசும்பு ஆறுச்சென்று
அத்தம் தேர்இடை யாள்பங்கன்
அணிவரைக்கு அணியராய் வருகின்றார். 91

---

688. தந்திரம்: ஆகமங்கள். சதுர்விதம்: அறம், பொருள், இன்பம், வீடு. சதுட்பாதம்: நான்கு பாதங்களும். இந்து: சந்திரன். இரங்குநீர்: ஒலிக்கும் நீரை உடைய கங்கை. முடியவர் அடியவர்: முடியினையுடைய சிவபெருமானின் அடியார்கள், இச்சியா: விரும்பாத. (இதுவும் குளகம்).

689. அனிகம்: சேனை. கதிர்: சூரியன். அந்தரத்தவர்: தேவர்கள். தகர்பட்டென: உடைபட்டன. ஆர்ப்ப: ஒலிக்க

690. சித்தம் தேர் முனிவேந்தர்: மனம் தெளிந்த முனிபுங்கவர்கள். மனையார்: மனைவியர். விசும்பு: ஆகாயம். ஆறு: வழி. இடையாள் பங்கன்: சிவபிரான். அணிவரை: கயிலை மலை.

691 இழிந்த ஊர்தியர், பணிந்துஎழும்
யாக்கையர், இறைபுகழ் திருநாமம்
மொழிந்த நாவினர், பொடிப்புஎழு
மெய்யினர், முகிழ்த்தகை முடிஏறக்
கழிந்த அன்பினர், கண்முதல்
புலன்கட்கும் கருணைவான் சுவைஊற,
பொழிந்த ஆனந்தத் தேன் உறை
திருமலைப் புறத்துவண்டு எனமொய்த்தார். 92

692 விரவு வானவர் நெருக்குஅற
ஓதுக்குவான், வேத்திரப் படைஓச்சி
அரவு வார்சடை நந்திஎம்
பிரான்அவர் அணிமணி முடிதாக்க,
பரவு தூளியில் புதைபடு
கயிலைஅம் பருப்பதம், பகல்காலும்
இரவி மண்டலத்து ஒடுங்குநாள்
ஒடுங்கிய இந்துமண் டலம்மானும். 93

693 வந்த வானவர் புறநிற்ப,
நந்திஎம் வள்ளல்அங்கு உள்எய்தி,
எந்தை தாள்பணிந்து, "ஐய!விண்
ணவர்எலாம் ஈண்டினர்'' என"ஈண்டுத்
தந்திடு" என்னவந்து அழைத்து,வேத்
திரத்தினல் தராதரம் தெரிந்துஉய்ப்ப,
முந்தி முந்திவந்து இறைஞ்சினர்
சேவடி முண்டகம் முடிசூட. 94

---

691. பொடிப்பு: புளகம். முகிழ்த்த கை: கூப்பிய கை. கழிந்த: மிக்க. ஆனந்தத் தேன்: இறைவன். மொய்த்தார்: நெருங்கினர்கள்.

692. விரவு: நெருங்கிய. ஓதுக்குவான்: ஒதுக்கும் பொருட்டு. வேத்திரப்படை: பிரம்புப் படை. தூளி: துகள். பருப்பதம்: மலை. பகல்காலும்: ஒளிவீசும். ஒடுங்குநாள்: அமாவாசை. இந்துமண்டலம்: சந்திரமண்டலம்.

693. புறம்நிற்ப: வெளியே நிற்க. உள்எய்தி: உள்ளே சென்று. எந்தை: இறைவன். ஈண்டினர்: வந்திருக்கின்றனர். ஈண்டு: இங்கு. தந்திடு: அழைப்பாயாக. வேத்திரம்: பிரம்பு. தராதரம்: தகுதி. உய்ப்ப: செலுத்த. சேவடி முண்டகம்: திருவடித்தாமரை.

694 தீர்த்தன் முன்பணிந்து ஏத்துகின்
றூர்களில் சிலர்க்குத்தன் திருவாயால்
வார்த்தை நல்கியும், சிலர்க்குஅருள்
முகிழ்நகை வழங்கியும், சிலர்க்குக்கண்
பார்த்து நீண்முடி துளக்கியும்,
சிலர்க்குஅருள் பரிசில்தந்து, எழுந்துஅண்டம்
காத்த கண்டன்ஓர் மண்டபத்து
இடைபுக்குக் கடிமணக் கவின்கொள்வான். 95

695 ஆண்ட நாயகன் திருவுளக்
குறிப்புணர்ந்து அளகைநா யகன்உள்ளம்
பூண்ட காதல்மேல் கொண்டுஎழும்
அன்பும்,தன் புனிதமெய்த் தவப்பேறும்
ஈண்ட, ஆங்குஅணைந்து, எண்ணிலா
மறைகளும், இருவரும், முனிவோரும்,
தீண்ட அருந்திரு மேனியைத்
தன்கையால் தீண்டி,மங் கலஞ்செய்தான். 96

696 பூந்து கில்படாம் கொய்சகத்
தானைபின் போக்குகோ வணம்சாத்தி,
ஏந்துஇ ரட்டைஞாண் பட்டிகை
இறுக்கி,வண்டு இரைக்கும்நாள் மலர்க்குஞ்சி
வேய்ந்து, கற்பகப் புதுமலர்ச்
சிகழிகை மிலைந்து,நீறு அணிமெய்யில்
சாந்த மான்மதம், தண்பனி
நீர்அளாய்த் தடக்கையால் மட்டித்தான். 97

---

694. தீர்த்தன்: தூயவன், சிவபெருமான். முகிழ்நகை: புன்னகை. துளக்கியும்: அசைத்தும். கொள்வான்: கொள்ளக்கருத. (இப்பாடல் குளகம்).

695. ஆண்ட நாயகன்: ஆளும் தலைவனான இறைவன். அளகை நாயகன்: குபேரன். பூண்ட: கொண்ட. புனிதமெய்த்தவப்பேறு: தூய உண்மைத் தவப்பயன். ஈண்ட: கைகூட. இருவர்: திருமால், பிரமன். மங்கலம்: மணக்கோலம்.

696. (கருத்து) அழகிய ஆடையை (முன் புறத்தில்) கொய்சக ஆடையாகவும் பின் புறத்தில் போக்குகின்ற கோவணமாகவும் சாத்தி, அழகுமிக்க இரட்டையாகிய அரைஞாணைப் பட்டிகையோடு இறுக்கி, வண்டுகள் ஒலிக்கும் அன்றலர்ந்த மலர்களை அணிந்த குஞ்சியைக் கொண்டையாகப் புனைந்து, கற்பகத்தின் புதிய மலர்களைக் கொண்டு தொடுத்த மாலைசூடி, திருநீறு தரித்த மேனியில் சந்தனத்தோடு கத்தூரியையும், குளிர்ந்த பனிநீரையும் கலந்து நீண்ட கையால் பூசினன்.

697 இரண்டு செஞ்சுடர் நுழைந்திருந்
தால்என இணைமணிக் குழைக்காதில்,
சுருண்ட தோடுபொன் குண்டலம்
திணிஇருள் துரந்துதோள் புறம்துள்ள,
மருண்ட தேவரைப் பரம்என
மதிப்பவர் மையல்வல் இருள்மான
இருண்ட கண்டம்மேல் முழுமதி
கோத்துஎன இணைத்தகண் டிகைசாத்தி. 98

698 வலம்கி டந்தமுந் நூல்வரை
அருவியின் வயங்குமார்பு இடை,சென்னித்
தலம்கி டந்தவெண் திங்கள்ஊற்று
அமுதுஎனத் தரளமா ளிகைசாத்தி,
இலங்கிடு அந்தமா ணிக்கப்பரப்பு
இடை,இமைத்து இருள்முகம் பிளந்தஆரம்
கலம்கி டந்தபாற் கடல்முளைத்து
எழும்இளம் கதிர்எனக் கவின்செய்து. 99

699 திசைக டந்தநால் புயங்களில்
பட்டிகை சேர்த்து,வாள் எறிக்கும்தோள்
நசைகள் தந்தநல் லார்மனம்
கவர்ந்துஉயிர் நக்கஅங் கதம்சாத்தி,
அசைக டம்கலுழ் வாரண
உரிவைநீத்து அணிகொள்உத் தரீயம்பெய்து,
இசைக டந்தமந் திரபவித்
திரம்எடுத்து எழில்விரல் நுழைவித்து. 100

697. செஞ்சுடர்: சூரியர், திணி இருள்: செறிந்த இருளை. துரந்து: ஓட்டி. தோள்புறம் துள்ள: தோட்புறத்தில் அசைந்தாட. பரம்: பரம்பொருள். மையல்: மயக்கம். மான: ஒக்க. கண்டம்: கழுத்து கண்டிகை: வயிரக் கண்டிகை. சாத்தி. அணிந்தும். மயக்கத்தால் தேவர்கள் தம்மையே பரம்பொருள் என எண்ணுகின்றனர் (இதுவும் குளகம்).

698. வலம்கிடந்த முந்நூல்: வலப்புறமாகக் கிடந்த பூணூல். வரை அருவி: மலையருவி. வயங்கு: விளங்குகின்ற. திங்கள் ஊற்று அமுது: திங்களால் பொழியப்பெற்ற அமுதம். தாளமாளிகை: முத்துமாலை. பரப்பிடை: பரப்பின் நடுவில் ஆரம்: மாணிக்கமாலை. கலம்: மரக்கலம் கவின் செய்து: அழகு செய்து. (இதுவும் குளகம்)

699. சேர்த்து: தரித்து. நசை கடந்த: விருப்பம் உண்டாக்கிய. நல்லார்: மகளிர். நக்க: நக்கிய, உண்ட. அங்கதம்: தோள்வளை. கடம்: மதம். கலுழ்: பொழியும். வாரணம்: யானை. இசைகடந்த: புகழ்மிக்க, பவித்திரம்: மோதிரம் (இதுவும் குளகம்)

700 உடுத்த கோவணம் மிசைப்பொலம்
துகில்அசைத்து, உரகம்ஐந் தலைநால
விடுத்த போல்வெயில் மணித்தலைக்
கொடுக்குமின் விடஇருபுறம் தூக்கி,
தொடுத்த தார்புயல் தூக்கி,நூ
புரம்கழல் சொற்பதம் கடந்துஅன்பர்க்கு
அடுத்த தாள்இட்டு, இருநிதிக்
கோமகன் அருந்தவப் பயன்பெற்றான். 101

701 செங்கண் மால்,அயன், இந்திரன்
முதற்பெருந் தேவர்க்கும், யாவர்க்கும்
மங்க லந்தரு கடைக்கண்நா
யகன்,ஒரு மங்கலம் புனைந்தான்போல்
சங்கை கொண்டு,கும் போதரன்
முதுகின்மேல் சரணம்வைத்து, எதிர்போந்த
துங்க மால்விடை மேற்கொடு
நடந்தனன்; சுரர்கள்பூ மழைதூர்த்தார் 102

702 அந்த ரத்தவர் அந்தர
துந்துபி ஐந்தும்ஆர்த் தனர்சூழ;
வந்துஅ ரக்கரும் இயக்கரும்
பூதரும் மங்கல இயம்கல்ல,
கொந்துஅ லர்க்கரும் குழல்அர
மடந்தையர் கொளைவல்விஞ் சையர்தாளம்
தந்துஅ சைத்திட, மலர்ந்தபூம்
கொம்பர்போல் சாய்ந்துஅசைந் தனர்ஆட, 103

---

700. அசைத்து: இறுகக் கட்டி. உரகம்: பாம்பு. நாலவிடுத்த போல்: தொங்க விட்டதைப் போல. கொடுக்கு: ஒருவகை தலை அணி. மின்விட: ஒளிவிட. தூக்கி: தொங்கவிட்டு. அடுத்த: பொருந்திய. இருநிதிக் கோமகன்: சங்க நிதி பதும நிதி இரண்டும் உடைய குபேரன். இறைவன் தாள் சொல்லின் அளவைக் கடந்தாலும் அன்பர்க்கு அணித்தே உள்ளது. "சொற்பதம் கடந்த தொலலோன்"–திருவாசகம்.

701. மங்கலம் தரு: நன்மைகளை அளிக்கவல்ல. மங்கலம் புனைந்தான் போல்: மங்கலக் கோலம் செய்துகொண்டவன் போல. சங்கை கொண்டு: திருவுளம்கொண்டு: சரணம்: திருவடி. துங்கமால் விடை: உயர்ந்த பெரிய இடபம். சுரர்கள்; தேவர்கள். பூ மழை: மலர்மாரி தூர்த்தார்: பொழிந்தனர்.

702. மங்கல இயம் கல்ல: மங்கலக் கருவிகளைக் கல்லென முழக்கவும். கொந்து: கொத்து. கொளை பாட்டு. ஆட: ஆடவும். (இப்பாடல் குளகம்).

703 துங்க மாய்இரங்கு அருவி,ஆ
யிரமலைத் தூங்குஇருள் முழைதோறும்,
சிங்கம் ஆயிரம் வாய்திறந்து
ஆர்த்தெனச் சிரங்கள்ஆ யிரம்திண்தோள்
அங்கம் ஆயிரம் ஆயிரம்
உடையவன், ஆயிர முகம்தோறும்
சங்கம் ஆயிரம் ஆயிரம்
ஆயிரம் தடக்கையும் பிடித்துஊத 104

704 போக்கு மாயவன் புணர்ப்பையும்
இருள்மலர்ப் புணர்ப்பையும் கடந்து,எம்மைக்
காக்கும் நாயகன் அருச்சனை
விடாதுஅருள் கதிஅடைந்து உளவாணன்,
தூக்கு நேர்பட ஆயிரம்
கரங்களால் தொம்என முகம்தோறும்
தாக்க, வேறுவேறு எழுகுட
முழாஒலி தடங்கடல்ஒலி சாய்ப்ப, 105

705 முனிவர், அஞ்சலி முகிழ்த்தசெங்
கையினர்; மொழியும் ஆசியர்;உள்ளம்
கனிவுஅ ரும்பிய அன்பினர்
பரவ,உட் கருத்துஒரு வழிக்கொண்டோர்
துனிவுஅ ரும்கண நாதர்,கொட்டு
அதிர்கரத் துணையினர், மலைபோலப்
பனிவ ரும்கணர், ஆடிய
தாளினர், பாடுநா வினர்ஏத்த, 106

---

703. துங்கமாய்: மிகுதியாய். இரங்கு: ஒலிக்கும். இருள்தூங்கு ஆயிரம் முழை: இருள் குடிகொண்ட ஆயிரம் குகைகள். ஆர்த்தென: முழங்கினாற்போல. சிரங்கள்: தலைகள். திண்தோள்: வலியதோள். அங்கம்: உறுப்பு சங்கம்: சங்கு. ஆயிரம் ஆயிரம்: இரண்டாயிரம். தடக்கை: நீண்டகை:

704. மாயவன் புணர்ப்பு: மாயையினது தொடர்பு. இருள்மலம்: ஆணவமலம். கடந்து: நீங்கி, அருள்கதி: வீடுபேறு. வாணன்: வாணன் என்பான். தூக்கு நேர்பட, பாடலுக்குப் பொருந்த. முகம்தோறும்: அடிக்கும் இடம்தோறும். முழா: குடமுழா. தடங்கடல்: பெரிய கடல். ஒலிசாய்ப்ப: ஒலியைக் கீழ்ப்படுத்தவும். (இப்பாடல் குளகம்).

705. அஞ்சலி முகிழ்த்த: வணங்கிக் கூப்பிய. கனிவு அரும்பிய: கனிந்து வெளித் தோன்றிய. உட்கருத்தொருவழிக்கொண்டோர்: ஒன்றிய கருத்துடன் வழிக்கொண்டோர் ஆகிய. துனிவுஅரும்: துன்பமில்லாத. கொட்டு அதிர்கரத்துணையினர்: கொட்டி அதிர்க்கின்ற இரு கைகளையுடையவர். பனிவரும் கணர்: ஆனந்த அருவி பொழியும் கண்ணினர். தாள்: அடி. ஏத்த: பரவிவர.

706 இந்தி ரன்மணிக்க ளாஞ்சிகொண்டு
ஒருமருங்கு எய்த,மெல் இலைவாசம்
தந்துஇ லங்குபொன் அடப்பைகொண்டு
ஈசனோர், சார்வர, மருத்துக்கோ
வந்துஇ ரங்குஒலி ஆலவட்
டம்பணி மாற,ஆர் அழல்தூபம்
தந்து நேர,நீர்க் கடவுள்பொன்
கோடிகம் தாமரைக் கரம்தூக்க, 107

707 நிருதி ஆடிகொண்டு எதிர்வர,
அடிக்கடி நிதிமுகந்து அளகைக்கோன்
கருதி ஆயிரம் சிதறிட,
தண்டி,நன் காஞ்சுகர் வினைசெய்ய,
பரிதி ஆயிரம் பணாடவி
உரகரும் பன்மணி விளக்குஏந்த,
சுருதி, நாயகன் திருவடி
முடியின்மேல் சுமந்து,பின் புறஞ்செல்ல, 108

708 கங்கை காவிரி ஆதிய
நவநதிக் கன்னியர் குளிர்தூங்க.
பொங்கு வார்திரைக் கொழுந்துஎனக்
கவரிகள் புரட்ட,வெண் பிறைக்கீற்றுத்
துங்க வாள்எயிற்று, இருள்உடல்,
குழிவிழி, சுடர்அழல் செம்பங்கி,
சங்க வார்குழைக் குறியகுண்
டோதரன், தண்மதிக் குடைதாங்க, 109

---

706. மருங்கு: பக்கம். எய்த: வரவும். ஈசன்: ஈசானன். அடப்பை: வெற்றிலை. மருத்துக்கோ: காற்றுக் கடவுள். ஆர் அழல்: தீக்கடவுள். கோடிகம்: பூந்தட்டு. தாமரைக்கரம்: தாமரை போன்ற கைகளில். (இப்பாடல் குளகம்).

707. நிருதி ஆடிகொண்டு, நிருதி கண்ணாடி கொண்டு. நிதிமுகந்து: பொருள்மொண்டு. அளகைக்கோன்: குபேரன். தண்டி: எமன். நனகாஞ்சுகர்: நல்ல சட்டை அணிந்தவர். வினைசெய்ய: கூட்டத்தை விலக்கிவர பரிதி ஆயிரம் பணாடவி உரகர்: சூரியனைப்போல விளங்கும் ஆயிரம் முடிகொண்ட ஆதிசேடன். சுருதி: பிரமன். நாயகன்: இறைவன்.

708. ஆதிய: முதலிய. நவநதி: ஒன்பது நதி. குளிர்தூங்க: குளிர்ச்சி மிக. பொங்கு: மேலெழுகின்ற. வார்திரைக்கொழுந்து: நீண்ட அலைக்கொழுந்து. புரட்ட: வீச. பிறை: சந்திரன். துங்க: உயர்ந்த. குழிவிழி. குழிந்த கண்கள். செம்பங்கி: சிவந்த தலைமயிர். சங்க வார்குழை: சங்காலாகிய நீண்ட குழைகள்: குறிய: குள்ள வடிவம் உள்ள. தண் மதிக்குறை: குளிர்ந்த சந்திரவட்டக்குடை.

709 இடிக்கும் வான்உரும் ஏறுஉயர்
நெடுங்கொடி, எகினவெண் கொடி,ஞாலம்
முடிக்கும் ஊழிநாள் உளர்கடும்
கால்என மூச்சுஎறி விடநாகம்
துடிக்க வாய்விடும் உவணவண்
கொடிமுதல், சூழ்ந்துசே வகம்செய்யும்
கொடிக்கு ழாத்தினுள் கொடிஅர
சாய்விடைக் கொடிபுடை பெயர்ந்தாட, 110

710 கண்நு தல்பிரான் மருங்குஇரு
கடவுளர் கப்புவிட்டு எனத்தோன்றும்,
வண்ண முத்தலைப் படைஎடுத்து
ஒருகுட வயிறுஉடைப் பெரும்பூதம்
பண்ண வப்பதின் எண்படைக்
கலமும்தன் பக்கமாச் சேவிப்ப,
அண்ணல் முச்சுடர் முளைத்துஒரு
வரைநடந்து அனையதோர் மருங்குஎய்த, 111

711 பந்தம் நான்மறைப் பொருள்திரட்டு
என,வட பாடல்செய்து எதிர்புட்ப
தந்தன் ஏத்த,வான் உயிர்உண
உருத்துஎழு தழல்விடத்து எதிர்நோக்கும்
அந்தம் ஆதியி லான்நிழல்
வடிவமாய், ஆடியின் நிழல்போல
வந்த சுந்தரன் சாத்தும்நீ
ளுடுதிரு மாலையும் எடுத்துஏந்த, 112

---

709. ஏறுஉயர் நெடுங்கொடி: இடி ஏற்றுக்கொடி. எகினம்: அன்னம். ஊழி நாள்: ஊழிக்காலத்தில். உளர்: வீசும். கடுங்கால்: கொடுங்காற்று. வாய்விடும்: ஆர்க்கும். உவணம்: கருடன். கொடிக்குழாம்: கொடிக்கூட்டம். கொடி அரசு: கொடிகட்கு அரசாக. விடைக்கொடி: இடபக் கொடி. (இப்பாடலும் குளகம்)

710. இரு கடவுளர்: அயனும், அரியும். முத்தலைப்படை: சூலப்படை. பண்ணவ: தெய்வத்தன்மை உடைய. தன்பக்கம்: சூலப்படையின் பக்கம் (இப்பாடலும் குளகம்).

711. பந்தம்: இசைக்கட்டு. பொருள்திரட்டு என: பொருளைத் திரட்டிக் கூறினாற்போல. வடபாடல்: வடமொழிப் பாடல்கள். வான் உயிர் உண: தேவர்களின் உயிரை உண்ண. எதிர் நோக்கும்: எதிரே செல்லும். சுந்தரன்: இறைவன் அருளால் வந்தவர், (இப்பாடலும் குளகம்).

712 அன்னத் தேரினன் அயன்வலப்
பாங்கரும் அராவலி கவர்சேனன்,
வன்னத் தேரினன், மால்இடப்
பாங்கரும் மலர்க்கரம் குவித்துஏத்த,
பொன்னத் தேமலர்க் கொன்றையான்
வெள்ளியம் பொருப்பொடும் எழீஇப்போந்தால்
என்ன, தேர்அணி மதுரைமா
நகர்ப்புறத்து எய்துவான்; அவ்வேலை. 113

713 "தேவர்கள் தேவன் வந்தான்;
செங்கண்மால் விடையான் வந்தான்;
மூவர்கள் முதல்வன் வந்தான்;
முக்கண்எம் பெருமான் வந்தான்;
பூஅலர் அயன்,மால் காணப்
பூரண புராணன் வந்தான்;
யாவையும் படைப்பான் வந்தான்"
என்றுபொற் சின்னம் ஆர்ப்ப, 114

714 பெண்ணினுக்கு அரசி வாயில்,
பெருந்தகை அமைச்சர், ஏனை
மண்ணினுக்கு அரசர், சேனை
மன்னவர் பிறரும் ஈண்டி,
கண்ணினுக்கு இனியான் தன்னைக்
கண்டு,எதிர் கொண்டு தாழ,
விண்ணினுக்கு அரசன் ஊரின்
வியத்தகு நகரிற் புக்கான் 115

---

712. அன்னத்தேரினன் அயன்: அன்னமாகிய தேரையுடைய பிரமன். வலப்பாங்கர்: வலப்பக்கம் அராவலி: பாம்பின் வலியை கவர்சேனன்: கொள்ளை கொள்ளும் கருடன். வன்னம்: அழகு. மால்: திருமால். பொன்னத்தேமலர்க் கொன்றையான்: பொன்போன்ற அழகிய தேனையுடைய கொன்றைமாலையணிந்த சிவபெருமான். பொருப்பு மலை. எழீஇப் போந்தால் என்ன: எழுந்து வந்தாற்போல. அவ்வேலை: அப்போது.

713. தேவர்கள் தேவன்: தேவாதி தேவனுன இறைவன். பூஅலர் அயன்: தாமரை மலரில் உறையும் பிரமன். பூரண: எங்கும் நிறைந்த. புராணன்: பழையோன். ஆர்ப்ப: ஒலிக்க.

714. பெண்ணினிக்கு அரசி: பிராட்டி. ஈண்டி: நெருங்கி கண்ணினுக்கு இனியான்: கண்ணுக்கினிய கோலங்கொண்ட இறைவன் விண்ணினுக்க அரசன் ஊரின்: இந்திர நகரத்திலும். வியத்தகு: வியக்கத்தக்க.

715 முகில்தவழ் புரிசை மூதூர்
முகப்பெரு வாயில் நீந்தி,
அகில்தவழ் மாட வீதி
வலம்பட அனைவான் ஆக,
நகில்தழை பொலங்கொம்பு அன்ன
நல்நகர் மகளிர் அம்பொன்
துகில்தழை மருங்குல் ஆயத்
தொகைபுறம் தழுவச் சூழ்ந்தார். 116

716 தமிழ்முதல் பதினொன் தேத்து
மகளிரும், தாரு நாட்டின்
அமிழ்தம்அன் னவரும், முல்லை
அம்புயம் குமுதம் நீலம்
குமிழ்நறும் கோங்கு காந்தள்
கோழ்இணர் அசோகம் வாசம்
உமிழ்தர மலர்ந்த நந்த
வனம்என ஒருங்கு மொய்த்தார். 117

717 எம்மைநீர் விடுதிரேயோ என்பபோல் கலையும் சங்கும்
விம்ம,நாண் மடனும் உங்கள் நெஞ்சுஉடை வெளிஆ ஆக
உம்மைநீத்து ஓடும் அந்தோ; உரைத்தன உரைத்தோம்என்று
தம்மைநூ புரம்கால் பற்றித் தடுப்பபோல் ஆர்ப்பச் சென்றார்.

718 கடிஅவிழ் கமலக் காடு பூத்ததுஓர் கருணை வாரி
அடிமுதல் முடியீறு ஆக அலர்விழிக் குவளை சாத்தி,
கொடியசெம் பதுமப் போது குழல்மிசைச் சூடு வார்போல்
தொடிஅணி கரங்கள் கூப்பித் துதிஎன இனைய சொல்வார். 119

---

715. முகில்: மேகம். புரிசை: கோட்டை. பெருவாயில்: கோபுரவாயில். தழை: தோன்றிய. பொலங்கொம்பு: பொற்கொடி. துகில்தழை: ஆடைதழைந்த. மருங்குல்: இடை. ஆயத்தொகை: தோழியர் கூட்டம்.

716. தேத்து நாட்டு. தேம்: தேயம். தாரு: கற்பகத்தரு. மகளிர் நந்தவனம்போலக் காட்சியளித்தனர். முல்லை பல்லுக்கும், அம்புயம் முகத்துக்கும், குமுதம் வாய்க்கும், நீலம் கண்ணுக்கும், குமிழம் மூக்கிற்கும், கோங்கு கொங்கைககும், காந்தள் கைகட்கும், அசோகம் மேனிக்கும் உவமையாகக் கூறப்பட்டுள.

717. கலை: மேகலை. சங்கு: வளை. விம்ம: ஒலிக்க. நெஞ்சுஉடைவெளி: உடைந்த மனம். நூபுரம்: சிலம்பு. கால்பற்றி: காலைப்பிடித்து.

718. கடி: மணம். கருணைவாரி: அருட்கடலாகிய இறைவன். அலர்விழிக்குவளை: கண்களாகிய குவளை மலர்கள். கொடிய: கொடியை உடைய. இனைய: இத்தன்மையவற்றை. முகம், கண், கை திருவடி முதலிய தாமரைக்கு ஒப்பாக இருத்தலின் கமலக்காடு பூத்தது என்றார் தலைகளின்மேல் கைகள் குவிந்திருத்தல் குழலிடத்தே தாமரை சூட்டி இருத்தலைப் போன்று உளது என்றார்.

719 "நங்கைஎன் நோற்றாள் கொல்லோ
நம்பியைத் திளைத்தற்கு?" என்பார்;
"மங்கையை மணப்பான் என்னோ
வள்ளலும் நோற்றான்?" என்பார்;
"அங்கடி மதுரை என்னோ
ஆற்றிய தவம்தான்? என்பார்;
"இங்குஇவர் வதுவை காண்பான்
என்ன நாம் நோற்றோம்?" என்பார். 120

720 "தென்னவன் வருந்தி, மேனாள்
செய்தவப் பேறுப் பெற்ற
தன்மகள் வதுவை காணத்
தவம்செய்தான் இலனே!" என்பார்;
"கன்னிதன் அழகுக்கு ஏற்ற
அழகன்இக் காளை" என்பார்;
"மன்னவன் இவனே அன்றி
வேறுஇலை மதுரைக்கு" என்பார். 121

721 "நங்கைதன் நலனுக்கு ஏற்ப,
நம்பியைத் தந்தது இந்தத்
துங்கமா மதிநூல் வல்ல
சுமதிதன் சூழ்ச்சி" என்பார்;
"அங்குஅவள் தவப்பேறு" என்பார்;
"அன்னை,தன் கன்னிக்கு அன்றி,
இங்குஇவன் மருகன் ஆக
எத்தவம் உடையாள்?" என்பார். 122

---

719. நங்கை: பிராட்டி. நோற்றாள்: தவம்செய்தாள். நம்பி: இறைவன். திளைத்தல்: கூடிமகிழ்தல். வள்ளல்: இறைவன். அங்கடி: அழகிய காவல் அமைந்த. வதுவை: திருமணம். "நம்பியைக்காண" என்று தொடங்கும் கம்பர் பாடல் இங்கு நோக்கத்தக்கது.

720. தென்னவன்: மலையத்துவச பாண்டியன். கன்னி: பிராட்டி. ஏற்ற: பொருந்திய.

721. நலன்: அழகு. ஏற்ப: பொருத்தமாக. வல்ல: திறமையுடைய. அன்னை: தாயாகிய காஞ்சனமாலை. கன்னி, பிராட்டி.

722 பூந்துகில் நெகிழ்ப்பர் சூழ்வர்;
புணர்முலை அலைப்பர்; பூசு
சாந்தினை உகுப்பர்; நாணம்
தலைக்கொண்டார் போலச் சாய்வர்;
கூந்தலை அவிழ்ப்பர் வாரிக்
கூட்டுவர், முடிப்பர்; மேனி
மாந்தளிர் எங்கும் மாரன்
வாளிகள் புதையச் சோர்வார். 123

723 தண்அளி ஒழுக்கம் சார்ந்த
குணத்தினைச் சார்ந்தும், இந்த
வண்ணமென் மலர்கள் என்னை
வாளியாய்த் தைத்த என்பார்;
கல்நறும் கூந்தல் வேய்ந்த
கடிஅவிழ் நீலத் தாரும்
வெண்நகை அரும்பு முல்லைத்
தாமமும் வெறுத்து வீழ்ப்பர். 124

724 விம்மிச்செம் மாந்த கொங்கை
மின்அனார் சிலர்,வில் காமன்
மைம்மிக்க கணைஏறு உண்டு
கலங்கிய மயக்கால் தங்கள்
கைம்மிக்க நெடுங்கண், மூரல்
வதனமும், அவன்அம்பு என்றே
தம்மில்தம் முகத்தை நோக்கார்
தலைஇறக் கிட்டுச் சொல்வார். 125

---

722. சூழ்வர்: உடுப்பர். அலைப்பர்: வருத்துவார்கள். உகுப்பர்: உதிர்ப்பர். மாரன்: மன்மதன். சோர்வார்: ஆவிசோர்வார்கள்.

723. அளி: அருள், வண்டு. வாளி: கணை. நறும்: கமழும். கடிஅவிழ்: மணம் பொருந்திய. மலர்கள் அருள் செய்யாமல் இன்னாமை செய்கின்றன என்றவாறு. முல்லை மயக்கத்தையும், நீலம் சாக்காட்டையும் தருதலின் அவற்றை நீக்கினரென்க.

724. சிலர்: மகளிர் சிலர். ஏறுஉண்டு: தைத்து. மூரல்: பற்கள். வதனமும். கண்ணை நீலம் என்றும், மூரலை முல்லை என்றும், முகத்தைத் தாமரை என்றும் கருதியதால் அவை காமன் கணைகளே என்று எண்ணி மகளிர் ஒருவரை ஒருவர் நோக்கார் ஆயினர்.

725 பற்றிய பைம்பொன் மேனிப்
பசப்பது தேறூர், அண்ணல்
ஒற்றைமால் விடையின் மேற்கொண்டு
இருந்தும்நம் உளத்து மேவப்
பெற்றனம்; இதுஎன்கொல் மாயம்;
பேதைமீர்! பெருமான் நீண்ட
கற்றைவார் சடைப்பூம் கொன்றை
இதுவன்றோ காண்மின்! என்பார். 126

726 திங்கள்என்று எழுந்து நம்மைச்
சுடுவதுஎன் செந்தீ என்பார்;
புங்கவன் சென்னி மீதும்
கிடப்பதே போலும் என்பார்;
அங்குஅவர்க்கு இந்த வெப்பம்
இலைகொல் என்று அயிர்ப்பார்; ஆற்றக்
கங்கைநீர் சுமந்தான் என்பார்;
அதனையும் காண்மின் என்பார். 127

727 கலையொடு நாணம் போக்கி,
கருத்தொடு வண்ணம் வேறு,
உலையொடு மெழுகுஇட்டு என்ன
உருகுகண் ணீரர் ஆகி,
கொலையொடு பயில்வேல் கண்ணார்
குரிசில்தன் பவனி நோக்கி,
அலையொடு மதியம் சூடும்
ஐயன்மெய் அன்பர் ஒத்தார். 128

---

725 பசப்பு: பசலை. தேறூர்: அறியாதவராய். மேவப்பெற்றனம்: பொருந்தப்பெற்றோம். மேனி பசந்திருப்பது கொன்றை நிறத்தை ஒத்துளதால் மயங்குகின்றனர்.

726. புங்கவன்: இறைவன். அவர்க்கு: சிவபெருமானுக்கு. அயிர்ப்பார்: ஐயுறுவார் ஆற்ற: அந்த வெப்பத்தைத் தணிப்ப. திங்கள் குளிர்ச்சியைக் கொடுப்பதற்குப் பதிலாக வெம்மையைத் தருவதாக எண்ணினர் மகளிர்.

727. கலை: ஆடை, வண்ணம். நிறம். உலையொடு: உலையில், வேல்கண்ணார்: வேல் போன்ற கண்களை உடைய மகளிர். குரிசில்: இறைவன். அலை: கங்கை, மெய்ப்பாடு. கரினால் மெய்யன்பரும் மகளிரும் ஒத்துக் காணப்பெறுகின்றனர்.

728 நட்டவர்க்கு இடுக்கண் எய்த
நன்றிகொன் றவர்போல், கையில்
வட்டவாய்த் தொடியும் சங்கும்
மருங்குசூழ் கலையும் நீங்க,
இட்டபொன் சிலம்புஇட்டு ஆங்கே
நன்றியின் இகவார் போல்கால்
ஒட்டியே கிடப்ப நின்றார்,
உகுத்தபூங் கொம்பர் அன்னார். 129

729 மின்நகும் வேல்க ணாள்ஓர் விளங்குஇழை, விடைமேல் ஐயன்
புன்னகைப் போதும் நோக்கப் போதும்முப் புரமும் வேனில்
மன்னவன் புரமும் சுட்ட அல்லவோ? கெட்டேன், வாளா
இன்னவை சுடாது போமோ? ஏழையேன் புரமும் என்றாள். 130

730 உழைவிழி ஒருத்தி, தன்கண் உருவெளி யாகத் தோன்றும்
குழகனை, இரண்டு செம்பொன் கொங்கையும் ஒன்றாய் வீங்கத்
தழுவுவாள், ஊற்றம் காணாள், தடமுலை இரண்டே யாகி
இழைஇடை கிடக்க நீங்கி இருக்கைகண்டு இடைபோல் எய்த்தாள்

731 வார்இரும் கொங்கை யாள்ஓர் மாதராள், வானோர் உய்யக்
கார்இருள் விடம்உண்டு அன்று கறுத்ததே அன்று; கொன்றைத்
தார்இரும் சடையார் கண்டம் தையல்மீர்! தமது நெஞ்சம்
கார்இரும்பு என்றே காட்டக் குறியிட்ட கறுப்பே என்றாள். 132

---

728. நட்டவர்க்கு: நண்பர்கட்கு. இடுக்கண: துன்பம், வறுமை. சங்கு: வளையல்கள் மருங்கு: இடை. கலை: மேகலை. நன்றிகொன்றவர்கள் நீங்குதல்போலத் தொடியும், சங்கும் கலையும் நீங்கின. நன்றியுடையார்போல் சிலம்பு நீங்காமல் ஒட்டியே கிடந்தது.

729. மின்நகும்: மின்னல்போல் விளங்கும். விளங்குஇழை: ஒளிரும் அணிகளை உடையாள். வேனில் மன்னவன். மன்மதன். புரம்: உடம்பு. முப்புரத்தையும் மன்மதனையும் சுட்ட புன்னகையும் நோக்கும். என்னையும் சுட்டன என்றவாறு.

730. உழை: மான். தன்கண்: தன் கண்களுக்கு. உருவெளி: பொய்உருத் தோற்றம். குழகன்: இறைவன். ஊற்றம்: பரிசம். காணாள்: காணாதவளாய். இழை: நூலிழை. இருக்கை கண்டு: இருத்தலை அறிந்து. இடைபோல் எய்த்தாள்: இடை மெலிந்திருப்பது போல் மெலிந்தாள்.

731. வார்: கச்சு. கார்இருள்விடம்: கரிய இருள்போன்ற நஞ்சு. தமது நெஞ்சம்: இறைவன் தனது உள்ளம். குறியிட்ட: அடையாளமாக இட்ட. கண்டம் கறுத்திருப்பது நஞ்சு உண்டதினால் அன்று, நெஞ்சம் இரும்பாக இருத்தலைக் காட்டுதற்கே என்கிறாள் ஒருத்தி.

732 "பொன்அவிர் சடையான் முன்னே
போனதுஎன் நெஞ்சு தூதாய்;
அன்னது தாழ்த்தது என்'' என்று
அழுங்குவாள் ஒருத்தி; "கெட்டேன்
என்னது நெஞ்சம் போனது''
என்றனள் ஒருத்தி; கேட்ட
மின்அனுள் வேல்கண் சேந்தாள்
விளைத்தனள் அவளும் பூசல். 133

733 செப்புஇளம் கொங்கை யாள்ஓர்
தெரிவை,"நீர் திருநோக்கு எம்பால்
வைப்பதுஎன்? மதன்போல் எம்மைச்
சுடுவதே, மதனுக்கு ஆவி
அப்பொழுது அளித்தால் போல்,எம்
ஆவியும் அளித்தாற் இன்று,
மெய்ப்புகழ் உமக்குஉண்டு; இன்றேல்
பெண்பழி விளையும்'' என்றாள். 134

734 கவனமால் விடையான் தன்னைக்
கடைக்கணித் திலன்என்று, ஆங்குஓர்
சுவணவான் கொடி,ஓர் ஓவத்
தொழில்வல்லான் குறுக, நோக்கி,
"இவனை நீ எழுதித் தந்தால்
வேண்டுவ ஈவன்'' என்றாள்;
"அவனையார் எழுத வல்லார்''
என்றனன்; ஆவி சோர்ந்தாள் 135

---

732. பொன்அவிர்: பொன்போல் விளங்கும். தாழ்த்தது: காலந் தாமதித்தது. அழுங்குவாள்: வருந்துவாள். சேந்தாள் சிவந்தாள். இறைவனைத் தனித்தனியே காதலனாக எண்ணிய மகளிர் இருவர் தமக்குள் பூசல் விளைத்தனர்.

733. தெரிவை: பெண். மதன். மன்மதன். எம்மைச் சுடுவதே: எம்மையும் சுடுகின்றது. எம் ஆவி நைந்தால் பெண்பழி உம்மைச் சேரும்; அது வாராமற் காத்துக்கொள்ளும் என்றாள் ஒருத்தி.

734. கவனம்: வேகம். சுவண வான்கொடி: சிறந்த பொற்கொடி போன்ற நங்கை ஒருத்தி ஓவத்தொழில்: ஓவியத்தொழில். இவனை: குழகனை (இறைவனை).

735 வலத்துஅயன் வரவு காணுள்,
மால்இடம் காணுள், விண்ணோர்
குலத்தையும் காணுள், மண்ணோர்
குழாத்தையும் காணுள், ஞானப்
புலத்தவர் போல, கண்ட
பொருள்எலாம் மழுமான் செங்கைத்
தலத்தவன் வடிவாக் கண்டாள்;
ஒருதனித் தையல் மாது. 136

736 முன்பெற்றம் காலில் செல்ல,
அண்ணலை முன்போய்க் காண்பான்,
பின்பற்றி ஆசைப் பாசம்
பிணித்துஎழ ஓடு வாள்ஓர்
பொன்பெற்ற முலையாள்; கொம்பர்
உகுமலர் போலத் தாளின்
மின்பெற்ற காஞ்சி தட்ப
விலங்கொடு நடப்பாள் ஒத்தாள். 137

737 விதுக்கலை மிலைந்து, செங்கண்
விடையின்மேல் வரும்ஆ னந்த
மதுக்கடல் தனை,கண் வாயால்
முகந்துஉண்டு மகளிர் எல்லாம்
புதுக்கலை சரிவது ஓரார்,
புரிவளை கழல்வது ஓரார்,
முதுக்குறை அகல்வது ஓரார்,
மூழ்கினர் காம வெள்ளம். 138

---

735. வலத்து: வலப்பக்கத்தில். அயன். பிரமன். மால்: திருமால். ஞானப்புலத்தவர்: மெய்உணர்வுடைய ஞானியர். கண்டபொருள்: பார்த்த பொருட்கள். செங்கைத் தலத்த வன்: சிவந்த கைகளை உடைய சிவபெருமான். ஒரு தனித்தையல் மாது காணுள், வடிவாகக் கண்டாள் என்று மாற்றுக இறைவனை அன்றி வேறொன்றையும் கண்டிலள் என்பது கருத்து.

736. பெற்றம்: காளை. காலின்: காற்றைப்போல, காண்பான்: காணும்பொருட்டு. பிணித்து எழ; கட்டிஇழுத்துச்செல்ல. பொன்பெற்ற: பொன்போலும் தேமல் பூத்த. காஞ்சி: மேகலை தட்ப: தடுக்க.

737. விதுக்கலை சந்திரக்கலை மிலைந்து அணிந்து. ஆனந்தமதுக்கடல்; பேரின்பமாகிய தேன்கடல் (இறைவன்). கண் வாயால்: கண்களாகிய வாயினுல். புதுக்கலை: புதிய ஆடை. சரிவது: நெகிழ்வது. ஓரார்: உணரார். முதுக்குறை: பேரறிவு. ஓரார்: முற்றெச்சம்.

"ஆனந்த மாக்கடல் ஆடுசிற் றம்பலம்". —திருக்கோவையார்

738 பைத்துஅழகு எறிக்கும் மாடப்
பந்திமேல் நின்று காண்பார்,
கைத்தலம் கூப்பி யாங்கே,
கண்களும் நோக்கி யாங்கே,
சித்தமும் குடிபோய், சொல்லும்
செயலும்மாண்டு, அங்கண் மாண
வைத்தமண் பாவை யோடு
வடிவுவேறு அற்று நின்றார். 139

739 அன்புஅட்ட புரமும் காமன்
ஆகமும் சுட்ட தீ,இம்
மின்பட்ட சடிலத்து அண்ணல்
மெய்என்பது அறியார், நோக்கிப்
பொன்பட்ட கலனும் மெய்யும்
பொரிகின்றார்; அவனைப் புல்லின்
என்பட்டு விடுமோ ஐய
ஏழையர் ஆவி அம்மா. 140

740 கொடிகள்பூத்து உதிர்ந்த போதில்
கொம்புஅனார் கலையும், சங்கும்,
தொடிகளும், சுண்ணத் தூளும்,
சுரர்பொழி மலரும், நந்தி
அடிகள்கைப் பிரம்பு தாக்கச்
சிந்திய அண்ட வாணர்
முடிகளின் மணியும், தாரும்
குப்பையாய் மொய்த்த வீதி. 141

---

738. பைத்து: பசியஒளி. பந்தி: வரிசை. காண்பார்: காணக்கூடிய பெண்கள். கூப்பி யாங்கே: கூப்பியபடியே. குடிபோய்: (இறைவனிடம்) குடிபோக. மாண: மாட்சிமைப்பட. மண்பாவை: சுதை. உணர்வற்று மண்பாவை போல் நின்றனர் என்க

739. அட்ட: கொன்ற புரமும்: திரிபுரத்தாரையும். மின்பட்ட: மின்போன்ற சடிலம். சடை. பொன்பட்ட: பொன்னாலாகிய. கலன்: அணிகள் ஏழையர்: மகளிர். இறைவனைப்பார்த்த அளவிலே அணிகளும் உடம்பும் பொரியப் பெறுகின்றவர்கள் அவனைத் தழுவினால் உயிர் என்னாகுமோ என்ற இரக்கக் குறிப்பு.

740. போதில்: மலர்களைப்போல. கொம்புஅனார்: பூங்கொடியை ஒத்த. அண்டவாணர்; தேவர்கள், தாரும்: கற்பகப்பூ மாலைகளும். மொய்த்த: மிக்கன.

741 துன்னிய தருப்பை கூட அரசிலை துழாவித் தோய்த்துப்
பொன்இயல் கலச நன்னீர் பூசுரர் வீச, அன்னோர்
பன்னியர் வட்ட மாக வானவில் பதித்தால் என்ன
மின்னிய மணிசெய் நீராஞ் சனக்கலம் விதியால் சுற்ற, 142

742 கொடி,முரசு, ஆடி, செப்பொன் குடம்,மணி, நெய்யில் பூத்த
கடிமலர் அனைய தீபம், அங்குசம், சவரி என்னும்
படிவமங் கலங்கள் எட்டும் பரித்துநேர் பதுமக் கொம்பர்
வடிவினோர் வந்து காட்ட மாளிகை மருங்கில் செல்வான். 143

743 செப்புஉரம் கவர்ந்த கொங்கை அரம்பையர், தீபம் காட்டும்
துப்புரவு அன்பி னோர்க்குத் தூயமெய்ஞ் ஞானம் நல்கும்
முப்புரம் கடந்தான் தன்னை, மும்முறை இயங்கள் ஏங்கக்
கப்புர விளக்கம் தாங்கி வலம் செய, கருணை பூத்தான். 144

744 கோயில்முன் குறுக லோடும், ஐம்புலக் குறும்பு தேய்த்த
தூயநல் வேதச் செல்வர் சுவத்திகள் ஓத, நந்தி
சேய்இரும் தடக்கை பற்றிச் செங்கண்ஏறு இழிந்து, நேர்ந்து
மாயனும் அயனும் நீட்டும் மலர்கரம் இருபால் பற்றி. 145

---

741. துன்னிய: நெருங்கிய தருப்பைகூட அரசிலை: தருப்பையுடன் அரசிலையையும் இணைத்து. பூசுரர்: அந்தணர்கள். பன்னியர்: மனைவிமார். நீராஞ்சனக்கலம்: ஆலத்தித் தட்டு. விதியால்: முறைப்படி. (இப்பாடல் குளகம்).

742. பரித்து: ஏந்தி. நேர்: ஒத்த. பதுமக்கொம்பர் நேர் என்று இயைக்க மருங்கில்: பக்கத்தில். எட்டு மங்கலங்களும் கூறப்பட்டன.

743. செப்புஉரம் கவர்ந்த: செப்பினை வலியால் மிஞ்சிய. துப்புரவு: தூய்மை அன்பினோர்க்கு: அடியவர்கட்கு. முப்புரம் கடந்தான்: முப்புரங்களை அழித்த இறைவன். இயங்கள்: இசைக்கருவிகள். ஏங்க: ஒலிக்க. கப்புர விளக்கம்: கர்ப்பூர விளக்கு. அரம்பையர் வலம் செயக் கருணைபூத்தான்.

744 குறுகலோடும்: சென்றவுடன். குறும்பு: பகை. சுவத்திகள்: மங்கலங்கள். சேய்: சிவந்த. இரும்: பெரிய. ஏறு: காளைவாகனம். இழிந்து: இறங்கி. நேர்ந்து: வந்து. நீட்டும்: நீட்டிய. (இது குளகம்).

745 எதிர்ந்துஅரு மறைகள் காணாது,
இணைத்துஅடி சுமந்து காணும்
முதிர்ந்தஅன்பு உருவ மான
பாதுகை முடிமேல் சத்தி,
பதிந்தவர் தலைமேல் கொண்டு,
பாசவல் வினை தீர்த்து உள்ளம்
பொதிந்து,பேர் இன்பம் நல்கும்
பொன்அடிப் போது சாத்தி, 146

746 பைஅரவு உரியின் அன்ன நடைப்படாம் பரப்பிப் பெய்த
கொய்அவிழ் போது நீத்தம் குரைகழல் அடிநனைப்ப,
தெய்வமந் தார மாரி திருமுடி நனைப்ப, தென்னர்
உய்யவந்து அருளும் ஐயன் உள்எழுந்து அருளும் எல்லை, 147

747 மங்கல மகளி ரோடும் காஞ்சன மாலை வந்து,
கங்கையின் முகந்த செம்பொற் கரகநீர் அனையார் வாக்க,
திங்கள்அம் கண்ணி வேய்ந்த சிவபரம் சோதி பாத
பங்கயம் விளக்கி, அந்நீர் தலைப்பெய்து பருகி நின்றாள். 148

748 பாதநாள் மலர்மேல் ஈரம் புலர,வெண் பட்டால் நீவி
சீதமென் பனிநீ ராட்டி, மான்மதச் சேறு பூசி,
தாதுஅவிழ் புதுமந் தாரப் பொன்மலர் சாத்தி, சென்னி
மீதுஇரு கரங்கள் கூப்பி, வேறுநின்று இதனைச் சொன்னாள். 149

---

745. மறைகள்: வேதங்கள். காணாது: காணமாட்டாமல். சத்திபதிந்தவர்: சத்திநிபாதம் உற்றவர். பாசம்: ஆணவம் மாயை. (இதுவும் குளகம்).

746. அன்ன: போன்ற. நடைப்படாம்: நடைப்பாவாடை. பெய்த: பரப்பிய. கொய்: காம்பு களைந்த. அவிழ்போது: மலர்ந்த மலர்களின். நீத்தம்: வெள்ளம். தெய்வமந்தார மாரி: (தேவர்கள் பொழியும்) தெய்வத்தன்மை வாய்ந்த மந்தாரமலர் மழை. உள்: திருக்கோயிலுள்ளே (இதுவும் குளகம்).

747. முகந்த: மொண்டுகொண்டுவந்த. செம்பொற் கரகநீர்: சிவந்த பொன்னாலாகிய கமண்டலத்திலுள்ள நீரை. அனையார்: அப்பெண்கள். வாக்க: ஊற்ற. திங்கள் அம் கண்ணிவேய்ந்த சிவபரஞ்சோதி: சந்திரனையும் அழகிய மாலையையும் அணிந்த சிவபரம் பொருள். தலைப்பெய்து: சென்னியில் தெளித்து பருகி: அருந்தி.

748. புலர: உலருமாறு. நீவி: துடைத்து. மான்மதச் சேறுபூசி: கத்தூரி கலந்த சந்தனக் குழம்பை அப்பி. தாது: மகரந்தப்பொடி. சென்னி: முடி.

749 "அருமையால் அடியேன் பெற்ற
அணங்கினை வதுவை செய்து, இத்
திருநகர்த் திருவும், கன்னித்
தேயமும் கைக்கொண்டு ஆள்க!" என்று
உரைசெய்தாள்; அதற்கு நேர்வார்,
உள்நகை உடையர் ஆகி,
மருகனார் இயங்கள் ஆர்ப்ப,
வதுவைமண் டபத்தைச் சேர்ந்தார். 150

750 அருத்தநான் மறைகள் ஆர்ப்ப, அரிமணித் தவிசில் ஏறி
நிருத்தன்ஆங்கு இருந்து, சூழ நின்றமால், அயனை, ஏனை
உருத்திரா தியரை, பின்னும் ஒழிந்தவா னவரைத் தத்தம்
திருத்தகு தவிசின் மேவத் திருக்கடை நாட்டம் வைத்தான். 151

751 விண்தல வானோர், ஏனோர் மிடைதலால், ஞாலச் செல்வி
பண்டையள் அன்றி, இன்று பரித்தனள்; பௌவம் ஏழும்
உண்டவன் தன்னைத் தான்இன்று உத்தரத்து இருத்தினானோ?
அண்டர்நா யகன்தன் ஆணை வலியினோ? அறியேம் அம்மா!. 152

752 மாமணித் தவிசில் வைகி
மணவினைக்கு அடுத்த ஓரை
தாம்வரும் அளவும் வானத்
தமனிய மலர்க்கொம்பு அன்னார்
காமரு நடனம் நோக்கிக்
கருணைசெய்து இருந்தான்; இப்பால்
கோமகள் வதுவைக் கோலம்
புனைதிறம் கூறல் உற்றேன். 153

---

749. அருமையால்: அருமையான தவத்தால். வதுவை: மணம். கன்னித்தேயம்: கன்னியாகிய மீனாட்சியின் நாடு. நேர்வார்: உடன்படுவார். உள்நகை: புன்னகை. இயங்கள் ஆர்ப்ப: இசைக்கருவிகள் ஒலிக்க. வதுவை மண்டபம்: மண மண்டபம்.

750 அருத்த: பொருளமைந்த. அரிமணித்தவிசு: இரத்தின சிங்காதனம். நிருத்தன்: இறைவன். சூழநின்ற: அருகில் நின்ற. திருத்தகு தவிசு: (அவரவர்க்குரிய) அழகு பொருந்திய ஆதனங்கள் திருக்கடைநாட்டம்: திருக்கடைக்கண் பார்வை.

751. ஞாலச்செல்வி: புவிமகள் பண்டையள் அன்றி: முன்போல ஒருபுறம் சாயாது. பரித்தனள்: தாங்கினள்: பௌவம்: கடல். ஏழும் உண்டவன்: (கடல்) ஏழையும் உண்ட அகத்தியன். உத்தரத்து வடதிசையில். அண்டர் நாயகன்: இறைவன். வலியினோ: திறத்தினாலோ.

752. தவிசு: இருக்கை ஓரை: முழுத்தம். தமனியம்: பொன். அன்னார்: மகளிர். காமரு: விரும்பத்தக்க, அழகிய. கோமகள்: தடாதகைப் பிராட்டியார். வதுவைக் கோலம்: திருமணக் கோலம்.

753 மாசுஅறுத்து எமைஆ னந்த
வாரிநீர் ஆட்டி, பண்டைத்
தேசுஉரு விளக்க வல்ல
சிவபரம் பரையைச் செம்பொன்
ஆசனத்து இருத்தி, நானம்
அணிந்துகுங் குமச்சேறு அப்பி
வாசநீர் ஆட்டி னார்கள்
மதிமுகக் கொம்பர் அன்னார். 154

754 முரசொடு சங்கம் ஏங்க, மூழ்கி,நுண் தூசு சாத்தி,
அரசியல் அறத்திற்கு ஏற்ப அந்தணர்க்கு உரிய தானம்
விரைசெறி தளிர்க்கை ஆர வேண்டுவ வெறுப்பத் தந்து,
திரைசெய்நீர் அமுதம் அன்னாள் திருமணக் கோலம் கொள்வாள்.

755 செம்மலர்த் திருவும், வெள்ளைச்
செழுமலர்த் திருவும், தங்கள்
கைம்மலர்த் தவப்பேறு இன்று,
காட்டுவார் போல, நங்கை
அம்மலர் அனிச்சம் அஞ்சும்
அடியில்செம் பஞ்சு தீட்டி,
மைம்மலர்க் குழல்மேல் வாசக்
காசறை வழியப் பெய்து, 156

756 கொங்கையின் முகட்டில் சாந்தம்
குளிர்பனி நீர்தோய்த்து அட்டி,
பங்கய மலர்மேல் அன்னம்
பவளச்செவ் வாய்விட்டு ஆர்ப்பத்
தங்கிய என்ன, ஆர,
நூபுரம் ததும்ப, செங்கேழ்
அம்கதிர்ப் பாத சாலம்
கிண்கிணி அலம்பப் பெய்து, 157

753. மாசு அறுத்து: குற்றங்களைப் போக்கி. ஆனந்தவாரி: பேரின்பக்கடல். ஆட்டி: மூழ்குவித்து. தேசு: ஒளி. சிவபரம்பரை: சிவசத்தியாகிய பிராட்டியாரை. நானம்: கத்தூரி. மதிமுகக் கொம்பர் வாசநீர் ஆட்டினார்கள் என்று முடிக்க.

754. ஏங்க: ஒலிக்க. மூழ்கி: நீராடி. தூசு: ஆடை. அரசியல் அறம்: அரசதருமம். விரை: மணம். ஆர: நிறைய. வெறுப்ப: வெறுக்குமாறு.

755. செம்மலர்த்திரு: செந்தாமரையில் வாழும் திருமகள். வெள்ளைச் செழுமலர்த்திரு: கலைமகள். மை: கறுத்த. காசறை: மணமுள்ள மயிர்ச்சாந்து. (இப்பாடல் குளகம்)

756. முகட்டில்: உச்சியில். அட்டி: சொரிந்து. நூபுரம்: சிலம்பு. ததும்ப: ஒலிக்க செங்கேழ்: சிவந்த நிறம். பெய்து: திருவடிகளில் அணிந்து. (இப்பாடல் குளகம்)

757 எண்இரண்டு இரட்டி கோத்த
விரிசிகை, இருபத்து ஒன்றில்
பண்ணிய கலாபம், ஈர்ஏழ்
பருமம், நால் இரண்டில் செய்த
வண்ணமே கலை, இரண்டில்
காஞ்சி, இவ் வகைஓர் ஐந்தும்
புண்ணியக் கொடிவண்டு ஆர்ப்பப்
பூத்தபோல் புலம்பப் பூட்டி, 158

758 பொன்மணி வண்டு வீழ்ந்த காந்தள்அம் போது போல,
மின்மணி ஆழி கோத்து மெல்விரல் செங்கைக்கு ஏற்ப,
வன்மணி வைர யாப்புக் கடகமும், தொடியும், வானத்து
எல்மணிக் கரங்கள் கூப்ப இருதடம் தோளில் ஏற்றி, 159

759 மரகத மாலை, அம்பொன் மாலை, வித் துரும மாலை,
நிரைபட வான வில்லின் நிழல்பட, ஆரத் தாமம்
விரைபடு களபச் சேறு மெழுகிய புளகக் கொங்கை
வரைபடும் அருவி அன்றி வனப்புநீர் நுரையும் மான, 160

760 உருவம்முத்து உடுவாய், அம்முத்து
உடுத்தபல் காசு கோளாய்,
மருவஅக் காசு சூழ்ந்த
மாமணி கதிராய், கங்குல்
வெருவவிட்டு இமைக்கும் ஆரம்
மேருவின் புறம்சூழ்ந்து ஆடும்
துருவசக்கரம்போல் கொங்கை
துயல்வர, விளங்கச் சூட்டி, 161

---

757. புண்ணியக் கொடி: அறக்கொடி. புலம்ப: ஒலிக்கும்படி. இடையில் அணியும் அணிகளின் கோவைகள் கூறப்பட்டன. (இப்பாடலும் குளகம்)

758. பொன்மணி வண்டு: பொன்னின் நிறமும் மணியின் நிறமும் வாய்ந்த வண்டு. போது: மலர். மணிஆழி: மணிபதித்த மோதிரம். எல்: சூரியன். (இதுவும் குளகம்)

759. வித்துருமம்: பவளம். வில்லின் நிழல்பட: வில்லைப்போல ஒளி வீசவும். ஆரத்தாமம்: முத்துமாலை. விரை: மணம். களபம்: சந்தனக் கலவை. முத்துமாலை மார்பகத்தே அருவி போலவும் நீரின் நுரை போலவும் காட்சியளித்தது. (இதுவும் குளகம்)

760. உருவம்: பருத்த. உடு: விண்மீன். உடுத்த: சூழ்ந்த கோளாய்: கோள்களாகவும். கதிர்: சூரியன். கங்குல்: இருட்டு. ஆரம்: பதக்கம். துயல்வர; அசைய. (இதுவும் குளகம்)

761 கொடிக்கயல் இனமாய் நின்ற
கோள்சுறு ஏறும், விறு
தொடிக்கலை மதியும், தம்கோன்
தொல்குல விளக்காய்த் தோன்றும்
பிடிக்குஇரு காதின் ஊடும்
மந்தணம் பேசு மாபோல்,
வடிக்குழை மகரத் தோடு
பரிதிவாள் மழுங்கச் சேர்த்து, 162

762 மழைக்கும்மா மதிக்கும் நாப்பண் வானவில் கிடந்தால் ஒப்ப,
இழைக்கும்மா மணிசூழ் பட்டம், இலம்பகம் இலங்கப் பெய்து
தழைக்கும்மா முகிலை மைந்தன் தனையிடல் காட்டு மாபோல்
குழைக்கும்நீர்த் தகர ஞாழல் கோதைமேல் கோதை ஆர்த்து, 163

763 கற்பகம் கொடுத்த இந்தக் காமரு கலன்கள் எல்லாம்
பொற்பமெய்ப் படுத்து, முக்கண் புனிதனுக்கு ஈறுஇ லாத
அற்புத மகிழ்ச்சி தோன்ற, அழகுசெய்து அமையம் தோன்ற,
சொற்கலை யாளும் பூவின் கிழத்தியும் தொழுது நோக்கி, 164

764 சுந்தர வல்லி தன்னைச் சோபனம் என்று வாழ்த்தி,
வந்துஇரு கையும் தங்கள் மாந்தளிர்க் கைகள் நீட்ட,
கொந்துஅவிழ் கோதை மாதும் அறம்எலாம் குடிகொண்டு ஏறும்
அம்தளிர்ச் செங்கை பற்று எழுந்தனள் மறைகள் ஆர்ப்ப. 165

765 அறைந்தன தூரியம்; ஆர்த்தன சங்கம்;
நிறைந்தன வானவர் நீள்மலர் மாரி:
எறிந்தன சாமரை; ஏந்திழை யார்வாய்ச்
சிறந்தன மங்கல வாழ்த்துஎழு செல்வம், 166

---

761. கொடிக்கயல்: கொடியில் எழுதப்பட்ட மீன். கோள்: வலிய. சுறுஏறு: மகரஏறு. தொடி: வட்டமாய. பிடிக்கு: பெண் யானை போன்ற தடாதகைப் பிராட்டியாருக்கு. மந்தணம்: இரகசியம் மகரத்தோடு மகர குண்டலங்களோடு. பரிதி: சூரியன். (இதுவும் குளகம்)

762. நாப்பண்: நடுவில். இலம்பகம்: நெற்றிச் சூட்டு. தழைக்கும்: செழித்த. மைந்தன்: உக்கிரகுமார பாண்டியன் தகரம்: சாந்து கோதைமேல்: கூந்தலின் மேல். கோதை ஆர்த்து: மாலை சூட்டி. (இதுவும் குளகம்)

763. கற்பகம்: கற்பகதரு. பொற்ப: அழகுபட. மெய்ப்படுத்து: திருமேனியில் அணிவித்து. அமையம்: நல்ஓரை. சொற்கலையாள்: கலைமகள். பூவின் கிழத்தி: திருமகள். (இதுவும் குளகம்)

764. சோபனம்: மங்கலம், இருகையும்: இரண்டு பக்கமும். மாது: பிராட்டியார் செங்கை பற்று: சிவந்த கைகளாற் பற்றிக்கொண்டு.

765. தூரியம் அறைந்தன: முரசங்கள் ஒலித்தன. ஆர்த்தன: ஒலித்தன. மலர்மாரி: மலர்மழை. சாமரை எறிந்தன. சாமரைகள் வீசப்பெற்றன. ஏந்திழையார்: ஏந்திய அணிகளையுடைய மகளிர்.

766 அடுத்தனள் சுந்தரி அம்பொன் அடைப்பை
எடுத்தனள்; ஆடி திலோத்தமை ஏந்திப்
பிடித்தனள்; விந்தை பிடித்தனள் பொற்கோல்;
உடுத்த நெருக்கை ஒதுக்கி நடந்தாள். 167

767 கட்டுஅவிழ் கோதை அரம்பை களாஞ்சி
தொட்டனள்; ஊர்வசி தூமணி ஆல
வட்டம் அசைத்தனள்; வன்னம் மணிக்காசு
இட்டுஇழை கோடிகை மேனகை கொண்டாள். 168

768 கொடிகள் எனக்குளிர் போதொடு சிந்தும்
வடிபனி நீரினர், வீசுபொன் வண்ணப்
பொடியினர், ஏந்திய பூம்புகை தீபத்
தொடிஅணி கையினர், தோகையர் சூழ்ந்தார். 169

769 தோடுஅவிழ் ஓதியர் சோபன கீதம்
பாட,வி ரைப்பனி நீரொடு சாந்தம்
ஏடுஅவிழ் மென்மலர் இட்ட படத்தில்
பாடக மெல்அடி பைப்பைய வையா, 170

770 செம்மல ராளொடு நாமகள் தேவி
கைம்மலர் பற்றின, கல்வியொடு ஆக்கம்
இம்மையி லேபெறு வார்க்கு இது போதுஎன்று
அம்மணி நூபுரம் ஆர்ப்ப நடந்தாள். 171

---

766. சுந்தரி: இந்திராணி. ஆடி: கண்ணாடி. விந்தை: வீரமகள். ஒதுக்கி: விலக்கி.

767. கட்டு: முறுக்கு. கோதை: மாலை. அரம்பை: ரம்பை கோடிகை: பூந்தட்டு. வன்னம்: நிறம்.

768. கொடிகள் என: கொடிகளைப் போல. குளிர்போது: குளிர்ந்த மலர்கள். சூழ்ந்தார்: மொய்த்தார்கள்.

769. தோடுஅவிழ்: இதழ்விரிந்த ஓதியர்: கூந்தலை உடைய மகளிர். சோபனகீதம்: மங்கலப் பாட்டு. படம்: நடைப் பாவாடை. பைய: மெல்லென. வையா: வைத்து. (குளகம்).

770. செம்மலராள்: திருமகள். நாமகள்: கலைமகள். தேவி: இறைவி. இதுபோது: இதுவே சமயம். அம்: அழகிய. நூபுரம்: சிலம்பு. ஆர்ப்ப: ஒலிப்ப.

771 ஒல்கினன் மெல்ல ஒதுங்கினள், அன்பு
பில்கி இருந்த பிரான்அருகு எய்தி
மெல்கி எருத்தம் மிசைத்தலை தூக்கிப்
புல்கிய காஞ்சி புலம்ப இருந்தாள். 172

772 அல்பக இமைக்கும் செம்பொன் அரதன பீடத்து, உம்பர்ப்
பொற்புஅக லாத காட்சிப் புனிதனோடு இருந்த நங்கை,
எல்பகல் வலங்கொண்டு ஏகும் எரிகதிர் வரையின் உச்சிக்
கற்பக மருங்கில் பூத்த காமரு வல்லி ஒத்தாள். 173

773 பண்ணும்,இன் இசையும், நீரும்,
தண்மையும், பாலும், பாலில்
நண்ணும்இன் சுவையும், பூவும்,
நாற்றமும், மணியும், அம்கேழ்
வண்ணமும், வேறு வேறு
வடிவுகொண்டு இருந்தால் ஒத்தது;
அண்ணலும் உலகம் ஈன்ற
அம்மையும் இருந்தது அம்மா. 174

774 விண்ணுளார், திசையின் உள்ளார்,
வேறுளார், பிலத்தின் உள்ளார்,
மண்ணுளார் பிறரும், வேள்வி
மண்டபத்து அடங்கி, என்றும்
பண்ணுள்ஆர் ஓசை போலப்
பரந்துஎங்கும் நிறைந்த மூன்று
கண்ணுளார் அடியின் நீழல்
கலந்துளார் தம்மை ஒத்தார். 175

---

771. பில்கி: நிறைந்து. மெல்கி: மென்மைக் குணம் நிரம்பி. எருத்தம்: பிடரி. தலை: திருமுடி. தூக்கி: வைத்து. புல்கிய: தழுவிய.

772. அல்பக: இருள்கெட. இமைக்கும்: ஒளிவீசும். அரதன பீடம்: இரத்தின பீடம். பொற்பு: பொலிவு. அகலாத: நீங்காத காட்சிப் புனிதன்: தூய தோற்றத்தையுடைய இறைவன். நங்கை: பிராட்டியார். எல்பகல்: இரவும் பகலும். வரை: மேருமலை மருங்கில்: அருகே. காமரு வல்லி: அழகிய கொடி.

773 தண்மை: குளிர்ச்சி. நண்ணும்: பொருந்தும். நாற்றம்: மணம். அம்கேழ் வண்ணம்: அழகிய ஒளி. அண்ணல்: சிவபெருமான் அம்மை: அம்பிகை.

774. திசையினுள்ளார். திக்கிலுள்ளார். பிலம்: பாதலம். எங்கும் நிறைந்த மூன்று கண்ணுளார்: எங்கும் நிறைந்திருக்கிற முக்கண்ணனான இறைவன்.

775 ஆயபோது ஆழி அம்கை அண்ணல்,பொன் கரக நீரால்
சேயவான் சோதி ஆடல் சேவடி விளக்கி, சாந்தம்
தூயபோது அவிழச் சாத்தி, தூபமும் சுடரும் கோட்டி,
நேயமோடு அருச்சித்து ஐயன் இறைஅருள் பெற்று நின்றான். 176

776 விண்தலத் தவருள் ஆதி
வேதியன், பாத தீர்த்தம்
முண்டகத் தவனும், மாலும்,
முனிவரும், புரந்தர் ஆதி
அண்டரும், நந்தி தேவும்,
அடுகணத் தவரும், ஏனைத்
தொண்டரும், புறம்பும் உள்ளும்
நனைத்தனர் சுத்தி செய்தார். 177

777 அத்தலை நின்ற மாயோன், ஆதி,செங் கரத்து, நங்கை
கைத்தலம் கமலப் போது பூத்ததோர் காந்தள் ஒப்ப
வைத்து,அரு மனுவாய் ஓத, கரகநீர் மாரி பெய்தான்;
தொத்தலர் கண்ணி விண்ணோர் தொழுது,பூ மாரி பெய்தார். 178

778 ஆடினர் அரம்பை மாதர்; விஞ்சையர் அமுத கீதம்
பாடினர், 'அர'என்று ஆர்த்துப் பரவினர் முனிவர்; வானோர்
மூடினர் புளகப் போர்வை; கணத்தவர் முடிமேல் செங்கை
சூடினர் பலரும் மன்றல் தொடுகடல் இன்பத்து ஆழ்ந்தார். 179

---

775. ஆழி: சக்கரம். அண்ணல்: திருமால். சேய: சிவந்த. சோதி: இறைவனது. அவிழ: மணம் வீச. கோட்டி: சுழற்றி.

776. ஆதிவேதியன்: இறைவன். தீர்த்தம்: தீர்த்தத்தால். முண்டகத்தவன்: பிரமன்.

777. அத்தலை: அங்கு. மாயோன்: திருமால். ஆதி: சிவபெருமான். கரம்: கை. நங்கை: தடாதகைப் பிராட்டி. கமலப்போது பூத்ததோர் காந்தள் ஒப்ப தாமரை மலரில் மலர்ந்ததாகிய ஒரு காந்தள் மலர் போல. அருமனு: அரிய மந்திரத்தை ஓத: கூற. கரகநீர் மாரி பெய்தான்: கரகத்திலுள்ள நீரைத் தாரை வார்த்தான். தொததலர்கண்ணி விண்ணோர்: பூங்கொத்து அலர்ந்த மாலையையுடைய தேவர்கள்.

778. அரம்பை மாதர்: அரம்பையர்கள். விஞ்சையர்: வித்தியாதரர். பரவினர்: துதித்தார்கள். மூடினர் புளகப் போர்வை: (தேவர்கள்) புளகமாகிய போர்வையால் பொதியப் பெற்றார்கள். கணத்தவர்: சிவ கணத்தவர். தொடுகடல் இன்பத்து: இன்பமாகிய கடலில.

779 புத்தனூர் எறிந்த கல்லும் போதுஎன, மிலைந்த வேத
வித்தனூர் அடிக்கீழ் வீழ, விண்ணவர், முனிவர் ஆனோர்
சுத்தநா ஆசி கூற, குங்குமத் தோயம் தோய்ந்த
முத்தவால் அரிசி வீசி, மூழ்கினூர் போக வெள்ளம். 180

780 அம்மையோடு அப்பன் என்ன, அலர்மணம் போல நீங்கார்,
தம்அருள் விளையாட் டாலே ஆற்றநாள் தமியர் போல,
நம்மனோர் காணத் தோன்றி, நன்மணம் புணர, ஞாலம்
மும்மையும் உய்ந்த என்னுத் தத்தமின் மொழியல் உற்றூர். 181

781 காமரு சுரபித் தீம்பால்,
கற்பகக் கனி,நெய், கன்னல்,
நாமரு சுவைய இன்ன
நறுமது பருக்கம், செம்பொன்
ஆமணி வட்டத் திண்கால்
பாசனத்து அமையப் பெய்து,
தேமரு கொன்றை யானைத்
"திருக்கைதொட்டு அருள்க" என்றூர். 182

782 அங்கைவைத்து அமுது செய்தாங்கு
அகம்மகிழ்ந்து அட்ட மூர்த்தி,
கொங்குஅவிழ் குமுதச் செவ்வாய்
கோட்டிவாள் முறுவல் பூத்தான்;
புங்கவர், முனிவர், கற்பின்
மகளிரும் போதின் மேய
மங்கையர் இருவ ரோடும்
மங்கலம் பாடல் உற்றூர். 183

---

779. புத்தனூர்: சாக்கிய நாயனூர். கல்லும் போதுஎன: கல்லையும் மலரைப்போல. மிலைந்த: சூடிய. வேதவித்தனூர்: வேத காரணரான இறைவர். சுத்தநா ஆசி கூற: புனித நாவினூல் ஆக்கமொழி கூற. தோயம்: நீர். தோய்ந்த: நனைந்த முத்தவால் அரிசி: முத்துப் போன்ற வெள்ளிய அரிசி. போகவெள்ளம்: இன்ப வெள்ளம்.

780 ஆற்றநாள்: மிகப்பல நாள். தமியர்போல: பிரிந்தவர் போல. புணர: செய்தருள. உய்ந்தஎன்னு: ஈடேறின என்று. தத்தமின்: தங்கள் தங்களுக்குள்.

781. காமருசுரபி: காமதேனு. கன்னல்: சருக்கரை. நாமரு சுவைய: நாவிற்குப் பொருந்திய சுவையையுடைய. நறுமது பருக்கம்: நல்ல இனிய அடிசில். செம்பொன் ஆமணி வட்டத்திண் கால் பாசனத்து: செம்பொன்னூலாகிய மணிகள் இழைத்த வட்டமாகிய வலிய காலையுடைய கலத்தின் கண், அமையப்பெய்து: பொருந்த இட்டு. தேமரு கொன்றையான். தேன் பொருந்திய கொன்றை மாலையை அணிந்த சிவபெருமான்.

782. அங்கை: அழகிய கை. கொங்கு: மணம். கோட்டி: குவித்து. வாள்: ஒள்ளிய. புங்கவர். தேவர். இருவர்: திருமகளும் கலைமகளும்.

783 மாக்கடி முளரி வாணன் மைந்தரோடு ஒருங்கு வைகி,
நாக்களின் நடுநா ஆரத் துடுவையால் நறுநெய் ஆர்த்தி
வாக்கிட, ஆர மாந்தி, வலம்சுழித்து அகடு வீங்கித்
தேக்கிடும் ஒலியின் ஆர்த்து, நிமிர்ந்தது தெய்வச் செந்தீ. 184

784 சுற்றும்நான் மறைகள் ஆர்ப்ப,
தூரியம் சங்கம் ஏங்க,
கற்றநான் முகத்தோன் வேள்விச்
சடங்குநூல் கரைந்த ஆற்றல்,
முற்ற,மங் கலநாண் சாத்தி,
முழுதுலகு ஈன்றாள் செங்கை
பற்றினன், பற்றி லார்க்கே
வீடுஅருள் பரம யோகி. 185

785 இணர்எரித் தேவும் தானே,
எரிவளர்ப் பவனும் தானே,
உணவுகொள் பவனும் தானே,
ஆகிய ஒருவன், வையம்
புணர்வுஉறு போகம் மூழ்கப்
புருடனும் பெண்ணும் ஆகி
மணவினை முடித்தான்; அன்னான்
புணர்ப்பையார் மதிக்க வல்லார். 186

786 பின்புதன் பன்னி யோடு
பிறைமுடிப் பெருமான், கையில்
நன்பொரி வாங்கி, செந்தீ
நாமடுத்து, எனைத்தும் ஆன
தன்படிவு உணர்ந்த வேத
முனிவர்க்குத் தக்க தானம்
இன்புஅகம் ததும்ப நல்கி,
எரிவலம் முறையால் வந்து, 187

783. மாக்கடி முளரிவாணன்: பிரமன். ஒருங்கு: ஒருசேர. வைகி: இருந்து. நாக்களின் நடுநா ஆர: ஏழு நாக்களில் நடு நாவால் சுவையறியுமாறு. துடுவையால்: சுருக்கு சுருவங்களால். ஆர்த்தி: நிரப்பி வாக்கிட: வார்க்க. ஆரமாந்தி: நிரம்ப உண்டு. அகடுவீங்கி: வயிறு நிரம்பி. தேக்கிடும்: தேககெறியும்.

784. ஏங்க: ஒலிக்க. கரைந்த: கூறிய. ஆற்றல்: முறையால். முற்ற: முடித்துவைக்க. பற்றிலார்க்கே வீடு அருள் பரமயோகி: பற்றற்றவர்க்கே வீட்டின்பத்தை அருளும் இறைவன். 'பற்றற்றான்' என்று குறள் பேசும்.

785. எரித்தேவு: தீக்கடவுள். ஒருவன்: இறைவன். புணர்ப்பை: செயலை.

786. பன்னி: தேவி, பிராட்டியார். பிறைமுடிப் பெருமான்: சந்திரனை அணிந்த இறைவன் நாமடுத்து: நாவில் அகப்படச் செய்து. (தீயிலிட்டு). படிவு: படிவம், உருவம் (இப்பாடல் குளகம்),

787 மங்கலம் புனைந்த செம்பொன் அம்மிமேல், மணாட்டி பாத
பங்கய மலரைக் கையால் பரிபுரம் சிலம்பப் பற்றி,
புங்கவன் மனுவால் ஏற்றி, புண்ணிய வசிட்டன் தேவி
எங்குளனச் செங்கை கூப்பி எதிர்வர, அருட்கண் சாத்தி, 188

788 விதிவழி வழாது வேள்வி வினைஎலாம் நிரம்ப, இங்ஙன்
அதிர்கடல் உலகம் தேற ஆற்றி, நான் மறைகள் ஆர்ப்ப,
கதிர்மணி நகையார் வாழ்த்த, காமனைக் காய்ந்த நம்பி,
மதிநுதல் மங்கை யோடு மணஅறை தன்னில் புக்கான். 189

789 மனிதரும் இமையாது, ஐயன் மங்கல வனப்பு நோக்கி,
புனிதவா னவரை ஒத்தார்; அவர்க்குஅது புகழோ? எந்தை
கனிதரு கருணை நாட்டம் பெற்றவர், கடவு ளோரால்
பனிதரு மலர்இட்டு ஏத்தி வழிபடற் பாலர் அன்றோ? 190

790 மானுடர் இமையோர் என்னும்
வரம்புஇலர் ஆகி, வேள்வி
தான்இடர் அகல நோக்கி,
தலைத்தலை மயங்கி நின்றார்;
கானிடம் நடனம் செய்யும்
கண்ணுதல் அருள்கண் நோக்கால்,
ஊன்இடர் அகலும் நாளில்
உயர்ந்தவர் இழிந்தோர் உண்டோ? 191

---

787. புனைந்த: அலங்கரித்த. மணாட்டி: தேவியார். பரிபுரம் சிலம்ப: சிலம்பு ஒலிக்க. புங்கவன்: இறைவன். புண்ணியவசிட்டன் தேவி: அருந்ததி. அருட்கண்: அருட்பார்வை. சாத்தி: வைத்து. (குளகம்)

788. நிரம்ப: முற்றுப்பெற. அதிர்கடல்: ஒலிக்கின்ற கடல். தேற: தெளிந்துய்ய. ஆற்றி: முடித்து கதிர்மணி நகையார்: ஒளியையுடைய முத்துப்போன்ற பற்களையுடையார். காமனைக் காய்ந்த நம்பி: மன்மதனை எரித்தருளிய சிவபெருமான். மதிநுதல் மங்கை. சந்திரனை ஒத்த நெற்றியையுடைய தடாதகைப் பிராட்டியார்.

789. ஐயன்: இறைவன். வனப்பு: கோலப்பொலிவு. கனிதரு கருணை நாட்டம்: முதிர்ந்த அருட்பார்வை கடவுளர்: தேவர்.

790. வரம்பு இலர்: எண்ணற்றவர். வேள்வி திருமணத்தை. தலைத்தலை: இடங்கள் தோறும். கான்: சுடுகாடு. உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற வேறுபாடு அங்கு இல்லை.

791 மணஅறைத் தவிசின் நீங்கி
மன்றல்மண் டபத்தில் போந்து,
கணமணிச் சேக்கை மேவி,
கருநெடும் கண்ணன் வாணி
துணைவனே முதல்வா னோர்க்கும்,
சூழ்கணத் தொகைக்கும், என்றும்
தணவுஅறு செல்வம் தந்தோன்
சாறுசால் சிறப்பு நல்கி, 192

792 ஏட்டுவாய் முளரி யான்,மால்,
ஏனைவா னவரும் தத்தம்
நாட்டுவாழ் பதியில் செல்ல
நல்விடை கொடுத்து, வேந்தர்க்கு
ஆட்டுவான் ஆடிக் காட்டும்
தன்மைபோல் அரசு செய்து
காட்டுவான் ஆகி, ஐயன்
திருஉளக் கருணை பூத்தான். 193

793 அதிர்விடைக் கொடிஅம் கயல்கொடி யாக,
அராக்கலன் பொற்கலன் ஆக,
பொதிஅவிழ் கடுக்கை வேம்புஅலர் ஆக,
புலிஅதள் பொலந்துகில் ஆக,
மதிமுடி, வயிர மணிமுடி, ஆக,
மறைகிடந்து அலம்புமா மதுரைப்
பதியுறை சோம சுந்தரக் கடவுள்,
பாண்டியன் ஆகிவீற்று இருந்தான். 194

---

791. கணம்: கூட்டம். சேக்கை: அரியணை. கருநெடும் கண்ணன்: திருமால். வாணி துணைவன்: பிரமன். கணத்தொகை: சிவகணத்தார். தணவு அறு: நீங்குதல் இல்லாத. செல்வம் தந்தோன்: செல்வத்தை அருளிய இறைவன். சாறு: விழா. சிறப்பு: வரிசைப் பொருட்கள். (இப்பாடல் குளகம்).

792. ஏடு: இதழ். முளரியான்: பிரமன். நாட்டியம் ஆட்டுவிப்பவன் ஆடும் முறையைப் பிறர்க்கு உணர்த்துதல் அன்றித்தானும் ஆடிக்காட்டுதல்போல, இறைவன் உயிர்கள் அறிந்து ஒழுகவேண்டியவற்றை வேதம் முதலியவற்றால் உணர்த்தினும் தாமே வந்து ஒழுகிக் காட்டுதல் இன்றியமையாதது என்பர் ''ஆட்டுவான் ஆடிக்காட்டும் தன்மைபோல் அரசுசெய்து காட்டுவான் ஆகி'' என்றார்.

793. அதிர் விடைக்கொடி: ஒலிக்கின்ற இடபக்கொடி. கயல்கொடி: மீனக்கொடி. அராக் கலன்: பாம்பணிகள். பொற்கலன்: பொன்னணி. பொதிஅவிழ் கடுக்கை: இதழ்விரிந்த கொன்றை மலர்மாலை. வேம்பலர் ஆக: வேப்பம்பூ மாலையாக. புலி அதள்: புலித்தோல். பொலம் துகில் ஆக: பொன்னுடையாக மதிமுடி: சந்திரனை அணிந்த சடாமுடி. மறை கிடந்து அலம்பும்: வேதங்கள் தங்கி ஒலிக்கின்ற. உறை: வீற்றிருக்கும்.

794 விண்தவழ் மதியம் சூடும் சுந்தர விடங்கப் புத்தேள்
கொண்டதுஓர் வடிவுக்கு ஏற்ப, குருதிகொப் பளிக்கும் சூலத்
திண்திறல் சங்கு கன்னன் முதற்கணத் தேவர் தாமும்
பண்டைய வடிவு மாறிப் பார்த்திபன் பணியில் நின்றார். 195

795 தென்னவன் வடிவம் கொண்ட சிவபரன், உலகம் காக்கும்
மன்னவர், சிவனைப் பூசை செய்வது மறை ஆறு என்று
சொன்னது, மன்னர் எல்லாம் துணிவது பொருட்டு, தானும்
அந்நகர் நடுஊர் என்றோர் அணிநகர் சிறப்பக் கண்டான். 196

796 மெய்ம்மைநூல் வழியே கோயில்
விதித்துஅருள் குறிநி றீஇ,பேர்,
"இம்மையே நன்மை நல்கும்
இறை" என நிறுவி, பூசை
செம்மையாற் செய்து, நீப
வனத்துறை சிவனைக் காலம்
மும்மையும் தொழுது, வையம்
முழுவதும் கோல்ந டாத்தும். 197

797 பூவரும் அயன்,மால் ஆதிப் புனிதரும், முனிவர், ஏனோர்
யாவரும் தனையே பூசித்து இகபரம் அடைய நின்ற
மூவருள் மேலாம் முக்கண் மூர்த்தியே, பூசை செய்த
தாவர இலிங்க மேன்மைத் தகுதியார் அளக்க வல்லார். 198

798 மனித்த ருக்குஅர சாகி,தெவ்
வேந்தர்க்கு மடங்கலாய், மட நல்லார்க்கு
இனித்த ஐங்கணைக் காளையாய்,
நிலமகட்கு இணர்த்துழாய் அணிமாலாய்,
அனித்த நித்தம்ஓர்ந்து இகபரத்து
ஆசைநீத்து அகம்தெளிந் தவர்க்குஒன்றாய்
தனித்த மெய்யறிவு ஆனந்த
மாம்,பர தத்துவ மாய்நின்றான். 199

---

794. சுந்தரவிடங்கப் புத்தேள்: சோமசுந்தரக் கடவுள். சிவகணத்தாரும் பண்டைவடிவம் மாறி மன்னன் பணியில் நின்றார்கள்.

795. தென்னவன் பாண்டியன். மறைஆறு: வேதநெறி. மன்னர்: அரசர். துணிவது பொருட்டு: துணிந்து மேற்கொள்ளும் பொருட்டு அணிநகர்: அழகிய நகர். சிறப்பக் கண்டான்: மேன்மைப்பட ஆக்கினான்.

796 மெய்ம்மை: உண்மை. விதித்து: எடுத்து. அருள்குறி நிறீஇ: அருள்வடிவமாகிய சிவலிங்கத்தை நிலைபெறுத்தி. இம்மையே நன்மை நல்கும் இறை: இம்மையே நன்மை அருளும் இறைவன். செம்மையால்: முறைப்படி. நீபவனத்து உறை: கடம்பவனத்தில் உறைகின்ற. கோல்நடாத்தும்: அரசாட்சி செய்தருளுவான்.

797. பூவரும்: பூவில் வாழும். யாவரும் வணங்குகின்ற இறைவனே இலிங்க பூசை செய்தான் என்ப.

798. தெவ்வேந்தர்: பகைமன்னர். மடங்கலாய்: சிங்கமாய் மடநல்லார்: மகளிர். இனித்த ஐங்கணைக் காளை: இனிமையுடைய பஞ்சபாணன் என்னும் மன்மதன். இணர்த் துழாய் அணிமால்: கொத்தாகிய துளசிமாலையை அணிந்த திருமால். அனித்த நித்தம் ஓர்ந்து. நிலையாமை, நிலைத்தலை என்பவற்றை உணர்ந்து. இகபரம் இம்மை, மறுமை. நீத்து: வெறுத்து அகம்; மனம். தெளிந்தவர்: மெய்ஞ்ஞானியர். தனித்த: ஒப்பற்ற.

## 6. வெள்ளியம்பலத் திருக்கூத்தாடியது



ஆடினுன் அமல மூர்த்தி; அஞ்சலி முகிழ்த்துச் சென்னி
சூடினுர்; அடியில் வீழ்ந்தார்; சுருதிஆ யிரநா ஆரப்
பாடினுர்; பரமா னந்தப் பரவையில் படிந்தார்; அன்பு
நீடினுர்; நிருத்தா னந்தம் காண்பது நியமம் பூண்டார். 815

# வெள்ளி அம்பலத் திருக்கூத்து ஆடிய படலம்

799 உலகுஇயல் நிறுத்து வான்வந்து
ஒருபரஞ் சுடர்,வான் திங்கள்
குலமணி விளக்கை வேட்டு,
கோமுடி கவித்து, பார்ஆண்டு,
இலகுறு தோற்றம் ஈதால்;
முனிவரர் இருவர் தேற
அலகில்ஆ னந்தக் கூத்துச்
செய்தவாறு அறையல் உற்றும். 1

800 புண்ணிய மலர்மென் கொம்பை
வேட்டபின், புவனம் தாங்கும்
கண்ணுதல் மூர்த்தி யாய
கவுரியன்; "மணத்தில் வந்த
மண்ணியல் வேந்தர், வானோர்,
மாதவர், பிறரும் உண்ண
நண்ணுதிர்'' என்னலோடும்
நண்ணுவார் விரைவின் எய்த, 2

801 பொன்அவிர் கமலம் பூத்த
புனிதநீர் ஆடி, தத்தம்
நன்னெறி நியமம் முற்றி.
நண்ணினர்; புலிக்கா லோனும்
பன்னக முனியும் தாழ்ந்து
பரவி,"அம் பலத்துள் ஆடும்
நின்அருள் நடங்கண்டு உண்பது
அடியேங்கள் நியமம்'' என்றார். 3

---

799. இயல்: தன்மை. நிறுத்துவான்: நிறுத்துதற்பொருட்டு. வான்திங்கள் குலமணி விளக்கு: வானில் உலவும் சந்திர மரபுக்கு மணிவிளக்காகிய தடாதகைப் பிராட்டி. வேட்டு: மணந்து. கோமுடிகவித்து: 'அரசமுடிசூடி. இலகுறு: விளங்கும். முனிவசர் இருவர்: இரு மேலான முனிவர்கள் (பதஞ்சலி, வியாக்கிரபாதர்). தேற: தெளிந்து உய்யுமாறு. அலகில்: அளவில்லாத. அறையல்: கூறல்.

800. புண்ணியமலர் மென்கொம்பு: அறவடிவமாகிய மெல்லிய பூங்கொம்பு போன்ற தடாதகைப் பிராட்டி. புவனம். உலகு. தாங்கும்: ஆளுதல். கண்ணுதல் மூர்த்தி, நெற்றிக்கண்ணனுன சிவபெருமான். கவுரியன்: சோமசுந்தர பாண்டியனுகிய இறைவன். மண்ணியல் வேந்தர்: மண்ணுலகை ஆளும் மன்னர். நண்ணுதிர்: வருவீர். (இப்பாடல் குளகம்)

801. அவிர்: விளங்கும். நன்னெறி நியமம்: நல்நெறிப்படியான முறைமை. நண்ணினுர்: வந்தார். புலிக்காலோன்: புலிக் கால்களை உடைய வியாக்கிரபாத முனிவர். பன்னகமுனி: பதஞ்சலி முனிவர்.

802 என்னலும் "அந்தக் கூத்தை இங்குநாம் செய்தும், தில்லைப்
பொன்நகர் உலகம் எல்லாம் உருவம்ஆம் புருடற்கு உள்ளம்,
இன்னதுஆம் துவாத சாந்தம்" என்றுஇறை அருளிச் செய்ய,
"மன்னவ! ஏனை அங்கம் யா?"என மன்னன் சொல்வான். 4

803 அரைக்குமேல் உலகுஏழ் என்றும்
அரைக்குக் கீழ்உலகுஏழ் என்றும்
உரைக்கலால், உலகம் எல்லாம்
உருவமாம் புருடற்கு இந்தத்
தரைக்குமேல் அனந்தம் தெய்வத்
தானம்உண்டு; அனைத்தும் கூறின்
வரைக்குஉரு; சிலதா னங்கள்
வகுத்துஉரை செய்யக் கேண்மின். 5

804 திருவளர் ஆரூர் மூலம்; திருவானைக் காவே குய்யம்;
மருவளர் பொழில்சூழ் அண்ணா மலைமணி பூரம்; நீவிர்
இருவரும் கண்ட மன்றம் இதயமாம்; திருக்கா ளத்தி
பொருவரும் கண்டம் ஆகும்; புருவமத் தியமாம் காசி. 6

805 பிறைதவழ் கயிலைக் குன்றம் பிரமமரந் திரம்ஆம்; வேதம்
அறைதரு துவாத சாந்தம் மதுரை;ஈது அதிகம் எந்த
முறையினால் என்னின்முன்னர்த்தோன்றிய முறையால்என்று, அக்
கறைஅறு தவத்த ரோடு கவுரியன் கோயில் புக்கான். 7

---

802. என்னலும்: என்று கூறிய அளவிலே. செய்தும்: செய்வோம். துவாத சாந்தம்: தீர்க்க சந்தி. மன்னன்: இறைவனாகிய சுந்தரபாண்டியன். உலக புருடற்குத் தில்லை உள்ளம் ஆகும். மதுரை துவாத சாந்தம் ஆகும்.

803. அரை: இடை. உரைக்கலால்: சொல்லப்படுவதால். அனந்தம்: எண்ணற்ற. தெய்வத்தானம்: தெய்வத்தன்மை பொருந்திய இடம். வரைக்குஉரு: அளவுக்கு உட்படா.

804. மூலம்: மூலத்தானம். குய்யம்: சுவாதிட்டானம் (மறைவிடம்). இதயமாம்: இதயத் தானமாகும் (அநாகதம்). கண்டம்: விசுத்தி. புருவமத்தியம்: ஆஞ்ஞை.

805. பிரமாந்திரம்: பிரமநாடி அதிகம்: மேலானது. கறைஅறு: குற்றமற்ற. கவுரியன்: சுந்தரபாண்டியன்.

806 தன்அருள் அதனல் நீத்த தன்னையே தேடிப் போந்த
மின்அவிர் கயிலை தானே?, விடைஉரு மாறி இங்ஙன்
மன்னிய தேயோ? திங்கள் மண்டல மேயோ என்ன,
பொன்அவிர் விமானக்கீழ்பால் வெள்ளிஅம் பொதுஉண்டாக 8

807 மின்பயில் பரிதிப் புத்தேள்
பாற்கடல் விளங்கி யாங்கு,
பின்புஅதன் மிசைமா ணிக்கப்
பீடிகை தோன்றிற்று; அன்னது
அன்பர்தம் உளமே ஆகும்;
அல்லது வேதச் சென்னி
என்பதுஆம் அஃதே; அன்றி
யாதுஎன இசைக்கற் பாற்றே 9

808 அன்னதுஓர் தவிசின் உம்பர்,
ஆயிரம் கரத்தால் அள்ளித்
துன்இருள் விழுங்கும் கோடி
சூரியர் ஒருகா லத்து
மன்னினர் உதித்தால் ஒப்ப,
மனமொழி பக்கம் கீழ்மேல்
பின்முதல் கடந்த ஞானப்
பேரொளி வடிவாய்த் தோன்றி, 10

809 முந்துறு கணங்கள் மொந்தை தண்ணுமை முழக்கம் செய்ய,
நந்திமா முழவம் தாக்க, நாரணன் இடக்கை ஆர்ப்ப,
வந்துகந் தருவ நூலின் மரபுளி இருவர் பாட,
ஐந்துதுந் துபியும் கல்லென்று ஆர்கலி முழக்கம் காட்ட, 11

---

806. தன்: சிவபெருமான். நீத்த: கயிலையை விடுத்து வந்த. விடை: இடப ஊர்தி. என்ன: என்று கூறுமாறு. கீழ்பால்: கீழ்பக்கத்தில். வெள்ளிஅம் பொது: வெள்ளியம் பலம் (இப்பாடல் குளகம்).

807. பரிதிப்புத்தேள்: சூரியன். அதன்மிசை: அந்த வெள்ளி அம்பலத்தின் மீது. பீடிகை. பீடம். அன்பர்தம் உளம்: அடியார்களின் உள்ளத் தாமரை. வேதச் சென்னி: மறைமுடி.

808. உம்பர்: மேல். கரம். கை. துன்இருள். செறிந்த இருள். மன்னினர்: நிலைபெற்று. ஒப்ப: போல. (இப்பாடல் குளகம்).

809. முந்துறு: முதன்மையான. கணங்கள்: சிவகணங்கள். கந்தருவநூல்: இசைநூல். இருவர்: தும்புரு, நாரதர். ஆர்கலி: கடல். (இதுவும் குளகம்).

810 மதுமுகத்து அலர்ந்த வெள்தா மரைமகள் சுருதி கூட்டச்,
சதுமுகத்து ஒருவன் சாம கீதயாழ் தடவிப் பாட,
விதுமுகத்து அருகு மொய்க்கும் மீன்என ஞான வெள்ளிப்
பொதுமுகத்து அமரர் தூற்றும் பூமழை எங்கும் போர்ப்ப, 12

811 பொரும்கடல் நிறத்த செந்தீப் பொங்குஉளைக் குறளின் மீது,
பெருங்கடல் வடவைச் செங்கண் பிதுங்க,மேல் திரிந்து நோக்கி
முருங்குஅடல் எரியில் சீற, முதுகுஇற வலத்தாள் ஊன்றிக்
கருங்கடல் முளைத்த வெய்யோன் காட்சியில் பொலிந்து நின்று,13

812 கொய்யும்செங் கமலப் போது
குவிந்துஎன, எடுத்து, கூத்துச்
செய்யும்புண் டரிகத் தாளும்,
திசைகடந் துளஈர் ஐந்து
கையும்,திண் படையும், தெய்வ
மகளிர்மங் கலநாண் காத்த
மையுண்ட மிடறும், சங்க
வார்குழை நுழைந்த காதும், 14

813 செக்கர்அம் சடையும், தேசுஆர்
வெண்திரு நீறும், தெய்வ
முக்கணும், உரகக் கச்சும்,
முள்எயிறு இமைக்கும் மார்பும்,
மைக்கரும் கயல்கண் நங்கை
வல்லியின் ஒதுங்கி நிற்கும்
பக்கமும், அவள்மேல் வைத்த
பார்வையும், நகையும் தோன்ற, 15

---

810 மது: தேன். வெள்தாமரை மகள்: கலைமகள். சதுமுகத்து ஒருவன்: பிரமன். விது: சந்திரன். மீன்என: விண்மீன்களைப் போல. தூற்றும்: பொழியும் (இதுவும் குளகம்).

811. பொரும் கடல்: அலைமோதும் கடல். நிறத்த: நிறம்போலும். உளை: பிடரிமயிர். குறள்: முயலகன். முருங்கு: அழிக்கும் எரி: வடவைத் தீ. சீற: கோபிக்கவும். இற: முறிய. வெய்யோன்: சூரியன். காட்சியில்: தோற்றம்போல. (இதுவும் குளகம்).

812. குவிந்து என: குவிந்தாற்போல. எடுத்து: தூக்கி. தாள்: திருவடி. (இதுவும் குளகம்).

813. செக்கர். சிவந்த. தேசு: ஒளி. ஆர்: நிறைந்த. உரகம்: பாம்பு. முள் எயிறு: முள்போன்ற பன்றிக்கொம்பு. நங்கை; உமையம்மை. வல்லியின்; கொடிபோன்று. (இதுவும் குளகம்).

814 கங்கைஆறு அலம்பும் ஓசை,
கடுக்கைவண்டு இரங்கும் ஓசை,
மங்கல முழவின் ஓசை,
மந்திர வேத ஓசை
செங்கைஆடு எரியின் ஓசை,
திருவடிச் சிலம்பின் ஓசை,
எங்கணும் நிரம்பி அன்பர்
இருசெவிக்கு அமுதம் ஊற்ற, 16

815 ஆடினான் அமல மூர்த்தி; அஞ்சலி முகிழ்த்துச் சென்னி
சூடினார்; அடியில் வீழ்ந்தார்; சுருதிஆ யிர நா ஆரப்
பாடினார்; பரமா னந்தப் பரவையில் படிந்தார்; அன்பு
நீடினார்; நிருத்தா னந்தம் காண்பது நியமம் பூண்டார். 17

816 முனிவர்,கந் தருவர், வானோர், தானவர், மோன யோகர்,
புனிதகிம் புருடர் ஆதிப் புலவரும் இறைஞ்சி, அன்பிற்
கனிதரும் இன்பத்து ஆழ்ந்தார்; திருமணம் காண வந்த
மனிதரும், காணப் பெற்றார் மாதவர் பொருட்டால் மன்னோ? 18

817 அனந்தனும் முனிவர் வேந்தன்
அளவுஇல்ஆ னந்தம் ஊறி,
மனந்தனில் நிரம்பி, மேலும்
வழிவது போல, மார்பம்
புனைந்தபுண் ணியவெண் ணீறு
கரைந்திடப் பொழிகண் நீருள்
நனைந்து,இரு கரமும் கூப்பி,
நாதனைப் பாடு கின்றான். 19

814. அலம்பும்: ஒலிக்கும். கடுக்கை: கொன்றை. (இதுவும் குளகம்).

815. அமலமூர்த்தி. தூயனாகிய சோமசுந்தரக் கடவுள். முகிழ்த்து: கூப்பி. சென்னி: முடி. அடி: திருவடி. நா ஆர: நா நிரம்ப பரவையில்: கடலில். படிந்தார்: மூழ்கினார்கள். அன்பு நீடினார்: அன்பைப் பெருக்கினார்கள். நிருத்தானந்தம்: ஆனந்தக் கூத்து.

816. தானவர்: அசுரர். மோனயோகர்: மௌன நிலையையுடைய யோகியர்கள். ஆதி: முதலிய. புலவர்: தேவர். கனிதரும்: முதிர்ந்த. மாதவர்: பெருந்தவமுடைய பதஞ்சலி, வியாக்ரபாத முனிகள்.

817. முனிவர் வேந்தன்: பதஞ்சலி. மேலும் புறத்தேயும்.

818 பராபர முதலே! போற்றி! பத்தியில் விளைவாய்! போற்றி!
சராசரம் ஆகி வேருய் நின்றதற் பரனே! போற்றி!
கராசல உரியாய்! போற்றி! கனக அம்பலத்துள் ஆடும்
நிராமய! பரமா னந்த நிருத்தனே! போற்றி! போற்றி!! 20

819 ஒன்றுஆகி ஐந்துஆய் ஐயைந்து
உருவாகி வருவாய்! போற்றி!
இன்ருகிச் சென்ற நாளாய்
எதிர்நாளாய் எழுவாய்! போற்றி!
நன்ருகித் தீயது ஆகி
நடுவாகி முடிவாய் மன்றுள்
நின்றுஆடும் பரமா னந்த
நிருத்தனே! போற்றி!! போற்றி!!! 21

820 அடியரேம் பொருட்டு வெள்ளி அம்பலத்து ஆடல் போற்றி!
பொடிஅணி தடம்தோள் போற்றி! புரிசடை மகுடம் போற்றி!
கடிஅவிழ் மலர்மென் கூந்தல் கயல்விழி பாகம் போற்றி!
நெடியதற் பரமா னந்தா நிருத்தனே! போற்றி! போற்றி!! 22

821 என்றுநின்று ஏத்தி ஞன்,பின்
இருவரை நோக்கி வெள்ளி
மன்றுள்நின்று ஆடா நின்ற
மறைமுதல் கருணை கூர்ந்து,
“நன்றுநீர் வேட்டது என்?”என்று
அருள்செய, நாதன் பாதம்
துன்றும்மெய் அன்பில் தாழ்ந்து
தொழுதுநின்று இதனைச் சொல்வார். 23

---

818. பராபரன்: முன்னவனும் பின்னவனுமுள்ள இறைவன். சராசரம்: அசையும் பொருள், அசையாப்பொருள். தற்பரனே: சிவபெருமானே. கராசலஉரியாய்: யானைத் தோலைப் போர்த்தவனே. கனகஅம்பலம்: பொன்னம்பலம். நிராமய: பிறவிப் பிணி நீக்குபவனே. நிருத்தனே: கூத்தப்பிரானே.

819. ஒன்று: சுத்த சிவம். ஐந்து: சிவன், நாதசிவன், சதாசிவன், மகேசன், உருத்திரன். ஐயைந்து: சந்திரசேகரர் முதலிய இருபத்தைந்து உருவங்கள். இன்ருகி: நிகழ்காலமாகியும். சென்ற நாளாய்: இறந்தகாலமாகியும். எதிர்நாளாய்: வருங்காலமாகியும்.

820. பொடி அணி: திருநீறுதரித்த. தடம்தோள்: பெரிய திருத்தோள். புரிசடை மகுடம்: முறுக்கமைந்த சடாமுடி. கடி: மணம் அவிழ்: மலர்ந்த. மென்: மெல்லிய. கூந்தல்: கூந்தலையுடைய கயல்விழிபாகம்: மீனுட்சி அம்மை அமர்ந்திருக்கும் இடப்பாகம். நெடிய: நீண்ட. தற்பரமானந்தம்' மேலான சிவானந்தம்.

821. ஆடா நின்ற: ஆடிய. மறைமுதல்: சிவபெருமான் இருவர்: பதஞ்சலி, வியாக்கிர பாதர். துன்றும்: மிக்க

822 “எந்தை! இத் திருக்கூத்து என்றும்
இந்நிலை நின்று, யார்க்கும்
பந்தவெம் பாசம் நீங்கப்
பரிந்துஅருள் செய்தி” என்ன,
செந்தமிழ்க் கன்னி நாடு
செய்தமா தவப்பேறு எய்தத்
“தந்தனம்” என்றான், வேதம்
தலைதடு மாற நின்றான். 24

823 அராமுனி ஈது வேண்டும்;
“ஆதிஎம் பெரும! இந்த
நிராமய பரமா னந்த
நிருத்தம்நேர் கண்டோர் எல்லாம்
தராதலம் மிசைவந்து எய்தாத்
தனிக்கதி பெறுதல் வேண்டும்
பராபர” என்று தாழ்ந்தான்;
பகவனும் அதற்கு நேர்ந்தான். 25

824 ஆர்த்தனர் கணத்தோர் கைகோத்து
ஆடினர்; அலர்பூ மாரி
தூர்த்தனர் விண்ணோர்; கண்ணீர்
துளும்பினர், முனிவர் ஆகம்
போர்த்தனர். புளகம் அன்பில்
புதைந்தனர், விழுங்கு வார்போல்
பார்த்தனர், புல்லிக் கொண்டார்
பரவிஅவ் இருவர் தம்மை, 26

822. என்றும்: எப்பொழுதும். இந்நிலை நின்று: இந்த வெள்ளி அம்பலத்துள்ளே நின்று. என்ன: என்று வேண்ட.

823 அராமுனி: பதஞ்சலி முனிவன். வேண்டும்: வேண்டுவான். நிருத்தம்: நடனம். நேர்கண்டோர்: நேரிலேயே தரிசித்தவர். தனிக்கதி: ஒப்பற்ற சிவகதி. பராபர: பரமும் அபரமும் ஆனவன். நேர்ந்தான்: உடன் பட்டான்

824 துளும்பினர். போர்த்தனர், புதைந்தனர்' பார்த்தனர் - முற்றெச்சங்கள். கூடியிருந்தோர் களிப்பு மிகுதியால் பதஞ்சலி முனிவரையும் வியாக்கிரபாதரையும் தழுவிக் கொணடனர்.

825 அனித்தம் ஆகிய பூதம்ஐம்
　　பொறிபுலன் ஆதிஆறு ஆருகி,
இனித்த மாயையோடு இருவினைத்
　　தொடக்கினும் இருளினும் வேருகித்
தனித்த யோகிகள் அகம்நிறைந்து,
　　ஆடிய தனிப்பெரும் திருக்கூத்தை,
குனித்த வண்ணமாக் கண்டவர்க்கு,
　　இகபரம் கொடுத்துஅவண் உறைகின்ருன். 27

826 குனிவில் ஆதிரைத் தினம்தொடுத்து,
　　எதிர்வரு கொடுவில்ஆ திரைஎல்லே,
புனித ஆடக முளரிதோய்ந்து,
　　அத்தனிப் பொதுநடம் தரிசித்து,அங்கு
இனிதுஅ மர்ந்து,நூற்று எண்மடங்கு
　　ஐந்துஎழுத்து எண்ணி,இந் நிலைநிற்கும்
கனியும் அன்பினுர் எண்ணி,யாங்கு
　　எய்துவர், கருதிய வரம்எல்லாம். 28

---

825. அனித்தம் : நிலைபெற்ற. இனித்த: சுவைகொடுக்கும். குனித்த வண்ணமாக: ஆடிய கோலமாக. இகபரம் கொடுத்து: இம்மைமறுமைப் பயன்களைக் கொடுத்து. அவண்: வெள்ளியம்பலத்தில்.

826. வில்: தனுசு, மார்கழிமாதம். ஆடக முளரி: பொற்ருமரை. கனியும் அன்பினுர்: முதிர்ந்த அன்பினை உடையவர்.

## 7. குண்டோதரனுக்கு அன்னமிட்டது



''நட்டம் ஆடிய சுந்தர! நங்கை,எம் பிராட்டி
அட்ட போனகம், பனிவரை அனையவாய்க் கிடந்த;
தொட்டு வாய்மடுத் திடவும்,என் சுடுபசி தணியாது,
இட்டுஉ ணாதவர் வயிறுபோல், காந்துவது'' என்றான். 847

# குண்டோதரனுக்கு அன்னம் இட்ட படலம்

827 பன்ன கேசனும் அடுபுலிப் பாதனும் பணிய,
மின்னு வார்சடை மன்னவன் வெள்ளிமன்று ஆடல்
சொன்ன வாறுஇது; பசித்தழல் சுட,ஒரு பூதம்
அன்ன மாமலை தொலைத்தவாறு எடுத்துஇனி அறைவாம். 1

828 கன்னி யர்க்குஅரசு ஆயினள், கடிமனை புகுந்த
மின்இ யல்சடை மாதவர், வேதியர், ஏனோர்,
எந்நி லத்துள மன்னவர், யாவர்க்கும் முறையே
பொன்இ யல்கலத்து அறுசுவைப் போனகம் அருத்தா, 2

829 பூசு கின்றவும், உடுப்பவும், பூண்பவும், பழுக்காய்
வாச மெல்இலை எனைவும், அம்முறை வழங்கா,
தேச மன்னவர் ஏனையோர்ச் செல்லுநர்ச் செலுத்தி,
ஈசன் அன்புஉறு கற்பினள் இருக்கும்அவ் வேலை, 3

830 மடைவ ளத்தொழிற் புலவர்வந்து அடிஇணை வணங்கி
"அடிய ரேம்அட்ட போனகம் ஆயிரத்து ஒன்றின்
இடையது ஆயினும், தொலைந்திலது; யாங்கள்மேற் செய்யக்
கடவது ஏது''என, பிராட்டிதன் கணவர்முன் குறுகா, 4

831 பணிந்துஒ துங்கிநின்று, "அடிகள்!முப் பத்துமுக் கோடி
கணங்கள் தம்மொடும் இங்குஎழுந்து அருள்வது கருதி,
இணங்கும் இன்சுவைப் போனகம் எல்லைஇன்று ஆக்கி,
உணங்கு கின்றது,உண்டு,எஞ்சியது எனைத்துஎன உரைக்கின்"

---

827. பன்னகேசன். பதஞ்சலிமுனிவர். அடுபுலிப்பாதன்: வியாக்கிரபாத முனிவர். மின்னு வார் சடைமன்னவன்: ஒளிவீசும் நீண்ட சடையையுடைய இறைவனான சோமசுந்தர பாண்டியன். பசித்தழல்: பசித்தீ. பூதம்: (இங்கே) குண்டோதரன். அன்னமாமலை: சோறான பெரியமலை. அறைவாம்: கூறுவாம்

828. அரசு ஆயினள்: அரசியாகிய தடாதகைப் பிராட்டி. போனகம்: உணவு அருத்தா: அருத்தி. உண்பித்து. (இப்பாடல் குளகம்)

829. பழுக்காய். பாக்கு. வழங்கா: வழங்கி. (இதுவும் குளகம்)

830. மடைவளத் தொழில்: சமைத்தலாகிய வளப்பமிக்க தொழில். புலவர்: திறமை மிககோர். அடிஇணை. திருவடிகள். அட்ட: சமைத்த. போனகம்: உண்டி. ஆயிரத்து ஒன்றின் இடையது ஆயினும்: ஆயிரத்தில் ஒரு கூறு அளவுகூட. தொலைந்திலது. (உண்டு) குறையவில்லை. செய்யக்கடவது: செய்யவேண்டியது. குறுகா: சென்று (இதுவும் குளகம்).

831. அடிகள்: தேவரீர். இணங்கும்: பொருந்திய போனகம்: உணவு. உணங்குகின்றது. வீணாக உலர்ந்துபோகிறது உண்டு எஞ்சியது: உண்டு மிகுந்தது.

832 இமையக் குன்றமும், அடைகலாய் இதன்புறம் கிடந்த
சிமையக் குன்றுகள் ஈட்டமும் சேர்ந்துளன, நிமிரச்
சமையக் கொட்டிய வால்அரிப் புழுக்கலும், சாதக்கு
அமையக் கொட்டிய கறிகளின் வருக்கமும் ஆகும். 6

833 என்ற போது,இறை எம்பிரான், தேவியார் இடத்தில்
ஒன்றும் அன்பினல் ஒருவிளை யாடலை நினைந்தோ,
தன்த னிக்குடைப் பாரிடத் தலைவனது ஆற்றல்,
அன்று யாவரும் அறிந்திடக் காட்டவோ அறியேம், 7

834 சிறிது வாள்நகை செய்து,"மூ வேந்தரிற் சிறந்த
மறுவில் மீனவன் அரும்பெறல் மகள்!உனக்கு அரிதில்
பெறுவது ஏது?வான் தருவும்நின் பணிசெயப் பெற்றுஇங்கு
உறைவ தேல்பிறர் திருஎலாம் உன்னதே அன்றோ?" 8

835 "அளவி லாதநின் செல்வத்தின் பெருக்கை,நாம் அறிய
விளைவு செய்தனை போலும்!நின் விருந்துணப் பசியால்
களைஅ டைந்தவர் ஆகி,நங் கணத்தினுள் காணோம்;
தளவ மூரலாய்! யாம்செயத் தக்கதுஏது'' என்றான். 9

836 அடுக்க நின்றகுண் டோதரன் அகட்டிடை, வடவை
மடுக்க உன்னினன்; அதுவந்து வயிற்றுஎரி பசியாய்த்
தொடுக்க ஆலம்உண் டாங்குஉடல் சோர்ந்து,வேர்த்து, ஆவி
ஒடுக்க முற்று,"ஐய! பசியினல் உயங்கினேன்'' என்றான். 10

---

832. அடைகல்: அடுக்கமலை. நிமிர: வானளாவ. வால்: வெள்ளிய. அரி: அரிசி. சாதக்கு: அப்புழுக்கலுக்கு. சோற்றுக்குவியல் இமயமலை போலவும், கறி வகைகள் பக்கமலைகளைப் போலவும் காட்சி அளித்தன.

833. ஒன்றும் அன்பினல்: பொருந்திய அன்பினல். தனிக்குடை: ஒப்பற்ற குடை. பாரிடத் தலைவன்: குண்டோதரன். அறியேம்: அறியமுடியவில்லை. (இப்பாடல் குளகம்).

834. சிறிதுவாள் நகைசெய்து: சிறிது புன்னகை புரிந்து. மறுவில்: குற்றமற்ற. மீனவன்: பாண்டியன்: அரும் பெறல்: பெறற்கரிய. வான்தருவும்: கற்பகமரமும். உறைவதேல்: இருப்பதாயின். திரு: செல்வம். (இதுவும் குளகம்).

835. பெருக்கை: மிகுதியை. விளைவு செய்தனை: இங்ஙனம் செய்தனை. களை அடைந்தவர்: களைப்புற்றவர். காணோம்: கண்டிலேம். தளவமூரலாய்: முல்லையரும்பு போலும் பல்வரிசையுடையாய்.

836. அடுக்க: அருகில். அகட்டிடை: வயிற்றிடை. வடவை: வடவைத்தீ. மடுக்க. புக. உன்னினன்: திருவுளம் கொண்டான். எரிபசி: காந்துகின்றபசி. தொடுக்க: தொடர. ஆலமுண்டாங்கு: நஞ்சுண்டவன் போல. ஒடுககமுற்று: ஒடுங்கி. உயங்கினேன்: வாடினேன்.

837 குடையெ டுக்கும்இக் குறியதாள் குறட்குஒரு பிடிசோறு
இடுமின்; அப்புறம் சோறுமால்'' என,தொழுது எல்லாம்
உடைய நாயகி போயினள்; குறியனும் உடனே
நடைத ளர்ந்து,கண் புகைந்து,வாய் புலர்ந்திட நடந்தான். 11

838 படைக்கண் ஏவலர், இறைமகள்
பணியினால், பசிநோய்
தொடுத்த வன்தனைக் கொண்டுபோய்,
சொன்றிமுன் விடுத்தார்;
அடுத்து இருந்ததே கண்டனர்;
அன்னமா மலையை
எடுத்து அயின்றதும், அடிசில்அங்கு
இருந்ததும் காணார். 12

839 சிலம்பும்நூபுரச் சீறடிச் சேடியர் சில்லோர்,
அலம்பு வால்வளைக் கைநெரித்து அதிசயம் அடைந்தார்;
புலம்பு மேகலை யார்சிலர் பொருக்கென வெருண்டார்;
கலம்பெய் பூண்முலை யார்சிலர் கண்புதைத்து இரிந்தார். 13

840 முரவை போகிய முறிவுஇல்வால் மூரல்,பால் வறையல்,
கருனை, தீம்பயறு, அடுதுவை பல்வகைக் கறிகள்,
விரவு தேம்படு பால்தயிர் இழுது,தேன் வெள்ளம்
வரைவி லாதன மிடாவொடு வாரி,வாய் மடுத்தான். 14

---

837. குறியதாள்· குள்ளமான கால். குறள்: பூதம். சோறும்: கூறுவோம். எல்லாம் உடைய நாயகி: எல்லாவற்றையும் உடைய தலைவியான தடாதகைப் பிராட்டியார். குறியன்: குண்டோதரன் கண்புகைந்து: கண்குழிந்து.

838. படைக்கண் ஏவலர்: வாட்படைபோலும் கண்களையுடைய மகளிர். இறைமகள்: பிராட்டியார். தொடுத்தவன்: பீடிக்கப்பட்டவனை குண்டோதரன். சொன்றிமுன்· சோற்றின் முன். அடுத்து: அருகில். அயின்றதும்· உண்டதும். அடிசில்: அன்னம்.

839. சிலம்பும்: ஒலிக்கும். நூபுரம்: சிலம்பு அதிசயம்: வியப்பு. இரிந்தார்; ஓடினார்கள்.

840. தவிடு நீங்கிய முறிதல் இல்லாத வெள்ளிய அரிசியாலாகிய அன்னத்தையும், பாலபெய்து அட்ட துவட்டலையும், பொறியல் கறியையும், இனியபயற்றொடு கலந்து சமைத்த புளியங்கறியையும், பலவகைக் கறிகளையும், பொருந்திய இனிமைபெற்ற பாலும், தயிரும், நெய்யும், தேனுமாகிய இவற்றின் பெருக்கினையும், அளவிலாத பண்டங்களையும் மிடாக்களோடு வாரி வாரி உண்டான், குண்டோதரன்.

841 பல்பழக்குவை, வேற்றுஉருப் பண்ணியம், கன்னல்,
மெல்சுவைத்தண்டு, தெங்குஇவை அன்றியும், வேவா
அல்சி, காய்களின் வருக்கமும், நுகர்ந்தும் ஆறுமல்,
எல்லை தீர்நவ பண்டமும் எடுத்துவாய் மடுத்தான். 15

842 பாரித் துள்ளஇப் பண்டமும், பருஉக்குறுங்கையால்
வாரித் தன்பெரு வயிற்றிடை வைப்பவும், துடுவை
பூரித்து ஆகுதி பண்ணிய தழல்எனப் பொங்கிக்
கோரித்து, ஒன்பது வாயிலும் பசித்தழல் கொளுத்த, 16

843 அலங்கல் ஓதிகண்டு அதிசயம் அடைந்து, தன் அன்பின்
நலங்கொள் நாயகன் முன்புபோய், நாணம்உள் கிடப்ப,
இலங்கு பூங்குழல் சுவல்மிசை இறக்கியிட்டு, ஒல்கி,
நிலங்கி ளைத்துநின் றுள் நிலைகண்டனன், நிருபன். 17

844 அம்சில் ஓதியை வினவுவான் அறிகலான் போல;
"குஞ்சி ஆர்அழல் அன்னஅக் குடவயிற் றவன்உண்டு,
எஞ்சி உள்ளவேல் பூதங்கள் இன்னமும் விடுத்து,உன்
நெஞ்சுஉ வப்பவே அருத்துதும்" என்னலும், நிமலை, 18

845 "ஐய இன்னும்இக் குறள்பசி அடங்கிடா; வேறு
வெய்ய பாரிட வீரரை விடுத்தியேல், எடுத்து
வையம் யாவையும் வயிற்றிடை வைப்பரே; அதனல்
செய்ய காலருத் திரப்பெயர், தேற்றமாம் உனக்கே." 19

---

841. பழக்குவை: பழக்குவியல்கள். வேற்றுஉரு: வெவ்வேறு வடிவங்களில். பண்ணியம்: பலகாரம். கன்னல்: சர்க்கரை. தண்டு: கரும்பு. தெங்கு: தேங்காய். வேவா அல்சி: சமைக்கப்படாத அரிசி. வருக்கம்: கூட்டம். நுகர்ந்தும்: உண்டும். எல்லைதீர்: அளவிறந்த. நவபண்டம்: நவதானியங்கள். மடுத்தான்: வாரி உண்டான்.

842. பாரித்துள்ள: நிறைந்துள்ள. பருஉக் குறுங்கை: பருமனை குறுகிய கை. துடுவை பூரித்து: துடுவையால் (நெய்யை) நிரப்பி. ஆகுதி: வேள்வித்தீயில் நெய்வார்த்தல். கோரித்து: கொடுமையாகப் பரவி. ஒன்பது வாயிலும்: உடலிலுள்ள ஒன்பது துவாரங்களிலும். பசித்தழல்: பசித் தீ. (இப்பாடல் குளகம்)

843. அலங்கல் ஓதி: மாலையை அணிந்த கூந்தலையுடைய பிராட்டியார். இலங்கு பூங்குழல்: விளங்குகின்ற பூவை அணிந்த கூந்தலை. சுவல்மிசை: தோளின்மீது. ஒல்கி: துவண்டு. நிலம் கிளைத்து நின்றுள்: (திருவடிப் பெருவிரலால்) நிலத்தைக் கீறிக்கொண்டு நின்றுள். நிருபன்: அரசனை இறைவன்.

844. அம்சில்ஓதி: அழகிய வட்டத்தகடு அணிந்த கூந்தலையுடைய பிராட்டி. அறிகலான்: தெரியாதவன். ஆர்அழல் அன்னகுஞ்சி: நிறைந்த நெருப்பைப் போலும் தலைமுடியுடைய. குடவயிற்றவன்: குண்டோதரன். எஞ்சி: மீந்திருப்பவை. விடுத்து: அனுப்பி. உவப்பவே: மகிழுமாறு. அருத்துதும்: உண்பிப்போம். நிமலை: பிராட்டியார். (குளகம்)

845. வேறுவெய்ய பாரிட வீரரை: வேறு கொடிய பூதகண நாதரை. செய்ய கால உருத்திரப் பெயர்: செந்நிறமுடைய காலருத்திரர் என்னும் பெயர். தேற்றமாம்: உறுதியாகும்.

846 சங்க வார்குழைக் குறள்மகன் தன்செயல் தானே
இங்கு வந்துஉரை செய்திட அறிதிஎன்று; இறைமுன்
மங்கை நாயகி குமுதவாய் மலர்பொழுது, எயிற்றுத்
திங்கள் வாய்முழை யான்பசித் தீச்சுட வந்தான். 20

847 "நட்டம் ஆடிய சுந்தர! நங்கை,எம் பிராட்டி
அட்ட போனகம் பனிவரை அனையவாய்க் கிடந்த;
தொட்டு வாய்மடுத் திடவும்,என் சுடுபசி தணியாது,
இட்டுஉ ணாதவர் வயிறுபோல், காந்துவது" என்றான். 21

848 கையர் முப்புரத்து இட்டதீ, கடும்பசி உருவாய்ப்,
பொய்ய னேன்வயிற் றிடைக்குடி புகுந்ததோ என்னும்,
கைஎ றிந்திடும்; அண்டங்கள் வெடிபடக் கதறும்;
ஐய கோஎனும்; உயிர்த்திடும்; ஆவிசோர்ந்து அயரும். 22

---

846. குறள் மகன்: குண்டோதரன். மலர் பொழுது: கூறும்பொழுது. எயிற்றுத்திங்கள் வாய்முழையான்: வளைந்த பற்களையும் குகைபோன்ற வாயினையும் உடைய குண்டோதரன். தீச்சுட: கொளுத்த.

847. நட்டம்: கூத்து. அட்ட போனகம்: சமைப்பித்தருளிய அமுது வகைகள். பனி வரை: இமயமலை. அனையவாய்: போல. மடுத்திடவும்: உண்ணவும். சுடுபசி: தீப்பசி. இட்டுஉணாதவர்: ஐயம் இட்டு உண்ணாதவர். காந்துவது: எரிகின்றது. எவ்வளவு தின்றாலும் இட்டு உண்ணாதவர் வயிறு காந்தும்.

848. கையர்: வஞ்சகர்கள். என்னும்: என்பான். எறிந்திடும்: தாக்குவான். உயிர்த்திடும்: பெருமூச்சுவிடுவான். அயரும்: அயருவான்.

## அன்னக்குழியும் வைகையும் அழைத்த படலம்

849 வேத நாயகன் பாரிட வேந்தனுக்கு அமையா
ஓத னதிகள் அருத்திய தன்மைஈது: உவையும்
போத ராமையால் அமைவுறப் போனகக் குழிதந்து
ஓதம் மாநதி அருத்திய செய்தியும் உரைப்பாம். 1

850 கவன மால்விடை யாளிபின் கடிகமழ் தென்றல்
பவனம் மாமலை யாட்டியைப் பார்த்து,உளே நகைத்து,
தவன மாபசி உடையவன் தன்பொருட்டு அன்ன
புவன மாதினை நினைத்தனன்: நினைக்கும்முன் போந்தாள். 2

851 நால்த டம்திசைத் தயிர்க்கடல் நனந்தலை நிலம்கீண்டு,
ஊற்றுஎ ழுந்துநால் கிடங்கராய் உதித்துஎழுந் தாங்கு,
மாற்றுஅ ருஞ்சுவைத் தீம்தயிர் வால்அரிப் பதத்தோடு
ஏற்றுஎ ழுந்தது நாற்குழி இடத்திலும் பொங்கி. 3

852 குரும திக்குல மன்னவன் மருகன்,அக் குண்டப்
பெருவ யிற்றுஇரு பிறைஎயிற்று எரிசிகைப் பேழ்வாய்
ஒருகு றள்குடை வீரனை,"உன்பசி தணியப்
பருகு"எ னப்பணித்து அருளலும், பாரிடத் தலைவன், 4

853 அத்த யிர்ப்பதக் கிடங்கரில் அலைகடல் கலக்கும்
மத்துஎ ன,கரம் புதைத்துஎடுத்து எடுத்துவாய் மடுத்துத்
துய்த்தி டப்பசி விடுத்தது; சுருதிநா யகன்தாள்
பத்தி வைத்துவிடு உணர்ந்தவர் பழவினைத் தொடர்போல். 5

---

849. வேதநாயகன்: சோமசுந்தரக் கடவுள். பாரிடவேந்தன். குண்டோதரன். ஓதனம்: சோறு. உவையும் அவையும். போனகக்குழி: அன்னக்குழி. மாநதி: வைகை.

850. கவனம்: விரைவு. விடையாளி: இடப ஊர்தியை உடைய இறைவன். மலையாட்டி: பொதிகைமலைத் தலைவியாகிய தடாதகைப பிராட்டி. தவனம்: எரிகின்ற. பசிஉடையவன்; குண்டோதரன், அன்னபுவனமாது: அன்னபூரணி.

851. தடம்: பெரிய. நனந்தலை: நடுவில. கீண்டு. கிழித்து. வால்: வெண்மை. அரிப்பதத்தோடு· அரிசியாலாகிய சோற்றுடன். ஏற்று: பொங்கி.

852 குரு: ஒளி. மருகன்· சுந்தரபாண்டியன். எயிறு: பல். பேழ்வாய்: பிளந்தவாய். (இப்பாடல் குளகம்).

853. கிடங்கர்: குழி. சுருதி: வேதம். இறைவனிடம் அன்புகொண்டுள்ள அடியார்களின் பழவினைத் தொடர்ச்சி நீங்கல்போல் குண்டோதரன் பசியும் நீங்கிற்று.

## 8. அன்னக்குழியும் வையையும் அழைத்தது



வண்டோதை மாறு மலர்வேணியின் வந்த நீத்தம்
கண்டு,ஓதம் நஞ்சுஉண்டு அருள்கண்ணுதல் மூர்த்தி, பேழ்வாய்
விண்டுஓ தணியாதுஎன் விடாய்என வெம்பி வீழ்ந்த
குண்டோ தரனை விடுத்தான்அக் குடிகை ஞாங்கர். 87।

854 வாங்கி வாங்கிவாய் மடுத்தலும், உடம்புஎலாம் வயிறாய்
வீங்கினான்,தரை கிழிபடப் பொருப்புஎன வீழ்ந்தான்,
நீங்கு நீள்உயிர்ப்பு இலன்உடல் புரண்டனன், நீர்வேட்டு
ஆங்கு நீர்நிலை தேடுவான் ஆயினான் எழுந்தான். 6

855 ஆவி அன்னவர்ப் பிரிந்துஉறை அணங்கனார் போலக்
காவி நாள்மலர்த் தாமரைக் கடிமலர் வாட,
வாவி ஓடையும் குளங்களும் வறப்ப,வாய் வைத்துக்
கூவ நீள்நிலை நீர்களும் பசையறக் குடித்தான். 7

856 அனையன் ஆகியும், நீர்நசை ஆற்றலன் வருந்தும்
வினையன் ஆகி,வான் நதிச்சடை வேதியன் பாதத்து
இனைய, நாதனும், தன்திரு முடியின்மீது இருக்கும்
நனைய நாள்மலர் ஓதியைப் பார்த்துஒன்று நவில்வான். 8

857 "தேங்கும் நீர்த்திரை மாலிகைச் செல்வி!நீ இந்த
வாங்கு நீர்த்தடம் புரிசைசூழ் மதுரையின் மாடுஓர்
ஓங்கு நீத்தமாய் ஒல்என வருதி''என்று உரைத்தான்;
நீங்கு நீர்த்திரு மாதுஅவண் ஒருமொழி நிகழ்த்தும். 9

858 "அன்றும் எம்பிரான் ஆணையால் "பகீரதன் பொருட்டுச்
சென்று நீஒரு தீர்த்தமாய்த் திளைப்பவர்'' களங்கம்
ஒன்று தீவினைத் தொடக்குஅறுத்து எழுக''எனப் பணித்தாய்,
இன்றும் ஓர்நதி ஆகுஎனப் பணித்தியேல், என்னை, 10

---

854 மடுத்தல்: உண்டல். வீங்கினான், வீழ்ந்தான், எழுந்தான் எச்சப்பொருளன. நீர் வேட்டு: நீரை விரும்பி.

855. ஆவிஅன்னவர்: உயிர்போன்றவர். அணங்கனார்: தலைவியர். நாள் காவிமலர்: அன்றலர்ந்த நீலோற்பல மலர் கடிமலர்: மணமலர் வாவி: நடைகிணறு வறப்ப: வறண்டு போகுமாறு. கூவம்: கிணறு. பசையற: ஈரப்பசையில்லாது.

856. அனையன் ஆகியும்: அங்ஙனம் நீரைக் குடித்தவனாகியும். வருந்தும் வினையனாகி: வருந்தும் தன்மை உடையவனாய். வேதியன்: இறைவன். பாதத்து: பாதங்களில் வீழ்ந்து. இனைய: வருந்த. நாள்மலர் ஓதி புதுமலர் அணிந்த கங்கை.

857. தேங்கும்: ததும்புகின்ற. மாலிகை: மாலை. வாங்கு: வளைந்த. நீர்த்தடம்: அகழி. புரிசை: மதில். மாடு: பக்கம். நீத்தம்: வெள்ளம். ஒல்என: விரைவாக நீர்த்திரு மாது: கங்கை. நிகழ்த்தும்: கூறுவாள்.

858. திளைப்பவர். மூழ்குவோர். களங்கம்: குற்றம், பாவம். பணித்தியேல்: கட்டளை இடுவாய் ஆயின். (இப்பாடல் குளகம்).

859 தெரிசித் தோர்,படிந்து ஆடினோர், செங்கையா லேனும்
பரிசித் தோர்,பவத் தொடர்ச்சியின் பற்றுவிட்டு, உள்ளத்து
உருசித்து ஓர்வுறு பத்தியும், விச்சையும், உணர்வாய்
விரிசித்து ஓர்வுறும் மெய்உணார் வால்வரும் வீடும், 11

860 தந்தி டப்பணித்து அருள்,என, தடம்புனல் செல்வி
சுந்த ரப்பெரும் கடவுளை வரங்கொண்டு தொழுது
வந்துஅ ளப்புஇலா வேகமொடு, எழுந்துமா நதியாய்
அந்த ரத்துநின்று இழிபவள் ஆம்என வருமால். 12

861 திரைவளை அணி கரம்உடையவள்,
செழுமணிநகை உடையாள்,
நுரைவளை துகில் உடையவள்,கொடி
நுணுகுஇடையவள், அறல்நீள்
விரைவளை குழல் உடையவள்,கயல்
விழிஉடையவள், வருவாள்,
வரைவளை சிலை யவன்முடிமட
வரல்நதிவடி வினுமே. 13

862 விரைபடும்அகில், அரைபொரிதிமில், வெயில்விடுமணி வரையோடு
அரைபட,முது சினைஅலறிட, அடியொடுகடிது அகழா,
குரைபடுகழல் இறவுளர்சிறு குடிஅடியொடு பறியா,
கரைபடஎறி வதுவருவது கடுவிசைவளி எனவே. 14

---

859. தெரிசித்தோர்: கண்ணுற் கண்டவர். பரிசித்தோர்: தொட்டவர். பவத்தொடர்ச்சி: பிறவித்தொடர். உருசித்து: இனிக்க. ஓர்வுறும்: சிந்திக்கும். விச்சை: மெய்ஞ்ஞானம். விரிசித்து: விரிந்து. (இப்பாடல் குளகம்).

860. அளப்புஇலா: அளவுஇல்லாத. அந்தரம்: ஆகாயம். வரும்(ஆல்): வருகின்றாள்.

861. திரைவளை: அலைகளாகிய வளையல்கள். செழுமணி நகை: கொழுவிய முத்துக்களாகிய பல்வரிசை. நுணுகு: சிறுகிய. அறல்: கருமணல். வரைவளை சிலையவன்: மேருமலையை வில்லாக வளைத்தவன். மடவரல்: கங்கை.

862. விரைபடும்: மணம்பொருந்திய, பொரி அரை எனமாற்றுக. திமில்: வேங்கை. சினை: கிளைகள். கடிது: விரைந்து. அகழா: அகழ்ந்து. குரைபடு: ஒலிக்கின்ற இறவுளர்: வேட்டுவர்கள். பறியா: பெயர்த்து. வளி: காற்று. (இப் பாடல் குளகம்)

863 பிணையொடுகலை, பிடியொடுகரி பிரிவுஇல,ஒடு பழுவப்
பணையொடு,கரு முசுவயிறுஅணை பறழொடுதழு வியதன்
துணையொரு,கவி பயில்மரம்நிரை தொகையொடும்,இறவுளர்வெங்
கணையொடுசிலை இதணொடும்,எறி கவணொடுகொடு வருமால். 15

864 அடிஇறநெடு வரைஉதைவன அகழ்வன,அகழ் மடுவைத்
திடர்இடுவன, மழைசெருகிய சினைமரநிரை தலைகீழ்
படஇடிகரை தொறும்நடுவன, படுகடல்உடை முதுபார்
நெடுமுதுகுஇரு பிளவுஉறவரு நெடுநதியின அலையே. 16

865 பிளிறு ஒலியின, முதுமரம்அகழ் பெருவலியின, அசையா
வெளில்தடிவன, எறிமணியின, விரைசெலவின, மதமோடு
ஒளிறுஅளியின, நுரைமுகபடம் உடையன,என வரலால்
களிறுஅனையன மதுஇதழிகள் கவிழ்சடைஅணி குடிஞை. 17

866 நீடியபிலம் உறும்நிலையின, நிருமலன்மதிமுடிமீது
ஆடியசெய லின.வெயில்உமிழ் அருமணிதலை யின,நீள்
கோடியகதி யின,நிரைநிரை குறுகியபல காலின்
ஓடியவலி யின,வளைஉடல் உரகமும்என வருமால். 18

867 மண்அகழ்தலின் வளைஅணிகரு மாஅனையது; மிசைபோய்
விண்அளவலின் அவுணர்கள்இறை விடுபுனலொடு நெடுகும்
அண்ணலைஅனை யது,சுவைஇழுது அளைஅளைவுறு செயலால்
கண்ணனைஅனை யது;நெடுகிய கடுகியகதி நதியே. 19

---

863. பிணை: பெண்மான். கலை: ஆண்மான். பிடி: பெண்யானை. கரி: ஆண்யானை. ஒடு: ஒடுமரம். பழுவம்: காடு. பணையொடு: கிளைகளோடு. முசு: ஆண்குரங்கு. பறழ்: குட்டி. கவி: குரங்குகள். பயில்: உலவுகின்ற. இதண்: பரண். எறிகவண்: வீசும்கவண். கொடு வரும்: வாரிக் கொண்டுவரும்.

864. அடிஇற: அடியோடு. உதைவன: மோதி. திடர்: மேடு. மழை செருகிய: மேகத்தைஊடுருவிய. உடை: ஆடை. பார்: பூமி. அலைகளின் தன்மை: கூறியவாறு.

865. வெளில்: விளாமரம். தடிவன: முறிப்பன. செலவின: போக்கினை உடையன. அளியின: வண்டுகளை உடையன. குடிஞை: கங்கை. நதியின் போக்கும் யானையின் போக்கும் ஒத்துள என்று சிலேடையாகப் பாடியுள்ளார்.

866. பிலம்: பாதலம். உறும்: பொருந்தும். நிருமலன்: இறைவன். வெயில்: ஒளி. கோடிய: வளைந்த. நிரைநிரை: வரிசை வரிசையாக. உரகம்: பாம்பு. இது ஆற்றுக்கும் பாம்புக்கும் சிலேடையாகப் பாடப்பட்டது.

867. வளைஅணி: சங்கினை ஏந்திய கருமா: வராகமூர்த்தி. அவுணர்கள் இறை: அசுரர்கள் தலைவனாகிய மாபலிச் சக்கரவர்த்தி. விடு: தாரை வார்த்த, நெடுகும் அண்ணல்: பேருரு எடுத்த திருமால். இழுது: நெய். அளை: தயிர். அளைவுறு செயலால்: அளைந்து வருதலால்.

868 திகழ்தருகரி, பரி,கவரிகள், செழுமணியொடு வரும்ஆறு
இகழ்தருகுட புலஅரசர்கள் நெறிசெய்துகவர் திருவோடு
அகழ்தருபதி புகும்,மதிகுல அரசுஅனையதை; அலதேல்
புகழ்தருதிறை இடவருகுட புலஅரசனும் நிகரும். 20

869 ஆரொடும்,மடல் அவிழ்பனையொடும், அரம்நிகர்இலை நிம்பத்
தாரொடு,புலி யொடு,சிலையொடு, தகுகயலொடு தழுவா,
பாரொடுதிசை பரவியதமிழ் பயில்அரசர்கள் குழுமிச்
சீரொடுபலி திருவொடுவரு செயல்அனையது நதியே. 21

870 கல்லார் கவிபோல் கலங்கி,கலை மாண்ட கேள்வி
வல்லார் கவிபோற் பலவான்துறை தோன்ற வாய்த்து,
செல்லாறு தோறும் பொருள்ஆழ்ந்து, தெளிந்து தேயத்து,
எல்லாரும் வீழ்ந்து பயன்கொள்ள இறுத்தது அன்றே. 22

871 வண்டுஓதை மாறா மலர்வேணியின்
வந்த நீத்தம்
கண்டு,ஓதம் நஞ்சுஉண்டு அருள்கண்ணுதல்
மூர்த்தி, பேழ்வாய்
விண்டுஓ தணியாதுஎன் விடாய்என
வெம்பி வீழ்ந்த
குண்டோ தரனை விடுத்தான்அக்
குடிஞை ஞாங்கர். 23

---

868. இகழ்தரு: இகழ்ந்த குடபுலஅரசர்: மேற்புலமன்னர். நெறிசெய்து: ஆணைவழிப் படுத்தி கவர்திரு: கவர்ந்த செல்வங்கள். நிகரும்: ஒக்கும்

869. ஆர்: ஆத்திமாலை. பனை: பனம்பூமாலை. அரம்நிகர்: அரத்தினை ஒத்த. நிம்பம்: வேம்பு. தழுவா: தழுவி. மூவேந்தர் சேனையுடன் வருதல் போல நதி வருகின்றது.

870. கலைமாண்ட: கலைகளில் மாட்சிமைப்பட்ட. பலவான் துறை: பலவாகிய பெரிய நீர்த்துறை. வாய்த்து: பொருந்தி. செல்லாறுதோறும்: செல்லுகின்ற வழி தோறும். தேயத்து: நாட்டிலுள்ளோர். வீழ்ந்து: விரும்பி. இறுத்தது: நிலைபெற்றது.

871. ஓதை: ஒலி. வேணி: சடை. நீத்தம்: வெள்ளம் ஓதம்: கடல். மூர்த்தி: இறைவன். விடாய்: வேட்கை. குடிஞை: நதி. ஞாங்கர்: பக்கம்.

872 அடுத்தான் நதியின் இடைபுக்குஇருந்து,ஆற்ற லோடும்
எடுத்தான், குறுங்கை இரண்டும்கரை ஏற நீட்டித்
தடுத்தான், மலைபோல் நிமிர் தண்புனல் வாய்அங் காந்து
மடுத்தான் விடாயும் கடல்உண்ணும் மழையும் நாண. 24

873 தீர்த்தன் சடைநின்று இழிதீர்த்தம் அருந்தி, வாக்குக்
கூர்த்து,இன்பு கொண்டு, குழகன்திரு முன்னர் எய்தி,
பார்த்தன் பணிந்த பதமுன்பணிந்து, ஆடிப் பாடி
ஆர்த்துஅன்பு உருவாய்த் துதித்தான் அளவாத கீதம். 25

874 பாட்டின் பொருளா னவன்,பாரிட வீரன் பாடல்
கேட்டுஇன்பம் எய்தி, கணங்கட்குக் கிழமை நல்கி,
மோட்டின் புனல்மண் முறைசெய்து இருந்தான்; அளகக்
காட்டின் புறம்போய் மடங்கும்கயல் கண்ணி யோடும். 26

875 தீர்த்தன் இதழிச் சடைநின்றும் இழிந்து வரலால், சிவகங்கை;
தீர்த்தன் உருவம் தெளிவோர்க்கு ஞானம் தரலால் சிவஞான
தீர்த்தம்; காலில் கடுகிவரும் செய்தி யாலே வேகவதி;
தீர்த்தம் கிருத மாலைன வைகை நாமம் செப்புவரால். 27

---

872. அடுத்தான், எடுத்தான், தடுத்தான் முற்றெச்சங்கள். வாய் அங்காந்து: வாய்திறந்து. மழை: முகில். மழையும் நாண மடுத்தான் எனக் கூட்டுக.

873. தீர்த்தன்: இறைவன். இழி: இறங்கிய. கூர்த்து: மிக்கு. குழகன்: சோமசுந்தரக் கடவுள். பார்த்தன்: அருச்சுனன். பதமுன்: திருவடிகளில். ஆர்த்து: முழங்கி.

874. பாட்டின் பொருளானவன்: சொல்லின் பொருளாய் உள்ள இறைவன். பாரிட வீரன்: குண்டோதரன். கிழமை: உரிமை. மோடு: பெருமை. மண்: நிலவுலகு. அளகம்: கூந்தல். கயல்கண்ணி: மீனாட்சி.

875. தீர்த்தன்: சிவபெருமான். இதழிச்சடை: கொன்றை மாலையை அணிந்த சடை. இழிந்து இறங்கி. தெளிவோர்: தெளிகின்றவர். காலில் கடுகி: காற்றைப் போல விரைந்து. கிருதமாலை: செய்யப்பட்ட மாலை. நாமம்: பெயர். செப்புவர்: கூறுவர்.

## எழுகடல் அழைத்த படலம்

876 முடங்கல்மதி முடிமறைத்த முடித்தென்னன் குறட்குஅன்னக்
கிடங்கரொடு நதியழைத்த கிளர்கருணைத் திறன்இது;மேல்
மடங்கல்வலி கவர்ந்தான்,பொன் மாலைபடிந்து ஆட,எழு
தடங்கடலும் ஒருங்குஅழைத்த தன்மைதனைச் சாற்றுவாம். 1

877 ஓதஅரும் பொருள்,வழுதி உருவாகி உலகம்எலாம்
சீதளவெண் குடைநிழற்றி அறச்செங்கோல் செலுத்துநாள்,
போதஅரும் பொருள்உணர்ந்த இருடிகளும் புனிதமுனி
மாதவரும் வரன்முறையால் சந்தித்து வருகின்றார், 2

878 வேதமுனி கோதமனும் தலைப்பட்டு மீள்வான்ஓர்
போதுஅளவுஇல் கற்புடைய பொன்மாலை மனைபுகுந்தான்;
மாதுஅவளும் வரவேற்று, முகமன்உரை வழங்கி,பொன்
ஆதனம்இட்டு, அஞ்சலிசெய்து அரியதவத் திறம்கேட்பாள். 3

879 "கள்ளவினைப் பொறிகடந்து, கரைகடந்த மறைச்சென்னி
உள்ளபொருள் பரசிவம்என்று உணர்ந்தபெரும் தகைஅடிகேள்!
தள்அரிய பவம்அகற்றும் தவம்அருள்செய்'' என,கருணை
வெள்ளம்என முகம்மலர்ந்து முனிவேந்தன் விளம்புமால். 4

880 "தவவலியால் உலகுஈன்ற தடாதகைக்குத் தாயானாய்,
சிவபெருமான் மருகன்எனும் சீர்பெற்றாய், திறன்மலயத்
துவசன்அரும் கற்புடையாய்! நீஅறியாத் தொல்விரதம்
அவனிஇடத்து எவர்அறிவார்? ஆனாலும் இயம்பக்கேள்'' 5

---

876. முடங்கல்: வளைந்த மதி: சந்திரன். முடித்தென்னன்: மகுடத்தையுடைய சோமசுந்தரபாண்டியன். அன்னக்கிடங்கு: அன்னக்குழி. கிளர்கருணைத்திறன்: விளங்கும் கருணைத் திருவிளையாட்டு. மடங்கல்: நரசிங்கம். வலிகவர்ந்தான்: வலியைக் கவர்ந்த சுந்தர பாண்டியன். பொன்மாலை: காஞ்சனமாலை. படிந்து: திளைத்து. ஆட: நீராட. தடங்கடல்: பெரியகடல். ஒருங்கு: ஒருசேர. சாற்றுவாம்: கூறுவ்ாம்.

877. ஓதஅரும்பொருள்: சொல்லுதற்கரிய மெய்ப்பொருளாகிய சோமசுந்தரக் கடவுள். சீதள: குளிர்ந்த. அறச்செங்கோல்: அறநூல் வழிப்பட்ட செங்கோன்முறை. போதஅரும் பொருள்: ஞான நூலின் அரிய பொருள்.

878. தலைப்பட்டு: சந்தித்து. ஓர்போது: ஒருநாள். பொன்மாலை: காஞ்சனமாலை. ஆதனம்: தவிசு. தவத்திறம்: தவத்தின் பாகுபாடுகள்.

879. கள்ளவினைப்பொறி: வஞ்ச வினைகளை உடைய ஐம்பொறிகள். கடந்து: வென்று. கரைகடந்த: அளவற்ற. தள்அரிய: நீக்குதற்கு அரிய. பவம்: பிறப்பு அருள்செய்: கூறி அருளுக. விளம்பும்: கூறுகின்றான்.

## 9. எழுகடல் அழைத்தது



தேவிதிரு மொழிகேட்டுத் தென்னவராய் நிலம்புரக்கும்
காவிதிகழ் மணிகண்டர், ''கடல்ஒன்றோ எழுகடலும்
கூவிவர அழைத்தும்''என உன்னினர்; குணபால்ஓர்
வாவிஇடை எழுவேறு வண்ணமொடும் வருவனவால்.

881 "மானதமே, வாசிகமே, காயிகமே எனவகுத்த
ஈனம்இல்சீர்த் தவம்மூன்றும்; இவற்றின்மா னதம்தரும
தானமிசை மதிவைத்தல் தயை,பொறுமை, மெய்,சிவனை
மோனம்உறத் தியானித்தல், ஐந்துஅடக்கல் முதல்அனந்தம் 6

882 வாசிகம்ஐந்து எழுத்துஓதல், மனுபஞ்ச சாந்தி,மறை
பேசுசத உருத்திரம்,தோத் திரம்உரைத்தல், பெருந்தருமம்
காசுஅகல எடுத்துஓதல், முதல்அனந்தம்; காயிகங்கள்
ஈசன்அருச் சனை,கோயில் வலம்செய்கை, எதிர்வணங்கல். 7

883 நிருத்தன்உறை பதிபலபோய்ப் பணிதல்,பணி நிறைவேற்றல்,
திருத்தன்முடி நதிஆதி தீர்த்தயாத் திரைபோய்மெய்
வருத்தமுற ஆடல்இவை முதல்பல;அவ் வகைமூன்றில்
பொறுத்தம்உறு காயிகங்கள் சிறந்தன;இப் புண்ணியத்துள். 8

884 திருத்தயாத் திரைஅதிகம்; அவற்றுஅதிகம் சிவன்உருவுஆம்
திருத்தமாம் கங்கைமுதல் திருநதிகள், தனித்தனிபோய்த்
திருத்தம்ஆ டுவதுஅரிது,அத் திருநதிகள் அவைவந்து
திருத்தமாய் நிறைதலினால் அவற்றுஅதிகம் திரைமுந்நீர். 9

885 என்றுமுனி விளம்பக்கேட்டு
இருந்தகாஞ் சனமாலை,
துன்றுதிரைக் கடல்ஆடத்
துணிவுஉடைய விருப்பினளாய்,
தன்திருமா மகட்குஉரைத்தாள்;
சிறிதுஉள்ளம் தளர்வுஎய்திச்,
சென்றுஇறைவற்கு உரைப்பல்என,
செழியர்தவக் கொழுந்துஅனையாள்". 10

---

881. மானதம்: மனத்தால் செய்யப்படுவன. வாசிகம்: வாக்கால் செய்யப்படுவன. காயிகம்: உடலால் செய்யப்படுவன. ஈனம்இல்: குற்றம் இல்லாத. மதிவைத்தல்: கருத்தினைச் செலுத்துதல். தயை: பிற உயிர்கட்கு இரங்கல். மெய்: உண்மை கூறல். ஐந்து அடக்கல்: ஐம்பொறிகளை அடக்குதல். அனந்தம்: அளவற்றன.

882. பஞ்சமனு: ஐந்து பிரம மந்திரங்கள். மறைபேசு: வேதங்கள் கூறுகின்ற. தோத்திரம்: துதிப்பாடல்கள். காசு அகல: குற்றம் அற. எதிர்வணங்கல்: திருமுன் வணங்கல். (இப்பாடல் குளகம்).

883. நிருத்தன், திருத்தன்: சிவபெருமான். முடிநதி: முடியிலுள்ள கங்கை நதி. (இதுவும் குளகம்).

884. திருத்தம்: தீர்த்தம். அதிகம்: சிறந்தது. முந்நீர்: கடல். புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவது சிறந்தது; இறைவன் உருவாய நதிகளில் நீராடுவது அதைவிடச் சிறந்தது; நதிகள் சென்று கலக்கும் கடலில் நீராடுவது அதைவிடச் சிறந்ததாம்.

885. செழியர் தவக்கொழுந்து: தடாதகைப் பிராட்டியார். (குளகம்).

886 தன்தன்னை உடையபெரும் தகைவேந்தர் பெருமான்முன்
சென்று,அன்னம் எனநின்று செப்புவாள், "குறள்வீரற்கு
அன்றுஅன்னக் குழியினெடும் ஆறுஅழைத்த அருள்கடலே!
இன்றுஅன்னை கடல்ஆட வேண்டினள் என்றுஇரந்தாள்". 11

887 தேவிதிரு மொழிகேட்டுத் தென்னவராய் நிலம்புரக்கும்
காவிதிகழ் மணிகண்டர், "கடல்ஒன்றோ எழுகடலும்
கூவிவர வழைத்தும்"என உன்னினன்; குணபால்ஓர்
வாவிஇடை எழுவேறு வண்ணமொடும் வருவனவால். 12

888 துண்டமதித் திரள்அனைய சுரிவளைவாய் விடஉதைத்து,
வெண்தவள நுரைததும்ப, சுருஏறு மிசைக்கொட்ப,
தண்தரள மணித்தொகுதி எடுத்துஎறியும் தரங்கநிரை
அண்டநெடு முகடுஉரிஞ்ச, ஆர்த்துஎழுந்த கடல்ஏழும். 13

889 காணும்மா நகர்பனிப்ப, கலிமுடிவின் அயன்படைப்புக்
கோணுமாறு எழுந்ததுஎன, கொதித்துஎழுந்த கடல்,அரவம்
பூணும்நா யகன்அகில புவனம்எலாம் கடந்ததிரு
ஆணையால் அவன்அடிசென்று அடைந்தார்போல் அடங்கியதால்,

890 தன்வண்ணம் எழுகடலின் தனிவண்ண மொடுகலந்து
பொன்வண்ண நறும்பொகுட்டுப் பூம்பொய்கை பொலிவுஎய்தி,
மின்வண்ணச் சடைதாழ வெள்ளிமணி மன்றுஆடும்,
மன்வண்ணம் என,எட்டு வண்ணமொடும் வயங்கியதால். 15

---

886. வேந்தர் பெருமான் சுந்தரபாண்டியன். குறள்வீரன்: குண்டோதரன்.

887. தென்னவராய்: பாண்டிய மன்னராய். புரக்கும்: காக்கும். காவி: நீலமலர். குணபால்: கீழ்ப்பக்கம். வாவிஇடை: குளத்து இடத்தே.

888. துண்டமதி: பிறைமதி, வளை: சங்கு. உதைத்து: தள்ளி. சுருஏறு: ஆண் சுறுக்கள். கொட்ப: சுழல. தரளமணி: முத்துக்கள். எறியும்: வீசும். தரங்கம்: அலை. நிரை: வரிசை. முகடு: உச்சி.

889. பனிப்ப: நடுங்க. கோணுமாறு: அழியுமாறு. என: போல.

890. வண்ணம்: நிறம். பொகுட்டு: பொகுட்டினை உடைய தாமரை (பொருந்திய) பூம்: அழகிய. மன்: சிவபெருமான். வயங்கியது: விளங்கியது.

# 10. மலயத்துவசனை அழைத்தது



விண்நின் றுவழுக் கிவிழும் கதிர்போல்,
கண்நின் றநுதல் கருணா கரன்வாழ்
எண்நின் றபுரத் தின்இழிந்து இமையா
மண்நின் றதுஓர்தெய் வவிமா னம்அரோ. 911

## மலயத்துவசனை அழைத்த படலம்

891 எழுகடல் அழைத்தவாறு இயம்பி னோம்;இனிச்
செழுமதி மரபினோன் சேண்இ ழிந்து,தன்
பழுதுஇல்கற்புஇல்லொடும் பரவை தோய்ந்து,அரன்
அழகிய திருஉரு அடைந்தது ஓதுவாம். 1

892 புரவலன் தடாதகைப் பூவை யோடும்வந்து,
உரவுநீர்க் கடல்மருங்கு உடுத்த,சந்தனம்,
மரவம்,மந் தாரம்,மா, வகுளம், பாடலம்,
விரவுநந் தனத்துஅரி அணையின் மேவினான். 2

893 தாதுஅவிழ் மல்லிகை, முல்லை, சண்பகம்,
போதுகொய்து, இளைஞரும் சேடிப் பொன்தொடி
மாதரும் கொடுத்திட, வாங்கி மோந்துஉயிர்த்து
ஆதரம் இரண்டுஅற அமரும் எல்லையில், 3

894 தன்அமர் காதலி தன்னை நோக்கியே
மன்னவன் "உன்பொருட்டு ஏழு வாரியும்
இந்நகர் அழைத்தனம்; ஈண்டுப் போந்துநின்
அன்னையை ஆடுவான் அழைத்தியால்'' என்றான், 4

895 மடந்தையும் அன்னையைக் கொணர்ந்து வாவிமாடு
அடைந்தனள் ஆக,மற்று அவள்பு ராணநூல்
படர்ந்தகேள் வியர்தமை நோக்கி, "பௌவநீர்
குடைந்திடும் விதிஎவன் கூறும்'' என்னவே, 5

---

891. இயம்பினும்: கூறினோம். மதிமரபு: சந்திரகுலம். சேண்: வானுலகு. இழிந்து: இறங்கி. பழுது: குற்றம். பரவை: கடல். தோய்ந்து: நீராடி. திருஉரு அடைதல்: சாரூபம் பெறுதல். ஓதுவாம்: கூறுவோம்

892. புரவலன்: சுந்தரபாண்டியன். உரவு: வலிய மருங்குஉடுத்த: அருகிற் சூழ்ந்த. மரவம்: குங்கும மரம். பாடலம்: பாதிரி. விரவு: பொருந்திய. நந்தனம்: நந்தவனம்.

893. தாது: மகரந்தம். போது: மலர். இளைஞர்: பணியாட்கள். ஆதரம்: அன்பு. எல்லையில்: காலத்தில். (இப்பாடல் குளகம்)

894. தன்அமர்: தன்னால் விரும்பப்பட்ட. வாரி: கடல். போந்து: வந்து. அன்னை: காஞ்சனமாலை. அழைத்தி: அழைப்பாயாக.

895. மாடு: பக்கம். கேள்வியர்: முனிவர்கள். (இப்பாடல் குளகம்).

896 "கோதுஅறு கற்பினாய்! கொழுநன் கைத்தலம்,
காதலன் கைத்தலம், அன்றிக் கன்றின்வால்
ஆதல்இம் மூன்றில்ஒன்று அங்கை பற்றியே
ஓதநீர் ஆடுதல் மரபு" என்று ஓதினர், 6

897 மறையவர் வாய்மை,பொன் மாலை கேட்டு,மேல்
குறைவுஅறத் தவம்செயாக் கொடிய பாவியேற்கு
இறைவனும் சிறுவனும் இல்லை யே,இனிப்
பெறுவது கன்றுஅலால் பிறிதுஉண் டாகுமோ? 7

898 "ஆதலால் கன்றின்வால் பற்றி ஆடுகோ
மாதராய்!" என்றுதன் மகட்குக் கூறலும்
வேதன்மால் பதவியும் வேண்டி னார்க்குஅருள்
நாதன்ஆ ருயிர்த்துணை யாய நாயகி, 8

899 தன்உயிர்க் கிழவனை அடைந்து தாழ்ந்து,தன்
அன்னைதன் குறைஉரை யாட, ஆண்தகை
மன்னவன், வலாரியோடு ஒருங்கு வைகிய
தென்னவன் மேல்மனம் செலுத்தி னான்அரோ, 9

900 சிலைஅத் திரியார் திருவுள் ளம்உணர்ந்து,
அலைஅத் திரிஅட் டவன்ஆ தனம்நீத்து
உலைஅத் திரிஒத் தவிமா னமொடு
மலையத் துவசச் செழியன் வருமால். 10

---

896. கோதுஅறு: குற்றம்அற்ற. கற்பினாய்: காஞ்சனமாலையே. கொழுநன்: கணவன். காதலன்: புதல்வன். ஓதநீர்: ஒலியுடைய கடல்நீர்.

897. வாய்மை: வாய்மொழி. இறைவன்; கணவன். சிறுவன்: புதல்வன்.

898. மாதராய்: மடந்தையே (தடாதகைப் பிராட்டியார்). வேதன்: வேதங்களைப் படைத்த பிரமன். நாதன்: சிவபெருமான். (இப்பாடல் குளகம்).

899. கிழவன்: உரியவன், சுந்தர பாண்டியன். வலாரி: இந்திரன். தென்னவன்: மலயத்துவச பாண்டியன். மனம் செலுத்தினான்: நினைத்தான்.

900. சிலை அத்திரியார்: மலையை வில்லாக உடைய இறைவன். அத்திரி: மலை. அலை: பறக்கின்ற. அட்டவன்: வென்ற இந்திரன். உலை: சஞ்சரிக்கின்ற. வருமால்; வருகின்றான்.

901 மண்பேறு அடைவான் வரும்ஏழ் கடல்வாய்,
எண்பேறு அடையா அருள்இன் அமுதைப்
பெண்பேறு அதனல் பெறுபேறு இதுஎனு,
கண்பேறு அடைவான் எதிர்கண் டனனே. 11

902 வந்தான், மருகன் சரணம் பணிவான்
முந்தா முனம்,மா மன்எனும் முறையால்
அம்தா மரைஅங் கைஅமைத் து,மகள்
தந்தா னைஎதிர்ந் துதழீஇ இனனுல். 12

903 ஆத்தன் திருவுள் ளம்மகிழ்ந்து, அருளால்
பார்த்து,"அன் புநிரம் பியபன் னியொடும்
தீர்த்தம் புகுந்துஆ டியசெல் க!"என,
பூத்தண் பொருநைப் புனல்நா டவனும், 13

904 முன்னை, தவம்எய் திமுயன் றுபெறும்
அன்னப் பெடைஅன் னவள்,வந்து எதிரே
தன்னைத் தழுவ, தழுவிக் கிரிவேந்து
என்னக் குறையா மகிழ்வுஎய் தினனே. 14

905 தண்தேம் மொழிவேள் விதவக் குறையால்
கண்டேன் இலன்என் று,கருத்து அவலம்
உண்டே, அஃதுஇவ் உவகைக் களிதேன்
வண்டே எனஉண் டு,மறந் தனனுல், 15

---

901. மண்பேறு அடைவான்: மண்ணுலகில் உள்ளார் பயன் அடைய. எண்பேறு அடையா: எண்ண இயலாத. பெண் பெற்றதனுல் அடைந்த பேறு என்று எண்ணி மலயத்துவசன் தன் மருகரைக் கண்டான்.

902. வந்தான்: மேலிருந்து வந்த மலயத்துவச பாண்டியன். மருகன்: இறைவனுகிய சுந்தர பாண்டியன். முந்தாமுனம்: முற்படும் முன்னே. அமைத்து: தடுத்து. மகள் தந்தானை: தடாதகைப் பிராட்டியாரை அளித்த மலயத்துவச பாண்டியனை.

903. ஆத்தன்: இறைவனுகிய சுந்தரபாண்டியன். பன்னி: அரசியாகிய காஞ்சனமாலை. ஆடிய: ஆடுதற்கு. புனல் நாடவன்: மலயத்துவச பாண்டியன். (இப்பாடல் குளகம்)

904. முன்னை: முற்பிறப்பில். அன்னப் பெடை அன்னவள்: அன்னம் போன்ற தடாதகைப் பிராட்டியார். கிரிவேந்து: மலையரையன்.

905. தேம்மொழி: தேன்போலும் மொழியுடைய பிராட்டியார். வேள்வி: திருமணக் கோலத்தை. கருத்து: உள்ளத்தே. அவலம்: கவலை. பிராட்டியும் பெருமானும் உடன் இருக்கக் கண்டு உவகை கொண்டு, கவலையை மறந்தான்.

906 சேண்உற் றவனைச் சிலநாள் கழியக்
காணுற் றவள்போல், நிறைகற்பு உடையாள்
பூண்உற் றுமலர்ந் ததுஓர்பொன் கொடிபோல்
நாண்உற்று எதிர்நண் ணிஇறைஞ் சினளால். 16

907 மஞ்சுஓ தியகாஞ் சனமா லை,கையில்
பைஞ்சோ திவிளங் குபவித் திரையாய்,
செஞ்சோ திமுடிச் சிவநா மஎழுத்து
அஞ்சுஓ திநெடுங் கடல்ஆ டுமரோ. 17

908 துங்கக் கலைவே தியர்தொல் மறைநூல்
சங்கற் பவிதிப் படி,தன் துணைகை
அங்கைத் தளிர்பற் றி,அகத்து உவகை
பொங்க, புணரிப் புனல்ஆ டினளே, 18

909 குடைந்தார் கரைஏ றினர்,கொன் றைமுடி
மிடைந்தார் கருணைக் கண்விழிக் க,மலம்
உடைந்தார், அனைமார் உதரம் குறுகாது,
அடைந்தார் உமைபா கர்அருள் படிவம், 19

910 ஒண்கொண் டல்மிடற்று ஒளியும், ஒருநால்
எண்கொண் டபுயத்து எழிலும், அழல்சேர்
கண்கொண் டநுதற் கவினும் பொலியா,
மண்கண் டுவியப் பவயங் கினரால். 20

---

906. சேணுற்றவன்: நீண்டதூரம் அடைந்தவன். நிறைகற்புடையாள்: நிறைந்த கற்பினை உடைய காஞ்சன மாலை. பூண்: மங்கல நாண். இறைஞ்சினள்: வணங்கினள்.

907. மஞ்சு: மேகம். ஓதிய: கூந்தலை உடைய. பைஞ்சோதி: பசிய ஒளி. பவித்திரையாய்: தருப்பையினால் ஆகிய பவித்திரத்தை உடையளாய். சிவநாம எழுத்து அஞ்சு: 'திருஐந்தெழுத்து. ஆடும்: நீராடத் தொடங்குவாள்.

908. துங்கக் கலை: உயர்ந்த கலைகள். தொல்: பழைய. தன் துணை: தன் துணைவனாகிய மலயத்துவசன். புணரிப் புனல்: கடல்நீர்.

909. குடைந்தார்: நீராடிய காஞ்சன மாலையும் மலயத்துவசனும். கொன்றை முடி மிடைந்தார்: முடியிலே கொன்றை மாலையணிந்த சோமசுந்தரக் கடவுள். விழிக்க: விழித்தலால். மலம்: பாசம். உடைந்தார்' நீங்கினவர்களாய். அனை: அன்னை. உதரம்: வயிறு (கருப்பம்).

910. ஒண்: ஒள்ளிய. மிடறு: கழுத்து. அழல்சேர்கண்: நெற்றிக்கண். நுதல்: நெற்றி. பொலியா: பொலிந்து. மண்: மண்ணுலகத்தவர். வயங்கினர்: விளங்கினர்.

911 விண்நின் றுவழுக் கிவிழும் கதிர்போல்,
கண்நின் றநுதல் கருணை கரன்வாழ்
எண்நின் றபுரத் தின்இழிந்து இமையா
மண்நின் றதுஓர்தெய் வவிமா னம்அரோ. 21

912 அத்தெய் வவிமா னம்அடுத் திடலும்,
முத்தெய் வதமுக் கணவன் பணியால்
நத்தெய் வதருக் கரன்,நங் கையொடும்
எத்தெய் வதமும் தொழஏ றினனால். 22

913 தேமா ரிஎனும் படிசிந் தநறும்
பூமா ரிபொழிந் ததுபொன் உலகம்;
தூமா மறைஅந் தரதுந் துபிகார்
ஆம்ஆம் எனஎங் கும்அதிர்ந் தனவால். 23

914 எழுந்தது விமானம்; வானம்
எழுந்ததுந் துபியும் நாணி
விழுந்தது போலும் என்ன,
அரஒலி எங்கும் விம்ம,
தொழுந்தகை முனிவர் ஏத்த,
சுராதிகள் பரவ, திங்கள்
கொழுந்துஅணி வேணிக் கூத்தர்
கோநகர் குறித்துச் செல்வார். 24

---

911. விண்நின்று: ஆகாயத்தினின்றும்' கதிர்போல்: சூரியனைப் போல. கண்நின்றநுதல்: கண் பொருந்திய நெற்றியை உடைய. கருணைகரன்: கருணைக்கு உறைவிடமாகிய சிவபெருமான். வாழ்: வீற்றிருக்கும். எண்நின்ற: மதிக்கத்தக்க. புரம் சிவலோகம். இழிந்து: இறங்கி. இமையா: ஒளிவீசி.

912. அடுத்திடலும்: வந்தவுடன். முத்தெய்வம்: சூரியன், சந்திரன், எரி. முக்கணவன்: மூன்று கண்களாக உடைய சிவபெருமான். ந: உயர்ந்த. தெய்வதரு தெய்வத்தன்மை உடைய கற்பகத்தரு. கரன்: கைகளை உடையவன். (மலயத்துவச பாண்டியன்). நங்கை: காஞ்சனமாலை. எத்தெய்வதமும்: எல்லாத் தெய்வங்களும்.

913. விண்ணுலகத்தார் பூமாரி பொழிந்தனர். வேதங்களும் அந்தர துந்துபிகளும் எங்கும் ஒலித்தன.

914. விழுந்தது போலும்: தோற்றது போலும் என்னுமாறு. அர ஒலி: அரகர ஒலி. ஏத்த: வாழ்த்த. கோநகர்: தலைநகராகிய சிவலோகம்.

915 முன்புதம் உருவாய் வையம்
முறைபுரி கோல்கைக் கொண்டு,
பின்புதன் உருவம் தந்த
மருகனும், பெருகு கேண்மை
அன்புதந்து அருகு நின்ற
தடாதகை அணங்கும், மீண்டு
பொன்புனை குடுமிக் கோயில்
புகுந்துநன்கு இருப்பக் கண்டார். 25

916 முன்னைவல் வினையால், யாக்கை
முறைதடு மாறித் தோற்றம்
மன்னிய மனிதர் போல,
பண்டைய வடிவம் மாறி,
அன்னையே மகளா, ஈன்ற
அப்பனே மருக னாக,
என்னயாம் நோற்றேம் யார்க்கும்
இயற்றரும் தவம்தான் என்னா. 26

917 கன்றுஅகல் ஆன்போல் ஐயன்
கனைகழல் விடாது பற்றி
ஒன்றிய அன்பு, பின்நின்று
ஈர்த்துஎழ, உள்ளத் தோடும்
சென்றுஇரு கண்ணும் மூட்டி
அடிக்கடி திருப்பி நோக்க,
குன்றுஉறழ் விமானம் தன்னை
அஞ்சலி கூப்பிச் செல்வார். 27

---

915. முறைபுரிகோல்: முறை செய்கின்ற செங்கோல். மருகன்: மருகனாகிய சிவபெருமான். கோயில்: அரண்மனை.

916. முன்னை: தொன்று தொட்டுள்ள. தோற்றம்: பிறப்பு. மன்னிய: பொருந்திய. உலகங்களை ஈன்றதாயே மகளாகவும், தந்தையாகிய சிவபெருமானே மருமகனாகவும் அடைய என்ன தவம் செய்தோம் என்று மலயத்துவசன் கருதினான்.

917. கன்று அகல் ஆன்: கன்றினை நீங்கிய பசு. குன்றுஉறழ்: குன்றை ஒத்த.

918 புவலோகம் கடந்துபோய், புண்ணியருக்கு
எண்ணிறந்த போகம் ஊட்டும்
சுவலோகம் கடந்துபோய், மகலோகம்,
சனலோகம் துறந்து, மேலைத்
தவலோகம் கடந்துபோய், சத்தியலோ
கங்கடந்து, தண்துழாயோன்
நவலோகம் கடந்து,உலக நாயகமாம்
சிவலோகம் நண்ணினாரே, 28

919 அறக்கொடி,பின் இறைமகனை அடிபணிந்து,
தனைஈன்றார்க்கு ஆதி வேத
மறைப்பொருள்தன் வடிவுஅளித்த அருளின்மன
நிறைமகிழ்ச்சி வாய்கொள் ளாமல்
புறப்படுவது என,இரண்டு திருச்செவிக்கும்
செங்குமுதம் பொதிந்த தீந்தேன்
நிறைப்பதுஎன, பன்முறையால் துதிசெய்து
தொழுதுஒன்று நிகழ்த்த நின்றாள். 29

920 எண்இறந்த தேவர்க்கும் யாவர்க்கும்
பயன்சுரக்கும் இமையோர் நாட்டுப்
புண்ணிய ஆன் தன்புனிற்றுக் கன்றுக்கு,
குறைவுஏது,என் பொருட்டுஎன் ஈன்றாள்
எண்ணியது கடல்ஒன்றே, எழுகடலும்
ஈண்டுஅழைத்தாய்; ஈன்றாள் ஆட
விண்இருந்த கணவனையும் விளித்துஉன்அருள்
வடிவுஅளித்துஉன் மேல்நாடு ஈந்தாய். 30

921 "தென்னர்மரபு இறந்ததுஎனப் படுபழியில்
ஆழவரும் செவ்வி நோக்கி,
பொன்னவிர்தார் முடிபுனைந்து, கோலோச்சி
வருகின்றாய் போலும்; மேலும்
இந்நிலைமைக்கு இடையூறும் இனிஇன்றே''
எனத்தலைவி இயம்ப லோடும்,
தன்இறைவி உட்கோளை அகம்கொண்டு
மகிழ்ந்திருந்தான் தமிழர் கோமான். 31

---

918. தண்துழாயோன்: குளிர்ந்த துளசிமாலை அணிந்த திருமால் உலக நாயகமாம: உலகங்களுக்கெல்லாம் தலைமையாகிய.

919. அறக்கொடி: தடாதகைப் பிராட்டியார். தன் வடிவு: சாருபவடிவம். தனை ஈன்றார்: காஞ்சனமாலை, மலயத்துவசன்.

920. எண் இறந்த: அளவற்ற. இமையோர்: வானவர். புண்ணிய ஆன்: காமதேனு. விளித்து: அழைத்து.

921. ஆழவரும் செவ்வி: அழுந்திவரும் காலத்தை பொன்அவிர்தார்முடி: பொன்னால் செய்யப்பட்டு விளங்கும் மாலையையுடைய மகுடம். புனைந்து சூடி. கோலோச்சி: செங்கோல் செலுத்தி. இடையூறு: தடங்கல். இனி இன்றே: இனி இல்லையே. தலைவி: பிராட்டியார். இயம்பலோடும: விண்ணப்பித்த அளவில். உட்கோள்: மனக்கருத்து. தமிழர் கோமான்: பாண்டியர் பெருமானாகிய இறைவன்.

## உக்கிர பாண்டியன் திருஅவதாரப் படலம்

922 மன்ன வன்குல சேகரன் திருமகன், மனைவி
தன்னொ டும்கடல் ஆடிய தகுதிஈது; அந்தத்
தென்ன வன்தனித் திருமகள் திருஉளம் களிப்ப,
உன்அ ரும்திறல் உக்கிரன் உதித்தவாறு உரைப்பாம். 1

923 தண்நிலா மௌலி வேய்ந்த
சுந்தர சாமி, ஞாலத்து
எண்இலா வைகல் தன்னது
இணைஅடி நிழல்போல் யார்க்கும்,
தெள்நிலாக் கவிகை நீழல்
செய்து,அருள் செங்கோல் ஓச்சி,
உள்நிலா உயிர்தான் ஆகி
முறைபுரிந்து ஒழுகு நாளில், 2

924 கரியவன், கமலச் செம்மல்,
மறைமுதல் கலைகள் காண்டற்கு
அரியவன், அன்பர்க்கு என்றும்
எளியவன் ஆகும் மேன்மை
தெரிய,அன்பு அகன்ற சிந்தைத்
தென்னவன் தனக்கும் கற்பிற்கு
உரியவள் தனக்கும், காதல்
மகள்என உமையைத் தந்தான். 3

925 மற்றுஅதற்கு இசையத் தானும்
மருமகன் ஆகி, வையம்
முற்றும்வெண் குடைக்கீழ் வைக
முறைசெய்தா னுக, மூன்று
கொற்றவர் தம்மில் திங்கள்
கோக்குடி விழுப்பம் எய்தப்
பெற்றது போலும்; இன்னும்
பெறுவதுஓர் குறைவு தீர்ப்பான். 4

---

922. குலசேகரன் திருமகன்: குலசேகரபாண்டியன் மகனுகிய மலயத்துவச பாண்டியன். மனைவி: காஞ்சனமாலை. தனி: ஒப்பற்ற. திருமகள்: தடாதகைப் பிராட்டியார். உன் அரும்: நினைத்தற்கரிய.

923. சுந்தரசாமி: சுந்தரபாண்டியனுகிய இறைவன் எண் இலா: எண்ணற்ற வைகல்: காலம். யார்க்கும்' அனைவர்க்கும். தெள்நிலா: தெளிந்த ஒளியுடைய, கவிகை: வெண் கொற்றக்குடை. எல்லா உயிர்களிடத்தும் இயங்கும் உயிராக இருக்கின்றுன் இறைவன். (இப்பாடல் குளகம்)

924 கரியவன்: திருமால். கமலச்செம்மல்: பிரமன். தென்னவன்: மலயத்துவச பாண்டியன் கற்பிற்கு உரியவள்; காஞ்சனமாலை.

925. இசைய: பொருந்த. வைக: தங்கிஇருக்க. மூன்று கொற்றவர், சேர, சோழ, பாண்டியர். விழுபபம்; மேன்மை. தீர்பபான்: தீரபபான ஆயினுன்.

## 11. உக்கிரபாண்டியன் திருஅவதாரம்



''வழுதியர் பெருமான் தன்பால் கந்தனே வந்தான்'' என்பார்;
''பழுதுஅறு கற்பி னுள்தன் பாக்கியம் இதுவே'' என்பார்;
''அழகினுல் மதனும் பெண்மை அவாவுறும் இவன்,கோல் ஆணை
எழுகடல் உலகோ? வையம் ஏழையும் காக்கும்'' என்பார். 940

926 ஒன்றினைச் செய்கை, செய்யாது
ஒழிகை,வேறு ஒன்று செய்கை,
என்றுஇவை உடையோன், ஆதி
ஈறுஇலாப் பரம யோகி,
நன்றுதீது இகழ்ச்சி வேட்கை
நட்புஇகல் விளைக்கும் மாயை
வென்றவன், செய்யும் மாயை
விருத்தியார் அளக்க வல்லார். 5

927 இந்திர சால விச்சை
காட்டுவான் என்ன, தன்பால்
செந்தழல் நாட்டம் ஈன்ற
செல்வனை, கருப்பம் எய்தாது,
அந்தம்இல் உயிரும் ஞாலம்
அனைத்தையும் ஈன்ற தாயாம்
சுந்தர வல்லி தன்பால்
தோன்றுமாறு உள்ளம் செய்தான். 6

928 அங்குஅவன் வரவுக்கு ஏற்ப
ஆயமும் பிறரும் தாழ்ந்து,
"மங்கை! நின் வடிவுக்கு ஏற்பக்
கருஉரு வனப்பும், சீரும்,
திங்கள்தோறு ஆற்றும் மன்றல்
செவ்வியும், காண ஆசை
பொங்கியது எங்கட்கு" என்றார்;
புனிதைஅப் படிபோல் ஆனாள். 7

---

926. செய்கை: செய்தல். ஒழிகை: ஒழிதல். ஆதி: முதல். ஈறு: முடிவு. வென்றவன்: இறைவன். இறைவனது திருச்செயல்களை யார் அறிய முடியும் என்பது கருத்து.

927. காட்டுவான் என்ன: காட்டுவான்போல. செல்வன்: முருகன். கருப்பம் எய்தாது: கருப்பம் உறாமல். சுந்தரவல்லி தன்பால்: தடாதகைப் பிராட்டியார் இடத்தே. உள்ளம் செய்தான்: திருவுள்ளங்கொண்டான்.

928. அவன்: அச்செல்வன். ஆயம்: தோழியர். திங்கள்தோறு: மாதங்கள் தோறும். மன்றல்: சடங்குகள். புனிதை: பிராட்டியார்.

929 கருமணிச் சிகரச் செம்பொன்
கனவரை அனைய காட்சி,
திருமுலை அமுதம் பெய்த
செப்புஇரண்டு அனைய வாக,
வருமுலை சுமந்து மாய்ந்த
மருங்குலும் வந்து தோன்ற,
அருள்கனிந்து அனையாள் நாவிற்கு
இன்சுவை ஆர்வம் பொங்க, 8

930 என்னவும் எளிய வேனும் அரியன என்ன வேட்டாள்;
அன்னவும், போக பூமி அருப்பெறல் உணவும் நல்கி,
பன்னகர் அமுதும்,திங்கள் படுசுவை அமுதும், தெய்வப்
பொன்நகர் அமுதும்.ஆசை புதைபடக் கணங்கள் நல்க. 9

931 புண்ணிய முனிவர் வேத பண்டிதர் போந்து, வேந்தர்க்கு
அண்ணிய சடங்கு மூதூர் அருங்கடி வெள்ளத்து ஆழ,
எண்ணிய திங்கள் தோறும் இயற்ற,இக் கன்னித் தேயம்
பண்ணிய தருமச் சார்பால் படுபயன் தலைப்பாடு எய்த, 10

932 மாசுஅறத் துறந்தோர் உள்ளம் மான,வான் களங்கம் நீங்க,
ஈசர்தம் கிழமை என்னும் இந்துஆ திரைநாள், செய்த
பூசையின் பயன்தான் எய்த,எரிபசும் பொன்கோள் வந்து
தேசொடு கேந்தி ரத்தில் சிறந்தநல் ஓரை வாய்ப்ப, 11

---

929. கருமணிபோல் முலைக்கண்கள் தோற்றமளித்தன. மறைந்த இடை மீண்டும் தோன்றலாயிற்று. இனிய உணவுகளைச் சுவைத்தற்கு ஆர்வம்கொண்டாள். (இப்பாடல் குளகம்).

930. என்னவும்: எத்துணையும். அரியன என்ன: அரியனவாகக் கருதி. வேட்டாள்: விரும்பினாள். பன்னகர் அமுது: நாகலோகத்துள்ள அமிழ்து. திங்கள் படுசுவை அமுது: சந்திரமண்டலத்துண்டாகும் சுவைமிக்க அமுது. பொன்னகர்: பொன்னுலகு. ஆசை புதைபட: விருப்பம் நீங்க. நல்க: கொடுக்கவும். (இதுவும் குளகம்)

931. போந்து: வந்து. அண்ணிய: பொருந்திய. மூதூர்: மதுரை (மக்கள்). வெள்ளத்து: திருவிழா என்றும் பெருக்கில். இயற்ற: செய்துமுடிக்கவும். தருமச் சார்பால்: அறநெறியால். தலைப்பாடு எய்த: அடையவும். (இதுவும் குளகம்).

932. உள்ளம் மான: மனத்தைப்போல. வான்: ஆகாயம். ஈசர்தம்கிழமை என்னும் இந்து: சிவனுக்கு உரியது எனப்படும் திங்கட்கிழமை. தேசொடு: ஒளியுடன். நல்ஓரை: நன்முழுத்தம். (இதுவும் குளகம்)

933 முந்தைநால் மறைகள் தாமே முழங்க,மந் தார மாரி
சிந்த,நாள் மலர்பூத்து ஆடும் மின்எனத் திசைகள் தோறும்
அந்தர மகளிர் ஆட, துந்துபி ஐந்தும் ஆர்ப்ப,
விந்தையும் திருவும் வெள்ளைக் கிழத்தியும் வீறு வாய்ப்ப, 12

934 அந்தணர் மகிழ்ச்சி தூங்க.
அடுத்துஅவர் வளர்க்கும் முன்னே
மந்திர வேள்விச் செந்தீ
வலம்சுழித்து எழுந்துஆர்த்து ஆட,
சிந்துர நுதல்மா எட்டும்,
சேடனும் பொறைஎய்ப்பு ஆற,
இந்திரன் மேருப் புத்தேள்
புனல்இறைக்கு இடத்தோள் ஆட, 13

935 ஆலத்தை அமுதம் ஆக்கும்
அண்ணலும் அணங்கும் கொண்ட
கோலத்துக்கு ஏற்ப, காலைக்
குழந்தைவெம் கதிர்போல், அற்றைக்
காலத்தில் உதித்த சேய்போல்,
கள்மழை பிலிற்று நிம்ப
மாலைத்தோள் செழியன் செல்வ
மகள்வயின் தோன்றி னனே. 14

936 எடுத்தனள், மோந்து புல்லி
ஏந்தினள், காந்தன் கையில்
கொடுத்தனள் வாங்கி, வீங்கு
கொங்கைநின்று இழிபால் வெள்ளம்
விடுத்தனள், குமுதப் போதில்
வெள்நிலா வெள்ளம் போல்வாய்
மடுத்தனள் அருத்தி னள்,தன்
மைந்தனை எம்பி ராட்டி. 15

---

933. மந்தார மாரி: மந்தார மலர்மழை. மின்என: மின்னலைப்போல. அந்தர மகளிர்: தேவமகளிர். விந்தை: வீரமகள். திரு: திருமகள். வெள்ளைக்கிழத்தி: கலைமகள். வீறு வாய்ப்ப: இறுமாக்கவும். (இதுவும் குளகம்).

934. வளர்க்கும் முன்னே: ஆகுதிசெய்து வளர்ப்பதற்கு முன்னரே. மா எட்டும்: திசை யானைகள் எட்டும் சேடன்: ஆதிசேடன். எய்ப்புஆற: இளைப்பாற. மேருப் புத்தேள்: மேருமலை. புனல்இறை: வருணன். (இதுவும் குளகம்).

935. ஆலம்: நஞ்சு. அணங்கு: பிராட்டியார். ஏற்ப: பொருந்த. குழந்தை வெங்கதிர்: இளஞ்சூரியன். சேய்போல்: கந்தவேள் போலவும். கள்: தேன். செழியன்: மலயத் துவச பாண்டியன். செலவமகள் வயின்: செல்வப் புதல்வியாகிய தடாதகைப் பிராட்டியார் இடத்து.

936. மோந்து: உச்சிமோந்து. புல்லி: தழுவி. காந்தன்: கணவன். அருத்தினள்: உண்பித்தாள். எடுத்தனள், ஏந்தினள், கொடுத்தனள், விடுத்தனள், மடுத்தனள்,— முற்றெச்சங்கள்.

937 சலத்தலைக் கிடக்கைப் புத்தேள்,
தருநிழல் வாழ்க்கைப் புத்தேள்,
அலர்த்தலை இருக்கைப் புத்தேள்,
ஆதிப்புத் தேளிர், வேதப்
புலத்தலைக் கேள்வி சான்ற
புண்ணிய முனிவர், ஏனோர்
குலத்தலை மகளி ரோடும்
கோமகன் கோயில் புக்கார். 16

938 குடபுலத்து அரசும், பொன்னிக்
குளிர்புனல் கோழி வேந்தும்,
வடபுலத்து அரசர் யாரும்,
குறுநில வாழ்க்கைச் செல்வத்து
அடல்கெழு தொண்டைத் தண்தார்
அரசொடும், அனிகம் சூழக்
கடல்கள்நால் திசையும் பொங்கி
வருவபோல் கலிப்ப வந்தார். 17

939 மன்னனைத் தேவி தன்னை,
முறையினால் வழுத்தி வாழ்த்தி,
நன்னர்கோள் ஆகி ஓகை
நவின்று,வெண் மழுமான் நீத்த
தென்னவர் பெருமான் தேவி
திருமுகக் கருணை பெற்று,
பொன்அடி பணிந்து தம்மூர்
போகுவார் இனைய சொல்வார் 18

---

937. சலத்தலை: திருப்பாற்கடலில். தரு: கற்பகத்தரு. அலர்த்தலை: தாமரைமலர். புத்தேள்: திருமால், இந்திரன், பிரமன் முதலியவர்களை முறையே குறிக்கும். கோமகன்: சுந்தரபாண்டியன். கோயில்: அரண்மனை

938. குடபுலத்து அரசு: சேரமன்னன். கோழி: உறையூர். வேந்து: சோழமன்னன். யாரும்: அனைவரும். தொண்டை அரசு: தொண்டைநாட்டை ஆளும் தொண்டைமான். அனிகம்: சேனை. கலிப்ப: ஆரவாரமுண்டாக.

939. மன்னன்: சுந்தரபாண்டியன். தேவி: தடாதகைப் பிராட்டி. நன்னர்கோள்ஆகி: நன்கு ஏற்றுக்கொள்ளப்பட்டவர்களாகி. ஓகை: மகிழ்ச்சி (மொழிகள்).

940 "வழுதியர் பெருமான் தன்பால்
கந்தனே வந்தான்'' என்பார்;
"பழுதுஅறு கற்பி ஞள்தன்
பாக்கியம் இதுவே'' என்பார்;
"அழகிஞல் மதனும் பெண்மை
அவாவுறும் இவன்,கோல் ஆணை
எழுகடல் உலகோ? வையம்
ஏழையும் காக்கும்'' என்பார். 19

941 மனிதர்வான் தவமோ, தென்பார்
வைகுவோர் தவமோ, வானப்
புனிதர்வான் தவமோ, வேள்விப்
பூசுரர் தவமோ, கேள்வி
முனிவர்வான் தவமோ, ஈறு
முதல்இலா முதல்வன் உள்ளக்
கனிதரு கருணை போல்இக்
காதலன் தோற்றம் என்பார். 20

942 தருமமா தவத்தின் பேருே,
அருத்தம்மா தவத்தின் பேருே,
பெருமைசால் காமம் நோற்ற
பெருந்தவப் பேருே, எய்தற்கு
அருமையாம் வீடு நோற்ற
அரும்தவப் பேருே, இந்தத்
திருமகன் என்று தம்மில்
விஞய்மகிழ் சிறப்பச் சென்ருர். 21

---

940. வழுதியர் பெருமான்: பாண்டியர் பெருமாஞகிய இறைவன். பழுதறு: பழுதில்லாத. மதனும்: மன்மதனும். கோல்ஆணை: செங்கோலின் ஆணை. "ஆடவர் பெண்மையை அவாவு தோளிஞய்" என்று இராமனது பேரெழிலைப் பேசுவார் கவிச்சக்கரவர்த்தி கம்பர். அதனையே "அழகிஞல் மதனும் பெண்மை அவாவுறும் இவன்" என்பர் கல்விக் கடலாகிய பரஞ்சோதியார்.

941. தென்பார் வைகுவோர்: பாண்டி நாட்டில் வாழும் மக்கள். வானப் புனிதர்: தேவர்கள். பூசுரர்: மறையோர். ஈறுமுதல்இலா இறைவன். முடிவும் தோற்றமும் இல்லா இறைவன். காதலன்: புதல்வன்.

942 தவத்தின் பேருே: தவப்பயனே. அருத்தம்: பொருள். காமம்: இன்பம். உறுதிப் பொருள்களாகிய அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய நான்கினையும் நிலவச்செய்வான் என்று கருதி அவ்வவற்றின் தவப்பேருே என்கிருர்.

943 அவ்வவர் மனைகள் தோறும்
மங்கல அணிக ளாகக்
கௌவைமங் கலங்கள் ஆர்ப்ப,
கடிநகர் எங்கும் பொங்க
நெய்விழா எடுப்ப, கேள்வி
நிரம்பிய மறையோர்க்கு ஈந்த
தெய்வமா தான நீத்தம்
திரைக்கடல் மடுத்தது அம்மா. 22

944 சுண்ணமும், பொரியும், தூவெள்
அரிசியும், தூர்வைக் காடும்,
தண்நறும் சிவிறி வீசு
தண்பனி நீரும், சாந்தும்
எண்ணெயும், நானச் சேறும்
பசைஅற எடுத்து வாரிக்
கண்அகல் நகரம் எங்கும்
கழுவின தான வெள்ளம். 23

945 செம்பொன்செய் துருத்தி, தூம்பு
செய்குழல், வட்டம் ஆக
அம்பொன்செய் சிவிறி, வெண்பொன்
அண்டைகொண்டு, ஆரம் தூங்கும்
வம்புஅஞ்சும் முலையி னாரும்
மைந்தரும் மாறி ஆட,
அம்புஅஞ்சும் மாறி மாறி
அனங்கனும் ஆடல் செய்வான். 24

---

943. அவ்வவர்: அவரவர்கள். மங்கல அணிகளாக. மங்கல விழாவாகக் கொள்ளுதலால். கௌவை: ஒலி. நெய்விழா: (கருவுயிர்த்த பத்தாம்நாளிற் செய்யும்) எண்ணெய் ஆட்டு விழா. நீத்தம்: பெருக்கு. மடுத்தது: புகுந்தது.

944 தூர்வை: அறுகு. சிவிறி: துருத்தி நானம்: கத்தூரி. தானவெள்ளம் நகரம் எங்கும் கழுவினது என்று மாற்றுக.

945. துருத்தி, குழல், சிவிறி, அண்டை முதலிய நீர் விளையாட்டுக் கருவிகள். வம்பு: கச்சு. அம்பு அஞ்சு: பாணங்கள் ஐந்து. அனங்கன்: மன்மதன். ஆடல் செய்வான்: போர்புரிவனுயினன்.

946 இன்னணம் களிப்ப மூதூர்
இந்துஆ திரைநன் நாளில்,
பொன்னவன் கேந்தி ரித்த
புனிதலக் கினத்தில் போந்த,
தென்னவர் பெருமான் சேய்க்குச்
சாதகச் செய்தி ஆதி,
மன்னவர்க்கு இயன்ற வேத
மரபினால் வயங்க ஆற்றி, 25

947 கரியவெண் திரைநீர்ச் செல்வன்,
கல்இறகு அறிந்த வென்றித்
தெரியலன், உலகம் தாங்கும்
தெய்வத வரைக்கோன், ஆதித்
தரியலர், வீரம் சிந்தத்
தருக்குஅழிந்து அச்சம் தோன்றற்கு
உரியகா ரணத்தால் நாமம்
உக்கிர வருமன் என்பார். 26

948 நால்ஆகும் மதியில் சந்தி
மிதப்பது நடாத்தி, ஆறும்
பால்ஆகும் மதியில் அன்ன
மங்கலம் பயிற்றி, ஆண்டின்
மேல்ஆகும் மதியில் கேச
வினைமுடித்து, ஐந்தாம் ஆண்டில்
நூல்ஆறு தெரிந்து பூண
நூல்கடி முடித்துப் பின்னர், 27

946. களிப்ப: மகிழ. இந்து ஆதிரை நன்நாள்: திருவாதிரையோடு கூடிய திங்கட்கிழமையாகிய நல்ல நாளில். பொன்னவன்: வியாழன். கேந்திரித்த: சஞ்சரித்த. போந்த: அவதரித்த. சாதகச்செய்தி: சாதகன்மங்கள். வயங்க: விளங்கும் வண்ணம். (இப்பாடல் குளகம்).

947. நீர்ச்செல்வன்: கடலரசனான வருணன். கல்: மலை தெரியலன்: இந்திரன். வரைக்கோன்: மேரு என்னும் மலையரசன். தரியலர்: பகைவர்கள். இவனைக் கண்டமாத்திரத்திலேயே வருணன் முதலாயோர் வீரம்கெட, செருக்கு அழிந்து அஞ்சுகின்ற காரணத்தால் உக்கிரவருமன் என்று பெயர் சூட்டப்பெற்றான்.

948 மதி: மாதம். சந்தி மிதிப்பது: ஒருவகைச் சடங்கு. அன்னமங்கலம் பயிற்றி: சோறு ஊட்டுதலைச் செய்து. நூல் ஆறு: மறைநெறி. நூல்கடி: நூலணிவிழா. (இப்பாடல் குளகம்).

949 பதம்நிரை பாழி சாகை
ஆரணம் பணைத்த வேதம்
முதல்நிரைக் கலையும், வென்றி
மூரிவில் கலையும், வாளும்,
மதநிரை ஒழுகும் மையல்
மா,நிரை வையம், பாய்மா
விதம்நிரை ஏற்றம், மற்றும்
உணர்த்தினன் வியாழப் புத்தேள். 28

950 குருமுகத்து அறிய வேண்டும்
என்பதுஓர் கொள்கை யாலே,
ஒருமுறை கேட்டுஆங்கு எண்எண்
கலைகளும் ஒருங்கு தேறி,
அரன்அலது ஒருவ ராலும்
தேற்றுவது அருமை யால்,அப்
பரன்இடைத் தெளிந்தான் பாசு
பதாத்திரப் படையும் மன்னோ. 29

951 எல்லைஇல் கலைகள் எல்லாம்
அகவைநால் இரண்டில் முற்ற,
தொல்அறிவு உடையான் ஆகி,
குரவரைத் தொழுது போற்ற
வல்லவன் ஆகி, அன்னோர்
மகிழ்ச்சிகொள் கலனாய், வென்றிச்
செல்வஏற்று இளைஞ ரோடும்
திருவிளை யாடல் செய்வான். 30

---

949. பதம் நிரை: பத ஒழுங்கு. பாழி: பதங்களை உச்சரிக்கும் முறை. சாகை: கிளை. மூரி: வலிய. மையல்மா: மயக்கத்தையுடைய யானை. நிரை வையம்: வரிசைப்பட்ட தேர். பாய்மா: குதிரை. வியாழப்புத்தேள்: வியாழ பகவான்.

950. குருமுகத்து: ஆசான் இடத்து. ஆங்கு: அவ்வளவிலே. அரன்: சிவபெருமான். தேற்றுவது: தெளிவிப்பது. பாசுபதம்: சிவபெருமானுக்கு உரியது.

951. முற்ற: நிரம்ப. குரவர்: பெற்றோர்.

952 புகர்மத வேழம் மூட்டிப்
போர்விளை யாடி வென்றும்,
தகரொடு தகரைத் தாக்கித்
தருக்குஅமர் ஆடி வென்றும்,
வகிர்படு குருதிச் சூட்டு
வாரணம் ஆடி வென்றும்,
நகைமணிப் பலகை செம்பொன்
நான்குஉறுப்பு ஆடி வென்றும், 31

953 காற்றிலும் கடிய மாவில்
காவதம் பலபோய் மீண்டும்,
கூற்றினும் கொடிய சீற்றக்
குஞ்சரம் உகைத்தும், வைகை
ஆற்றின்உய் யானத்து ஆவி
அகத்தினுள் இன்பம் துய்த்தும்,
வேல்திறல் மைந்த ரோடு
மல்அமர் விளைத்து வென்றும், 32

954 சந்தவெற்பு அடைந்து வேட்டம்
செய்தும்,அச் சைல வாழ்க்கை
அந்தணர் ஆசி கூற
அவர்தொழில் விளையும், அன்னார்
கந்தம்மென் கனிவி ருந்துஊண்
கைதழீஇக் களித்து மீண்டும்,
இந்தவாறு ஐம்மூ வாண்டு
கழிய,மேல் எய்தும் ஆண்டில், 33

---

952. புகர்: புள்ளி. வேழம்: யானை. தகர்: ஆட்டுக்கிடாய். வகிர்படு: பிளவுபட்ட. சூட்டு: உச்சிக்கொண்டை. வாரணம்: சேவல். நகைமணி: ஒளியுடைய மணிகள். நான்கு உறுப்பு: சதுரங்கம் (யானை, குதிரை, தேர், காலாள்) (இப்பாடல் குளகம்).

953. காற்றினும்: காற்றைக்காட்டிலும். மா: குதிரை. கூற்றினும்: யமனைக்காட்டிலும். குஞ்சரம்: யானை. உகைத்தும்: செலுத்தியும். உய்யானம்: பூங்கா. மல்அமர்: மற்போர். (இதுவும் குளகம்).

954. சந்தம்: சந்தனமரங்கள். வெற்பு: மலை (பொதிகை). வேட்டம்: வேட்டை ஆடுதல். சைலம்: மலை. அந்தணர்: முனிவர்கள். கந்தம்: கிழங்கு. மேல்எய்தும் ஆண்டில்: பதினாறும் ஆண்டின்கண். (இதுவும் குளகம்).

955 சூர்முதல் தடிந்த தங்கள்
தோன்றலை இவன்என்று எண்ணி,
கார்முக மயிலும் வேலும்
கைவிடாக் காக்கு மாபோல்,
வார்முக முலையி னாரும்
வடிக்கணும் மருங்கு மொய்ப்ப,
கூர்முக வேலான் இன்ன
கொள்கைய னாக, தாதை, 34

956 பங்கயச் செவ்வித்து ஆகிக்
கண்மனம் பருகு காந்தி
அம்கழல் காலும், சொன்ன
அடைவினில் திரண்டு நீண்ட
சங்கமும், வட்டம் தோன்றாச்
செழுமுழந் தாளும், நால்வாய்த்
துங்கஈர்ங் கவுள்மால் யானைத்
துதிக்கைபோல் திரள்க வானும், 35

957 சிறுகிய வயிறும், தாழ்ந்த
நாபியும், செவ்வி நோக்கும்
மறுஇல்கண் ணாடியின் அன்ன
கடிஅகல் வரைகொள் மார்பும்,
எறிஇசை வீணைத் தண்டின்
இணைந்துநீண்டு இழிந்த கையும்,
வெறியதார் கிடந்த மேரு
வெற்புஇரண்டு அனைய தோளும், 36

---

955. சூர்: சூரபத்மன். தடிந்த: துணித்த. தோன்றல்: முருகன். வார்: கச்சு. மருங்கு: பக்கம். மொய்ப்ப: சூழ தாதை: தந்தையாகிய சுந்தரபாண்டியன் (இதுவும் குளகம்).

956. பங்கயம்: தாமரை. செவ்வித்துஆகி: அழகினை உடையதாய். காந்தி: ஒளியுடைய. சொன்ன அடை வினில்: உறுப்பிலக்கிண நூலில் கூறிய முறைப்படி. சங்கம்: கணைக்கால். வட்டம்: எலும்பின் வட்ட வடிவு. நால்வாய்: தொங்குகின்ற வாய் ஈர்ங்கவுள்: குளிர்ந்த கபோலம். கவான்: தொடை. (இதுவும் குளகம்).

957. நாபி. உந்தி. அன்ன: போன்ற கடி: விளக்கம். வரைகொள்: மலையனைய. நீண்டுஇழிந்த: (முழந்தாள் அளவும்) நீண்டு தாழ்ந்த. வெறிய: மணத்தினை உடைய தார்: மாலை. வெற்பு: மலை (இதுவும் குளகம்).

958 வலம்புரி என்ன வாய்ந்த
கண்டமும், மலராள் மன்னும்
பொலம்புரி கமலம் அன்ன
வதனமும், பொதுவால் நோக்கி,
நிலம்புரி தவப்பேறு அன்னான்
வடிவுஎலாம் நின்று நின்று
நலம்புரி நூலால் நோக்கி,
சோதிப்பான் நடிக்க வல்லான். 37

959 உன்னதம் ஆறு, நீண்ட
உறுப்புஐந்து, சூக்கம் தானும்
அன்னது, குறுக்கம் நான்குஆம்,
அகல்உறுப்பு இரண்டு,ஏழ் ஆகச்
சொன்னது சிவப்பு, மூன்று
கம்பீரம், தொகுத்த வாறே
இன்னவை விரிக்கில் எண்நான்கு
இலக்கண உறுப்பாம் என்ப, 38

960 வயிறு,தோள், நெற்றி, நாசி,
மார்பு,கை, அடி,இவ் ஆறும்
உயரில்வான் செல்வன் ஆகும்;
ஒளிகவர் கண்,க போலம்,
புயல்புரை வள்ளல் செங்கை,
புதுமணங் கவரும் துண்டம்,
வியன்முலை நடுமார்பு ஐந்து
நீண்டவேல் விளக்கும் நன்மை, 39

---

958. கண்டம்: கழுத்து. மலராள்: திருமகள். பொலம்புரி: பொன்னாற் செய்த. நிலம்: நிலவுலகத்தார் வடிவு: உறுப்புகள். நலம்புரி நூல்: சாமுத்திரிகை நூல். நடிக்க வல்லான்: திருக்கூத்துஆட வல்லானாகிய சுந்தரபாண்டியன்.

959, உன்னதம்: உயர்ந்த (உறுப்புக்கள்). சூக்கம்: சிறுகிய. அன்னது: ஐந்து. கம்பீரம்: ஆழ்ந்த (உறுப்புக்கள்). முப்பத்திரண்டு உறுப்புக்கள் இலக்கணம் உடையன. உறுப்பாம் என்ற; இன்னவை விரிக்கில் என மாற்றுக. (இப்பாடல் குளகம்).

960. உயரில்: உயர்ந்திருந்தால். வான்செல்வன்: உயர்ந்த செல்வன். புயல்புரை: மேகத்தை ஒத்த. வள்ளல்: வள்ளல்தன்மைஉடைய. துண்டம்: மூக்கு. நீண்டவேல்; நீண்டுள்ளனவாயின். (இப்பாடல் குளகம்).

961 நறியபூம் குஞ்சி, தொக்கு,
விரல்கணு, நகம்,பல் ஐந்தும்
சிறியவேல் ஆயுள்; கோசம்,
சங்கை,நா, முதுகுஇந் நான்கும்
குறியவேல் பாக்கி யப்பேறு
ஆம்;சிரம் குளம்என்று ஆய்ந்தோர்
அறியும்இவ் உறுப்பு இரண்டு
அகன்றவேல் அதுவும் நன்றாம். 40

962 அகஅடி, அங்கை, நாட்டக்
கடை,இதழ், அண்ணம், நாக்கு
நகம்,இவை ஏழும் சேந்த
நன்மையால் பெறும்மா இன்பம்;
இகல்வலி, ஓசை, நாபி
என்றுஇவை மூன்றும் ஆழ்ந்த
தகைமையால் எவர்க்கும் மேலாம்
நன்மைசால் தக்கோன்; என்று, 41

963 எல்லைஇல் மூர்த்தி, மைந்தன்
இலக்கண நிறைவி னோடு
நல்லவாம் குணனும் நோக்கி,
பொதுஅற ஞாலம் காக்க
வல்லவன் ஆகி வாழ்நாள்
நனிபெற வல்லன் என்று,
அல்அணி மிடற்றான் பின்னும்
மனத்தினால் அளந்து சூழும், 42

---

961. குஞ்சி: சிகை. தொக்கு: தோல். சிறியவேல்: சிறியதாக இருப்பின். ஆயுள்: ஆயுள்மிகும். கோசம்: ஆண்குறி. சங்கை: கணைக்கால். சிரம்: தலை. குளம்: நெற்றி. (இதுவும் குளகம்).

962. அகஅடி: உள்ளங்கால். அங்கை: உள்ளங்கை. நாட்டக்கடை: கடைக்கண். அண்ணம்: மேல்வாய். சேந்த: சிவந்த. மா: பெரிய. நாபி: கொப்பூழ். என்று: என்று கருதி. (இதுவும் குளகம்).

963. மூர்த்தி: இறைவன். அல்அணிமிடற்றான்: நீலகண்டனாகிய சிவபெருமான். சூழும்: ஆலோசிக்கின்றார்.

964 இத்தகு பண்பு சான்ற
நீர்மையால் இசைமை, நீதி,
வித்தகம், நல்ல உள்ளம்
உடைமை,மெய் வீறு தெய்வ
பத்திமை, உலகுக்கு எல்லாம்
மகிழ்ச்சிசெய் பண்பு, சாந்த
சித்தம்,எவ் உயிர்க்கும் அன்பு
செய்கை, நல் ஈகை, கல்வி, 43

955 வெல்லுதற்கு அரியார் தம்மை
வெல்லுதல், தேவ ராலும்
செல்லுதற்கு அரிய தேத்தும்
சென்றுஇடு திறையும் கோடல்,
புல்லுதற்கு அரிய ஞாலம்
மாலைபோல் புயத்தில் ஏந்திச்
சொல்லுதற்கு அரிய வீரம்
உலகுஎலாம் சுமப்ப வைத்தல், 44

966 என்றுஇவை ஆதி ஆய
இயற்குணம் உடையன் ஆகி,
நன்றிசெய்து உலகுக்கு எல்லாம்
நாயகன் ஒருவன் ஆகி
நின்றிடும்; இவற்குப் பின்னர்
நீள்முடி கவித்தும்; முன்னர்
மன்றல்செய்க என்று சூழ்ந்து,
மதிஞரோடு உசாவி னானே. 45

964 நீர்மையால்: தன்மையால். இசைமை: புகழ். வித்தகம்: சதுரப்பாடு. மெய்வீறு: உண்மை மிக்க சாந்தசித்தம்: அசைவில்லாத சிந்தை. (இப்பாடல் குளகம்)

965. தேத்து: தேயங்களில். கோடல்: கைக்கொள்ளுதல். புல்லுதற்கு அரிய: அடைதற்கு அரிய. வீரம்: ஆணை. (இதுவும் குளகம்).

966. கவித்தும்: சூட்டுவோம். மதிஞர்: அமைச்சர். உசாவினான்: ஆராய்ந்தான்.

# உக்கிரபாண்டியனுக்கு வேல் வளை செண்டு கொடுத்த படலம்

967 உருக்கும் திறல்உக் கிரவழுதி
உதயம் இது;வால் மதியும்நதிப்
பெருக்கும் கரந்த சடைக்கற்றைப்
பெருந்தேர்ச் செழியர் பிரான்,அவற்குச்
செருக்கும் செல்வ மணமுடித்து,
செவ்வேல் வளைசெண்டு அளித்து,உள்ளம்
தருக்கும் முடிதந்து,அரசு உரிமை
தந்த செயலும் சாற்றுவாம். 1

968 வையைக் கிழவன், தன் அருமைக்
குமரன் தனக்கு மணம்புணர்ச்சி
செய்யக் கருதும் திறல்நோக்கி,
அறிஞ ரோடும் திரண்டுஅமைச்சர்,
மைஅற்று அழியா நிலத்திருவும்,
மரபும், குடியும், புகழ்மையும்,நம்
ஐயற்கு இசையத் தக்ககுலத்து
அரசர் யார்என்று அளக்கின்றார். 2

969 திந்தண் புனல்சூழ் வடபுலத்து
மணவூர் என்னும் திருநகர்க்கு
வேந்தன், பரிதி திருமரபின்
விளங்கும் சோம சேகரன்என்று,
ஆய்ந்த கேள்வி அவனிடத்துத்
திருமாது என்ன அவதரித்த
காந்தி மதியை மணம்பேச
இருந்தார்; அற்றைக் கங்குல்இருள்வாய், 3

---

967. உருக்கும்: (பகைவரைக்) கெடுக்கும். உதயம்: திருஅவதாரம். வால்மதி: வெண் மதி. செழியர் பிரான்: தென்னர் பெருமானாகிய சுந்தரபாண்டியன். செருக்கும்: களிப்பிற் குரிய. முடிதந்து: முடிசூட்டி.

968. வையைக் கிழவன்: வையை யாற்றுக்கு உரிமையுடையவனாகிய சுந்தரபாண்டியன். திரண்டு: கூடி. மைஅற்று: குற்றமற்று. ஐயற்கு: சுந்தரபாண்டியனுக்கு. இசைய: பொருந்த. அளக்கின்றார்: ஆராய்ந்து பார்க்கின்றார்.

969. மணவூர்: கல்யாணபுரம். பரிதி: சூரியன் என்று: என்று கருதி. கங்குல்: செறிந்த இருள்வாய்: நள்ளிரவில்.

## 12. உக்கிரபாண்டியனுக்கு வேல்வளை செண்டு கொடுத்தது



''மைந்த! கேட்டி! இந்திரனும் கடலும் உனக்கு வான்பகையாம்;
சந்த மேரு தருக்குஅடையும்; சதவேள் விக்கோன் முடிசிதற
இந்த வளைகொண்டு எறி;கடலில் இவ்வேல் விடுதி; இச்செண்டால்
அந்த மேருத் தனைப்புடை;'' என்று எடுத்துக் கொடுத்தான் அவைமுன்றும். 1027

970 வெள்ளைக் களிற்றின் பிடர்சுமந்த
குடுமிக் கோயில் மேயஇளம்
பிள்ளைக் கதிர்வெண் மதிமௌலிப்
பெருமான்; இரவி மருமானும்
வள்ளல் கரத்தான் கனவில்எழுந்து
அருளி, வானோர் நனவிற்கும்
கள்ளத்து உருவாம் திருமேனி
காட்டி, இதனை விளம்புவார். 4

971 "அன்னம் இறைகொள் வயல்மதுரைச்
சிவன்யாம், அரச! நீஈன்ற
பொன்னை அனையாள் தனைமதுரா
புரியில் கொடுபோய், மறுபுலத்து
மன்னர் மகுட மணிஇடற
மழுங்கும் கழற்கால் சுந்தரனும்,
தென்னர் பெருமான் குமாரனுக்குக்
கொடுத்தி" என்று செப்புதலும், 5

972 உள்ளக் கமலம் முககமலம்
உடனே மலர, இருதடம்கண்
அள்ளல் கமலம் மலர்ந்துதனது
அம்கைக் கமலம் முகிழ்த்துஎழுந்து,
வள்ளல் பரமன் கருணைஎளி
வந்த செயலை நினைந்து,அன்பின்
வெள்ளத்து அழுந்தி, எழுந்துஇரவி
வேலை முளைக்கும் வேலையினில், 6

---

970. மேய: வீற்றிருந்த பெருமான்: சோமசுந்தரக் கடவுள். இரவி மருமான் சூரியன் வழித்தோன்றல். வள்ளல் கரத்தான்: கொடுக்கும் கைகளை உடைய சேமசேகரன். கள்ளத்து உரு: மறையும் திருவுருவம்.

971. இறைகொள்: தங்குதலைக்கொண்ட. மறுபுலம்: வேற்று நாடு. குமாரன்: உக்கிர குமாரன். (இப்பாடல் குளகம்).

"அன்னம் பயில்பொழில் ஆலவாயின்
மன்னிய சிவன் யான்" — திருமுகப் பாசுரம்

972. உள்ளக்கமலம்: நெஞ்சத்தாமரை. அள்ளல்: சேறு முகிழ்த்து: கூப்பி. எளிவந்த செயல்: எளிதிற்கிட்டிய செயல். வேலையினில்: வேளையில். (இப்பாடல் குளகம்).

973 நித்தம் நியமக் கடன்நிரப்பி,
நிருபன் அமைச்ச ரொடுநான்கு
பைத்த கருவிப் படையினொடு,
பலவேறு இயமும் கலிப்ப,தன்
பொய்த்த மருங்குல் திருமகளை,
பொன்அ னூரோடு இரதமிசை
வைத்து, மணம்சேர் திருவினொடு
மதுரை நோக்கி வழிக்கொண்டான். 7

974 நென்னல் எல்லை மணம்பேச
நினைந்த வாறே, அமைச்சர்மதி
மன்னர் பெருமான் தமரோடும்
மணவூர் நோக்கி வழிவருவார்,
அன்ன வேந்தன் தனைக்கண்டார்,
அடல்வேல் குமரன் அனையான்எம்
தென்னர் பெருமான் குமரனுக்குஉன்
திருவைத் தருதி என,அனையான், 8

975 குலனும் குடியும் கனவின்கண்
கொன்றை முடியார் வந்துஉரைத்த
நலனும் கூறி, மணம்நேர்ந்து
நயப்ப, அதனை, நன்முதியோர்
புலன்ஒன்று உழையர் தமைவிடுத்துப்
பொருநைத் துறைவற்கு உணர்த்தி,ஒரு
வலன்உந்து அயில்வேல் மன்னனொடு
மதுரை மூதூர் வந்துஅணைந்தார். 9

---

973. நிரப்பி: குறைவின்றி முடித்து. நிருபன்: சோமசேகரன். பைத்த: பரந்த. பொய்த்த: பொய்யாகிய. திருமகள்: காந்திமதி. மணம்சேர் திரு: திருமணத்திற்குப் பொருந்திய செல்வம்.

974. நென்னல்: நேற்று. மதி: சந்திர மரபு. அன்னவேந்தன்: அச் சோமசேகரன். குமரன்: முருகக் கடவுள். குமரனுக்கு: உக்கிரவழுதிக்கு திரு: மகள் காந்திமதி. (இப் பாடல் குளகம்).

975. மணம் நேர்ந்து: திருமணத்திற்கு உடன்பட்டு அதனை: உடன்பட்ட அச்செய்தியை. புலன் ஒன்று: அறிவுபொருந்திய. உழையர்: தூதுவர். பொருநைத் துறைவன்: சுந்தர பாண்டியன். வலன்: வெற்றி. மன்னனொடு: சோமசேகரனோடு.

976 இரவி மருமான் மதிமருமான்
எதிரே பணிய, தழீஇமுகமன்
பரவி, இருக்கை செலஉய்த்துப்
பாண்டி வேந்தன் இருந்தான்;மேல்
விரவி அமைச்சர் திருமுகங்கள்
வேந்தர் யார்க்கும் விடுத்து,நகர்
வரைவு நாள்செய்து, அணிசெய்ய
மன்றல் முரசம் அறைவித்தார். 10

977 மாடம் புதுக்கி, பூகதமும்
கதலிக் காடும் மறுகுஎங்கும்
நீட நிரைத்து, பாலிகையும்
நிறைபொன் குடமும் முறைநிறுத்தி.
ஆடு கொடியும் தோரணமும்
புனைவித்து, அழகுக்கு அழகாக,
கூடம் நெருங்கு நகரைமணக்
கோலம் பெருகக் கொளுத்தினர். 11

978 தென்றல் நாடன் திருமகளைத்
தேவர் பெருமான் மணம்புரிய,
மன்றல் அழகால் ஒருநகர்ஒப்பு
அதிகம் இன்றி மதுரைநகர்
அன்று தானே தனக்குஒப்பது
ஆகும் வண்ணம் அணிஅமைத்தார்;
இன்று தானே தனக்குஅதிகம்
என்னும் வண்ணம் எழில்அமைத்தார். 12

---

976. இரவிமருமான்: சூரியகுலத் தோன்றலாகிய சோமசேகரன். மதி மருமான்: சந்திர குலத் தோன்றலாகிய சுந்தரபாண்டியன். பணிய: வணங்க. விரவி: தம்முட்கூடி. திருமுகங்கள்: திருமண ஓலைகள். வரைவுநாள் செய்து: திருமண நாளை வரையறுத்து.

977. பூகதம். கமுகம். கதலி: குலைவாழை. மறுகு: வீதி. இயற்கை அழகுடைய அந் நகரை மேலும் அழகுபடுத்தினர்கள்.

978. தென்றல் நாடன் திருமகளை: மலயத்துவச பாண்டியனின் மகளாகிய தடாதகைப் பிராட்டியாரை. தேவர்பெருமான்: சுந்தரபாண்டியன். அதிகம்: மிக்கது.

979 முன்னர் மாலை முடிஅணி சுந்தரத்
தென்னர் ஏற்றின் திருமுகம் கண்டு,தாழ்ந்து,
அன்ன வாசகம் உட்கொண்டு,அயல்புல
மன்னர் மாதவர் யாரும் வருவரால். 13

980 புரவி வெள்ளமும், போர்க்கரி வெள்ளமும்,
வரவில் கால்வலி மள்ளரின் வெள்ளமும்,
விரவி ஆழிய வெள்ளமும், உள்ளுற
இரவி தன்வழித் தோன்றல்வந்து எய்தினன். 14

981 கோடு வில்லொடும், மேகக் குழாங்கள்மின்
நீடு வாளொடும், நேர்ந்தெென, மார்புதாழ்ந்து
ஆடு குண்டலக் காதுஉடை ஆடவர்
சேடு அனீகத்துச் சேரன்வந்து ஈண்டினன். 15

982 கடலும் உள்ளமும் காற்றும்,பல் வண்ணமும்
உடலும் கொண்டென,உந்துறு வாம்பரிப்
படுக டற்குள், பரிதியில் தோன்றினன்
அடுப ரிப்பதி ஆகிய வேந்தனே. 16

983 அலகுஇ லாஉத யம்தொறும், ஆதவர்
அலகுஇ லார்உதித் தென்ன,பொன் ஓடைசேர்
அலகுஇல் ஆனைஅ னீகமொடு எய்தினன்,
அலகுஇல் ஆற்றல் கயபதி அண்ணலே. 17

---

979. திருமுகம்: திருமணஓலை. அயல்புல மன்னர்: வேற்றுநாட்டு மன்னர்கள். மாதவர்: முனிவர்கள்.

980. புரவி: குதிரை வரவில்: விரைந்த தன்மையில். கால்: காற்று. மள்ளர்: வீரர்கள். ஆழிய: (ஈண்டு) தேர்கள். உள்ளுற உள்ளே பொருந்த. இரவி தன்வழித் தோன்றல்: சூரியகுல மன்னன்.

981. கோடு: வளைந்த. நேர்ந்தென: வந்தாற்போல. சேடு: பெருமை. அனீகம்: சேனை.

982 உந்துறு: செலுத்தப்படுகின்ற. வாம்பரி: தாவும் குதிரைகள். பரிப்பதி: துரகபதி. பரிதியில்: சூரியனைப்போல.

983. உதயம் தொறும்: உதயமலைகள் தோறும். ஆதவர்: சூரியர். யானைகட்கு உதய மலைகளும், பொன்னோடைகட்கு சூரியர்களும் உவமம்.

984 தொக்க மள்ளர் அடிப்படு தூளிபோய்த்
திக்குஅ டங்க விழுங்கி, திரைக்கடல்
எக்கர் செய்ய, எழுந்துஇயம் கல்என,
நக்க வேல்கை நரபதி நண்ணினன். 18

985 மீன வேலையில் கந்துக மேற்கொடு,
கூனல் வார்சிலை வஞ்சக் கொடுஞ்சமர்,
கான வாழ்க்கை அரட்டக் கரும்படை,
மான வேல்குறு மன்னவர் நண்ணினர். 19

986 சீனர், சோனகர், சிங்களர், கொங்கணர்,
மான வேல்வல மாளவர், சாளுவர்,
தானம் மாநிரைச் சாவகர் ஆதியாம்,
ஏனை நாட்டுஉள மன்னரும் ஈண்டினர். 20

987 நூலொ டும்துவக் குண்டு நுடங்குமான்
தோலர், தூங்கு சுருக்குடைத் தானையர்,
கோல முஞ்சியர், கிஞ்சுகக் கோலினர்,
நாலு நூல்பயில் நாவினர் நண்ணினர். 21

988 வட்ட நீர்க்கலக் கையினர், வார்ந்துதோள்
விட்ட குண்டலக் காதினர், வேட்டதீத்
தொட்ட கோலினர், வேள்வியில் சுட்டநீறு
இட்ட நெற்றியர், இல்லொடு நண்ணினர். 22

989 முண்ட நெற்றியர், வெண்நிற மூரலர்,
குண்டி கைக்கையர், கோவணம் வீக்கிய
தண்டு கையர்,கல் தானையர், மெய்யினைக்
கண்டு பொய்யினைக் காய்ந்தவர் நண்ணினர். 23

---

984. தொக்க: நெருங்கிய. தூளி: புழுதி. விழுங்கி: மூடி. எக்கர் செய்ய: திடர் செய்ய நக்க: விளங்கிய.

985 மீனவேலை: மீன்களையுடைய கடல். கந்துகம்: குதிரை. கூனல்; வளைந்த. வார் சிலை· நீண்டவில். அரட்டர்: துட்டர்.

986. மாநிரை: யானைக் கூட்டம்.

987. நூல்: பூணூல். நுடங்கும்: அசையும். தூங்கு: தொங்குகின்ற தானையர்: ஆடை உடையார். கோலம்: அழகிய. முஞ்சியர்: முஞ்சிப் புல்லாகிய அரைநாண் உடையார். கிஞ்சுகம்: முள்முருங்கை. நாலுநூல்: நான்கு மறைகள்.

988 நீர்க்கலம்: கமண்டலம். வார்ந்து: நீண்டு. தோள்விட்ட: தோள்வரையும் தொங்க விட்ட. தீத்தொட்ட கோல்· தீக்கடைக்கோல். இல்லொடு: மனைவிமாரொடு.

989 முண்ட நெற்றியர்: திருநீறணிந்த நெற்றியினர். மூரலர்: பல்லினர். குண்டிகை: கமண்டலம். வீக்கிய: கட்டிய. தண்டு: கோல். மெய்: மெய்ப்பொருள். பொய்: பொய்ப் பொருள். காய்ந்தவர்: வெறுத்தவர்.

990 தீந்தண் பாற்கடல் செந்துகிர்க் காட்டொடும்
போந்த போல்மெய்யில் புண்ணியப் பூச்சினர்,
சேந்த வேணியர், வேத சிரப்பொருள்
ஆய்ந்த கேள்வி அருந்தவர் எய்தினர். 24

991 ஆதி சைவர் முதல்சைவர் ஐவரும்,
கோதுஇ லாஅகச் சைவக் குழாங்களும்,
பூதி மேனியர் புண்ணிய ஐந்துஎழுத்து
ஓது நாவினர் ஒல்லைவந்து எய்தினர். 25

992 வெண்க ளிற்றவன், வேரிஅம் தாமரைப்
பெண்க ளிப்புறு மார்பன், பிரமனோடு,
ஒண்க ளிப்புற உம்பர் முதல்பதின்
எண்க ணத்தவர் யாவரும் ஈண்டினர். 26

993 அணைந்து, கோயில் அடைந்து,அரிச் சேக்கைமேல்
குணம்க டந்தவன் கோமள வல்லியோடு
இணங்கி வைகும் இருக்கைகண்டு ஏத்தினர்,
வணங்கி னர்,வணங் கும்முறை வாழ்த்தினர். 27

994 விரைசெய் தார்முடிச் சுந்தர மீனவன்,
சுரர்கள் மாதவர் வேந்தர்க்குத் தொன்முறை
வரிசை நல்கி இருந்தனன்; மன்னவன்
திரும கன்மணம் செய்திறம் செப்புவாம். 28

---

990. செந்துகிர்க்காடு: சிவந்த பவளக்காடு. போந்தபோல்: வந்ததுபோல். புண்ணியப் பூச்சினர்: திருநீறு தரித்தவர். சேந்த: சிவந்த. வேணியர்: சடையினை உடையார் வேதசிரப்பொருள்: உபநிடதப் பொருள். அருந்தவர்: சைவமுனிவர்கள். திருநீறு பூசிய உடம்பு பாற்கடலுக்கும், செஞ்சடை துகிர்க்காட்டுக்கும் பொருளாயின.

991. சைவர் ஐவர்: ஆதி சைவர், மகா சைவர், அநு சைவர், அவாந்தர சைவர், பிரவர சைவர். கோதுஇலா: குற்றம்இலா. அகச்சைவக் குழாங்கள்: அகச்சமயிகளாகிய அறு வகைக் கூட்டத்தார். பூதி: திருநீறு. ஐந்து எழுத்து: திரு வைந்தெழுத்து. ஒல்லை: விரைவில்.

992. வெண்களிற்றவன்: வெள்ளையானை உடைய இந்திரன். வேரி: தேன். தாமரைப் பெண்: திருமகள். மார்பன்: திருமால். உம்பர்: தேவர்

993. அரிச்சேக்கை: சிங்காதனம். குணம் கடந்தவன்: முக்குணம் கடந்த சுந்தரபாண்டியன். கோமளவல்லி: இளங்கொடிபோன்ற தடாதகைப் பிராட்டியார்.

994. விரைசெய்: மணம் பொருந்திய, வரிசை: சிறப்பு. திருமகன்: உக்கிரவழுதி.

995 சோம சேகரன் தோகை வனப்புஎலாம்
கோம கன்கண்டு உவப்ப,அக் கொள்கைகண்டு,
ஏம மேனியன், நூல்வழி, யார்க்கும்அத்
தேமன் கோதை உறுப்புஇயல் தேற்றுவான். 29

996 பெருகநீண்டு அறவும் குறுகிடா வாகி,
பிளந்திடாக் கடையவாய்த் தழைந்து,
கருவிவான் வண்டின் கணம்எனக் கறுத்து,
கடைகுழன்று, இயல்மணம் கான்று,
புரைஅறச் செறிந்து, நெறித்து,மெல் என்று,
புந்திகண் கவர,நெய்த்து இருண்ட,
மருமலர்க் குழலாள் தன்பதிக்கு இனிய
மல்லல்வான் செல்வம்உண் டாகும். 30

997 திண்மத வேழ மத்தகம் போலத்
திரண்டுஉயர் சென்னியாள், அவள்தன்
உள்மகிழ் கணவன் ஆயுள்நீண்டு அகில
உலகுஅரசு உரியனும்; எட்டாம்
தண்மதி போன்று மயிர்நரம்பு அகன்று
தசைந்துமூ விரல்இடை அகன்ற
ஒண்மதி நுதல்தன் பதிக்கு,நல் திருவோடு
உலப்புஇல்ஆ ரோக்கியம் உண்டாம். 31

998 கண்கடை சிவந்து,ஆன் பால்என வெளுத்து,
நடுவிழி கழியவும் கரிதாய்,
எண்கவின் அடைந்து, கோமளம் ஆகி,
இமைகரு மயிர்த்துஎனின், இனிய;
ஒண்கரும் புருவம் குனிசிலை ஒத்த;
தத்தமில் ஒத்துஇரு தொளையும்
பண்கொள உருண்டு துண்டம்எள் போது
பதுமமேல் பூத்தது போலும். 32

---

995. தோகை: காந்திமதி. கோமகன்: உக்கிரவழுதி. ஏமமேனியன்: பொன்மேனியனாகிய வியாழன். நூல்வழி. உறுப்பியல் நூலின்படி. உறுப்பு இயல்: உறுப்புக்களின் இலக்கணத்தை. தேற்றுவான்: தெளிவிக்கின்றான்.

996. அறவும்: மிகவும். கடையவாய்: நுனியினை உடையனவாய். கருவி: தொகுதி. கான்று: வீசி. புரை: குற்றம். செறிந்து: நெருங்கி. நெறித்து: அறல்பட்டு. குழலாள்: கூந்தலை உடையவள். பதி: நாயகன்.

997. வேழம்: யானை. சென்னியாள்: தலையினை உடையவள். உள்மகிழ்: மனம்மகிழும். அகன்று: அகலப்பெற்று. தசைந்து: தசைப்பற்று உடையதாய். நுதல்: நெற்றி. உலப்பு இல்: கெடுதல் இல்லாத.

998. கழியவும்: மிகவும். கவின்: அழகு. கோமளம்: பொலிவு. கருமயிர்த்து: கரிய மயிரினைப் பெற்றிருந்தால். இனிய: இன்பம் தருவன. பண்கொள: அழகுபெற. துண்டம்: மூக்கு. எள்போது: எள்ளுப் பூ. பதுமம்: தாமரை.

999 வள்ளைபோல் வார்ந்து தாழ்ந்துஇரு செவியும்
மடல்சுழி நல்லவாய், முன்னர்த்
தள்ளிய காது மனோகரம் ஆகும்
தன்மையால், நன்மையே தழைக்கும்;
ஒள்ளிய கபோலம் வட்டமாய்த் தசைந்திட்டு
உயர்ந்து,கண் ணடிமண் டலம்போல்,
தெள்ளிய ஊற்றம் இனியது நன்றுஎன்று
ஓதினன் திரைக்கடல் செல்வன். 33

1000 கொவ்வைவாய் அதரம் திரண்டு,இரு புடையும்
குவிந்துசேந்து, இரேகைநேர் கிடந்தால்,
அவ்அணி இழைதன் அன்பனுக்கு என்றும்
நண்புஉரு வாகும்;எண் நான்கு
வல்லவாள் எயிறும் இடைவெளி இன்றி,
வார்ந்துமேல் கீழ்இரண்டு ஒழுங்கும்
செவ்வன்நேர்ந்து, ஆவின் பால்என வெள்கித்
திகழின்நன்று என்பர்நூல் தெளிந்தோர். 34

1001 மெல்லிதாய்ச் சிவந்து கோமளம் ஆன
நாவினுள், வேட்டவேட்டு ஆங்கே
வல்லைவந்து எய்த நுகர்ந்திடும்; தசைந்து,
வட்டமாய், அங்குலம் இரண்டின்
எல்லையது ஆகி, மஞ்சுள மாகி
இருப்பது சுபுகம்நன்று என்பர்;
அல்லிஅம் கமலம் போல்மலர்ந்து இருள்தீர்ந்து
அவிர்மதி போல்வது முகமே. 35

---

999. வள்ளை: வள்ளைத்தண்டு. மனோகரம்: அழகிய. ஊற்றம்: பரிசம். திரைக்கடற் செல்வன்: வருணன்.

1000. அதரம்: இதழ். அவ்அணி இழை: அணியினை உடைய பெண். நண்புஉருவாகும். நட்பின் வடிவாகி இருப்பாள். வாள் எயிறு: கூரிய பற்கள். வெள்கி: வெண்மை உடையதாய். நூல் தெளிந்தோர்: உறுப்புநூல் உணர்ந்தோர்.

1001. வேட்டவேட்டாங்கே: விரும்பியன விரும்பியவாறே. வல்லை: விரைவில். மஞ்சுள மாகி: அழகுடையதாகி. சுபுகம்: மோவாய் (முகவாய்). அல்லி: அகஇதழ். இருள் தீர்ந்து: களங்கம் இன்றி. அவிர்: விளங்கும்.

1002 திரைவளைக் கழுத்துத் தசைந்து,நால் விரலின்
அளவதுஆய், திரண்டுமூன்று இரேகை
வரைபடின், கொழுநன் அகிலமன் னவனும்;
மார்பகம் தசைந்து;மூ ஆறு
விரல்அளவு அகன்று, மயிர்நரம்பு அகன்று
மிதந்ததேல் விழுமிதாய்; வேய்த்தோள்
புரைஅறத் தசைந்து மயிர்அகன்று என்பு
புலப்படா மொழியகோ மளம்ஆம். 36

1003 செங்கைநீண்டு உருண்டு கணுக்கள்பெற்று அடைவே
சிறுத்திடில் செல்வமோடு இன்பம்
தங்கும்;வள் உகிர்சேந்து உருண்டுகண் உள்ளம்
கவர்வதாய்ச் சரசரப்பு அகன்றால்
அங்குஅவை நல்ல; அகங்கைமெல் எனச்சேந்து
இடைவெளி அகன்றுஇடை உயர்ந்து
மங்கல மாய்ச்சில் வரைகளின் நல்ல
இலக்கண வரையுள மாதோ. 37

1004 முத்துஅணி தனங்கள், கடினமாய், தசைந்து,
வட்டமாய் முகிழ்த்து,இரு கடம்நேர்
ஒத்து,இறு மாந்து,ஈர்க்கு இடைஅற நெருங்கி
உள்ளன, மெலிந்துஅமர்ந்து, உரோம
பத்திபெற்று, அயலே மயிர்நரம்பு அகன்ற
பண்டியாள், உண்டிவேட் டாங்கே
துய்த்திடும்;நாபி வலம்சுழித்து ஆழ்ந்தால்
தொலைவுஇலாத் திருவளம் பெருகும். 38

---

1002. திரைவளை: கடலிற்றோன்றிய சங்கு. தசைந்து: தசைவுற்று. மிதந்ததேல்: உயர்ந்திருக்குமாயின். என்பு: எலும்பு.

1003. அடைவே: முறையே. உகிர்: நகம். சேந்து: சிவந்து. இடை: நடுப்பகுதி. வரைகள்: இரேகைகள்.

1004. கடினமாய்: இறுகியனவாய். தசைந்து: தசைப்பற்று உடையனவாய். கடம்: குடம், பண்டியாள்: வயிறுஉடையவள். வேட்டாங்கே: விரும்பியபடியே. நாபி: கொப்பூழ்.

1005 இடைமயிர் நரம்புஅற்று, இருபதோடு ஒருநான்கு
எழில்விரல் அளவொடு, வட்ட
வடிவதாய், சிறுகி மெலிவது, நிதம்பம்
மத்தகம் யாமையின் புறம்போல்
படிவநேர் ஒத்தல் நன்று;இரு குறங்கும்,
படுமயிர் என்புஅகன்று, யானைத்
தடவுஉடைக் கையும் கரபமும் கதலித்
தண்டும்ஒத்து இருக்கில்நன்று என்ப. 39

1006 அங்கம்உள் மறைந்து, வட்டமாய்த் தசைவது
அணிமுழந் தாள்,மயிர் நரம்பு
தங்கிடாது அடைவே உருட்சியாய்ச் சிறுத்துச்
சமவடி வாய்அழகு அடைந்த
சங்கமாம்; சிரைஎன்பு அறத்தசைந்து, யாமை
முதுகுஎனத் திரண்டுஉயர்ந்து, அழகு
மங்கலம் பொலிந்த புறஅடி மடந்தை
மன்னவன் பன்னிஆம் மன்றே. 40

1007 அல்லிஅம் கமலக் கால்விரல், உயர்ந்து
தூயவாய் அழகவாய், கழுநீர்
மெல்இதழ் நிரைத்தாங்கு, ஒழுங்குஉறத் திரண்டு,
வால்உகிர் வெண்மதிப் பிளவு
புல்லிய போன்று, மெல்லிய வாகி,
புகர்அறத் தசைந்தன, அகத்தாள்
சொல்லிய தசையும், மென்மையும், சமமும்
துகள்அறப் படைத்தன நன்றுஆல். 41

---

1005 இடை: மருங்குல். நிதம்பம்: அல்குல். மத்தகம்: யானையின் மத்தகம். புறம் போல்: முதுகுபோல். படிவம்: வடிவம். குறங்கு: தொடை. தடவு: பெருமை. கரபம்: கையின் அடி.

1006. அங்கம்: எலும்பு. அணி: அழகிய. சங்கம்: கணைக்கால். சிரை: நரம்பு. மன்னவன் பன்னிஆம்: அரசனுக்கு மனைவி ஆவள்.

1007. அல்லி: அகவிதழ். அம்: அழகிய. வால்உகிர்: வெள்ளிய நகங்கள். அகத்தாள்: உள்ளங் கால்கள்.

1008 வண்ணம்மாந் தளிர்போல் சிவந்து,எரி பொன்போல்,
வைகலும் வெயர்வைஅற்று ஆகம்
உண்ணமாய் இருக்கில் செல்வம்உண் டாகும்;
ஒள்மணம் பாடலம், குவளை,
நண்அரு முளரி, மல்லிகை, நறும்தண்
சண்பகம் போல்வன ஆகும்;
பண்அவாம் கிளவி குயில்கிளி யாழில்
படின்,வரும் பாக்கியம் என்று. 42

1009 கருங்குழல் கற்றை தொட்டுச்
செம்மலர்க் காலின் எல்லை,
மருங்குல்நல் கூர்ந்த கன்னி
வடிவுஎலாம், வாக்கின் செல்வன்
ஒருங்குநூல் உணர்வால் தெள்ளி,
இம்பர்இன்று, உம்பர் தேத்தும்
இரங்கும்இக் குயில்அன் னாள்மெய்
இலக்கணம் அரியது என்றான். 43

1010 அங்குஅது கேட்டோர் யாரும்
அகம்களி துளும்ப, இப்பால்
கொங்குஅலர் நறும்தார்க் குஞ்சி
உக்கிர வழுதி போந்து,
மங்கல வரிசை மாண
மத்தமான் சுமந்த வைகைச்
சங்குஎறி துறைநீர் ஆடி,
தகும்கடி வனப்புக் கொள்வான். 44

---

1008. வண்ணம்: நிறம் வைகலும்: எப்பொழுதும். ஆகம்: உடம்பு. உண்ணமாய்: வெம்மையாய். ஒள்மணம்: (உடலின்) மிக்க மணம். பாடலம்: பாதிரி. தண் அரு: குளிர்ச்சி நீங்காத. கிளவி: சொல். கடந்த பதின்மூன்று பாடல்களில் பெண்களின் உறுப்புக்கள் பெறவேண்டிய இலக்கணங்களை நூல் முறைப்படி உணர்த்தினர்.

1009. கருங்குழல் தொட்டு' கரியகூந்தல் முதலாக. காலின் எல்லை; கால்வரையிலுள்ள. நல்கூர்ந்த: சிறுத்த. கன்னி: காந்திமதி. வாக்கின் செல்வன்: வியாழபகவான். தெள்ளி: ஆராய்ந்து. இம்பர் இன்று: இவ்வுலகத்து இல்லை. குயில் அன்னாள்: காந்திமதி மெய்இலக்கணம்: உறுப்பிலக்கணம்.

1010. மங்கலவரிசை; அட்டமங்கலங்கள். மாண சிறக்க. மத்தமான்: மதமுடைய யானை. கடிவனப்பு: திருமணக்கோலம்.

1011 கட்டுஅவிழ் கண்ணி வேய்ந்து
மான்மதக் கலவைச் சாந்தம்
மட்டனம் செய்து, முத்தால்
மாண்கலன் முழுதும் தாங்கி,
விட்டுஅவிர் கலைவான் திங்கள்
வெண்கதிர்ச் செல்வன் போல்வந்து,
இட்டபூம் தவிசின் மேற்கொண்டு
இருந்தனன் சங்கம் ஏங்க. 45

1012 அந்நிலை மணநீர் ஆட்டி,
அருங்கலப் போர்வை போர்த்த
கன்னியைக் கொணர்ந்து, நம்பி
வலவயின் கவின வைத்தார்;
பன்னியோடு எழுந்து சோம
சேகரன் பரனும் பங்கின்
மன்னிய உமையு மாக
மதித்து,நீர்ச் சிரகம் தாங்கி, 46

1013 மங்கல நீரால் நம்பி
மலர்அடி விளக்கி, வாசக்
கொங்குஅலர் மாலை சூட்டி,
குளிர்மது பருக்கம் ஊட்டி,
நங்கைதன் கையைப் பற்றி
நம்பிதன் கையில் ஏற்றி,
புங்கவர் அறிய நன்னீர்
மந்திரம் புகன்று பெய்வான், 47

---

1011. கண்ணி: மலர்மாலை. வேய்ந்து: சூடி. மட்டனம் செய்து: பூசி. கலன்: அணி கலன்கள். வெண்கதிர்ச் செல்வன்: சந்திரன். ஏங்க: ஒலிக்க.

1012. வலவயின்: வலப்பக்கத்து கவின: அழகுபெற. பன்னி: மனைவி. நீர்ச்சிரகம்: நீர்நிறைந்த கமண்டலம். (இப்பாடல் குளகம்).

1013. நம்பி: உக்கிரவழுதி. மதுபருக்கம்: மதுவருக்கம். புங்கவர்: தேவர்கள். (இதுவும் குளகம்).

1014 "இரவிதன் மருமான் சோம
சேகரன் என்பேன், திங்கள்
மரபினை விளக்க வந்த
சுந்தர மாறன் மைந்தன்,
உரவுநீர் ஞாலம் தாங்கும்
உக்கிர வருமற்கு, இன்றுஎன்
குரவுஅலர் கோதை மாதைக்
கொடுத்தனன்" எனநீர் வார்த்தான். 48

1015 மைந்துஉறு மடங்கல் திண்கால்
மணிவட வயிர ஊசல்
ஐந்துடன், பதம்செய் பஞ்சி
அணையிேனாடு அன்னத் தூவிப்,
பைந்துகில் அணைஈர் ஐந்து,
பவளவாய்ப் பசும்பொன் மேனி
இந்திர மணிக்கண் பாவை
விளக்குநான்கு இரட்டி என்ப. 49

1016 அட்டில்வாய் அடுக்கும் செம்பொன்
கலங்கள்நூறு, அம்பொன் வாக்கி
இட்டுஇழை மணிக்க ளாஞ்சி
ஏழு,பொன் கவரி எட்டு,
விட்டுஒளிர் பசும்பொற் கிண்ணப்
பந்திசூழ் விளங்க நாப்பண்
நட்டபொன் காலி னோடு
நகைமணிக் கலம்நூறு என்ப. 50

---

1014. மணவூர் மன்னனாகிய சோமசேகரன் தன் மகள் காந்திமதியை, சுந்தரபாண்டியன் மகன் உக்கிரவழுதிக்குத் தாரைவார்த்துக் கொடுத்தான்.

1015. மைந்து: வலிமை மடங்கல்: சிங்கம்.

1016. அட்டில்: அடுக்களை. வாக்கி: வார்த்து. பந்தி: வரிசை. நாபபண்: நடுவில்.

1017 பெருவிலை ஆரப் பேழை,
ஆயிரம் பெற்ற நுண்தூசு
அருவிலைப் பட்டு வெவ்வேறு
அமைத்தன பேழை முந்நூறு,
உருவுஅமுது எழுதிச் செய்த
ஓவியப் பாவை அன்னார்.
திருமணிக் கலனோடு ஏவல்
சேடியர் எழுநூற்று ஐவர். 51

1018 விளைவொடு மூன்று மூநூர்,
மின்னுவிட்டு எறியும் செம்பொன்
அளவுஇரு கோடி, இன்னை
அரும்பெறல் மகட்குச் செல்வ
வளம்உற வரிசையாக வழங்கினன்;
முழங்கி வண்டு
திளைமதுக் கண்ணிச் சோம
சேகர மன்னன் மாதோ. 52

1019 ஆர்த்தன இயங்கள் எல்லாம்;
அமரர்மந் தார மாரி
தூர்த்தனர்; வேள்விச் செந்தீச்
சுழித்தது வலமாய்த் துள்ளி;
வார்த்தனம் மடவார் நாவின்
முளைத்தன வாழ்த்து; மன்றல்
பார்த்தனர் கண்கள் எல்லாம்
பெற்றன படைத்த பேறு. 53

---

1017. ஆரம்: முத்துமாலை. பேழை பெட்டி. நுண்தூசு: மெல்லிய ஆடை. திருமணிக் கலன்: சிறந்த மாணிக்க அணிகள். ஏவல் சேடியர்: பணிப்பெண்டிர்.

1018. கடந்த நான்கு பாடல்களில் சோமசேகரன் தன் மகள் காந்திமதிக்கு வரிசையாக நல்கிய பொருட்களை விவரித்தார்.

1019. இயங்கள்: இசைக்கருவிகள். வார்: கச்சு. நாவின்: நாவின்கண்.

1020 பொதிஅவிழ் கடப்பம் தண்தார்ப்
புயத்துஇளம் காளை அன்னான்,
முதியவர் செந்தீ ஓம்ப,
இன்இயம் முழங்க, காந்தி
மதியை,மங் கலநாண் பூட்டி,
வரிவளைச் செங்கை பற்றி,
விதிவழி ஏனை மன்றல்
வினைஎலாம் நிரம்பச் செய்தான். 54

1021 எண்இ லாத வளத்தினொடும்
இரவி மருமான் மடப்பிடியை,
பண்நி லாவு மறைஒழுக்கம்
பயப்ப வேள்வி வினைமுடித்து,
தண்நி லாவெண் கலைமதியும்
தாரா கணமும் தவழ்ந்துஉழல,
விண்நி லாவும் மணிமாட
வீதி வலமாய் வரும்எல்லை, 55

1022 மின்நேர் பொன்அம் தொடியினரும்,
மென்செம் பஞ்சி அடியினரும்,
பொன்ஏர் மணிப்பூண் முலையினரும்,
புலம்பு மணிமே கலையினரும்,
அல்நேர் ஓதித் தாரினரும்
ஆகி, கண்ணும் மனமும்அவன்
முன்னே தூது நடப்பதுஎன
நடப்ப நடந்தார் முகிழ்முலையார். 56

---

1020. பொதி அவிழ்: முறுக்கு அவிழ்ந்த. இளங்காளை அன்னான்: முருகக் கடவுளை ஒத்த உக்கிரவழுதி.

1021. இரவி மருமான்: சோமசேகரன். மறைஒழுக்கம் பயப்ப: வேதத்தின் விதி நிரம்ப. வேள்வி வினை: மண வினை. தாராகணம்: உடுக்கணங்கள். (இப்பாடல் குளகம்).

1022. மின்நேர்: மின்னலை ஒத்த. தொடியினர்: வளையல் அணிந்தவர். பொன். பொன்னாலாகிய. ஏர்: அழகிய. அல்நேர்: இருளை ஒத்த. ஓதி: கூந்தல்.

1023 சுருங்கும் இடையார் தன்பவனி
 தொழுது வருவார் தமக்குஇரங்கி,
மருங்குல் பாரம் கழிப்பான்போல்
 கலையைக் கவர்ந்தும், வளைத்தோள்மேல்
ஒருங்கு பாரம் கழிப்பான்போல்
 வளையைக் கவர்ந்தும், உள்ளத்துள்
நெருங்கு பாரம் கழிப்பான்போல்
 நிறையைக் கவர்ந்தும் நெறிச்செல்வான். 57

1024 வான மதிசேர் முடிமறைத்த
 வழுதி மகனே இவன்என்றால்,
ஆனை எருத்தில் சிங்கஇள
 அடல்ஏறு என்ன, அயல்வேந்தர்
சேனை தழுவ வரும்பவனிக்கு
 ஒப்புஏது; ஒப்புச் செப்புங்கால்
யானை மகளை மணந்துவரும்
 இளையோன் பவனிச் செல்வமே. 58

1025 இம்மை தனிலும் நன்மைதரும்
 ஈசன் தனையும், வாசவற்கு
வெம்மை தரு,வன் பழிதவிர்த்த
 விமலன் தனையும், அங்கயற்கண்
அம்மை தனையும், பணிந்துமீண்டு,
 அரசன் கோயில் அடைந்து,ஈன்றோர்
தம்மை முறையால் அடிக்கமலம்
 தலையில் பணிந்தான் தனிக்குமரன். 59

---

1023. சுருங்கும் இடையார்: சிறுகிய இடையினை உடைய மகளிர். மருங்குல்: இடை. கலை: மேகலை வளை: மூங்கில். ஒருங்கு: ஒருசேர. நிறை: கற்பு. நெறி. வீதி.

1024. வழுதி: இறைவனாகிய சுந்தரபாண்டியன். எருத்தில்: கழுத்தில். யானைமகள்: தெய்வயானை. இளையோன்: முருகக்கடவுள்.

1025. இம்மைதனிலும்: இம்மையிலேயே. வாசவற்கு: இந்திரனுக்கு. வெம்மைதரு: துன்பம் தந்த. தனிக்குமரன்: ஒப்பற்ற உக்கிரவழுதி.

1026 ஆறா ஆறு சுவைஅடிசில்
அயில்வோர் தம்மை அயில்வித்து,
நானா வரிசை வரன்முறையால்
நல்கி, விடையும் நல்கி,பின்
வானா டவர்க்கும் விடைகொடுத்து
மதிக்கோன் ஒழுகி வைகும்நாள்,
தேன்ஆர் கண்ணித் திருமகனுக்கு
இதனைச் செப்பி இதுசெய்வான். 60

1027 "மைந்த! கேட்டி! இந்திரனும்
கடலும் உனக்கு வான்பகையாம்;
சந்த மேரு தருக்குஅடையும்;
சதவேள் விக்கோன் முடிசிதற
இந்த வளைகொண்டு எறி,கடலில்
இவ்வேல் விடுதி, இச்செண்டால்
அந்த மேருத் தனைப்புடை" என்று
எடுத்துக் கொடுத்தான் அவைமூன்றும். 61

1028 அன்ன மூன்று படைக்கலமும்
தொழுது வாங்கி, அடல்ஏறு
தன்னை நேராய் எதிர்நிற்கும்
தனயன் தனை,உக் கிரவழுதி
என்ன, ஆதி மறைமுழங்க
இயங்கள் ஏங்க முடிகவித்து,
தன்னது ஆணை அரசுஉரிமைத்
தனிச்செங் கோலும் தான்நல்கா, 62

---

1026. ஆறா: நீங்காத, அடிசில்: உணவினை. அயில்வோர்: உண்போர். நானாவரிசை: பலவித வரிசைகள். மதிக்கோன்: சுந்தரபாண்டியன். ஒழுகிவைகும்நாள்; ஆட்சிபுரிந்து வரும் காலத்தில். இதனை: பின்வருவனவற்றை.

1027. கேட்டி: கேட்பாயாக. வான்: பெரிய. சதவேள்விக்கோன்: இந்திரன். சுந்தர பாண்டியன் வேல், வளை, செண்டு மூன்றையும் உக்கிரவழுதிக்குக் கொடுத்தான்.

1028. சுந்தரபாண்டியன், உக்கிரவழுதிக்குத் தன் முடியினைச் சூட்டி, ஆணையும் செங்கோலும் நல்கினான். (இப்பாடல் குளகம்).

1029 சூட்சி வினையில் பொன்அனைய
சுமதி தன்னை, தொல்நூலின்
மாட்சி அறிஞர் தமைநோக்கி,
"வம்மின் இவனைக் கண்இமைபோல்,
காட்சி பயக்கும் கல்வியும்போல்,
காப்பீர்! இதுநும் கடன், இம்மண்
ஆட்சி இவனது" என்றுஇளைய
அரிஏறு அனையான் தனைநல்கா, 63

1030 வெய்யவேல் காளை அன்னான்
தன்னையும் வேறு நோக்கி,
"ஐய! இவ் வையம் தாங்கி
அளித்தனம் நெடுநாள்; இந்த
மைஅறு மனத்தார் சொல்லும்
வாய்மையாறு ஒழுகி, நீயும்
செய்யகோல் முறைசெய்து ஆண்டு,
திருவொடும் பொலிக!" என்றான். 64

1031 பன்அரும் கணங்கள் எல்லாம்
பண்டைய வடிவ மாக,
தன்அருள் துணையாய் வந்த
தடாதகைப் பிராட்டி யோடும்,
பொன்நெடும் கோயில் புக்குப்
பொலிந்தனன்; இச்சை தன்னால்
இன்அருள் படிவம் கொள்ளும்
ஈறுஇலா இன்ப மூர்த்தி. 65

1032 பின்னர் உக்கிரப் பெயர்த ரித்தஅத்
தென்னர் கோமகன், தெய்வ நான்மறை
மன்னு நல்அறம் வளர, வையகம்
தன்னது ஆணையால் தாங்கி வைகினான். 66

---

1029. சூட்சிவினை: சூழும் செயல். பொன்அனைய சுமதி: வியாழன் போன்ற சுமதி. காட்சிபயக்கும்: அறிவினைக் கொடுக்கும். நல்கா: நல்கி. (இதுவும் குளகம்).

1030. அளித்தனம்: ஆட்சிபுரித்தனம். மைபறு: குற்றமற்ற. வாய்மைஆறு: உண்மை வழி. செய்யகோல்: செங்கோல்.

1031. இச்சைதன்னால்: தனது விருப்பத்தால். படிவம்கொள்ளும்: அருள்உருவம்பெறும். ஈறுஇலா இன்ப மூர்த்தி' அழிவில்லாத இன்பவடிவான சுந்தரபாண்டியனாகிய இறைவன்.

## 13. கடல் சுவற வேல் விட்டது



வளைஎயில் மதுரை மூதூர் மறிகடல் இவற்றின் நாப்பண்,
விளைவயல் நகரம் எல்லாம், வெள்ளிஅம் பலத்துள் ஆடும்
தளைஅவிழ் கொன்றை வேணித் தம்பிரான் தனக்கே சேர்த்து
களைகணாய் உலகுக்கு எல்லாம் இருந்தனன் காவல் வேந்தன். 1052

# கடல் சுவறவேல்விட்ட படலம்

1033 வளையொடு செண்டு,வேல் மைந்தற்கு அம்சுரும்பு
அளையவேய்பு அணிந்தகோன் அளித்த வாறுஇது; அத்
தளைஅவிழ் தாரினன் தனயன், வேலைமேல்
இளையவன் என்ன,வேல் எறிந்தது ஓதுவாம். 1

1034 திங்களின் உக்கிரச் செழியன் வெண்குடை
எங்கணும் நிழற்றவிற் றிருக்கும் நாள்வயின்,
சங்கைஇல் லாதமா தருமவேள்விகள்
புங்கவர் புடைதழீஇப் போற்ற ஆற்றும்நாள். 2

1035 அரும்பரி மகத்தொண் ணூற்று ஆறு செய்துழி,
சுரும்புஅரி பெரும்படைத் தோன்றல், தண்நறு
விரும்புஅரி முரன்றுசூழ் வேம்பின் அம்குழைப்
பொரும்பரி வீரன்மேல், பொருது பொங்கினன். 3

1036 மன்னிய நாடுஎலாம் வளம்சு ரந்துவான்
பொன்இயல் நாடுபோல் பொலித லால்,இந்த
மின்னிய வேலினன் வேள்வி செய்வதுஎன்று
உன்னிய மனத்தன்ஓர் சூழ்ச்சி உன்னினன். 4

1037 பொரும்கடல் வேந்தனைக் கூவி, பொள்ளென
இரும்கடல் உடுத்தபார் ஏழும், ஊழிநாள்
ஒருங்குஅடு வெள்ளம்ஒத்து உருத்துப் போய்வளைந்து
அரும்கடி மதுரையை அழித்தி யால்என்றான். 5

---

1033. மைந்தற்கு: உக்கிரவழுதிக்கு. அம் அழகிய. சுரும்பு: வண்டுகள். கோன்: சுந்தரபாண்டியன். தளை அவிழ்தாரினன்: மலர்மாலை அணிந்த பாண்டியன். தனயன்: மகன். வேலை: கடல். இளையவன்: முருகக் கடவுள்.

1034. திங்களின்: நிலவினைப்போல சங்கை: அளவு. புங்கவர்: தேவர். புடைதழீஇ: புறம்பே சூழ்ந்து. (இப் பாடல் குளகம்).

1035 பரிமகம்: பரிவேள்வி. சுரும்பு: மலைச்சிறகு. அரி: அரிந்த. தோன்றல் இந்திரன். நறுவிரும்பு அரி: தேனை விரும்பும் வண்டு. முரன்று: ஒலித்து. பொரும்: போரிடும். பரி: குதிரை. வீரன்: உக்கிரபாண்டியன்.

1036. வான்வளம்: மழை வளம். பொன்இயல்நாடு: பொன்னுலகம். வேலினன்: உக்கிரவழுதி. உன்னிய: கருதிய. உன்னினன்: நினைத்தான் 'நினைத்தவன் இந்திரன்.'

1037. பொரும்: அலைகள் மோதும். கடல்வேந்தன்: வருணன். பொள்ளென: விரைந்து. இரும்கடல்: பெரியகடல். ஒத்து: போன்று. உருத்து சினந்து. அருங்கடி: அரிய காவலை உடைய.

1038 விளைவது தெரிகிலன், வேலை வேந்தனும்
வளவயல் மதுரையை வளைந்திட்டு, இம்மெனக்
களைவது கருதினன்; பேயும் கண்படை
கொளவரு நனந்தலைக் குருட்டுக் கங்குல்வாய். 6

1039 கொதித்துஅ லைக்க ரங்கள் அண்ட
கூடம் எங்கும் ஊடுபோய்,
அதிர்த்துஅ லைக்க ஊழி நாளில்
ஆர்த்துஅ லைக்கும் நீத்தமாய்,
மதித்த லத்தை எட்டி முட்டி
வரும்ஓர் அஞ்ச னப்பொருப்பு
உதித்தது ஒத்து மண்ணும் விண்ணும்
உட்க வந்தது உததியே. 7

1040 வங்க வேலை வெள்ளம் மாட மதுரை மீது வருசெயல்,
கங்குல் வாய திங்கள் மீது காரி வாய கார்உடல்
வெங்கண் வாள்அ ராவி மூங்க வீழ்வது ஒக்கும்; அலதுகார்
அங்கண் மூட வருவது ஒக்கும்; அல்லது ஏது சொல்வதே 8

1041 வட்ட யாமை பலகை,வீசு வாளை வாள்கள், மகரமே
பட்ட யானை,பாய்தி ரைப்ப ரப்பு வாய்ப ரித்திரள்,
விட்ட தோணி இரதம்,இன்ன விரவு தானை யொடுகடல்
அட்ட மாக வழுதி மேல்அ மர்க்கு எழுந்தது ஒக்குமே. 9

---

1038. வேலைவேந்தன்: கடற்கரசனாய வருணன். இம்மென: விரைவாக. கண்படை கொள: கண் உறங்குமாறு. நனந்தலை: நடுஇரவின். கங்குல்வாய் களைவது கருதினன் எனக் கூட்டுக.

1039. அதிர்த்து அலைக்க: நடுக்கம் உண்டாக்கி வருத்த. அஞ்சனப்பொருப்பு: கரியமலை. உட்க: அஞ்சுமாறு. உததி: கடல்.

1040. வங்கம்: மரக்கலம். வேலை: கடல். வருசெயல்: வருகின்ற தன்மை. கங்குல்: இரவு. காரிவாய: நஞ்சுபொருந்திய வாயினை உடைய வாள்அரா: கொடிய இராகு என்னும் பாம்பு. கார்: மேகங்கள். மூட: மறைத்தற்கு.

1041. ஆமைகளைக் கேடகங்களாகவும், வாளை மீன்களை வாள்களாகவும், சுறாமீன்களை யானைகளாகவும், அலைகளைத் தாவும் குதிரைகளாகவும், தோணிகளைத் தேர்களாகவும் கொண்டு கடலானது உக்கிரபாண்டியனுக்கு எதிராகப் போர்புரிய வருவதுபோல அக்காட்சி இருந்தது.

1042 இன்ன வாறுஎ ழுந்த வேலை
மஞ்சுஉ றங்கும் இஞ்சிசூழ்
நன்ன கர்க்கு ணக்கின் வந்து
நணுகும் எல்லை, அரையிரா,
மன்ன வன்க னவின் வெள்ளி
மன்ற வாணர் சித்தராய்
முன்னர் வந்துஇ ருந்துஅ ரும்பு
முறுவல் தோன்ற மொழிகுவார். 10

1043 "வழுதி! உன்தன் நகர்அ ழிக்க வருவது ஆழி, வல்லைநீ
எழுதி,போதி,வென்றி வேல்எ றிந்து வாகை பெறுக"என,
தொழுத செங்க ரத்தி னன்து திக்கும் நாவி னன்எழீஇ,
கழுதுஉ றங்கு கங்கு லிற்க னஉ ணர்ந்து காவலான், 11

1044 கண்நி றைந்த அமளி யில்க ழிந்து, வாயில் பலகடந்து,
உள்நி றைந்த மதிஅ மைச்ச ருடன்வி ரைந்து குறுகியே,
மண்இ றந்தது எனமு ழங்கி வருத ரங்க வாரிகண்டு,
எண்இ றந்த அதிச யத்த னாகி நிற்கும் எல்லைவாய், 12

1045 கனவில் வந்த சித்த வேடர்
நனவில் வந்து, காவலோன்
நினைவு கண்டு,பொழுது தாழ
நிற்பது என்கொல்? அப்பனே!
சினவி வேலை போல வந்த
தெவ்வை மான வலிகெட
முனைய வேல்எ றிந்து ஞால
முடிவு தீர்த்தி யால்"என, 13

---

1042. வேலை: கடல். மஞ்சு: மேகம். இஞ்சி: மதில். குணக்கின்: கீழ்த்திசையில். நணுகும் எல்லை: அணுகும்பொழுது. அரைஇரா: நடுஇரவில். வெள்ளிமன்ற வாணர்: வெள்ளியம்பலவாணராகிய சோமசுந்தரக் கடவுள்.

1043. ஆழி: கடல். வல்லை: விரைவில். வேல்எறிந்து: வேற்படையை விடுத்து. வாகை பெறுக: வெற்றி பெறுவாயாக. எழீஇ: எழுந்து. கழுது: பேய். (இப்பாடல் குளகம்).

1044. கண்நிறைந்த: கண்துயின்ற. கழிந்து: நீங்கி. மண்இறந்தது: நிலஉலகு அழிந்தது. தரங்கவாரி: அலைகளைஉடைய கடல். எண்இறந்த: அளவுகடந்த. எல்லைவாய்: பொழுதில். (இதுவும் குளகம்).

1045. காவலோன்: மன்னனாகிய உக்கிரபாண்டியன். நினைவுகண்டு: எண்ணத்தை உணர்ந்து. பொழுது தாழ: காலம் தாழ்க்க. சினவி: சினந்து. தெவ்வை: பகையை. மான: மிக்க. முனைய: கூரிய. முடிவு: அழிவை. (இதுவும் குளகம்).

1046 எடுத்த வேல்வ லம்தி ரித்துள றிந்த வேலே, வேல்முனை
மடுத்த வேலே, சுஃறெ னவ்வ றந்து மான வலிகெட,
அடுத்து வேரி வாகை இன்றி அடிவ ணங்கு தெவ்வரைக்
கடுத்து வேல்வ லான்க ளேய்க் காலின் மட்ட தானதே. 14

1047 சந்த வேத வேள்வி யைத்த டுப்ப துஅன்றி, உலகுஎலாம்
சிந்த வேறு சூழ்ச்சி செய்த தேவர் கோவின் ஏவலால்
வந்த வேலை வலிஅ ழிந்த; வஞ்ச கர்க்கு நன்றிசெய்து
இந்த வேலை வலிஇ ழப்பது என்றும் உள்ள தேகொலாம். 15

1048 புண்இடை நுழைந்த வேலால்
புணரியைப் புறம்கண் டோன்பால்,
மண்இடை நின்ற சித்தர்
வான்இடை மறைந்து, ஞானக்
கண்இடை நிறைந்து தோன்றும்
கருணையால் வடிவம் கொண்டு,
விண்இடை அணங்கி னோடு
விடைஇடை விளங்கி நின்றார். 16

1049 மூக்கணும், புயங்கள் நான்கும்
முளைமதிக் கண்ணி வேய்ந்த
செக்கர்அம் சடையும், காள
கண்டமும், தெரிந்து தென்னன்,
பக்கமே பணிந்துஎ ழுந்து
பரந்தபேர் அன்பும் தானும்,
தக்கஅஞ் சலிசெய்து ஏத்தி,
தரைமிசை நடந்து செல்வான். 17

---

1046 வலம்திரித்து: வலமாகச் சுழற்றி. மடுத்த: பொருந்திய. சுஃறென: ஒலிக்குறிப்பு. வறந்து: வற்றி. அடுத்து: நெருங்கி. வேரி: மணம். கடுத்து: போன்று. வேல் வலான்: வேற்போரில் வல்ல உக்கிரவழுதி.

1047. சந்தம்: பண். சிந்த: அழியுமாறு. தேவர்கோ: இந்திரன். நன்றிசெய்து: உதவி செய்து. இறுதிப்பகுதி வேற்றுப்பொருள் வைப்பணி.

1048. புணரி: கடல். புறம்கண்டோன்: புறங் கொடுக்கச்செய்த உக்கிரவழுதி. அணங்கினோடு: உமையம்மையோடு. விடைஇடை: காளை ஊர்தியில்.

1049. முளைமதி: பிறைத்திங்கள். செக்கர்: சிவந்த. காளகண்டம்: நீலகண்டம். தக்க: முறைப்படி.

1050 துந்துபி ஐந்தும் ஆர்ப்ப,
பாரிடம் தொழுது போர்ப்ப,
தந்திர வேத கீதம்
ததும்பிஎண் திசையும் தாக்க,
அந்தர நாடர் ஏத்த,
அகல்விசும்பு ஆறுஅது ஆக
வந்துதன் கோயில் புக்கான்;
வரவுபோக்கு இறந்த வள்ளல். 18

1051 அஞ்சலி முகிழ்த்துச் சேவித்து
அருகுற வந்த வேந்தன்,
இஞ்சிசூழ் கோயில் எய்தி
இறைஞ்சினன், விடைகொண்டு ஏகிப்
பஞ்சின்மெல் அடியார் அட்ட
மங்கலம் பரிப்ப நோக்கி,
மஞ்சுஇவர் குடுமி மாட
மாளிகை புகுந்தான் மன்னோ. 19

1052 வளைஎயில் மதுரை மூதூர்
மறிகடல் இவற்றின் நாப்பண்,
விளைவயல் நகரம் எல்லாம்,
வெள்ளிஅம் பலத்துள் ஆடும்
தளைஅவிழ் கொன்றை வேணித்
தம்பிரான் தனக்கே சேர்த்து
களைகணாய் உலகுக்கு எல்லாம்
இருந்தனன் காவல் வேந்தன். 20

---

1050. பாரிடம்: பூதகணங்கள். தந்திரம்: சிவாகமங்கள். அந்தரநாடர்: வானநாடர். ஆறு: வழி. வரவுபோக்கு இறந்த வள்ளல்: பிறப்பு இறப்பு அற்ற இறைவன்.
"போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே" — திருவாசகம்

1051. மெல்லடியார்: மென்மையான பாதங்களை உடைய மகளிர். பரிப்ப: தாங்கி எதிர்வர. மஞ்சுஇவர்குடுமி: மேகங்கள் தவழும் உச்சி.

1052. வளைஎயில்: வளைந்த மதில் (சூழ்ந்த). நாப்பண்: நடுவில் உள்ள. களைகணாய்: பற்றுக்கோடாய். காவல்வேந்தன்: புரவலனாகிய உக்கிரபாண்டியன்.

# இந்திரன் முடிமேல் வளை எறிந்த படலம்

1053 மின்அவிர் மணிப்பூண் மார்பன்
வேலையை வேலால் வென்று,
பொன்அவிர் வாகை வேய்ந்த
புகழ்உரை செய்தேம்; நாக
நல்நகர் ஆளி செம்பொன்
நகைமுடி சிந்த, அந்த
மன்னவன் வளைகொண்டு ஓச்சி
வென்றதும் வகுத்துச் சொல்வாம். 1

1054 கோமகன் நிகழும் நாளில்
கோள்நிலை பிழைத்து, கொண்மூ
மாமழை மறுப்ப, பைங்கூழ்
வறந்து,புல் தலைகள் தீந்து,
காமரு நாடு மூன்றும்
கையறவு எய்த, மன்னர்
தாம்அது தீர்வு நோக்கித்
தமிழ்முனி இருக்கை சார்ந்தார். 2

1055 முனிவனை அடைந்து, வேந்தர் மூவரும் தங்கள் நாட்டில்
பனிவரு மாரி இன்றி வறந்தமை பகர, மேருக்
குனிவரு சிலையாற்கு அன்பன் கோள்நிலை குறித்து நோக்கி,
இனிவரும் மாரி இல்லை; யாதினால் என்னில்? கேண்மின்! 3

---

1053 மணிப்பூண் மார்பன்: உக்கிரவழுதி. வாகை வாகைமாலை; வெற்றிக்கு அடையாள மாலை. நாகநகர்: வான்உலகு ஆளி. இந்திரன்

1054. நிகழும்: கோல் ஓச்சும் கோள்: கிரகம். கொண்மூ. மேகம் மறுப்ப: பெய்யாது நீங்க பைங்கூழ் பயிர்கள். தீந்து: கருகி. நாடு மூன்றும்: சேர, சோழ, பாண்டியநாடுகள். கையறவு: துன்பம் தமிழ்முனி. அகத்திய முனிவன். இருக்கை: பொதியம்.

1055 பனி: குளிர்ச்சி, குறித்து நோக்கி: ஆராய்ந்துபார்த்து.

## 14. இந்திரன் முடிமேல் வளை எறிந்தது



காய்சின மடங்கல் அன்னுன் கைவளை சுழற்றி வல்லே
வீசினன்; குலிசம் தன்னை வீழ்த்து,அது விடுத்தான் சென்னித்
தேசின்நல் மகுடம் தள்ளிச் சிதைத்தது; சிதைத்த லோடும்
கூசினன் அஞ்சிப் போனுன் குன்றுஇறகு அரிந்த வீரன் 1105

1056 காய்சின வெய்யோன் சேயோன்
முன்செல, கதிர்கால் வெள்ளித்
தேசிகன் பின்பு சென்று
நடக்கும்இச் செயலால், முந்நீர்த்
தூசின உலகில் பன்னீர்
ஆண்டுவான் சுருங்கும் என்று
பேசின நூல்கள்; மாரி
பெய்விப்போன் சென்று கேண்மின். 4

1057 என்றவன் எதிர்"யாம் எவ்வாறு
ஏகுதும்"? என்றார், ஐந்தும்
வென்றவன் "சோம வார
விரதநீர் நோற்று, வெள்ளி
மன்றவன் அருளைப் பெற்று,
வான்வழிச் செல்மின்"! என்றுஅக்
குன்ற,வன் சிலையான் நோன்பின்
விதியினைக் கூறு கின்றான். 5

1058 உத்தம ரானோர் தம்முள் உத்தமன் ஆகும் ஈசன்;
உத்தம சத்தி மாருள் உத்தமி உருத்தி ராணி;
உத்தம விரதம் தம்முள் உத்தமம் திங்கள் நோன்புஎன்று
உத்தம மறைநூல் ஆதி உரைக்கும்:இச் சோம வாரம். 6

1059 மந்தரம் காசி ஆதி
பதிகளில் வந்து நோற்கத்
தந்திடும் பயனில், கோடி
தழைத்திடும் மதுரை தன்னில்
இந்தநல் விரதம் நோற்பார்க்கு;
அதிகம்யாது என்னில் சோம
சுந்தரன் உரிய வாரம்
ஆதலால் சோம வாரம். 7

---

1056. வெய்யோன்: சூரியன். சேயோன்: செவ்வாய். வெள்ளித்தேசிகன்: சுக்கிரனாகிய குரவன் முந்நீர்: கடல். தூசு: ஆடை. வான் சுருங்கும்: மழை குறையும். மாரி பெய்விப்போன்: இந்திரன். கேண்மின்: பெய்விக்க வேண்டுமெனக் கேளுங்கள்.

1057. ஐந்தும் வென்றவன்: ஐம்புலன் அடக்கிய அகத்தியன்.

1058. உருத்திராணி: உமாதேவி. ஆதி. முதலிய.

1059. தழைத்திடும்: பயன்மிகும். சோமசுந்தரக் கடவுளுக்கு உரிய வாரமாதலால் சோம வாரம் எனப்பட்டது.

1060 அங்குஅதின் அதிகப் பேறுஉண்டு;
அருக்கனின் மதிதோய்ந்து ஒன்றித்
தங்கிய திங்கள் நோன்பு
தகுதியின் நோற்க வல்லார்க்கு;
இங்குஅதின் அதிக நீதி
ஈட்டிய பொருள்கொண்டு ஆற்றும்
மங்கல விரதப் பேறுஒன்று
அனந்தமாய் வளரும் அன்றே. 8

1061 நலம்மலி விரதம் நோற்பத்
தொடங்கும்நாள் நவில்வாம்; தேளில்
சிலையினில் ஆதல் அன்றி,
இரட்டிய தெரிசம் சேர்ந்த
மலமதி ஒழித்து, மற்றை
மதியிலும் முந்தைப் பக்கத்து
அலர்கதிர் வாரத்து அல்ஊண்
அயின்றிடாது அயலில் துஞ்சா, 9

1062 வைகறை எழுந்து, சேல்கண்
மணாளனை உள்கி, அற்றைச்
செய்கடன் நிறீஇ, காமாதி
சிந்தைநீத்து, அலர்பொன் கஞ்சப்
பொய்கையை அடைந்து, கையில்
பவித்திரம் புனைந்து, வாக்கு
மெய்கருத்து ஒருப்பாடு எய்த,
சங்கற்பம் விதந்து கூறி, 10

---

1060. அருக்கன்: சூரியன். அமாவாசையில் வருகின்ற திங்கட்கிழமை மிகச் சிறப்புடையது. அந்நாளில் நோற்பார் மிகப் பயன்பெறுவர்.

1061. நவில்வாம்: சொல்வாம். தேள்: கார்த்திகை மாதம். சிலை: மார்கழி மாதம். அன்றி: அல்லாமல். தெரிசம்: அமாவாசை. மலமதி: குற்றம் உடைய மாதம். முந்தைப் பக்கம்: சுக்கிலபக்கம். அல்: இரவு. ஊண்: உணவு. அயின்றிடாது: உண்ணாமல். அயல்: வேற்றிடம், இடக்கரடக்கல். (இப்பாடல் குளகம்).

1062. (இப்பாடலும் குளகம்). மணாளன். சோமசுந்தரக் கடவுள். நிறீஇ: முடித்து. காமாதி: காமம, வெகுளி, மயக்கம். சிந்தைநீத்து: மனத்தினின்றும் நீக்கி. பொன்கஞ்சப் பொய்கை: பொற்றாமரைக்குளம். வாக்கு மெய் கருத்து: உரையும் உடலும் உள்ளமும். விதந்துகூறி: சிறப்பாக எடுத்துரைத்து.

1063 கடம்புஅடி முளைத்த முக்கண்
கரும்பினை நினைந்து, ஞாலத்து
இடம்படு தீர்த்தம் எல்லாம்
ஆடிய பயனை ஈண்டுத்
திடம்படத் தருதி என்னாத்
திரைத்தடம் படிந்து, வெண்ணீறு
உடம்புஅணிந்து, அக்க மாலை
ஒளிபெற விதியால் தாங்கி, 11

1064 வெள்ளைமந் தாரம், முல்லை
மல்லிகை, வெடிவாய்ச் சாதி,
கள்அவிழ் மயிலை, ஆதி
வெண்மலர் கவர்ந்து, வேழப்
பிள்ளையை முந்தப் பூசித்து,
இரந்துசங் கற்பம் பேசி,
உள்அணைந்து உச்சி மேல்பன்
இருவிரல் உயர்ச்சிக்கு உம்பர், 12

1065 சத்திய ஞான னந்தத்
தத்துவம் தன்னை உள்கி
வைத்துஅதன் வடிவம் கொண்டு
மண்முதல் சிவம்ஈறு ஆன
அத்துவ இலிங்கம் தன்னை,
ஆசன மூர்த்தி மூல
வித்தைமற் றுலும் நூலின்
விதியினுல் பூசை செய்க. 13

---

1063. (இப்பாடலும் குளகம்). கடம்பு: கடம்ப மரம். முக்கண் கரும்பு: இறைவன்.

1064. (இப்பாடலும் குளகம்). மயிலை: இருவாட்சி. வேழப்பிள்ளை: விநாயகக்கடவுள். இரந்து: குறைஇரந்து. உச்சிமேல் பன் இருவிரல்: துவாத சாந்தம். உம்பர்: மேலே.

1065. சத்தியஞான ஆனந்தத் தத்துவம்: உண்மை அறிவு ஆனந்தமயமாகிய சிவ பெருமான். உள்கி: நினைத்து. ஆசனம் மூர்த்தி மூலம்: ஆசன மந்திரம், மூர்த்தி மந்திரம், மூலமந்திரம். நூலின் விதி: ஆகம விதி.

1066 ஐந்துஅமுது, ஆவின் ஐந்து,
நறுங்கனி ஐந்து, செந்தேன்,
சந்தன தோயம், புட்பத்
தண்புனல், பனிநீர் ஆட்டி,
சுந்தர வெண்பட்டு ஆடை,
கருப்புரச் சுண்ணம், சாந்தம்,
கந்தமல் லிகைமுன் ஆன
வெண்மலர்க் கண்ணி சாத்தி. 14

1067 காசுஅணி பொலம்பூண் சாத்தி,
கனைகழல் ஆதி அங்க
பூசனை செய்து, சேல்கண்
பூரணப் பரையை அவ்வாறு
ஈசன்ஐந்து எழுத்தைப் பெண்பாற்கு
இசையஉச் சரித்துப், பூசித்து,
ஆசுஅறு சுரபித் தீம்பால்
அட்டஇன் அமுதி னோடும், 15

1068 பண்ணிய வகை,பா னீயம்
நிவேதனம் பண்ணி, வாசம்
நண்ணிய அடைக்காய் நல்கி,
நறுவிரைத் தூபம் தீபம்
எண்ணிய வகையால் கோட்டி,
கண்ணாடி யேனை மற்றும்
புண்ணியன் திருமுன் காட்டி,
வில்வத்தால் பூசை செய்தல். 16

---

1066. ஐந்து அமுது: பஞ்சாமிர்தம். ஆவின் ஐந்து: பஞ்சகவ்வியம் சந்தன தோயம்: சந்தனக் குழம்பு. ஆட்டி: திருமஞ்சனம் செய்து. கருப்புரச் சுண்ணம்: பச்சைக் கருப்பூரம். கந்தம்; மணம். கண்ணி: மாலை. (இப்பாடல் குளகம்).

1067 (இப்பாடலும் குளகம்). காசு: மணிகள். அங்கபூசனைசெய்து: திருவங்கங்களைப் பூசித்து. சேல்கண் பூரணப்பரை: கயற்கண்ணியாகிய பராசக்தி. ஆசுஅறு: குற்றமற்ற. சுரபித்தீம்பால்: நல்லாவின்பால்.

1068. பண்ணியவகை: பலகார வகை பானீயம்: பானகம். அடைக்காய்: தாம்பூலம். கோட்டி: வளைத்து, சுழற்றி. செய்தல்: செய்யக்கடவர்.

1069 புரகரன் இச்சா ஞானக் கிரியையாய்ப் போந்த வில்வ
மரமுதல் அடைந்து, மூன்று வைகல்ஊண் உறக்கம் இன்றி
அரகர முழக்கம் செய்வோர், ஐம்பெரும் பாத கங்கள்
விரகில்செய் கொலைகள் தீரும்; ஆதலால் விசேடம் வில்வம். 17

1070 மடங்குஇதழ் சுருங்கல், வாடி உலர்ந்தது,மயிர்ச்சிக்கு உண்டல்
முடங்குகால் சிலம்பிக் கூடு, புழுக்கடி முதலாம் குற்றம்
அடங்கினும் குற்றம் இல்லை; உத்தமம் ஆகும் வில்வம்;
தடம்கைகொண்டு ஈசன் நாமம் ஆயிரம் சாற்றிச் சாத்தல். 18

1071 "அடியனேன் செய்யும் குற்றம்
அன்றைக்குஅன்று அனந்தம் ஆகும்;
கொடியநஞ்சு அமுதாக் கொண்டாய்!
குற்றமும் குணமாக் கொண்டு,
படிஎழுத அரிய நங்கை
பங்கனே! காத்தி என்று
முடிஉற அடியில் வீழ்ந்து
மும்முறை வலம்செய்து ஏத்தி, 19

1072 வன்மனம் கரைய நின்று வேண்டிய வரங்கள் வேண்ட,
நன்மணப் பேறு, மக்கள் பேறு,நல் வாக்கு, கல்வி,
பொன்,மனக்கு இனிய போகம், தெவ்வரைப் புறகு காண்டல்,
இம்மையில் அரசும் மற்றும், எண்ணியாங்கு எய்தும் மன்னோ.

---

1069. புரகரன்: புரம் எரித்தவன்; சிவபெருமான். வைகல்: நாள். ஊண்: உணவு. விரகு: அறிவின்மை. வில்வ இலையின் மூன்று கவர்களும் இறைவனின் மூன்று சத்திகளின் வடிவம் என்க.

1070. இதழ் சுருங்கியும், வாடி உலர்ந்தும், சிக்குண்டும், சிலந்தி கூடுகட்டியும், புழுக்கடித்தும் குற்றமுடையதாக இருந்தாலும், வில்வம் சிறந்தது என்பது கருத்து. சாத்தல்: அருச்சிக்க.

1071 (இப்பாடல் குளகம்). அன்றைக்கு அன்று: ஒவ்வொருநாளும். அனந்தம்: எண்ணற்றவை. படி: ஒப்பு முடிஉற: திருமுடி பொருந்துமாறு

1072. வன்மனம்: வலியமனம். பொன்: பொருள். தெவ்வர்: பகைவர். புறகு: தோற்றுப் புறகிடல்.

1073 ஆதிஇவ் இலிங்கம் தீண்டற்கு
அருக்கர்அல் லாத வேத
வேதியர் முதலோர் இட்ட
இலிங்கத்துஇவ் விதியால் அர்ச்சித்து
ஓதிய விரதம் நோற்க;
அர்ச்சனைக்கு உரியர் அல்லாச்
சாதியர் பொருள்நேர்ந்து ஆதி
சைவரால் பூசை செய்தல். 21

1074 பொருவில்இவ் விரதம் ஐவகைத்து; உச்சிப்
போதில்ஊண், இரவில்ஊண், இரண்டும்
ஒருவுதல், உறங்காது இருத்தல்,அர்ச் சனை நால்
யாமமும் உஞற்றுதல், என்ன;
கருதின்இவ் ஐந்தும் ஒன்றனுக்கு ஒன்று
கழியவும் அதிகமாம்; நோற்கும்
வருடம்ஒன்று இரண்டு மூன்றுபன் னிரண்டு
வருடம்வாழ் நாள்அளவு; இவற்றுள், 22

1075 உடல்அளவு எண்ணி நோற்பவர், மூந்த
உத்தியா பனம்செய்து நோற்கத்
கடவர்;அவ் வருடக் கட்டளைக்கு இறுதி
கழிப்பது;உத் தாபன விதிதான்
மடல்அவிழ் மாலை மண்டபம் குண்டம்
மண்டலம் வகுத்து,உமா பதியைப்
படர்ஒளி வெள்ளி முப்பது கழஞ்சில்
படிமையால் நிருமிதம் செய்து, 23

---

1073. தீண்டல்: தொட்டுப் பூசித்தல். அருகர்: உரியவர். வேதவேதியர்: வேதம் உணர்ந்த வேதியர். நேர்ந்து: கொடுத்து.

1074. பொருவில்: ஒப்பற்ற. ஒருவுதல்: நீக்குதல். உஞற்றுதல்: செய்தல். கழியவும்: மிகுதியும். அதிகமாம்: சிறந்ததாகும். (இப்பாடல் குளகம்).

1075. (இப்பாடலும் குளகம்). உடல் அளவு: வாழ்நாள் அளவு. உத்தியாபனம்: சடங்கு. படிமை: திருவுருவம்.

1076 காலையில் ஆசான் சொல்வழி நித்தக்
கடன்முடித்து, உச்சிதொட்டு அந்தி
மாலையின் அளவும் புராண நூல் கேட்டு,
மாலைதொட்டு யாமம்ஓர் நான்கும்
சேல்அன கண்ணுள் பங்கனைப் பூசை
செய்க;அப் பூசனை முடிவின்
மூலமந் திரம்நூற்று எட்டுநூற்று எட்டு
முறையினால் ஆகுதி முடித்தல். 24

1077 வில்வம்ஆ யிரம்கொண்டு ஆயிர நாமம்
விளம்பிநால் யாமமும் சாத்தல்;
நல்லஐந்து எழுத்தால் ஐந்துஎழுத்து உருவில்
நாதனுக்கு அருக்கியம் கொடுத்தல்;
எல்லையில் மூல மந்திரத் தாலும்
ஏனைமந் திரங்களி னாலும்
வில்அழல் ஓம்பிப் பூரணா குதிசெய்து
ஈறுஇலான் வேள்வியை முடித்தல். 25

1078 புலர்ந்தபின் நித்த வினைமுடித்து, அரம்பைப்
பொதுளும்பா சிலைபதின் மூன்றில்
நலம்தரு தூவெள் அரிசிபெய்து, இனிய
நறியகாய் கறியொடு பரப்பி,
அலந்தர ஆன்பால் நிறைகுடம் பதின்மூன்று
அரிசிமேல் வைத்து,அரன் அடியில்
கலந்தஅன் பினராய்ச் சிவார்ச்சனைக் குரிய
கடவுள்வே தியர்களை வரித்து, 26

---

1076. நித்தக்கடன்: நாட்கடமைகள். புராண நூல்: சிவபுராணங்கள். முடித்தல்: முடிக்கக் கடவர்.

1077. அருக்கியம்: நீராற் செய்யும் உபசாரம். வில் அழல்: வில் வடிவில் அமைந்த வேள்வித் தீ. ஈறு இலான்: சோமசுந்தரக் கடவுள்.

1078. அரம்பை: வாழை. பொதுளும்: செழித்த. அலந்தர: அமைவு பெற. கடவுள் வேதியர்: ஆதி சைவர்கள். வரித்து: அழைத்து. (இப்பாடல் குளகம்)

1079 காதணி கலனும் கையணி கலனும்
 கவின்பெற அளித்து,அரன் ஆக
ஆதரம் பெருக நினைந்துஅருச் சனைசெய்து,
 அரியதக் கிணையொடும் பாதப்
போதுஅணி காப்பு விசிறிதண் கவிகை
 பூம்துகில் முதல்பல வுடனே
மேதகு தானம் செய்து,பின் குருவைக்
 கற்புடை மின்னிடை யோடும், 27

1080 ஆசனத்து இருத்தி, பொலம்துகில் காதுக்கு
 அணிகள்கைக்கு அணிகளும் அணிந்து,
வாசநன் மலர்இட்டு அருச்சனை செய்து,
 மலைமகள் தலைவனை வரைந்து
பூசனை செய்த படிமையோடு அம்பொன்
 பூதலம் பதாதிகள் பிறவும்,
தூசுஅலர் மாலை கோட்டுஅணி புனைந்த
 சுரபிமா தானமும் செய்து, 28

1081 இனையவாறு உத்தா பனம்முடித்து, ஆசான்
 ஏவலால் சிவன்அடிக்கு அன்பர்
தனையரோடு ஒக்கல் உடன்அமுது அருந்தல்
 தகுதி;இவ் விரதம்முன் கண்ணன்
அனையதா மரையோன் இந்திரன் முதல்வான்
 நாடவர் மூஅறு கணத்தோர்
அனைவரும் நோற்றார்; மனிதரும் அனுட்டித்து
 அரும்பெறல் போகம்வீடு அடைந்தார். 29

---

1079. அரன்: சிவபெருமான். ஆதரம்: அன்பு. பாதப் போது அணிகாப்பு: பாதரட்சை. (இப்பாடலும் குளகம்)

1080. துகில்: ஆடை. வரைந்து: நிருமித்து. படிமை: திருவுருவம். பூதலம்: பூமிதானம். பதாதி: ஏவலர். சுரபி மாதானம்: கோதானம். (இப்பாடலும் குளகம்)

1081. உத்தாபனம்: வழிபாடுகள். தனையர்: மக்கள். ஒக்கல்: சுற்றத்தினர் விரதம்: சோமவார விரதம். கண்ணன்: திருமால். தாமரையோன்: பிரமன். வான்நாடவர்: தேவர். அனுட்டித்து: நோற்று.

1082 ஈதுநோற் பவர்வெம் பகைமனத் துயர்நீத்து,
ஆயிரம் பிறவியில் இயற்றும்
தீதுசேர் வினைதீர்ந்து, எடுத்தயாக் கையினில்
சிவகதி அடைவர்;இவ் விரதம்
ஓதினோர் கேட்டோர் மனைவியர் மக்கள்
ஒக்கலோடு இனிதுவாழ்ந்து உம்பர்
மேதகு பதினால் இந்திரன் பதத்தில்
வீற்றுஇனிது இருப்பர்என்று அறவோன். 30

1083 சொல்லிய நெறியால் சோம
சுந்தரன் விரதம் நோற்பான்
வில்இடு மணிப்பூண் வேந்தர்
முனிவனை விடைகொண்டு ஏகி,
அல்லியம் கனகக் கஞ்சத்து
ஆடிஅங் கயற்கண் வல்லி
புல்லிய பாகன் தன்னை
வழிபடீஇப் போற்றி நோற்றார். 31

1084 சுந்தரன் தன்னைப் பூசைத்
தொழில்செய்து வரம்பெற்று ஏகி
அந்தரத்து ஆறு செல்வார்;
அஃதுஅறிந்து அமரர் வேந்தன்
வந்தவர் இருக்க வேறு
மடங்கல்மான் தவிசு மூன்று
தந்திடப் பணித்தான்; இட்டார்
தனதுஅரி அணையில் தாழ. 32

---

1082. ஆயிரம்: எண்ணற்ற. உம்பர்: தேவர் உலகு. பதினால் இந்திரன் பதம்: பதினான்கு இந்திரப் பட்டம் அளவும் அறவோன் அருளிச் செய்தனன் என வருவித்து முடிவு கொள்க.

1083. விரதம்: சோமவாரவிரதம். நோற்பான்: நோற்கும் பொருட்டு. வில்: ஒளி. கனகக் கஞ்சத்துஆடி: பொற்றாமரையில் நீராடி. புல்லிய: தழுவிய.

1084. செல்வார்: செல்வார் ஆயினர். மடங்கல்மான்: சிங்கம்.

1085 வான்வழி வந்த மூன்று
மன்னரும் பொன்நாடு எய்தி,
ஊன்வழி குலிச வைவேல்
உம்பர்கோன் மருங்கில் புக்கார்;
தேன்வழி போந்தின் கண்ணிச்
சேரனும் ஆர்த்தார் வேந்தும்
கான்வழி தாரு நாடன்
காட்டிய தவசின் வைக, 33

1086 மைக்கடல் வறப்ப வென்ற
வாகைவேல் செழியன், மௌலிச்
செக்கர்மா மணிவில் காலத்
தேவர்கோன் தவிசில் ஏறி
ஒக்கவீற்று இருந்தான்; ஆக
உம்பர்கோன் அழுக்காறு எய்திப்
பக்கமே இருந்த ஏனைப்
பார்த்திபர் முகத்தைப் பாரா, 34

1087 முகமன்நன்கு இயம்பி "நீவிர்
வந்ததுஎன்? மொழிமின்" என்ன,
மகபதி! எங்கள் நாட்டின்
மழைமறுத்து அடைந்தேம் என்றார்;
அகம்மலர்ந்து அனையார் நாட்டின்
அளவும்வான் சுரக்க நல்கி,
நகைமணிக் கலன்பொன் ஆடை
நல்கிநீர் போமின் என்றான். 35

---

1085. குலிசம்: வச்சிராயுதம். வைவேல்: கூரியபடை. மருங்கில்: அருகில். போந்து: பனை. ஆர்: ஆத்தி. வேந்து: சோழன். தாரு: கற்பத்தரு. தவிசு: இருக்கை. வைக: அமர. (இப்பாடல் குளகம்)

1086. மை: கரிய. வாகை: வெற்றி. மௌலி: முடி. செக்கர்: சிவந்த. வில்: ஒளி. கால: வீச. ஏனைப் பார்த்திபர்: சேரனும் சோழனும். பாரா: பார்த்து. (இப்பாடலும் குளகம்)

1037. மகபதி: இந்திரனே. மறுத்து: மறுத்தலால். அனையார்: சேர, சோழர்கள்.

1088 அன்னவர் அகன்ற பின்னை,
அமரர்கோன் கன்னி நாடன்
தன்அரி அணைமேல் ஒக்கத்
தருக்கினோடு இருக்கும் ஆறும்
பின்னரும் மாரி வேண்டாப்
பெருமித வீறும் நோக்கி,
இன்னது புலப்ப டாமை
இனையதோர் வினையம் உன்னு, 36

1089 பொற்புற வரிசை செய்வான்
போல்அளவு இறந்தோர் தாங்கி
வெற்புஉறழ் திரள்தோள் ஆற்றல்
மெலிவதோர் ஆரம் தன்னை
அற்புற அளித்தான்; வாங்கி
அலர்மதுத் தார்போல் ஈசன்
கற்புடை உமையாள் மைந்தன்
கதும்எனக் கழுத்தில் இட்டான். 37

1090 கண்டனன், கடவுள் நாதன்;
கழியவும் இறும்பூது உள்ளம்
கொண்டனன்; "இன்று தொட்டு,
குரைஅளி துழாவு நிம்பத்
தண்தழை மார்ப! ஆரம்
தாங்குபாண் டியன்என்று உன்னை
மண்டலம் மதிக்க" என்றான்
வானநாடு உடைய மன்னன். 38

---

1088. கன்னிநாடன்: உக்கிர வழுதி. ஒக்க: சமமாக. வினையம்: சூழ்ச்சி. உன்னு: நினைத்து (இப்பாடல் குளகம்).

1089. பொற்பு: அழகு. வரிசை: சிறப்புகள். தாங்கி: தாங்கிவரப்பட்டு. வெற்பு: மலை. உறழ்: ஒத்த ஆரம்: மாலை அற்பு. அன்பு. உமையாள் மைந்தன்: உக்கிரவழுதி. கதும்என: விரைவாக. இட்டான்: அணிந்து கொண்டான்.

1090. கண்டனன்: கண்டனனாய். கொண்டனன்: கொண்டனனாய். முற்றெச்சங்கள். கழியவும்: மிகவும். இறும்பூது: மகிழ்ச்சி. குரை: ஒலிக்கின்ற. அளி: வண்டு. நிம்பம்: வேம்பு. மண்டலம்: உலகம்.

1091 அன்னது சிறிதும் எண்ணாது
அங்குநின்று இழிந்து தென்னன்
தன்னகர் அடைந்தான்; இப்பால்
சதமகன் ஆணை யால்அம்
மன்னவர் இருவர் நாடும்
மழைவளம் பெருகப் பெய்த;
தென்னவன் நாடு பண்டைச்
செயலதாய் இருந்தது அன்றே. 39

1092 ஆயதுஓர் வைகல், வேட்டை
ஆடுவான் அண்ணல் விண்ணம்
தாயதோர் பொதியக் குன்றில்
சந்தனச் சாரல் நண்ணி,
மேயதோர் அரிமான் ஏனம்
வேங்கை,எண்கு இரலை இன்ன
தீயதோர் விலங்கு வேட்டம்
செய்துஉயிர் செகுக்கும் எல்லை, 40

1093 பொன்தத்தும் அருவிக் குன்றில்
புட்கலா வருத்தம் ஆதி
மின்தத்தும் மேகம் நான்கும்
வீழ்ந்தன மேயக் கண்டு,
குன்றத்தின் நெடிய திண்தோள்
கொற்றவன் அவற்றைப் பற்றிக்
கன்றத்தின் களிறு போலக்
கடும்தளை சிக்க யாத்தான். 41

---

1091. இழிந்து: இறங்கி. தென்னன்: பாண்டியன். சதமகன்: இந்திரன், பெய்த: பொழிந்தன பண்டைச் செயல்: மழையின்றி இருத்தல்.

1092. வைகல்: நாள். அண்ணல்: பாண்டியன், விண்ணம்: வானுலகு. தாயது: ஊடுருவியது நண்ணி: நெருங்கி. ஏனம்: பன்றி எண்கு: காடி. இரலை: மான். செகுக்கும்: அழிக்கும். எல்லை: பொழுதில். (இப்பாடல் குளகம்)

1093. தத்தும்: கொழிக்கும். ஆதி: முதலான வீழ்ந்தன: விழுந்து தன்ற: வருந்துமாறு. யாத்தான்: கட்டினான்,

1094 வேட்டத்தில் பட்ட செங்கண்
வேழம்போல் கொண்டு போகிக்
கோட்டத்தில் இட்டான் ஆக,
குன்றுஇறகு அரிந்த வென்றி
நாட்டத்துப் படிவத்து அண்ட
நாடன்மற்று அதனைக் கேட்டு,
காட்டத்துக் கனல்போல் சீறிக்
கடுப்சமர் குறித்துச் செல்வான். 42

1095 வாங்குநீர் வறப்ப வேலை
விடுத்ததும், வலிய ஆரம்
தாங்கிய செருக்கும், காரைத்
தளையிடு தருக்கும் நோக்கி,
ஈங்குஒரு மனித யாக்கைக்கு
இத்துணை வலியாது என்று
வீங்கிய மானம் ஊக்க
மீனவன் மதுரை சூழ்ந்தான். 43

1096 ஓடினர் ஒற்றர்போய்ச் செழியன் ஒண்கழல்
சூடினர் நகர்ப்புரம் சுரர்கள் சேனைகண்
மூடின என்னலும், முனிவும் மானமும்
நீடினன் அரியணை இழிந்து நீங்குவான். 44

1097 பண்ணுக தேர்பரி பகடு, வீரர்முன்
நண்ணுக கடிதுஎன நடத்தி யாவர்என்று
எண்ணலன் மதமலை எருத்தம் மேல்கொடு
கண்அகன் கடிநகர் காப்பு நீங்குமுன், 45

---

1094 வேட்டத்தில்: வேட்டையில். வேழம்: யானை. கோட்டம்: சிறை. அண்ட நாடன்: இந்திரன். காட்டம்: விறகு.

1095. வாங்குநீர்: வளைந்தகடல். செருக்கு: பெருமிதம். கார்: மேகம். தருக்கு: செருக்கு வீங்கிய: மேல் எழுந்த. ஊக்க: செலுத்த.

1096. சுரர்: தேவர். மூடின: வளைத்தன. ஓடினர், சூடினர், நீடினன் முற்றெச்சங்கள். நீங்குவான்: செல்கின்ற பாண்டியமன்னன்.

1097. பண்ணுக: ஒப்பனை செய்க. மதமலை: யானை. எருத்தம்: பிடரி. கடி: காவல், காப்பு: மதில். (இப்பாடல் குளகம்),

1098 அடுத்தனர் வானவர் ஆர்த்து, பல்படை
எடுத்தனர் வீசினர், சிலையில் எய்கணை
தொடுத்தனர், இறுதிநாள் சொரியும் மாரிபோல்
விடுத்தனர் மதிக்குல வீரன் சேனைமேல். 46

1099 ஆர்த்தனர் மலயவெற்பு அரையன் சேனையோர்,
பார்த்தனர் வேறுபல் படைக்க லக்குவை
தூர்த்தனர், குனிசிலை தொடுத்து வாளியால்
போர்த்தனர் அமரர்மெய் புதைத்த என்பவே. 47

1100 தறிந்தன தாள்;சிரம் தகர்ந்த; தோள்கரம்
பறிந்தன; குருதிநீர் கடலில் பாய்ந்தன;
செறிந்தன பாரிடம் சேனம் கூளிகள்;
முறிந்தன வானவர் முதல்வன் சேனையே. 48

1101 ஆடின குறைத்தலை; அவிந்த போர்க்களம்;
பாடின பாரிடம்; விந்தைப் பாவைதாள்
சூடின கூளிகள்; சோரி சோரப்பார்
மூடின பிணக்குவை அண்டம் முட்டவே. 49

1102 வெஞ்சின வலாரிதன் வீரச் சேனைகள்
துஞ்சின கண்டு,எரி சொரியும் கண்ணனாய்,
பஞ்சின்முன் எரிஎனப் பதைத்து, தெய்வத
வஞ்சினப் படைகளால் மலைவது உன்னினான். 50

---

1098. இறுதிநாள்: ஊழிக்காலம். மதிக்குலவீரன்: உக்கிரவழுதி.

1099. மலயவெற்பு: பொதிகைமலை அரையன்: பாண்டியன்.

1100. தறிந்தன: அறுபட்டன. பறிந்தன: குறைபட்டன. பாரிடம்: பூதங்கள், சேனம்: பருந்துகள். கூளி: பேய். முறிந்தன: நிலைகெட்டன.

1101. குறைத்தலை: கவந்தங்கள். விந்தைப் பாவை கொற்றவை. சோரி: இரத்தம். சோர: ஒழுக.

1102 வலாரி: இந்திரன். துஞ்சின இறந்துபட்டவை. வஞ்சினம்: நெடுமொழி, மலைவது போர்செய்வது. உன்னினான்: கருதினான்.

1103 வெம்கதிர்ப் படைவிட்டு ஆர்த்தான்
விண்ணவன்; அதனைத் திங்கள்
பைங்கதிர்ப் படைதொட்டு ஓச்சி
அவித்தனன் பாராள் வேந்தன்;
சிங்கவெம் படைவிட்டு ஆர்த்தான்
தேவர்கோன்; அதனைச் சிம்புள்
புங்கவன் படைதொட்டு ஓச்சி
அடக்கினன் புணரி வென்றோன். 51

1104 தானவர் பகைவன் மோக
சரப்தொடுத்து எறிந்தான் ஆக,
மீனவன் அதனை ஞான
வாளியால் விளித்து மாய்ந்து
போனபின், மல்போர் ஆற்றப்
புக்கனர்; புக்கார் தம்மில்
வானவன் மண்ணவி னன்மேல்
வச்சிரம் வீசி ஆர்த்தான். 52

1105 காய்சின மடங்கல் அன்னான்
கைவளை சுழற்றி வல்லே
வீசினன்; குலிசம் தன்னை
வீழ்த்து,அது விடுத்தான் சென்னித்
தேசின்நல் மகுடம் தள்ளிச்
சிதைத்தது; சிதைத்த லோடும்
கூசினன் அஞ்சிப் போனான்
குன்றுஇறகு அரிந்த வீரன். 53

1103. வெம்கதிர்ப்படை: பரிதிக்கணை. திங்கள் பைங்கதிர்ப்படை: நிலவுக்கணை. சிங்க வெம்படை: நரசிங்கக்கணை. சிம்புள்படை: சரபக்கணை. புங்கம்: உயர்ச்சி.

1104. மோகசரம்: மோகக்கணை. ஞானவாளி: அறிவுக்கணை. வானவன்: இந்திரன். மண்ணவினன்: பாண்டியன்.

1105. வல்: விரைவு. அதுவிடுத்தான்: குலிசப்படையை விடுத்த இந்திரன். சென்னி: தலை. தேசு: ஒளி. கூசினன்: நாணினனாய்.

1106 இந்துஇரண்டு அனைய கூர்ம்பல்
இருள்வரை நெஞ்சு போழ்ந்த
மைந்தனில் வலிய காளை,
வரைந்துஎறி நேமி, சென்னி
சிந்திடா தாகி அம்பொன்
மணிமுடி சிதற, சோம
சுந்தர நாதன் பூசைத்
தொழில்பயன் அளித்தது என்ன, 54

1107 போரினுக்கு ஆற்றாது ஓடிப்
பொன்நகர் புகுந்த வென்றித்
தாரினுக்கு இசைந்த கூர்வேல்
சதமகன், பின்பு நின் நாட்டு
ஊரினுக்கு எல்லாம் மாரி
உதவுவேன், நிகளம் நீக்கி
காரினைத் தருக என்று,
கவுரியற்கு ஓலை விட்டான்- 55

1108 முடங்கல்கொண்டு அணைந்த தூதன்
முடிகெழு வேந்தன் பாதத்து
ஒடுங்கிநின்று ஓலை நீட்ட,
உழையுளான் ஒருவன் வாங்கி,
மடங்கல்ஏறு அனையான் முன்னர்
வாசித்துக் காட்டக் கேட்டு,
விடம்கலுழ் வேலான் விண்ணோர்
வேந்துஉரை தேறான் ஆகி, 56

---

1106. இந்து: (பிறை) மதி. இருள்வரை நெஞ்சு: கிரவுஞ்சனது மார்பு. போழ்ந்த: பிளந்த. மைந்தன்: முருகக் கடவுள். நேமி: திகிரிப் படை அளித்தது: காத்தது. (இப்பாடல் குளகம்).

1107. ஓடி: தோற்றுப் புறங்கொடுத்து ஓடி. நிகளம்: விலங்கு. கார்: மேகங்கள். கவுரியன்: பாண்டியன்.

1108. முடங்கல்: கடிதம். உழை: பக்கம். மடங்கல்ஏறு: ஆண் சிங்கம். கலுழ்: உமிழும் தேறான்: தெளியான் (இப்பாடல் குளகம்).

1109 இட்டவன் சிறையை நீக்கி
எழிலியை விடாது மாறு
பட்டசிந் தையனே ஆக,
பாகசா தனனுக்கு என்று
நட்டவன் ஒருவே ளாளன்
நான்பிணை என்று தாழ்ந்தான்;
மட்டுஅவிழ்ந்து ஒழுகும் நிம்ப
மாலிகை மார்பி னனும், 57

1110 இடுக்கண்வந்து உயிர்க்கும் ஊற்றம்
எய்தினும் வாய்மை காத்து
வடுக்களைந்து ஒழுகும் வேளாண்
மரபினன் உரையை, ஆத்தன்
எடுத்துஉரை மறைபோல் சூழ்ந்து
சிறைக்களத்து இட்ட யாப்பு
விடுத்தனன்; பகடு போல
மீண்டன மேகம் எல்லாம். 58

1111 தேவர்கோன் ஏவ லாலே திங்கள்மும் மாரி பெய்து
வாவியும் குளனும் யாறும் மடுக்களும் மடுத்து, கள்வாய்க்
காவிசூழ் வயலும் செய்யும் செந்நெலும் கன்னல் காடும்
பூவிரி பொழிலும் காவும் பொலிந்தது கன்னி நாடு. 59

---

1109. எழிலி: மேகம். பாகசாதனன்: இந்திரன். நட்டவன்: நண்பன். நிம்பமாலிகை: வேப்பந்தார். (இப்பாடலும் குளகம்)

1110. இடுக்கண்: துன்பம். ஊற்றம்: இடையூறு. ஆத்தன்: இறைவன் சூழ்ந்து: மதித்து. யாப்பு: தளை. பகடு யானை.

1111. மடுத்து: நிறைந்து. கன்னல்: கரும்பு.

# மேருவைச் செண்டால் அடித்த படலம்

1112 அண்டர் அஞ்ச அமர்உ ழந்த
அமரர் கோளை அரசர்கோன்
வண்டுஅ லப்பு மௌலி சிந்த
வளைஎ றிந்து வெந்புறம்
கண்ட வண்ணம் இன்னது; அன்ன
கன்னி நாடன் மேருவில்
செண்டு எறிந்து, வைப்பு எடுத்த
செயலும் நன்கு செப்புவாம். 1

1113 மன்ன வந்த னக்கு முன்னர்
மலைய வெற்பின் முனிவர்கோன்
சொன்ன திங்கள் விரதம் அன்று
தொட்டு நோற்று வரலும்,அந்
நன்ன லம்செய் பேறு போல,
நங்கை காந்தி மதிவயிற்று
உன்ன ரும்செ யம்கொள் மைந்தன்
ஒருவன் வந்து தோன்றினன். 2

1114 வயந்த னைப்ப யந்தது என்ன,
மைந்த னைப்ப யந்தபோது
இயம்து வைத்து நகர்க ளிப்ப
இனிதுஇ ருந்த புரவலன்,
சயம்த ழைத்த இந்தி ரன்ச
யந்த னைப்ப யந்தநாள்
வியந்துஅ கத்துஅ டைந்த இன்பம்
விளைம கிழ்ச்சி எய்தினன். 3

---

1112 அண்டர்: தேவர். வெந்புறம்: புறமுதுகு. வைப்பு: சேம நிதி.

1113. முனிவர்கோன்: அகத்தியன் உன்னரும்: நினைத்தற்கரிய.

1114. வயந்தன்: மன்மதன். இயம் இசைக்கருவிகள். புரவலன்: உக்கிரவழுதி. சயம்: வெற்றி. சயந்தன்: இந்திரன் மகன்.

## 15. மேருவைச் செண்டால் அடித்தது



மாணிக்கம் இமைக்கும் பூணான் விளித்தலும், வரைக்கு வேந்தன்
பாணித்து வரவு தாழ்ப்ப, பாகசா தனனை வென்றோன்
நாணித்தன் சினமும் மேரு நகைவரைச் செருக்கும் மாற,
சேண்உற்ற சிகரம் தன்னில் செண்டினால் அடித்து நின்றான். 1136

1115 தென்னர் ஏறு சாத காதி
செய்து, வீர பாண்டியன்
என்ன நாம விணைநி ரப்பி,
எழுதலை றுத கலைமுதல்
பன்னு கேள்வி கரிகள் தேர்கள்
பரிப டைக்க லம்பயின்று
அன்ன காத லான்வி ளங்க
அகம்ம கிழ்ச்சி அடையும்நாள், 4

1116 மல்கும் ஆறுஇல், கோள்தி ரிந்து,
மழைசு ருங்கி நதியும்நீர்
ஒல்கு மாறு, பருவம் மாறி
உணவு மாறி உயிர்எலாம்
மெல்கு மாறு பசிஉ ழந்து,
வேந்த னுக்கு விளைபொருள்
நல்கும் ஆறுஇ லாமை இன்னல்
நலிய வந்த நாடெலாம். 5

1117 "மழைவ றந்தது என்கொல்?" என்று
வழுதி கூற, முழுதுஉணர்ந்து
அழிவுஇ லாத பிரம கற்பம்
அளவும் எல்லை கண்டநூல்
உழவர், "கோள்கள் இரவி தன்னை
உற்று நோக்கி நிற்றலால்
தழையும் மாரி வருடி யாதுஓர்
வருடம்" என்று சாற்றினர். 6

---

1115. சாதகாதி: சாத, கன்மம் முதலிய சடங்குகள். நாமவினை: பெயரிடல். பன்னு கேள்வி: பலநூல்கள். காதலான்: புதல்வன். (இப்பாடல் குளகம்)

1116. மல்கும் ஆறு: நலம்பெருகும்தன்மை. இல்: இல்லையாக. ஒல்குமாறு: வறப்ப. மெல்குமாறு: மெலியுமாறு.

1117 கூற: வினவ. நூலஉழவர். சோதிடநூல் வல்லார். இரவி: சூரியன்; வருடியாது: பொழியாது.

1118 மகவுஉறு நோயை நோக்கி
வருந்துறு தாய்போல், மன்னன்
பகவுஉறு மதியம் சூடும்
பரம்சுடர் முன்போய், தாழ்ந்து,
"மிகஉறு பசியால் வையம்
மெலிவதை ஐய என்று"த்
தகஉற இரங்கிக் கண்ணீர்
ததும்பிநின்று இரந்து வேண்ட, 7

1119 திரைக்கடல் விடம்சேர் கண்டர்
காலத்தின் செவ்வி நோக்கி
இரக்கம்இல் லவர்போல் வாளா
இருத்தலும், மருத்தார் மார்பன்
கரைக்குஅரி தாய துன்பக்
கடலில்வீழ்ந்து இருக்கை புக்கான்;
அரக்கர்போர்க் கடலின் நீந்தி
அருக்கன்நீர்க் கடலில் வீழ்ந்தான். 8

1120 வள்ளல்தன் குடைக்கீழ்த் தங்கும்
உயிர்ப்பசி வருத்தம் எல்லாம்
கொள்ளைகொண்டு இருந்த நெஞ்சில்
குளிர்முகச் செவ்வி குன்ற,
தள்ளரும் துயரின் மூழ்கித்
தரைஇடைத் துயின்றான் ஆக,
வெள்ளிமன்று உடையார் சித்த
வேடராய்க் கனவில் வந்தார். 9

---

1118. உறு: உற்ற. பகவு உறுமதியம்: பிறைமதி. (இப்பாடல் குளகம்).

1119. செவ்வி: இயல்பு. வாளா: சும்மா. மரு: மணம். அருக்கன்: சூரியன்.

1120. வள்ளல்: உக்கிரவழுதி. உயிர்: உயிரினங்கள். செவ்வி: பொலிவு. தள்ளரும்: நீக்குதற்கரிய வெள்ளிமன்று உடையார்: சோமசுந்தரப் பெருமான் சித்தவேடர்: சித்த மூர்த்தி.

1121 "அடல்கதிர் வேலோய்! மாரி
அரிதுஇப்போது அதனை வேண்டி
இடர்ப்படல்; வரைக்கும் வேந்தாய்
இருக்கின்ற எரிபொன் மேருத்
தடம்பெரு வரையின் மாடு,ஓர்
தனிப்பெரு முழையில் இட்டுக்
கிடப்பதுஓர் எல்லை இல்லாக்
கேடிலாச் சேம வைப்பு." 10

1122 "கிடைத்து,மற்று அனைய மேரு
கிரிச்செருக்கு அடங்கச் செண்டால்
புடைத்து,நின் ஆணைத்து ஆக்கி,
பொன்அறை பொதிந்த பாறை
துடைத்துநீ வேண்டும் காறும்
தொட்டுஎடுத்து அதனை மீள
அடைத்துநின் குறியிட்டு ஐய
வருதி" என்று அடிகள் கூற. 11

1123 விழித்தனன், எழுமான் தேரோன்
விழிக்கும்முன் கடன்கள் எல்லாம்
கழித்தனன், மீன நோக்கி
கணவனை வலமாப் போந்து,
சுழித்துஎறி கடல்அ னீகத்
தொகைபுறம் சூழ, கொண்டல்
கிழித்துஎழு வாயில் நீங்கிக்
கீழ்த்திசை நோக்கிச் செல்வான். 12

---

1121. இடர்ப்படல்: வருந்தற்க. வரை: மலை. மாடு: பக்கம். முழை: குகை. சேமவைப்பு: காப்புநிதி.

1122 கிடைத்து: (மலையை) அடைந்து. ஆணைத்து ஆக்கி: ஆணை வழிப்படுத்தி. பொதிந்த: மூடியுள்ள. துடைத்து: நீக்கி. குறி: இலச்சினை அடிகள்: சித்தமூர்த்தி. (இப்பாடல் குளகம்).

1123. எழுமான்: ஏழு குதிரைகள். தேரோன்: சூரியன். அனீகம்: சேனை. கொண்டல்: மேகம்.

1124 அதிர்ந்தன முரசம் சங்கம்,
அதிர்ந்தன இயங்கள், அண்டம்
பிதிர்ந்தன என்ன ஆர்ப்ப,
பெயர்ந்துவெண் கவரி துள்ள,
முதிர்ந்தநான் மறையோர் ஆசி
மொழிய,நா வல்லோர் ஏத்த,
பதிந்துபார் கிழியத் திண்தேர்
பாகுமுன் செலுத்த ஊர்ந்தான். 13

1125 பவளக்கால் பிச்சம், பொற்கால்
பன்மணிக் கவிகை, முத்தத்
தவளக்கால் பதாகைக் காடும்,
தானவான் அருவி தூங்கும்
கவளக்கால் பொருப்பும், பாய்மாக்
கடலும்,மண் மடந்தை ஆகம்
துவள,கால் வயவர் மான்தேர்த்
தொகுதியும் சூழல் போக, 14

1126 கோழ்இணர் ஞாழல் அன்ன
கோட்டுஉகிர்ப் புலவுப் பேழ்வாய்த்
தாழ்சின உழுவை ஒற்றைத்
தனிப்பெரும் கொடியுங், கூனல்
காழ்சிலைக் கொடியும், சூழக்
கயல்கொடி நிலம்து ழாம்கை
ஏழ்உயர் வரைமேல் தோன்றி
இருவிசும்பு அகடு கீற, 15

1124. பாகு: பாகன்.

1125. பிச்சம்: பீலிக்குடை. கவிகை: குடை. தவளம்: வெண்மை. பதாகை: கொடி. தானம்: மதநீர். பொருப்பு: யானை. பாய்மா: தாவுகின்ற குதிரை. துவள: வருந்த. வயவர்: வீரர். மான்: குதிரை. (இப்பாடல் குளகம்).

1126. கோழ்: கொழுவிய. இணர்: பூங்கொத்து. ஞாழல்: புலிநகக் கொன்றை. உகிர்: நகம். புலவு: புலால் நாற்றம். உழுவை: புலி. காழ்: வலிய. சிலை: வில். ஏழ்உயர் வரை: ஏழுமுழ உயரமுள்ள யானை. விசும்பு: ஆகாயம். அகடு: வயிறு. (இப்பாடலும் குளகம்).

1127 தென்கடல் வடபால் நோக்கிச்
செல்வது போல, தென்னன்
தன்கடல் அனிகம் கன்னித்
தண்தமிழ் நாடு நீந்தி
வன்கடம் நெறிக்கொண்டு ஏகி
வளவர்கோன் எதிர்கொண்டு ஆற்றும்
நன்கடன் முகமன் ஏற்று
நளிர்புனல் நாடு நீந்தி, 16

1128 தண்டக நாடு தள்ளி,
தெலுங்கநாடு அகன்று, சாய்தாள்
கண்டகக் கைதை வேலிக்
கருநடம் கடந்து, காடும்
தொண்டகம் துவைக்கும் குன்றும்
நதிகளும் துறந்து, கள்வாய்
வண்டுஅகம் மலர்க்கா வேலி
மாளவ தேசம் நண்ணி, 17

1129 அங்குநின்று எழுந்து தீவாய்
அரும்சுரம் நெறிப்பட்டு ஏகி,
மங்குல்நின்று அதிரும் செம்பொன்
மாடம்நீள் விராடம் நண்ணி,
கொங்குநின்று அவிழும் கானம்
குன்றுஒரீஇ, வாளை பாயத்
தெங்குநின்று இளநீர் சிந்தும்
மத்திய தேயத்து எய்தி, 18

---

1127. அனிகம்: சேனை. கன்னித் தண்தமிழ்நாடு: பாண்டிநாடு. வன்கடம்: வலியகாடு. வளவர்கோன்: சோழ அரசன். புனல்நாடு: சோழநாடு. (இப்பாடலும் குளகம்).

1128. தண்டக நாடு: தொண்டைநாடு. கண்டகம்: முள். கைதை: தாழை. தொண்டகம்: குறிஞ்சிப்பாறை. துவைக்கும். ஒலிக்கும். (இப்பாடலும் குளகம்).

1129. சுரம்: பாலைநிலம். மங்குல்: மேகம். கொங்கு: மகரந்தப்பொடி. ஒரீஇ: நீங்கி. தெங்கு: தென்னை. (இப்பாடலும் குளகம்).

1130 அந்நெடு நாடு நீங்கி,
ஆடல்ஏறு உயர்த்த தோன்றல்,
பொன்நெடும் சடையில் தாழ்ந்து
புனிதமாம் தீர்த்தக் காசி
நல்நெடு நகரம் எய்தி,
நளிர்புனல் கங்கை நீந்தி,
கல்நெடு நெறிஅ னேக
காவதம் கடந்த பின்னர், 19

1131 மடங்கல்மா நாகம் யாளி
வழங்கலால் மனிதர் செல்லா
இடம்கடந்து, ஆக ஐஞ்ஞாற்று
இரட்டியோ சனைத்தாம் எல்லைக்
கடம்கெழு குமரி கண்டம்
கடந்து,மற்று அதுபோல் எட்டுத்
தடம்கெழு கண்டம் கொண்ட
பாரத வருடம் தள்ளி, 20

1132 யாவையும் ஈன்றுள் தன்னை
ஈன்றபொன் இமயம் தன்னைத்
தாவிஅப் புறம்போய், போகம்
ததும்புகிம் புருட கண்டம்
மேவிஅங்கு அதுநீத்து, ஏம
வெற்புஅடைந்து அதுபின் னுக,
ஓவியப் புறத்துத் தோன்றும்
அரிவரு டத்தை உற்று, 21

---

1130. ஆடல்: வெற்றி ஏறு: விடைக்கொடி. (இப்பாடலும் குளகம்).

1131. நாகம்: யானை. (இப்பாடலும் குளகம்).

1132. யாவையும் ஈன்றுள்: உமையம்மை. (இப்பாடலும் குளகம்).

1133 உற்றது கழிந்து,அப் பாற்போய்
நிடதவெற்பு ஒழிந்து, சம்புப்
பொன்தருக் கனிகால் யாறு
போகுஇளா விரத கண்டத்து
உற்றனன், கண்டான் மூன்றுஊர்
ஒருங்குஅடு ஞான்று கூனி
வெற்றிவெம் சிலையாய் நின்ற
வெற்பினை மலய வெற்பன். 22

1134 வெம்படை மறவர் சேனை
வெள்ளம்நீத்து ஏகி, தென்பால்
சம்புவின் கனியின் சாறு
வலம்படத் தழுவி ஓடும்
அம்பொன்நீர் ஆறும், ஆற்றின்
அருகுபொன் மயமாய் நிற்கும்
பைம்புனம் கானம் நோக்கி
வளைந்துதென் பால்வந்து எய்தா, 23

1135 அவ்வரை அரசை நோக்கி,
"வரைகளுக்கு அரசே! எந்தை
கைவரி சிலையே! பாரின்
களைகணே! அளவில் வானம்
தைவரு சுடரும் கோளும்
நாள்களும் தழுவிச் சூழும்
தெய்வத வரையே! மேலைத்
தேவர்ஆ லயமே!'' என்னு, 24

---

1133. சம்பு: நாவல். உற்றனன்: அடைந்து. வெற்பு: மேருமலை. மலய வெற்பன்: பாண்டியவரசன்.

1134. சேனைகளை நிறுத்திவிட்டு அரசன் தான் மட்டும் சென்றான் என்க. (இப்பாடல் குளகம்).

1135. களைகண்: ஆதாரம். தைவரும்: அளவளாவி வரும். என்னு: என்று. (இப்பாடலும் குளகம்).

1136 மாணிக்கம் இமைக்கும் பூணுன்
விளித்தலும், வரைக்கு வேந்தன்
பாணித்து வரவு தாழ்ப்ப,
பாகசா தனனை வென்றோன்
நாணித்தன் சினமும் மேரு
நகைவரைச் செருக்கும் மாற,
சேண்உற்ற சிகரம் தன்னில்
செண்டினுல் அடித்து நின்றான். 25

1137 அடித்தலும் அசையா மேரு
அசைந்து,பொன் பந்து போலத்
துடித்தது; சிகர பந்தி
சுரர்பயில் மாடப் பந்தி
வெடித்தன; தருண பானு
மண்டலம் விண்டு தூளாய்ப்
படித்தலை தெறித்தால் என்னப்
பன்மணி உதிர்ந்த அன்றே. 26

1138 புடைவரைக் குலங்கள் எட்டும்,
புறம்தழீஇக் கிடக்கும் செம்பொன்
அடைகல்ஓர் நான்கும், நான்கு
கிடங்கரும், மலர்ந்த நான்கு
தடமலர்ப் பொழிலும், நான்கு
தருக்களும் சலித்த அம்மா!
உடையவன் இடையூறு உற்றால்
அடுத்தவர்க்கு உவகை உண்டோ. 27

---

1136. விளித்தல்: அழைத்தல். பாணித்து: நீட்டித்து. பாகசாதனன்: இந்திரன். சேண்உற்ற: வானளாவிய.

1137. தருணம்: இளமை. பானு: சூரியன். விண்டு: பிளந்து.

1138. புடை: பக்கம். அடைகல்: பக்கமலைகள். உடையவன்: தலைவன். பாடலின் பிற் பகுதி வேற்றுப்பொருள் வைப்புஅணி.

1139 புடைத்தபின் மேருத் தெய்வம்,
புடைக்குல வரைஎட்டு என்னப்
படைத்தஎண் தோளும், நான்கு
முடியும்,மேல் படுவெண் சோதி
உடைத்தனிக் குடையும், கொண்ட
உருவினோடு எழுந்து நாணிக்
கிடைத்தது; கருணை வேந்தன்
கிளர்சினம் தணிந்து நோக்கா, 28

1140 "இத்தனை வரவு தாழ்த்தது
என்"என, மேருத் தெய்வம்
"வித்தக நம்பி! கேட்டி!
மீன்நெடும் கண்ணி யோடும்
பைத்தலை அரவம் பூண்ட
பரனை இப் படிவம் கொண்டு
நித்தலும் போகிப் போகி
வழிபடு நியமம் பூண்டேன்." 29

1141 "இன்றுகேட் டிலையோ! ஐயா!
ஏந்துஇழை ஒருத்தி காமம்
துன்றுமா கடலின் மோகச்
சுழித்தலைப் பட்டு, வெள்ளி
மன்றுள்ஆ டியபொன் பாதம்
வழிபடல் மறந்து தாழ்த்து
நின்றுஉளேன்; இனைய தீங்கின்
நிமித்தினால் அடியும் பட்டேன்," 30

---

1139. கருணை வேந்தன்: உக்கிரவழுதி. நோக்கா: நோக்கி. (இப்பாடல் குளகம்).

1140. கேட்டி: கேட்பாயாக.

1141. கேட்டிலையோ: கேட்பாயாக. நிமித்தம்: காரணம்,

1142 "திருவடி பிழைத்த தீங்கு
தீர்த்தனை, இதனில் ஐயன்
தருவதுஓர் உறுதி தானும்
தக்கதுஓர் கைம்மாறு என்றால்
வருவதும் உண்டாம் கொல்லோ?
மற்றுஅது நிற்க, மன்றல்
பருவரை மார்ப! வந்த
பரிசுஎன்கொல்? பகர்தி" என்ன, 31

1143 மன்னவன் "வெறுக்கை வேண்டி
வந்தனன்" என்றான்; "ஐய!
உன்னது புலத்தோர்க்கு ஏற்ப
உரைபடும் மாற்றுஅது ஆய
பொன்அவிர் தேமா நீழல்
புதைபடக் கிடக்கும செம்பொன்"
என்ன,அம் கையால் சுட்டிக்
காட்டியது எரிபொன் குன்றம். 32

1144 மின்நகு வேலால் முந்நீர்
வேலையை வணக்கம் கண்டோன்,
பொன்அறை மருங்கில் போகி,
பொத்திய பாறை நீக்கி,
தன்அவா அளவிற்று ஆய
தமனியம் முகந்து, மூடிப்
பின்அதும் தன்னது ஆகப்
பெயர்இலச் சினையும் தீட்டா, 33

---

1142. உறுதி: நன்மை. பரிசு: காரணம். (இப்பாடல் குளகம்).

1143. வெறுக்கை: செல்வம். புலத்தோர்: நாட்டில் உள்ளோர். அவிர்: ஒளி. தேமா: மாமரம்.

1144. வேலை: கடல். பொத்திய: மூடிய. தமனியம்: பொன். தீட்டா: தீட்டி. (இப்பாடல் குளகம்).

1145 மின்திகழ் மணிப்பூண் மார்பன்
மீண்டுதன் தானை யோடும்
தென்திசை நோக்கி, பாகன்
செலுத்தமான் தடம்தேர் ஊர்ந்து
பொன்திகழ் வரையும் போக
பூமியும் பிறவும் நீத்து
நன்றிகொள் மனிதர் வைப்பின்
நண்ணுவான்; நண்ணும் எல்லை, 34

1146 மாத்திமர், விராட மன்னர்,
மாளவர், தெலுங்க தேயப்
பார்த்திபர், பிறரும் தத்தம்
பதிதொறும் வரவு நோக்கித்
தேர்த்திகழ் அனிகத் தோடும்
சென்றுஎதிர் முகமன் செய்ய,
தார்த்திரு மார்பன் கன்னித்
தண்தமிழ் நாடு சார்ந்தான். 35

1147 கன்னிப்பொன் எயில்சூழ் செம்பொன்
கடிநகர்க்கு அணியன் ஆகி,
பொன்னில்செய்து இழைத்த நீள்கோ
புரத்தினைக் கண்டு தாழ
உன்னி,த்தேர் இழிந்துஎட் டோடுஐந்து
உறுப்பினல் பணிந்துஎ ழுந்து,
வன்னிச்செம் சுடர்க்கண் நெற்றி
மன்னவன் மதுரை சார்ந்தான். 36

---

1145. மான்: குதிரை. வைப்பு: நாடு. (இதுவும் குளகம்).

1146. அனிகம்: சேனை.

1147. எயில்: மதில். கடி: காவல். உன்னி: நினைத்து. வன்னி: நெருப்பு. மன்னவன்: சோமசுந்தரக் கடவுள்.

1148 அறத்துறை அந்த ணாளர்,
துறந்தவர், அரன்தாள் பற்றிப்
புறத்துறை அகன்ற சைவ
பூதியர், புனிதன் கோயில்
திறத்துஉறை அகத்துத் தொண்டர்
திரண்டுஎதிர் கொள்ள, முத்தின்
நிறத்துறை வைகை நீத்து
நெடுமதில் வாயில் புக்கான். 37

1149 கொங்குஅலர் கோதை மாதர்
குங்குமம் பனிப்பச் சிந்தும்
மங்கல மறுகின் ஏகி,
மறைகள்சூழ் கோயில் எய்தி,
தங்கள்நா யகனைச் சூழ்ந்து
தாழ்ந்துஎழுந்து ஏத்திப் போந்து,
திங்களூர் குடுமிச் செல்வத்
திருமணிக் கோயில் புக்கான். 38

1150 பொன்மலைக் கடவுள் ஈந்த
புண்ணிய நிதியை, அந்த
நன்மலை மானக் கூப்பி,
நல்கிப்பல் குடியும் ஓம்பித்
தென்மலைக் கிழவன், தெய்வம்
தென்புல வாணர் ஒக்கல்
தன்மனை விருந்து காத்துத்
தருக்கினன் இருக்கும் நாளில், 39

---

1148. புறத்துறை: பாவநெறி. சைவ பூதியர்: சைவப் பெருவாழ்வினர்.

1149. பனிப்பு: குளிர. மறுகு: வீதி. கோயில்: அரண்மனை.

1150. பொன்மலைக் கடவுள்: மேருமலைத் தெய்வம். மான: போல. தென்மலைக்கிழவன்: உக்கிரவழுதி. தென்புலவாணர்: தென்புலத்தார். தருக்கு: களிப்பு. (இப்பாடல் குளகம்).

1151 ஐவினை நடாத்தும் ஈசன்
ஆணையால் நடக்கும் கோளும்
செய்வினைத் திரிவும் மாற,
தென்னன் நாடு எங்கும் மாரி
பெய்வினை உடையது ஆகிப்
பெருவளம் பகிர்ந்து நல்க,
உய்வினை உடைய ஆகி
உயிர்எலாம் தழைத்த அன்றே. 40

1152 புவனிஇம் முறையால் புரந்துஅளித்து ஆரம்
பூண்டபாண் டியன்திரு மகனுக்கு
அவனிஏழ் அறிய வீரபாண் டியன்என்று
அணிமுடி கவித்துஅரசு அளித்து,
நவநிர திசய பூரண இன்ப
ஞானநோக்கு அருளிய மதுரைச்
சிவன்அடி நிழலில், பிளப்புஅறப் பழைய
தேசொடு நிறைந்துவீற்று இருந்தான். 41

---

1151. ஐவினை: படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல். பெய்வினை: பெய்யும் தொழில்.

1152. அவனி: உலகம். பிளப்புஅற: இரண்டற. தேசு: ஒளி, புகழ்.

## மறைப் பொருள் உணர்த்திய படலம்

1153 உலம்பொரு தடம்தோள் உக்கிரச் செழியன்
உயரிய மேருமால் வரையைப்
பொலம்புரி செண்டால் புடைத்து,வைப்பு எடுத்துப்
போந்துஅருள் அடைந்தவா புகன்றும்;
வலம்படு திணிதோள் வீரபாண் டியன்கோல்
வழங்குநாள் மதுரைஎம் பெருமான்
புலம்பொரு முனிவர் தேறநால் வேதப்
பொருள்உணர்த் தியதிறம் புகல்வாம். 1

1154 ஐம்பெரும் பூதம் நிலைதிரிந்து ஈரேழ்
அடுக்கிய உலகொடும் அயன்மால்
உம்பர்வான் பதமும் உதித்தவாறு ஒடுங்க,
உருத்ததுஓர் ஊழிவந்து எய்தச்
செம்பொருள் மறையும் ஒடுங்கிய; வழிநாள்
செம்சுடர்க் கடவுள்முன் மலரும்
வம்புஅவிழ் கமலம் எனஅரன் திருமுன்
மலர்ந்ததால் அகிலமும் மாதோ. 2

1155 பண்டுபோல் பின்னும் முத்தொழில் நடத்தப்
பராபரச் சுடர்திரு உள்ளம்
கொண்டு,போர்த் திகிரி வலவனைத் தர,இக்
குரிசில்தன் நாபிமுண் டகத்தில்
வண்டுபோல் பிரமன் உதித்துமூ உலகும்
வரன்முறை படைக்கும்நாள், நஞ்சம்
உண்டுபோற் றியவா னவர்க்குஉயிர் அளித்த
உம்பர்நா யகன்திரு வாக்கில், 3

---

1153. உலம்: திரண்டகல். பொலம்; பொன். வைப்பு: நிதி: புலம்பொரு முனிவர்: புலன்களை வென்ற முனிவர். தேற: தெளிய

1154 உரு: அச்சம். வம்பு. மணம். மலர்ந்தது' மலர்ந்தன.

1155. பராபரச்சுடர்: சிவப்பரஞ்சுடர். திகிரிவலவன்: சக்கரப்படையினை உடைய திருமால், நாபிமுண்டகம்; உந்திக்கமலம். உம்பர் நாயகன். சிவபெருமான், (இப்பாடல் குளகம்).

## 16. மறைப்பொருள் உணர்த்தியது



"ஆகையால் மறையும் ஒன்றே; அருமறைப் பொருளும் ஒன்றே;
சாகையால் அனந்தம் ஆகித் தழைத்தது;அச் சாகை எல்லாம்
ஓகையால் இவனை ஏத்தும்; உலகுஉத யாதிக்கு இந்த
ஏகன்ஆ ணையினால் மூன்று மூர்த்தியாய் இருந்தது அன்றே." 1182

1156 பிரணவம் உதித்தது; அதன்இடை வேதம்
பிறந்தன; நைமிசா ரணியத்து
அருள்நிறை முனிவர் கண்ணுவர் கருக்கர்
ஆதியோர் அதிகரித்து, அவற்றின்
பொருள்நிலை தெரியாது உள்ளமும் முகமும்
புலர்ந்தனர் இருப்ப,அப் போதத்து
இருள்மல வலிவென் றவன்அர பத்தன்
என்றுஒரு வேதியன் வந்தான். 4

1157 வந்தவே தியனை இருந்தவே தியர்கள்
வரவுஎதிர்ந்து இறைஞ்சிவேறு இருக்கை
தந்தவே லையில்,அம் மறையவன் முனிவர்
தமைமுகம் நோக்கிஈது உரைப்பான்;
"பந்தவே தனைசால் அவாவெறுப்பு இகந்த
பண்பினர் ஆயினீர் நீவிர்,
சிந்தைவேறு ஆகி முகம்புலர்ந்து இருக்கும்
செய்தியாது?" எனஅவர் சொல்வார். 5

1158 "மருள்படு மாயை கழிந்துஅவன் மொழிந்த
மறைபயின்று உரைசெய்தே சிகன்,அற்று
இருள்படு மனத்தேம் இருத்துமால், 'ஐய!
யாதுசூழ் இதற்கு"எனக் கேட்ட
தெருள்படு மனத்தோன் செப்புவான்: "வேதம்
செப்பிய சிவபரம் சுடரே
அருள்படிவு எடுத்துப் பொருளையும் உணர்த்தும்
அல்லது சூழ்ச்சியாது அறைவீர்," 6

---

1156. அதிகரித்து: பயின்று. புலர்ந்தனர் இருப்ப: வாடினராய் இருக்க. இருள்மலம்: ஆணவமலம்.

1157. பந்தம்: பாசக்கட்டு. இகந்த: நீங்கிய. ஆயினீர்: ஆகியும்.

1158. மருள்: மயக்கம். தேசிகன்: ஆசான். தெருள்படுமனத்தோன்: அரபத்தன். சூழ்ச்சி: ஆலோசனை.

1159 "பண்ணிய தவத்தால் அன்றியா தானும்
படுபொருள் பிறிதுஇலை; தவமும்
புண்ணிய தலத்தின் அல்லது பலியா;
புண்ணிய தலத்தினும் விழுப்பம்
நண்ணிய சைவ தலத்தினில் இயற்றின்
நல்கும்;அச் சிவதலங் களினும்
எண்ணிய அதிக தலத்தினில் இயற்றின்
இரும்தவம் எளிதுஉடன் பயக்கும்,'' 7

1160 "அத்தகு தலம்மற்று யாதெனில், உலகம்
அகிலமும் தன்உடம்பு ஆன
வித்தகன் சென்னிப் பன்னிரு விரல்மேல்
விளங்கிய தலம்,அது சீவன்
முத்தராய் எண்ணில் வானவர் முனிவோர்
முயன்றுமா தவப்பயன் அடைந்து,
சித்தம்மாசு அகன்று வதிவதுஎன்று அறநூல்
செப்பிய மதுரை;அந் நகரில்,'' 8

1161 "தெளிதரு விசும்பின் இழிந்ததுஓர் விமான
சிகாமணி அருகு,தென் மருங்கின்
முளிதரு பராரை வடநிழல் பிரியா
முழுமுதல், வழிபடும் அறவோர்க்கு
அளிதரு கருணை முகம்மலர்ந்து அளவா
அருங்கலை அனைத்தையும் தெளிவித்து
ஒளிதரும்; அனைய மூர்த்தியே நுங்கட்கு
ஓதிய மறைப்பொருள் உணர்த்தும்.'' 9

---

1159. படுபொருள்: கைகூடும் பொருள். பலியா: சித்தியாகா. எண்ணிய: மதிக்கப் பெற்ற. அதிக: சிறந்த.

1160. விளங்கியதலம்: துவாத சாந்தத் தலம். (இப்பாடல் குளகம்).

1061. விமான சிகாமணி: விமானங்களில் தனிச்சிறப்புடையது. முளி: உலர்ந்த. பராரை: பருத்த அடிப்பகுதி. வடநிழல்: ஆலமர நிழல். அளவா: அளவற்ற. ஒளிதரும்: ஞானத்தைத் தரும்.

1162 "அங்குஅவன் திருமுன் அருந்தவ விரதம்
ஆற்றுவான் செல்லுமின்" என,அப்
புங்கவன் அருள்போல் வந்தமா தவன்பின்
புனிதமா முனிவரும், மங்கை
பங்கவன் மதுரைப் பதிபுகுந்து, அம்பொன்
பன்மணிக் கோயில்புக்கு, ஆழிச்
சங்கவன் கைபோல் வளைசெறி செம்பொன்
தாமரைத் தடாகநீர் ஆடி, 10

1163 கரைகடந்து உள்ளம் கடந்தஅன்பு உந்த,
கடிதுபோய் நான்குஇரு வெள்ளி
வரைகள்தம் பிடரில் கிடந்ததுஓர் மேரு
வரைபுரை விமானமேல் காண,
உரைகள்தம் பொருளைக் கண்களால் கண்டாங்கு
உம்பர்தம் பிரானைநேர் கண்டு,
திரைகடந்து இடும்பேர் இன்பவா ரியிலும்
சேண்நிலத் திலும்விழுந்து எழுந்தார். 11

1164 கைதலை முகிழ்த்து, கரசர ணங்கள்
கம்பிதம் செய்து,கண் அருவி
பெய்துஅலை வெள்ளத்து ஆழ்ந்து,வாய் குழறி,
பிரமன்மால் இன்னமும் தேரு
மைதழை கண்ட! வெள்ளிமன்று ஆடும்
வானவர் நாயக! வானோர்
உய்தர விடம்உண்டு அமுதுஅருள் புரிந்த
உத்தம! போற்றி!என்று ஏத்தா, 12

---

1162. புங்கவன்: இறைவன். மாதவன்: அரபத்தன். ஆழி: சக்கரப்படை. சங்கவன்: சங்கை ஏந்திய திருமால். வளைசெறி: சங்கு பொருந்திய. (இப்பாடல் குளகம்).

1163. உந்த: செலுத்த. இன்பவாரி: பேரின்பக்கடல்.

1164. முகிழ்த்து: குவித்து. கம்பிதம்: நடுக்கம். மை: கருமை. ஏத்தா: துதித்து (இப்பாடல் குளகம்).

1165 மறைபொருள் காணாது உள்ளமால் உழந்து
  வாடிய எமக்குநீ யேஅந்
நிறைபொருள் ஆகி நின்றனை, அதற்கு
  நீயலால் பொருள்பிறிது யாதுஎன்று
இறைவனை இறைவன் பங்கில்அங் கயற்கண்
  இறைவியை அம்முறை ஏத்தி,
முறைவலம் செய்து வடநிழல் அமர்ந்த
  மூர்த்திமுன் எய்தினர் முனிவோர். 13

1166 சீதளப் பளிக்கு மேனியும், பளிக்குச்
  செழுமலை பதித்த,துப்பு அன்ன
பாதமும், செவ்வாய் மலரும்,முக் கண்ணும்,
  பங்கயச் செங்கரம் நான்கும்,
வேதபுத் தகமும், அமுதகும் பமும்,தன்
  விழிமணி வடமும்,மெய்ஞ் ஞான
போதமுத் திரையும் தரித்ததோர் தனிமைப்
  போதன்முன் தாழ்ந்துஎழுந்து ஏத்தா, 14

1167 வடநிழல் அமர்ந்த மறைமுதல் மேதா
  மனுஎழுத்து இருபதும் இரண்டும்
திடம்உற அரபத் தன்தனால் தெளிந்து,
  தேள்நிறை மதிமுதல் அடைவில்
படுமதி அளவும் தருப்பணம் ஓமம்
  பார்ப்பன உண்டிமுப் போதும்
அடைவுற நுவன்று நோற்கும்மா தவர்முன்
  அருமறைப் பொருள்வெளி வருமால். 15

---

1165. மறைபொருள்: வேதங்களின் உட்பொருள். மால்: மயக்கம். இறைவனை ஏத்தி, இறைவியை ஏத்தி என்று கூட்டுக. வடம்: ஆல்.

1166. சீதளம்: குளிர்ந்த. துப்பு: பவளம். பங்கயம்: தாமரை. மணிவடம்: உருத்திராக்க மாலை. போதமுத்திரை: சின்முத்திரை. போதன்: தென்முகக் கடவுள். ஏத்தா: ஏத்தி (இப்பாடல் குளகம்).

1167. மேதா: ஞானி, தென்முகப்பெருமான். எழுத்துமனு: எழுத்தாகிய மந்திரம். தேள் நிறைமதி; கார்த்திகை மாத முழுநிலவு. அடைவில் படுமதி: அடுத்த கார்த்திகை முழுநிலவுவரை.

1168 மானமுனி வோர்அதி சயிப்பவட நீழல்
மோனவடிவு ஆகிய முதற்குரவன், எண்ணூன்கு
ஊனமில் இலக்கண உறுப்புஅகவை நாலுன்கு
ஆனஒரு காளைமறை யோன்வடிவம் ஆகி, 16

1169 நீண்டதிரி முண்டம்அழல் நெற்றிவிழி பொத்த,
காண்தகைய கண்டிகைவ ளைந்துஒழுகு காதில்
பூண்டகுழை கெளவியபொ லன்செய்பல காசு,
சேண்தவழ் இளம்கதிர் சிரித்துஅருள் சிதைப்ப, 17

1170 உத்தரிய வெண்படம் வலம்பட ஒதுங்க,
முத்தவள நூலினெடு முத்தம்இடை இட்டு
வைத்துஅணியும் அக்கவட மாலைஎறி வாளால்
பத்தரை மறைத்தமல பந்தஇருள் சிந்த, 18

1171 கண்டிகை தொடுத்து,இரு கரத்திெடு வாகு
தண்டின்இடு மாலைவிட வாள்அரவு தள்ள,
வெண்துகிலின் ஆனவிரி கோவணம ருங்கில்
தண்டரிய பட்டிகை வளைந்துஒளி தழைப்ப, 19

1172 வண்டுவரி பாடுவன போலமலர் பாத
புண்டரிகம் மேல்உழல்சி லம்புகள்பு லம்ப,
தொண்டர்அக மாசுஇருள்து ணித்துமுடி சூட்டும்
முண்டக மலர்ப்புறம் விறற்கழல்மு ழங்க, 20

---

1168. அகவை: வயது. (இப்பாடல் குளகம்).

1169. திரிமுண்டம்: திருநீற்றின் மூன்று கீற்று. பொத்த: மறைக்க. குழை: குண்டலம். இளம்கதிர்: இள ஞாயிறு. (இப்பாடலும் குளகம்).

1170. உத்தரியம்: மேலாடை. தவளம்: வெண்மை. அக்கவடம்: உருத்திராக்கமாலை. வாள்: ஒளி. பத்தர்: அடியார். மலம்: ஆணவம். (இதுவும் குளகம்).

1171. கண்டிகை: உருத்திராக்க மாலை. வாள்அரவு: கொடிய பாம்பு. தள்ள: ஒழிக்கவும். தண்டரிய: நீங்காத. பட்டிகை: அரைப்பட்டிகை. (இப்பாடலும் குளகம்).

1172. வரி: வரிப்பாட்டு. உழல்: அசைகின்ற. புலம்ப: ஒலிக்கவும். துணித்து: போக்கி. விறல்: வெற்றி. கழல்: வீரகண்டை. (இப்பாடலும் குளகம்).

1173 ஏதம்இல்ப வித்திரம்வ லக்கரன் இமைக்க,
போதம்வரை புத்தகம்இ டக்கையது பொறப்ப,
ஓதிஉண ராதுஅலறி ஓலம்இடும் வேதம்
பாதுகைகள் ஆகிஇரு பாதமலர் சூட, 21

1174 கள்ளமுள ரிக்குள்முரல் காளைஅறு கால
புள்,ஒலியின் நாவும்இத ழும்புடைபெ யர்ந்து
துள்ளஎழு வேதஒலி தொண்டர்செவி ஆற்றால்
உள்ளவயல் புக்குஉவகை ஒண்பயிர் வளர்ப்ப, 22

1175 சீதமணி மூரல்திரு வாய்சிறிது அரும்ப,
மாதவர்கள் காணவெளி வந்துவெளி நின்றான்;
நாதமுடி வாய்அளவில் நான்மறையின் அந்தப்
போதவடிவு ஆகிநிறை பூரண புராணன். 23

1176 வட்டவாள் மதிகண்டு ஆர்க்கும்
உவாக்கடல் மான, மாண்ட
சிட்டராம் முனிவர், காளைத்
தேசிக வடிவம் நோக்கி,
ஒட்டுஅரு உவகை வெள்ளம்
மேற்கொள, உருத்த கூற்றை
அட்டதா மரைதம் சென்னிக்கு
அணிமலர் ஆகத் தாழ்ந்தார். 24

---

1173. ஏதம்: குற்றம். போதம்: சிவஞானபோதம். பொறப: அழகுசெய்ய. (இப் பாடலும் குளகம்).

1174. கள்ளம்: தேன். முளரி: தாமரை. முரல்: ஒலிக்கும். அறுகாலபுள்: வண்டுகள். ஒலியின்: ஒலிபோல். ஆறு: வழி. வேத ஒலி அடியவர் செவியாகிய கால்வாயின் வழியாக, உள்ளம் ஆகிய வயலில் பாய்ந்து, மகிழ்ச்சிப் பயிரை வளர்க்கின்றது. (இதுவும் குளகம்).

1175 சீதம்: குளிர்ச்சி. மூரல்: புன்னகை. நாதமுடிவு: நாததத்துவத்தின் எல்லை. போதவடிவு: ஞானவடிவு. நிறைபூரணம்: முழு நிறைவு. புராணன்: பழையவன்.

1176. வட்டமதி: முழுநிலவு. சிட்டர்: பெரியோர். ஒட்டுஅரு: வற்றுதல் அற்ற உருத்த: கோபித்த. அட்ட: உதைத்த. சென்னி: முடி.

1177 "அளவுஅறு கலைகட்கு எல்லாம்
உறைவிடம் ஆகி, வேத
விளைபொருள் ஆகி நின்ற
வேதிய! சரணம்" என்ற,
வளைவுஉறு மனத்தி னரைத்
தேசிக வள்ளல் நோக்கிப்
"பளகுஅறு தவத்தீர்! வேட்கை
யாது?"என, பணிந்து சொல்வார். 25

1178 "அடியரேம் உய்யும் ஆறும்,
உலகுஎலாம் அளிக்கும் ஆறும்,
படியிலா வரத்த வேதப்
பயன்அருள் செய்தி" என்ன,
கொடியமா பாசம் தீர்ப்பான்
குரவன்அம் முனிவ ரோடு
முடிவுஇலா இலிங்கம் முன்போய்
மறைப்பொருள் மொழிவது ஆனான். 26

1179 "அந்தணிர்! கேண்மின்! சால
அருமறைப் பொருள்கள் எல்லாம்
மந்தணம் ஆகும்; இந்த
மறைப்பொருள் அறிதல் தானே
நந்தல்இல் லாத போகப்
பயனுக்கும், நலியும் பாச
பந்தனை கழிக்கும் வீட்டின்
பயனுக்கும் கருவி ஆகும். 27

---

1177. வளைவு: வணக்கம். பளகு: குற்றம்.

1178. படிஇலா: ஒப்பற்ற. அருள்செய்தி: அருளிச் செய்வாய்.

1179. அந்தணிர்: முனிவர்களே. சால: மிகவும். மந்தணம்: இரகசியம். நந்தல்: கெடுதல். நலியும்: வருத்தும். வீட்டின் பயன்: வீடுபேறு. கருவி. சாதனம்.

1180 "உத்தம சயம்புக் குள்ளும்
உத்தம தரமாய் மேலாம்
தத்துவம் ஆகும் இந்தச்
சுந்தர சயம்பு லிங்கம்,
நித்தமாய் மறைகட்கு எல்லாம்
நிதானம்ஆம் பொருளாய், உண்மைச்
சுத்தஅத் துவிதம் ஆன
சுயம்பிர காசம் ஆகும்'' 28

1181 "நிறைபரா பரம்விஞ் ஞானம்
நிராமயம் என்று நூல்கள்
அறைபரம் பிரமம் ஆகும்
இதன்உரு ஆகும் ஏக
மறை,இதன் பொருளே இந்தச்
சுந்தர வடிவாய் இங்ஙன்
உறைசிவ லிங்கம், ஒன்றே
என்பர்நூல் உணர்ந்த நல்லோர்.'' 29

1182 "ஆகையால் மறையும் ஒன்றே
அருமறைப் பொருளும் ஒன்றே,
சாகையால் அனந்தம் ஆகித்
தழைத்தது;அச் சாகை எல்லாம்
ஓகையால் இவனை ஏத்தும்;
உலகுஉத யாதிக்கு இந்த
ஏகன்ஆ ணையினால் மூன்று
மூர்த்தியாய் இருந்தது அன்றே.'' 30

---

1180. உத்தமம்: மேம்பட்டது. நித்தமாய்: அழியாததாய். நிதானம்: காரணம். அத்துவிதம்: இரண்டன்மை.

1181. நிராமயம்: நோயின்மை. ஏகமறை: ஒன்றாகிய வேதம் பராபரம் உண்மையையும், விஞ்ஞானம் அறிவையும், நிராமயம் இன்பத்தையும் குறிப்பனவாகக் கொள்க. இறைவன் வேதமாகவும் வேதத்தின் பொருளாகவும் விளங்குகின்றான் என்பது கருத்து.

1182. சாகை: பிரிவு. அனந்தம் ஆகி: அளவிறந்த பேதமாகி. ஓகை: உவகை. சொக்கலிங்கப் பெருமானே மும்மூர்த்தியாய்த் தொழில் புரிந்தனன் என்பது.

1183 "மலர்மகன் ஆகி மூன்று
வையமும் படைத்து, மாலாய்
அலைவுஅற நிறுத்தி, முக்கண்
ஆதியாய் அழித்து,அம் மூவர்
தலைவனாய் பரமா காச
சரீரியாய், முதல்ஈறு இன்றித்
தொலைவுஅரும் சோதி யாம்இச்
சுந்தர இலிங்கம் தன்னில்," 31

1184 "ஆதியில் ஆன்ம தத்துவம் ஆன
அலர்மகன் பாகமும், நடுவில்
நீதியில் விச்சா தத்துவம் ஆன
நெடியவன் பாகமும், முடிவில்
ஓதிய சிவதத் துவம்எனல் ஆன
உருத்திர பாகமும் உதிக்கும்;
பேதிஇம் மூன்றில் எண்ணில்தத் துவங்கள்
பிறக்கும்;இம் மூன்றினும் முறையால்," 32

1185 "ஓதஅரும் அகாரம் உகாரமே மகாரம்
உதித்திடும்; பிரணவம் விந்து
நாதமோடு உதிக்கும்; வியத்ததா ரகத்தில்
நல்லகா யத்திரி மூன்று
பேதமாம் பதத்தால் பிறக்கும்;இக் காயத்
திரிஇரு பேதம்ஆம்; பேதம்
யாதுஎனில் சமட்டி வியட்டி,என்று இரண்டும்
ஏதுவாம் வேட்டவைக்கு எல்லாம்." 33

---

1183. மலர்மகன்: பிரமன். அலைவு: வருத்தம். பரமாகாசசரீரி: ஆகாயமே திருமேனியாக உள்ளவன். (இப்பாடல் குளகம்).

1184. முதலில் ஆன்ம தத்துவமான பிரமனும், இடையில் வித்தை தத்துவமான திருமாலும், இறுதியில் சிவதத்துவமான உருத்திரனும் தோன்றும்; இம்மூன்றின் அடிப்படையில் பிறதத்துவங்கள் தோன்றும். (இப்பாடலும் குளகம்).

1185. அகாரம், உகாரம் மகாரம். விந்து நாதம் ஆகிய ஐந்தும் கூடிப் பிரணவம் ஆகும். பிரணவத்தினின்றும் காயத்திரி தோன்றும். காயத்திரி சமட்டி வியட்டி என இருவகைத்து. இவ்விரண்டும் விரும்பிய பொருளனைத்தையும் அளிக்கும்.

1186 "இன்னவை இரண்டும் இவன்அருள் வலியால்
ஈன்றநான் மறையை;அந் நான்கும்
பின் இவன் அருளால் அளவுஇல ஆன;
பிரணவம் ஆதிமந் திரமும்
அன்னஆறு ஆன; தாரகத்து அகாரம்
ஆதிஅக் கரங்களும் உதித்த;
சொன்னஅக் கரத்தில் சிவாகம நூல்இச்
சுரஅரன் நடுமுகத்து உதித்த." 34

1187 "கீழ்த்திசை முகத்துஒன்று அடுத்தநால் ஐந்தில்
கிளைத்ததால் இருக்கு;அது தென்பால்
ஈட்டிய இரண்டாம் வேதநூறு உருவோடு
எழுந்தது; வடதிசை முகத்தின்
நீட்டிய சாமம் ஆயிர முகத்தான்
நிமிர்ந்தது; குடதிசை முகத்தில்
நாட்டிய ஒன்பது உருவொடு கிளைத்து
நடந்தது நான்கதாம் மறையே.'' 35

1188 "அருமறை நால்வேறு ஆகையால் வருணம்
ஆச்சிர மங்களும் நான்காம்;
தருமம்யா காதி கருமமும் மறையின்
தகைமையில் தோன்றின; மறையும்
கருமநூல் ஞான நூல்என இரண்டாம்;
கருமநூல் இவன்அருச் சனைக்கு
வரும்வினை உணர்த்தும்; ஞான நூல் இவன்தன்
வடிவுஇலா வடிவினை உணர்த்தும்.'' 36

---

1186. இன்னவை: சமட்டி, வியட்டி. தாரகம்: பிரணவம். நடுமுகம்: ஈசானமுகம்.

1187. கீழ்த்திசை தற்புருட முகத்திலே இருக்குவேதமும் (21) தென்திசை அகோர முகத்தில் யசுர்வேதமும் (100) வடதிசை வாமதேவ முகத்தில் சாமவேதமும் (1000) மேற்றிசை சத்தியோசாத முகத்தில் அதர்வணவேதமும் (9) தோன்றின.

1188. வருணம்: பிரிவு. ஆச்சிரமம்: நிலை. பிரமச்சரியம், கிருகத்தம், வனப்பிரத்தம், சன்னியாசம் என்பன. யாகம்: வேள்வி. வடிவிலா வடிவு: சச்சிதானந்த வடிவமான. சொரூபம்.

1189 "முதல்நுகர் நீரால் சினைகுழைத் தாங்கு,இம்
 மூழுமுதற்கு அருத்தும்நல் அவியின்
பதம்,இவன் வடிவப் பண்ணவர் பிறர்க்கும்
 திருத்தியாம்; பரன்இவன் முகத்தின்
விதம்உறு நித்தம் ஆதிமூ வினைக்கும்,
 வேண்டியாங்கு உலகவர் போகம்
கதிபெற இயற்றும் சிவார்ச்சனை வினைக்கும்,
 காரணம் இச்சிவ கோசம்." 37

1190 "மறைபல முகம்கொண்டு அலறிவாய் இளைத்து
 மயங்க,வேறு அகண்டபூ ரணமாய்
நிறைபரம் பிரமம் ஆகும்இக் குறியை,
 கருமநல் நெறிவழாப் பூசை
முறையினும் ஞான நெறியின்இப் பொருளை
 அருளினன் முயக்குஅற முயங்கும்
அறிவினும் தெளிவது; உமக்குநாம் உரைத்த
 அருமறைப் பொருள்பிறர்க்கு அரிதால்." 38

1191 "கருமத்தால் ஞானம் உண்டாம்;
 கருமத்தில் சித்த சுத்தி
தரும்;அத்தால் இகந்த சித்த
 சுத்தியைத் தருமம் நல்கும்;
அருமைத்துஆம் தருமத் தாலே
 சாந்திஉண் டாகும்; மாண்ட
பெருமைத்தாம் சாந்தி யாலே
 பிறப்பதுஅட் டாங்க யோகம்." 39

---

1189. முதல்: வேர். நுகர்: உறிஞ்சும். சினை: கிளை. குழைத்தல்: தளிர்த்தல். அருத்தும்: ஊட்டும். திருத்தி: நிறைவு. மூவினை: நித்தியம், நைத்தியம், காமியம். போகம்: இன்பப்பேறு. கதி: வீடுபேறு. சிவகோசம்: சிவலிங்கம்.

1190. அலறி: கதறி. வாய் இளைத்து: வாய் சோர்ந்து. முயக்குஅற முயங்கும்: கலவாது கலக்கும். அறிவினும்: உணர்வினாலும். தெளிவது: தெளிக.

1191. கருமம்: வினை. ஞானம்: அறிவு. சித்தசுத்தி: உள்ளத்தூய்மை. தருமம்: சிவபுண்ணியம். சிவபுண்ணியத்தால் உள்ளத்தூய்மையும், அதனால் சிவகருமமும், அதனால் சாந்தியும், அதனால் யோகமும், அதனால் ஞானமும் உண்டாகும் என்பது கருத்து.

1192 "கிரியையால் ஞானம் தன்னால்
கிளர்சிவ பத்தி, பூசை,
தரிசனம், சைவ லிங்க
தாபனம் செய்தல், ஈசற்கு
உரியமெய் அன்பர் பூசை,
உருத்திர சின்னம் தாங்கல்,
அரியதே சிகன்பால் பத்தி.
அனைத்தையும் தெரியல் ஆகும்." 40

1193 "மறைவழி மதங்கட்கு எல்லாம்
மறைபிர மாணம்; பின்சென்று
அறைதரு மிருதி எல்லாம்
அவைக்குஅனு குணமாம்; இன்ன
முறையினால் மார்த்தம் என்று
மொழிவது;அம் மார்த்தம் சேர்ந்த
துறைகள்வை திகம்ஆம்; மேலாச்
சொல்வதுஇச் சுத்த மார்க்கம்." 41

1194 "தெருள்பெறு போகம் வீடுகா ரணமாய்ச்
சிவமய மாம்மறைப் பொருளை
இருள்கெட உரைத்தேம்; இப்பொருட்கு அதிகம்
இல்லை;இப் பொருள்எலாம் உமக்கு
மருள்கெடத் தெளிவது ஆக"என, இனைய
வழிவழா மாதவர் புறத்தை
அருட்கையால் தடவி இலிங்கத்தில் புகுந்தான்
அருள்பழுத்து அன்னதே சிகனே. 42

---

1192. உருத்திர சின்னம்: சிவ அடையாளம்.

1193. அனுகுணம்: பொருந்துவன.

1194. தெருள்: தெளிவு. மருள்: மயக்கம். புறம்: முதுகு.

## 17. மாணிக்கம் விற்றது



''இந்திரக் கடவுள் நாட்டும் இம்மணி அரிய'' என்ஞ,
மந்திரக் கிழவர் நல்கி, மயனினும் மாண்ட கேள்வித்
தந்திரக் கனகக் கொல்லர்க்கு உவப்பன ததும்ப வீசிச்
செந்திரு மார்பி ணுற்குத் திருமணி மகுடம் செய்தார். 1284

# மாணிக்கம் விற்ற படலம்

1195 சுகந்தம் வார்பொழில் மதுரைஎம் பிரான்தன துணைத்தாள்
உகந்துஅ வாஅறு கண்ணுவ முனிமுதல் ஓதும்
அகம்த வாதபேர் அன்பருக்கு அருமறைப் பொருளைப்
பகர்ந்த வாறுஇது; மாணிக்கம் பகர்ந்தவா பகர்வாம், 1

1196 அன்ன நாள்வயின் வீரபாண் டியற்குஅணங்கு அனைய
மின்அ னாருள்ஐம் போகமும் விளைநிலம் அனைய
பொன்ன னார்பெறு காளையர் ஐங்கணைப் புத்தேள்
என்ன வீறினர் வான்பயிர்க்கு எழுகளை என்ன. 2

1197 பின்அ ரும்பெறல் குமரனைப் பெறுவது கருதி,
மன்ன னும்குலத் தேவியும் கயற்கணி மணாளன்
தன்னை நோக்கிஅட் டமி,சதுர்த் தசி,மதிவாரம்
இன்ன நோன்புநோற்று ஒழுகுவார்; இறைவனின் அருளால். 3

1198 சிறிது நாள்கழிந்து அகன்றபின், கங்கையிற் சிறத்த
மறுஇ லாவட மீன்புரை கற்பினாள் வயிற்றில்,
குறிய ஆலவித்து அங்குரம் போன்றுஒரு குமரன்,
நிறையும் நீர்உலகு அருட்குடை நிழற்றவந்து உதித்தான். 4

1199 அத்த னிச்சிறு குமரனுக்கு அகம்களி சிறப்ப,
மெய்த்த நூல்முறை சாதக வினைமுதல் வினையும்
வைத்து,அ னன்பொலிவு எய்துநாள் மன்னவன் ஊழ்வந்து
ஒத்த நாள்வர வேட்டைபுக்கு உழுவைகோட் பட்டான். 5

---

1195. சுகந்தம்: மணம். வார்பொழில்: நெடிய சோலைகள். உகந்து: விரும்பி. தவாத: நீங்காத.

1196. அணங்கு: தெய்வமகள். பொன்னனார்: காமக்கிழத்தியர். ஐம்போகம்: ஐம்புல இன்பம். ஐங்கணைப்புத்தேள்: மன்மதன். வீறினர்: வளர்ந்தனர்.

1197. கயற்கணி மணாளன்: சொக்கலிங்கப்பெருமான். அட்டமி சதுர்த்தசி மதிவாரம் நோன்பு: அட்டமி நோன்பு, சதுர்த்தசி நோன்பு, சோமவார நோன்பு.

1198. அங்குரம்: முளை.

1199. தனி: ஒப்பற்ற. மெய்த்த: உண்மையை உடைய. சாதகவினை: சாதகன்மவினை. மன்னவன்: வீரபாண்டியன் உழுவை: புலி. கோட்பட்டான்: பற்றப்பட்டான்.

1200 வேங்கை வாய்ப்படு மீனவன் விண்விருந்து ஆக,
வாங்கு நூல்மருங்கு இற,கரம் மார்புஎறிந்து, ஆரம்
தாங்கு கொங்கைசாந்து அழிந்திட; தடம்கண் முத்துஇறைப்ப,
ஏங்க மாதர்பொன் நகருளார் யாவரும் இரங்க, 6

1201 மற்ற வேலை,கா மக்கிழத் தியர்பெறு மைந்தர்
அற்றம் நோக்கியீது அமையம்என்று, ஆனைமா ஆதி
உற்ற பல்பிற பொருள்நிதி ஒண்கல னோடும்
கொற்ற மோலியும் கவர்ந்தனர் கொண்டுபோய் மறைந்தார். 7

1202 மன்னன் ஆணைஆறு ஒழுகிய மந்திரக் கிழவர்,
மின்னு வேல்இளம் குமரனைக் கொண்டுவிண் அடைந்த
தென்னர் கோமகற்கு இறுதியில் செய்வினை நிரப்பி,
அன்ன காதலற்கு அணிமுடி சூட்டுவான் அமைந்தார், 8

1203 நாடிப் பொன்அறை புகுந்தனர்; நவமணி மகுடம்
தேடிக் கண்டிலர்; நிதிசில கண்டிலர்; திகைத்து
வாடிச் சிந்தைநோய் உழந்துஇது மாற்றலர் கூட்டுண்டு
ஓடிப் போயினது ஆகுமென்று உணர்ந்துஇது நினைவார், 9

1204 வேறு மாமுடி செய்துமால் என்னிறோ விலைமிக்கு
ஏறும் மாமணி இலை; அரசு இருக்கைஇன்று; இன்றேல்
தேறு நீர்உலகு அலையும்என் செய்வதுஇங்கு என்று,
ஆறு சேர்சடை யார்அருள் காண்டும்என்று அமைச்சர், 10

---

1200 வாங்கு: துவளுகின்ற. இற: முறியுமாறு. தடம்: அகன்ற. (இப்பாடல் குளகம்).

1201. அற்றம்: சோர்வு. அமையம்: சமயம். மோலி: திருமுடி.

1202. மந்திரம்: சூழ்ச்சி. இறுதியில் செய்வினை: ஈமக்கடன்கள். அமைந்தார்: அமைந்து (இப்பாடல் குளகம்).

1203. பொன்அறை: கருவூலம். போயின போக்கப்பட்டன. (இப்பாடலும் குளகம்).

1204. அலையும்: வருந்தும். ஆறு: கங்கை. (இப்பாடலும் குளகம்

1205 கரைசெ யாப்பெரும் கவலைசூழ் மனத்தராய், கறங்கும்
முரசு கண்படாக் கடிமனை முற்றம்நீத்து, அருமை
அரசுஇ ளம்தனிக் கொழுந்தினைக் கொண்டுபோய் அம்பொன்
வரைசெய் கோபுர வாயில்முன் வருகுவார் வருமுன், 11

1206 எல்த தும்புகோ வணஉடை இடம்படப் பிறங்க,
துற்ற பல்கதிர் மணிப்பொதி சுவல்மிசைத் தூங்க,
மல்த டம்புய வரைமிசை வரம்பிலா விலைகள்
பெற்ற அங்கதம் பரிதியில் பேர்ந்துபேர்ந்து இமைப்ப, 12

1207 மந்தி ரப்புரி நூல்அது வலம்படப் பிறழ,
இந்தி ரத்திரு வில்என ஆரம்மார்பு இலங்க,
சுந்த ரக்குழை குண்டலம் தோள்புரண்டு ஆட,
தந்தி ரத்தரு மறைகளி தாள்நிலம் தோய, 13

1208 பொன்அவிர்ந்து இலங்குகோ புரம்முன் போதுவார்
முன்,அவர் துனிவுகூர் முன்னம் நீக்கிய
தென்னவர் குலப்பெரும் தெய்வம் ஆகிய
மன்னவர், வணிகராய் வந்து தோன்றினர். 14

1209 வந்தவர் எதிர்வரு வாரை, "மம்மர்கொள்
சிந்தைய ராய்வரு செய்தி யாது?" என
முந்தையில் விளைவுஎலாம் முறையில் கூறினர்க்கு
எந்தையாம் வணிகர்ஈது இயம்பு வார்அரோ. 15

---

1205. கறங்கும்: ஒலிக்கும் இளம்தனிக் கொழுந்து: ஒப்பற்ற இளம் புதல்வன். (இப் பாடலும் குளகம்).

1206. எல்: ஒளி. ததும்பும். மிகுந்த. இடம்பட: விசாலமாக. பிறங்க: விளங்க. துற்ற: நெருங்கிய. சுவல்: பிடரி. அங்கதம்: வாகுவலயம். பரிதியில்: சூரியனைப்போல. பேர்ந்து பேர்ந்து: விட்டுவிட்டு. இமைப்ப: ஒளிவீசவும். (இப்பாடலும் குளகம்).

1207. மந்திரப்புரிநூல்: பூணூல். வலம்பட: வலப்பக்கமாக. பிறழ: புரள. தாள்: திருவடிகள்.

1208. துனிவு: துன்பம். முன்னம்: எண்ணம். மன்னவர்: சுந்தரேசர்.

1209. மம்மர்: மயக்கம். முந்தை: முன்னர்.

1210 என்படர் எய்துகின் றீர்கள் என்வயின்
ஒன்பது மணிகளும் உள்ள வால்;அவை
பொன்பதி னாயிரம் கோடி போனஎன்று,
அன்புற மணியெலாம் அடைவில் காட்டுவார். 16

1211 இருந்தனர் கீழ்த்திசை நோக்கி, இட்டதோர்
கரும்துகில் நடுவும்இந் திராதி காவலர்
அரும்திசை எட்டினும் அடைவில் செம்மணி
பெரும்தண்முத்து ஆதிஎண் மணியும் பெய்தரோ, 17

1212 இம்மணி வலன்உடல் சின்னம் என்னஅக்
கைம்மறி கரந்தவர் கூற, கற்றநூல்
செம்மதி அமைச்சர்"அச் செம்மல் யார்அவன்
மெய்ம்மணி ஆயதுஎன்? விளம்புக" என்னவே, 18

1213 மேவரும் வலன்எனும் அவுணன் மேலைநாள்,
மூவரின் விளங்கிய முக்கண் மூர்த்திசெம்
சேவடி அருச்சனைத் தவத்தின் செய்தியால்
"யாவது வேண்டும்?"என்றுஇ றைவன் கூறலும், 19

1214 தாழ்ந்துநின்று இயம்பும்"யான் சமரில் யாரினும்
போழ்ந்துஇற வாவரம் புரிதி; ஊழ்வினை
சூழ்ந்துஇறந் தால்என்மெய் துறந்த மாந்தரும்
வீழ்ந்திட நவமணி ஆதல் வேண்டுமால்," 20

---

1210. படர்: துன்பம். என்வயின்: என்னிடத்து. அடைவில்: முறைப்படி. காட்டுவார்: காட்டத்தொடங்கினர்.

1211. நடுவில் மாணிக்கமும், பிறமணிகள் சுற்றிலும் வைத்து. (இப்பாடலும் குளகம்).

1212. வலன்: வலன் என்னும் அவுணன். உடல் சின்னம்: உடலின் பகுதிகள். மறி: மான். கரந்தவர்: வணிகர். என்: எங்ஙனம். (இப்பாடலும் குளகம்).

1213. மேவரும்: நெருங்குதற்கு அரிய. (இப்பாடலும் குளகம்).

1214 போழ்ந்து: பிளவுண்டு வரம்புரிதி: வரத்தை அருளுக. துறந்த மாந்தர்: பற்றற்ற துறவிகள், வீழ்ந்திட: விரும்பும் வண்ணம் (இப்பாடலும் குளகம்).

1215 என்றுவேண் டலும்வரம் ஈசன் நல்கினான்;
அன்றுபோய் அமர்குறித்து அமரர் கோனொடு
சென்றுபோர் ஆற்றலும், தேவர் கோன்எதிர்
நின்றுபோர் ஆற்றலன் நீங்கிப் போயினான். 21

1216 தோற்றவான் நாடவன், மீண்டு சூழ்ந்துஅமர்
ஆற்றினும் வெல்லரிது; அழிவி லாவரம்
ஏற்றவன் ஆதலால் இவனைச் சூழ்ச்சியால்
கூற்றின்ஊர் ஏற்றுதல் குறிப்பென்று உன்னியே, 22

1217 விடம்கலுழ் படைக்கலன் இன்றி, விண்ணவர்
அடங்கலும் தழீஇக்கொள, அடுத்துத் தானவ
மடங்கலை வருகென நோக்கி வானவக்
கடம்கலுழ் யானைபோல் கரைந்து கூறுவான். 23

1218 "விசைய! நின் தோள்வலி வென்றி வீக்கம்எத்
திசையினும் பரந்தது;அச் சீர்த்தி நோக்கிஉள்
நசைஅரு மகிழ்ச்சியால் நல்குவேன்; உனக்கு
இசையவேண் டியவரம் யாது கேள்''என, 24

1219 கடிபடு கற்பக நாடு காவலோன்
நொடிஉரை செவித்துளை நுழைய, தானவன்
நெடியகை புடைத்துஉடல் நிமிர்ந்து கார்படும்
இடிஎன நகைத்துஇகழ்ந்து இனைய கூறுவான். 25

---

1215. ஆற்றலன்: ஆற்றுதவனாகி.

1216: வான் நாடவன்: இந்திரன். கூற்றின் ஊர்: யமனுலகு. உன்னி: கருதி. (இப் பாடல் குளகம்).

1217. விடம்: நஞ்சு. தழீஇக்கொள: சூழ்ந்துவர. தானவமடங்கல்: அசுரசிங்கம். கடம்: மதம். கரைந்து: அழைத்து.

1218. வீக்கம்: பெருக்கம். நசை: விருப்பம். (இப்பாடல் குளகம்).

1219. கடிபடு: மணம்பொருந்திய. நொடி: கூறிய. கார்: முகில்.

1220 "நன்றுஇது மொழிந்தாய் யாரும்
நகைக்க;நீ எனைவெந் கண்ட
வென்றியும், அதனால் பெற்ற
புகழும்,நின் வீறு பாடும்,
இன்றுநின் போரில் காணப்
பட்டவே; இசைபோய் எங்கும்
நின்றதே; இதுபோல் நின்கை
வண்மையும் நிற்பது அன்றோ." 26

1221 "ஈறுஇலான் அளித்த நல்ல
வரம்எனக்கு இருக்க, நின்பால்
வேறுநான் பெறுவது உண்டோ?
வேண்டுவது உனக்குயாது? என்பால்
கூறுநீ, அதனை இன்னே
கொடுக்கலேன் ஆகின், நின்போல்
பாறுவீழ் களத்தில் தோற்ற
பழிப்புகழ் பெறுவன்'' என்றான். 27

1222 மாதண்ட அவுணன் மாற்றம்
மகபதி கேட்டு உவந்து,
"கோதண்ட மேருக் கோட்டிக்
கொடுப்புரம் பொடித்தான் வெள்ளி
வேதண்டம் எய்தி ஆங்கோர்
வேள்வியான் புரிவன்; நீஅப்
போதுஅண்டர்க்கு ஊட்ட ஆவாய்ப்
போதுவாய் வல்லை'' என்றான். 28

---

1220. வெந்: புறம். (இப்பாடல் இந்திரனை இகழ்ந்தது).

1221. ஈறுஇலான்: அழிவற்றவனாகிய சிவபெருமான். பாறு: பருந்து.

1222. மா: பெரிய. மாற்றம்: மறுமொழி. மகபதி: இந்திரன். கோதண்டம்: வில். கோட்டி: வளைத்து பொடித்தான்: சிவபிரான். வேதண்டம்: மலை. புரிவன்: செய்வேன். வல்லை: விரைந்து.

1223 "அன்றுஒரு தவத்தோன் என்பு
வச்சிரம் ஒன்றே ஆக.
ஒன்றிய கொடையால் பெற்ற
புகழ்உடம்பு ஒன்றே; என்போல்
வென்றியி னாலும் வீயா
மெய்எலாம் மணிகள் ஆகப்
பொன்றிய கொடையி னாலும்
புகழ்உடம்பு இரண்டுஉண் டாமே." 29

1224 "மேவலன் அல்லே; நீயே
நட்டவன்; மேலை வானோர்
யாவரும் அருந்தும் ஆற்றால்
அறம்புகழ் எனக்கே ஆக
ஆஉரு ஆதி என்றாய்,
அன்னதே செய்வேன்" என்றான்;
ஈவதே பெருமை அன்றி,
இரக்கின்றது இழிபே அன்றே. 30

1225 அதற்குஇசைந்து அவுணர் வேந்தன்
அமரர்வேந் தனைமுன் போக்கி,
மதர்க்கடும் குருதிச் செங்கண்
மைந்தனுக்கு இறைமை ஈந்து,
முதற்பெரும் கலையாம் வேத
மொழிமரபு அமைந்த ஆறாய்,
புதர்க்குஅடு வேள்விச் சாலைப்
புறத்துஉகந்து இறுத்து நின்றான். 31

---

1223. தவத்தோன்: ததீசி முனிவன். என்பு: எலும்பு. வீயா: அழியாத.

1224. மேவலன்: பகைவன். நட்டவன்: நண்பன். பாடலின் பிற்பகுதி வேற்றுப் பொருள் வைப்பு அணி.

1225. மதர்: மதர்த்த. இறைமை: அரசுரிமை புதர்: தேவர். இறுத்து: நிலைபெயராது.

1226 "வாய்மையால் மாண்ட நின்போல்
வள்ளல்யார்?" என்று தேவர்
கோமகன் வியந்து கூற,
தருக்குமேல் கொண்டு மேரு
நேமியோடு இகலும் விந்த
வரைஎன நிமிர்ந்து, வேள்விக்கு
ஆம்எனை யூபத் தோடும்
யாமின்என்று அடுத்து நின்றான். 32

1227 யாத்தனர் தருப்பைத் தாம்பால்,
ஊர்ணையால் யாத்த சிங்கப்
போத்துஎன நின்றான்; வாயைப்
புதைத்துஉயிர்ப்பு அடங்க வீட்டி
மாய்த்தனர்; மாய்ந்த வள்ளல்
வலனும்மந் தார மாரி
தூர்த்திட, விமானம் ஏறித்
தொல்விதி உலகம் சேர்ந்தான். 33

1228 மணித்தலை மலையின் பக்கம்
மாய்த்தவன் வயிர வேலால்,
பிணித்துஉயிர் செகுத்த வள்ளல்
பெருந்தகை ஆவாய் வேதம்
பணித்திடும் வபையை வாங்கிப்
படர்எரி சுவைமுன் பார்க்க,
குணித்தவான் நாடர்க்கு ஊட்டிக்
கோதுஇலா வேள்வி செய்தான். 34

---

1226. தருக்கு: செருக்கு. இகலும்: மாறுபடும். யூபம்: வேள்வித்தூண். யாமின்: கட்டுங்கள்.

1227. தாம்பு கயிறு. ஊர்ணை: சிலம்பிநூல். உயிர்ப்பு: மூச்சு. மந்தாரம்: கற்பகம். தொல்விதி உலகம்: பிரமலோகம்.

1228. பக்கம் சிறகு மாய்த்தவன்: இந்திரன். வயிரவேல்: வச்சிரப்படை. ஆ வாய்: ஆவினிடத்து. வபை: நிணம். குணித்த: மதிக்கப்பட்ட. கோது: குற்றம்.

1229 அத்தகை ஆவின் சோரி
மாணிக்கம்; ஆம்பல் முத்தம்;
பித்தைவை டுயம்; என்பு
வச்சிரம்; பித்தம் பச்சை;
நெய்த்தவெள் நிணம்கோ மேதம்;
தசைதுகிர்; நெடுங்கண் நீலம்;
எய்த்தஐ புருட ராகம்;
இவைநவ மணியின் தோற்றம். 35

1230 இவ்வடிவு எடுத்துத் தோன்றி
இருள்முகம் பிளப்பக் காந்தி
தைவரும் மணிஒன் பானும்,
சார்வுஇடம், நிறங்கள், சாதி,
தெய்வதம், ஒளி,மாசு எள்ளிச்
சோதனை செய்து தேசு
மெய்வர அணிவோர் எய்தும்
பயன்இவை விதியால் கேண்மின். 36

1231 வாள்அவிரும் மாணிக்கம் கிரேதம்முதல்
உகநான்கும் வழியே மக்கம்,
காளபுரம், தும்புரம்,சிங் களம்இந்நான்கு
இடைப்படும்;அக் கமல ராகம்
ஆளுநிறம் ஒன்பதுஅர விந்தம்,மா
துளம்பூ,வித்து, அழல்,கல் லாரம்,
கோளரிய கச்சோதம், நரந்தம்நறும்
பலம்,தீபம், கோபம் என்ன. 37

---

1229. சோரி: இரத்தம். பித்தை: மயிர். என்பு: எலும்பு. துகிர்: பவளம். எய்த்த: இளைத்த ஐ: கபம்.

1230. மணி ஒன்பானும் : நவரத்தினங்களும்.

1231. படும்: தோன்றும். கமலராகம்: பதுமராகம். மாணிக்கம்: ஒன்பது வகையாக ஒளிறும். கல்லாரம்: செங்குவளை. கச்சோதம்: மின்மினிப்பூச்சி. நரந்த நறும்பலம்: நாரத்தம்பழம். கோபம்: இந்திர கோபம்.

1232 இந்நிறத்த பொதுவாய மாணிக்கம்
மறையவர்முன் னியநால் சாதி
தன்இயல்பால் சாதரங்கம் குருவிந்தம்
சௌகந்தி கம்கோ வாங்கம்
என்னும்இவற் றுல்சிறந்து நான்குஆகும்;
இவ்அடைவே இந்நான் கிற்கும்
சொன்னஒளி பத்துஇருநான்கு இருமூன்று
நான்குஅவையும் சொல்லக் கேண்மின். 38

1233 சாதரங்க நிறம்கமலம், கருநெய்தல்,
இரவிஒளி, தழல்,கச் சோதம்,
மாதுளம்போது, அதன்வித்து, கார்,விளக்கு,
கோபம்என வகுத்த பத்தும்;
மேதகைய குருவிந்தம் நிறம்குன்றி,
முயல்குருதி, வெள்ள ளோத்தம்
போது,பலாசு அலர்,திலகம், செவ்வரத்தம்,
விதாரம்,எரி பொன்போல் எட்டும், 39

1234 களிதருசௌ கந்திகத்தின் நிறம்இலவம்
போது,குயில் கண்,அ சோகம்
தளிர்,அவிர்பொன், செம்பஞ்சு,இ யைவண்ணம்
எனஆறு; தருகோ வாங்க
ஒளிகுரவு, குசும்பைமலர், செங்கல்,கொவ்
வைக்கனிஎன்று ஒருநான்கு; அந்த
மிளிர்பதும ராகத்தைப் பொதுமையினல்
சோதிக்க வேண்டும் எல்லை, 40

---

1232. மாணிக்கத்தின் நாற்சாதிக்கும் உரிய நிறங்களைக் கூறுகின்றார். சாதரங்கம், குருவிந்தம், சௌகந்திகம், கோவாங்கம் என்று நான்கு வகைய.

1233. குன்றி: குன்றிமணி. போது: மலர். பலாசுஅலர்: முள்முருக்க மலர். திலகம்: மஞ்சாடி மலர். விதாரம்: முள்இலவ மலர். சாதரங்கத்தின் நிறம் பத்து வகை. குருவிந்தத்தின் நிறம் எட்டு வகை.

1234. இயைவண்ணம்: மருதோன்றி. சௌகந்திகத்தின் நிறம் ஆறுவகை. கோவாங்கத்தின் நிறம் நான்குவகை. (இப்பாடல் குளகம்).

1235 திண்ணியதாய் மேல்கீழ்சூழ் பக்கம்உற
ஒளிவிடுதல் செய்தால் செவ்வே
அண்ணியஉத் தமம்முதல்மூன் றும்என்பர்;
சாதரங்கம் அணிவோர் விச்சை,;
புண்ணியஆன், கன்னி,அறு சுவைஅன்னம்
முதலான புனித தானம்
பண்ணியதும், பரிமேத யாகம்முதல்
மகம்புரிந்த பயனும் சேர்வர். 41

1236 குருவிந்தம் தரிப்பவர்பார் முழுதும்ஒரு
குடைநிழலில் குளிப்ப ஆண்டு
திருவிந்தை உடன்இருப்பர்; சௌகந்தி
கம்தரிப்போர் செல்வம் கீர்த்தி
மருவிஇந்தப் பயனடைவர்; கோவாங்கம்
தரிப்போர்தம் மனையில் பாலும்
பெருவிந்தம் எனச்சாலி முதல்பண்டம்
உடன்செல்வப் பெருக்கும் உண்டாம். 42

1237 எள்ளிஇடு குற்றம்எலாம் இகந்து,குணன்
ஏற்று,ஒளிவிட்டு, இருள்கால் சீத்து,
தள்ளியஇச் செம்பதும ராகம்அது
புனைதக்கோர் தம்பால் ஏனைத்
தெள்ளியமுத்து உள்ளிட்ட பன்மணியும்
வந்துஒங்கும்; செய்யா ளோடும்
ஒள்ளியநல் செல்வம்அதற்கு ஒப்பநெடும்
பாற்கடலின் ஓங்கு மாலோ. 43

---

1235. அண்ணிய: பொருந்திய. உத்தமம் முதல்மூன்று: உத்தமம், அதமம், மத்திமம். மேலே ஒளிவீசினால் உத்தமம். கீழே ஒளிவீசினால் அதமம். பக்கங்களில் ஒளிவீசினால் மத்திமம். பண்ணியது: பண்ணிய பயன். மகம்: வேள்வி.

1236. திருவிந்தை: திருமகள். பெருவிந்தம்: பெரிய விந்தமலை. சாலி: நெல். நால்வகை மாணிக்கமும் அணிபவர் பெறும்பயன் கூறப்பட்டது.

1237. எள்ளிஇடுகுற்றம்: விலக்கப்பட்ட குற்றங்கள். இகந்து: நீங்கி. கால்சீத்து: கெடுத்து. செய்யாள்: திருமகள். பாற்கடலின்: பாற்கடலைப்போல.

1238 பிறநிறச் சார்பு புள்ளி
புள்ளடி பிறங்கு கீற்றும்
மறுவரு தராசம் என்ன
வகுத்தஐங் குற்றம் தள்ளி,
அறைதரு பண்பு சான்ற
அரதனம் அணியும் வேந்தன்
செறுநர்வாள் ஊற்றம் இன்றிச்
செருமகட்கு அன்பன் ஆவான். 44

1239 குறுநிலக் கிழவ னேனும்,
அவன்பெரும் குடைக்கீழ்த் தங்கி
மறுகுநீர் ஞாலம் எல்லாம்
வாழும்;மற்று அவனைப் பாம்பு,
தெறுவிலங்கு, அலகை, பூதம்,
சிறுதெய்வம், வறுமை, நோய்,தீ,
கறுவுகொள் கூற்றச் சீற்றம்
கலங்கிட வாதி யாவாம். 45

1240 முன்னவர் என்ப கற்றோர்
வச்சிரம் முந்நீர் முத்தம்;
மன்னவர் என்ப, துப்பு,
மாணிக்கம் வணிகர் என்ப,
மின்அவிர் புருட ராகம்,
வயிடூயம், வெயில்கோ மேதம்;
பின்னவர் என்ப நீலம்,
மரகதம்; பெற்ற சாதி. 46

---

1238. பிறநிறச்சார்பு. வேறு நிறம் பொருந்தல். புள்ளி: விந்து. புள்ளடி: சாகபாதம். கீற்று: தாரை. தராசம்: ஒளிசலித்தல் — ஐந்துவகைக் குற்றங்கள். செறுநர்: பகைவர். ஊற்றம்: இடையூறு. செருமகள்: கொற்றவை

1239. மறுகுநீர்: கடல். தெறுவிலங்கு. கொல்லும் விலங்கு. அலகை: பேய். வாதியா. துன்புறுத்தா.

1240. முன்னவர்: அந்தணர். வச்சிரம்: வயிரம். முத்தம்: முத்து. துப்பு: பவளம். வெயில்: ஒளி. பெற்ற: பொருந்திய.

1241 பார்த்திபர் மதிக்கும் முத்தம்
பளிங்குஅன்றிப் பச்சை தானும்
சாத்திகம், துகிர்,மா ணிக்கம்
கோமேதம் தாமே அன்றி
மாத்திகழ் புருட ராகம்
வயிடூயம் வயிரம் தாமும்
ஏத்துஇரா சதமாம், நீலம்
தாமதம் என்பர், ஆய்ந்தோர். 47

1242 இனையவை அளந்து கண்டு
மதிக்கும்நாள் எழுமான் பொன்தேர்
முனைவன்நாள் முதலா ஏழின்
முறையினால் பதும ராகம்
கனைகதிர் முத்தம் துப்புக்
காருடம் புருட ராகம்
புனைஒளி வயிரம் நீலம்
என்மனார் புலமை சான்றோர். 48

1243 வெய்யவன் கிழமை தானே
மேதகு மணிக்கும் ஆகும்;
மையறு திங்கள் தானே
வயிடூய மணிக்கும் ஆகும்;
ஐஅற இவைஒன் பானும்
ஆய்பவர் அகம்பு றம்பு
துய்யராய் அறவோ ராய்முன்
சொன்னநாள் அடைவே ஆய்வர். 49

---

1241. பச்சை: மரகதம். சாத்திகம்: சாத்துவிக குணம். இராசதம்: இராசத குணம். தாமதம்: தாமத குணம். நவமணிகட்கு மூவகைக் குணம் கூறப்பட்டன.

1242. பொன்தேர் முனைவன்: ஞாயிறு. காருடம்: பச்சை முறையினால்: கிழமைகளின் முறை ஒவ்வொரு மணியும் மதிப்பிடும் நாள் ஞாயிறு தொடங்கிக் கூறப்பட்டுளது.

1243. வெய்யவன்: சூரியன் (ஞாயிறு).

1244 அல்லிஅம் பதுமம், சாதி,
அரத்தவாய் ஆம்பல், கோடல்,
வல்லிசேர் மௌவல் போது,
நூற்றுஇதழ் மரை,கா லேயம்,
மெல்இதழ்க் கழுநீர், பேழ்வாய்
வெள்ளைமந் தாரம், இன்ன
சொல்லிய முறையால் வண்டு
சூழத்தன் முடிமேல் சூடி, 50

1245 தலத்தினைச் சுத்தி செய்து,
தவிசினை இட்டு, தூய
நலத்துகில் விரித்து, தெய்வ
மாணிக்கம் நடுவே வைத்து,
குலத்தமுத்து ஆதி எட்டும்
குணதிசை முதல்எண் திக்கும்
வலப்பட முறையே பானு
மண்டல மாக வைத்து, 51

1246 அன்புஉறு பதும ராகம்
ஆதியாம் அரத னங்கள்
ஒன்பதும், கதிரோன் ஆதி
ஒன்பது கோளும் ஏற்றி.
முன்புஉரை கமலப் போது
முதல்ஒன்பான் மலரும் சாத்தி,
இன்புஉற நினைந்து பூசை
இயல்முறை வழாது செய்தல். 52

---

1244. அல்லி: அகவிதழ். சாதி: சண்பகம். ஆம்பல்: அல்லி. கோடல்: காந்தள். மௌவல்: மல்லிகை. காலேயம்: மரமஞ்சள். கழுநீர்: நெய்தல். (இப்பாடல் குளகம்).

1245. தலம்: இடம். தவிசு: இருக்கை. குணதிசை: கிழக்குத்திசை. பானு: சூரியன். (இப்பாடலும் குளகம்).

1246. செய்தல்: செய்க.

1247 தக்கமுத்து இரண்டு வேறு
தலசமே சலசம் என்ன;
இக்கதிர் முத்தம் தோன்றும்
இடம்பதின் மூன்று; சங்கம்,
மைக்கரு முகில்,வேய், பாம்பின்
மத்தகம், பன்றிக் கோடு,
மிக்கவெண் சாலி, இப்பி,
மீன்தலை, வேழக் கன்னல், 53

1248 கரிமருப்பு, ஐவாய் மான்கை,
கற்புடை மடவார் கண்டம்,
இருசிறைக் கொக்கின் கண்டம்
எனக்;கடை கிடந்த மூன்றும்
அரியன; ஆதிப் பத்து
நிறங்களும் அணங்கும் தங்கட்கு
உரியன நிறுத்த வாறே
ஏனவும் உரைப்பக் கேண்மின். 54

1249 மாடவெண் புறவின் முட்டை
வடிவுஎனத் திரண்ட போழ்வாய்,
கோடு,கால் முத்தம் வெள்ளை
நிறத்தன; கொண்மூ முத்தம்
நீடுசெம் பரிதி அன்ன
நிறத்தது; கிளைமுத்து ஆலிப்
பீடுசால் நிறத்து; அராவின்
பெருமுத்தம் நீலத்து ஆம்ஆல். 55

---

1247. தக்க முத்து: குற்றமற்ற முத்து. வேழக்கன்னல்: வேழக்கரும்பு. (இப்பாடல் குளகம்)

1248. கரி: யானை. ஐவாய்மான்: சிங்கம். கண்டம்: கழுத்து. கடை: இறுதி. அணங்கு: தெய்வம்.

1249. பேழ்வாய்: இப்பி. கோடு: சங்கு. கால்: ஈன்ற. கொண்மூ: மேகம். கிளை: மூங்கில். ஆலி: மழைக்கட்டி. அரா: பாம்பு.

1250 ஏனம்பா ஆரம் சோரி;
ஈர்ஞ்சுவைச் சாலி முத்தம்
ஆனது பசுமைத்து ஆகும்;
பாதிரி அனையது ஆகும்
மீனது தரளம்; வேழம்
இரண்டினும் விளையும் முத்தம்
தான்அது பொன்னின் சோதி;
தெய்வதம் சாற்றக் கேண்மின். 56

1251 பால்முத்தம் வருணன் முத்தம்;
பகல்முத்தம் பகலோன் முத்தம்;
மால்முத்தம் நீல முத்தம்;
மாசுஅறு குருதி முத்தம்
கால்முத்தம்; பசிய முத்தம்
காலன்தன் முத்தம்; தேவர்
கோன்முத்தம் பொன்போல் முத்தம்;
குணங்களும் பயனும் சொல்வாம். 57

1252 உடுத்திரள் அனைய காட்சி
உருட்சி,மாசு இன்மை, கையால்
எடுத்திடில் திண்மை, பார்வைக்கு
இன்புறல், படிகம் என்ன
அடுத்திடு குணம்ஆறு; இன்ன
அணியின்மூது அணங்கோடு இன்மை
விடுத்திடும்; திருவந்து எய்தும்;
விளைந்திடும் செல்வம் வாழ்நாள். 58

---

1250. ஏனம்: பன்றி. ஆரம்: முத்து. சோரி: இரத்தம். ஈர்: தண்ணிய தரளம்: முத்து. வேழம் இரண்டு: யானை, கரும்பு.

1251. பகலோன்: சூரியன். கால்: வாயு. காலன்: கூற்றுவன்.

1252. உடு; விண்மீன். உருட்சி: திரட்சி. மூதணங்கு: மூதேவி, விடுத்திடும்: நீங்கும்.

1253 மாசறு தவத்தோன் என்பும்,
வலாசுரன் என்பும், வீழ்ந்த
கோசலம் ஆதி நாட்டில்
பட்டது குணத்தால் மாண்ட
தேசதாய், இலேச தாகி,
தெள்ளிதாய், அளக்கின் எல்லை
வீசிய விலைய தாகி,
மேம்படு வயிரம் தன்னை, 59

1254 குறுநிலத்து அரசும் தாங்கில்
குறைவுதீர் செல்வம் எய்தி,
உறுபகை எறிந்து, தன்கோல்
முழுது உலகு ஓச்சிக் காக்கும்;
வறுமைநோய் விலங்கு சாரா;
வரைந்தநாள் அன்றிச் செல்லும்
கறுவுகொள் கூற்றம் பூதம்
கணங்களும் அணங்கு செய்யா. 60

1255 மாமணி மரபுக்கு எல்லாம்
வயிரமே முதன்மைச் சாதி
ஆம்என உரைப்பர் நூலோர்;
அதிகம்யாது என்னில், ஏனைக்
காமரு மணிகட்கு எல்லாம்
தமர்இடு கருவி யாம்,அத்
தூமணி தனக்கும் தானே
துளையிடும் கருவி ஆகும். 61

---

1253 தவத்தோன்: ததீசி முனிவன். வீழ்ந்த: சிந்திய. பட்டது: தோன்றியதாய். (இப்பாடல் குளகம்).

1254. சாரா: அடையா. வரைந்தநாள். வரையறுத்தநாள்: கறு: சினம். அணங்கு: துன்பம்.

1255. நூலோர்; மணிநூல் ஆராய்ச்சி வல்லுநர். தமர்: துளை. தூமணி· வயிரமணி.

1256 மரகதத் தோற்றம் கேண்மின்;
வலாசுரன் பித்தம் தன்னை
இரைதமக்கு ஆகக் கௌவிப்
பறந்தபுள், ஈர்ந்தண் தில்லித்
தரைதனில் சிதற வீழ்ந்து
தங்கிய தோற்றம் ஆகும்;
உரைதரு தோற்றம் இன்னும்
வேறுவேறு உள்ள கேண்மின். 62

1257 விதிர்த்தவேல் அனைய வாள்கண்
வினதைமாது, அருணச் செல்வன்
உதித்தவான் புட்டை ஓட்டை
உவணஏற்று அரையில் யாப்ப,
கதிர்த்தஒடு அரையில் தப்பி
வீழ்ந்துஒரு கடல்சூழ் வைப்பில்
உதித்தவாறு ஆகும்; இன்னும்
உண்டுஒரு வகையால் தோற்றம். 63

1258 முள்அரை முளரிக் கண்ணன்
மோகினி அணங்காய் ஓட,
வள்அரை மதியம் சூடி
மந்தர வரைமட்டு ஆக,
துள்அரி ஏறு போலத்
தொடர்ந்துஒரு விளையாட் டாலே,
என்அரி தாய செந்தீ
இந்தியக் கலனம் செய்தான். 64

---

1256. பித்தம்: வயிற்றுப்புறம். புள்: கருடன். தில்லித்தரை: டில்லி மாநகரம்.

1257. விதிர்த்தல்: அசைத்தல். வினதை: தக்கன் மகள்; கருடனின் தாய். உவணம்: கருடன். கதிர்த்த: விளங்கிய. வைப்பு: நிலம்.

1258. முளரி: தாமரை. வள்: அழகிய. மதியம்சூடி: சிவபெருமான். மட்டு: எல்லை, அரிஏறு: ஆண்சிங்கம். இந்தியக் கலனம்: இந்திரியம். செய்தான்: சிந்தினான்

1259 அப்பொழுது அமல வித்தில்
அரிகர குமரன், கான
வைப்புறை தெய்வத் தோடும்
வந்தனன்; அந்த விந்து
துப்புஉறு கருடன் கௌவிக்
கடலினும் துருக்க நாட்டும்
பப்புஉற விடுத்த வாறே
பட்டது கலுழப் பச்சை. 65

1260 காடமே சுப்பிரமே காளம்எனக்
குணம்மூன்றும் கருடப் பச்சைக்கு;
ஈடுஅறுகின் இதழ்நிறத்த காடம்,அது
சாதியினால் இருவேறு ஆகும்
சாடுஅரிய சகுணம்எனச் சதோடம்என;
அவைஇரண்டில் சகுணம் ஆறும்
பீடுபெறு காடமொடும் உல்லசிதம்
பேசலப்பித் தகமே முத்தம், 66

1261 புல்லரிய பிதுகம்என இவைஆறில்
காடம்அது புல்லின் வண்ணம்;
உல்லசிதம் மெலிதாகும்; பேசலமே
குளச்சேநெல் ஒண்தரளம் போலும்;
அல்லல்தரும் பித்தகமே பசுங்கிளியின்
சிறைநிறத்தது ஆகும்; முத்தம்
குல்லைநிறம்; பிதுகமரை இலையின்நிறம்;
சதோடத்தின் குணம்ஐந்து ஆகும், 67

---

1259. வித்து: விந்து. அரிகரகுமரன்: ஐயனார். துப்பு: வலிமை. பப்புற: பரவ. பட்டது: தோன்றியது. கலுழப்பச்: கருடப்பச்சை.

1260. ஈடு: பெருமை. சாடு: கெடுதல். (இப்பாடல் குளகம்)

1261. குல்லை: துளவம். (இப்பாடலும் குளகம்)

1262 தோடலே சாஞ்சிதமே, துட்டமே,
தோடமூர்ச் சிதமே, வெய்ய
தோடலே சத்திஞெடு சூழ்மந்த
தோடம்என; தொகுத்த ஐந்தில்
தோடலே சாஞ்சிதம்சம் பிரஇலேயாம்;
அலரிஇலே துட்டம் நீலத்
தோடதுஆம்; புல்லிநிறம் தோடமூர்ச்
சிதம்;முளரி தோட லேசம். 68

1263 மந்ததோ டம்கலப மயில்இறகின்
நிறமாய்;இவ் வகுத்த தோடம்
சிந்தஆ றைதகுண மணிஅணிவோர்
நாற்கருவிச் சேனை வாழ்நாள்
உந்தவாழ் வார்;வலன்கண் நீலம்இரண்டு;
அரன்கண்டத்து ஒளிவிட்டு ஓங்கும்
இந்திரநீ லம்தான்,மா நீலம்என
வேறுஇரண்டுஉண்டு இன்னும் நீலம், 69

1264 முந்தியஇந் திரநீலம் விச்சுவரூ
பனைமகவான் முடித்த நாளில்,
நந்திஅடு பழிதவிர்ப்பான் புரியும்மகப்
பரிமகத்தின் நறிய தூமம்,
உந்திஅரும் பரிஇமையா நாட்டம்நுழைந்து
அளிசோற்றின் ஒழுகும் பீளை
சிந்தியஆற்று இடைப்படும்;ஒன்று இந்திரவில்
நீலம்எனத் திகழும் நீலம். 70

---

1262. சம்பிரஇலே. எலுமிச்சை இலே. நீலம்: சுருங்குவளை.

1263 தோடம் குற்றம். ஆறைத: நீங்காத (இப்பாடல் குளகம்).

1264. மகவான்: இந்திரன். நந்தி: பெருகி. அடுபழி: வருத்தும் பழி. உந்தி: ஓங்கி. பரி: குதிரை. நாட்டம்: கண். ஆறு: இடம்.

1265 சஞ்சையாம் பகல்கடவுள் மனைவி,அவன்
கனல்உடலம் தழுவல் ஆற்றாது
அஞ்சுவாள், தன்நிழலைத் தன்உருவா
நிறுவிவனம் அடைந்து நோற்க,
விஞ்சையால் அறிந்துஇரவி பின்தொடர
மாப்பரியாம் மின்னைத் தானும்
செஞ்செவே வயப்பரியாய் மையல்பொருது
இந்தியத்தைச் சிந்தி னானே. 71

1266 அவைசிதறும் புலம்தோன்றும் நீலம்மா
நீலம்,இவை அணிவோர் வானோர்
நவைஅறுசீர் மானவர்இந் நகைநீலம்
சாதியினால் நால்வேறு; அந்தக்
கவல்அரிய வெள்ளைசிவப்பு எரிபொன்மை
கலந்திருக்கில், கரிதாய் முற்றும்;
தவல்அரிதாய் இருக்கில்இரு பிறப்பாளர்
முதல்முதல்நாற் சாதிக்கு ஆகும். 72

1267 இலங்குஒளிய இந்நீலம் மெய்ப்படுப்போர்
மங்கலம்சேர்ந்து இருப்பார்; ஏனை
அலங்குகதிர் நீலத்தின் பெருவிலைஆ
யிரப்பத்தின் அளவைத்து ஆகி,
துலங்குவதுஆன் பால்கடத்தின் நூறுகுணச்
சிறப்புஅடைந்து தோற்றும் சோதி;
கலங்குகடல் உடைவைப்பில் அரிதுஇந்த
இந்திரன்பேர்க் கரிய நீலம். 73

1265. சஞ்சை: சூரியன் மனைவி. பகல் கடவுள்: சூரியன். உருவா: உருவமாக. வயப்பரி: ஆண் குதிரை.

1266 மானவர்: மக்களாவர். கவல்: கவ்வுதல். தவல்அரிதாய்: கெடுதல் இல்லாததாய்.

1267. மெய்ப்படுப்போர்: அணிந்திருப்போர். பால் கடத்தின்: பால் குடத்தில் இட்டால். வைப்பு: உலகம்.

1268 மைந்துஉறுசெம் மணி,முத்து வாள்வயிரம்,
பச்சை,ஒளி வழங்கும் நீலம்,
ஐந்துஇவைமேல் கோமேதம் முதல்பவளம்
ஈறுக அறைந்த நான்கும்,
நந்துஒளிய வேனும்அவை சிறுவேட்கை
பயப்ப,அழல் நகுசெம் குஞ்சி
வெம்தறுகண் வலன்நிணங்கள் சிதறும்இடைப்
படுவனகோ மேதம் என்ப. 74

1269 உருக்கும்நறு நெய்த்துளி,தேன் துளி,நல்ஆன்
புண்ணியநீர் ஒத்துச் சேந்து,
செருக்குபசும் பொன்நிறமும் பெற்று,மெலி
தாய்த்தூய்தாய்த் திண்ணிது ஆகி
இருக்கும்அது தரிக்கின்,இருட் பாவம்போம்;
பரிசுத்தி எய்தும்; வென்றித்
தருக்குவலன் கபம்விழுந்த இடைப்புருட
ராகம்ஒளி தழையத் தோன்றும். 75

1270 தாழ்ந்தபிலத்து இழிந்துஎரிபொற் கண்அவுணன்
உயிர்குடிக்கும் தறுகண் பன்றிப்
போழ்ந்தமுழை வாய்திறந்து, திசைசெவிடு
படநகைத்துப் பொன்போல் கக்கி,
வீழ்ந்தகபம் படுதீவில் படும்,உச்சி
வட்டமாய் மெலிதாய்ப் பொன்போல்
சூழ்ந்துஒளிவிட்டு அவிர்தழல்போல் தெளிவுஎய்தி
மனம்கவர்ந்து தோற்றம் செய்யும். 76

---

1268. நான்கு: கோமேதகம், புருடராகம், வைடூரியம், பவளம்.

1269. சேந்து: சிவந்து. புண்ணியநீர்: கோசலம். செருக்கு: உயர்ந்த.

1270. பிலம்: பிளவு. பொற்கண் அவுணன்: இரணியாக்கன். படும்: உண்டாகும் தோற்றம்செய்யும்: விளங்கும்.

1271 இந்தமணி பாரியாத் திரகிரியில்
கொடுமுடியாய் இலங்கும்; தெய்வ
மந்தரமால் வரைப்புறம்சூழ் மேகலையாம்;
மயன்இந்த மணியி னாலே
அந்தரநா டவன்நகரும் அரசுஇருப்பு
மண்டபமும் அமைத்தான்; இந்தச்
சந்தமணி தரிப்பவரே தரியார்வெந்
இடவாகை தரிக்க வல்லார். 77

1272 வலன்மயிராம் வயிடூயம் இளாவிருத
கண்டத்தில் வந்து தோன்றி,
பலர்புகழும் கோரக்கம், மகதம்,சிங்
களம்,மலயம், பார சீகம்,
இலகுதிரி கூடாதி தேயங்கள்,
பிறதீபம் எங்கும் தோற்றும்;
அலைகடலும் படும்இறுதிக் கார்இடிக்கும்
போது.நிறம் அதற்கியாது என்னில், 78

1273 கழைஇலை,கார் மயில்எருத்தம், வெருகின்கண்
நிறத்ததாய்க் கனத்த தாகி,
விழைவுதரு தெளிதாகித் திண்ணியதாய்
மெலிதாகி விளங்கும்; ஈதில்
அழகுபெற வலம்இடம்மேல் கீழ்ஒளிவிட்
டனமுறையே அறவோர் ஆதித்
தழைவுறுநால் சாதிகளாம்; தினம்இதனைப்
பூசித்துத் தரிக்க சான்றோர். 79

---

1271. கொடுமுடி: சிகரம். அந்தர நாடவன். இந்திரன். தரியார்: பகைவர். வெந்இட: புறம்கொடுக்க. வாகை: வெற்றி.

1272. இறுதிக்கார்: ஊழிக்கால மேகம் (இப்பாடல் குளகம்).

1273. கழை: மூங்கில். கார்: கரிய. எருத்தம்: கழுத்து. வெருகு: பூனை. தரிக்க: அணியக்கடவர்.

1274 வலத்துஅவுணன் தசைவீழ்ந்த வழிபடுதுப்பு,
அயன்சந்தி வடிவ மாத்தென்
புலத்தவரை விதிக்கும்இடத்து, அவனுடன்மாசு
இழிபுலத்தும், புயல்போல் வண்ணன்
வலைத்த,மது கைடவரைக் குறைகுருதி
வழிநிலத்தும், மகவான் வெற்பின்
குலத்தைஇறகு அரிசோரி சிதறுஇடத்தும்,
வந்துகுடி கொண்டு தோன்றும். 80

1275 அவ்வழியில் படுபவள முருக்கம்பூ,
பசுங்கிளிமூக்கு, அலர்ந்த செவ்விச்
செவ்வரத்த மலர்,கொவ்வைக் கனிபோலும்
குணம்,குற்றம் திருகிக் கோடல்,
எவ்வம்உறப் புழுஅரித்தல், முகம்ஒடிதல்;
பெரும்பாலும் இப்பூண் ஏந்தல்
பெய்வளையார் தமக்கேயாம்; தரிக்கின்மகப்
பேறுமுதல் பேறுஉண் டாகும். 81

1276 இரவிஎதிர் எரிஇறைக்கும் கல்லும்,மதி
எதிர்செழுநீர் இறைக்கும் கல்லும்,
உரையிடும்ஒன் பதில்ஒன்றில் உட்கிடையாய்க்
கிடக்கும்என, ஒன்பான் வேறு
மரபுஉரைத்த வணிகரேறு ஆகியவா
னவர்ஏறு, வடபால் நோக்கிப்
பரவிஇருந்து அருச்சித்து மணிகைக்கொண்டு
எதிர்மதுரைப் பரனை நோக்கா, 82

---

1274. சந்திவடிவமா: சந்திக்கால வடிவமாக. விதிக்கும்: படைக்கும். மாசு: அழுக்கு. மதுகைடவர்: மதுவும் கைடவனும். குறை: வெட்டிய. மகவான்: இந்திரன். வெற்பு: மலை.

1275. குணம்: நிறம்.

1276. கல்: சூரியகாந்தக் கல், சந்திரகாந்தக் கல். மதுரைப்பரன்: சொக்கலிங்கமூர்த்தி (இப்பாடல் குளகம்)

1277 அஞ்சலிசெய்து அகநோக்கால் இக்குமரர்க்கு
அளவிறந்த ஆயுள் செல்வம்
விஞ்சுகஎன்று அளித்தருள, இறைமகனும்
விண்இழிந்த விமானம் நோக்கி,
செஞ்சரணம் பணிந்துஇருகைத் தாமரையும்
விரித்துஏற்றான்; செல்வ நாய்கர்
மஞ்சனையும் புடைநின்ற அமைச்சரையும்
நோக்கிமுகம் மலர்ந்து சொல்வார், 83

1278 "இம்மணியால் இழைத்துநவ முடிசூட்டி
இச்சிங்க இளஏறு அன்ன
செம்மல்தனை அபிடேக பாண்டியன்என்று
இயம்புமென,, செம்பொன் தூக்கிக்
கைம்மறிஇல் வணிகருக்கு விலைகொடுப்பான்
வருவார்முன், கருணை நாட்டம்
அம்மகன்மேல் நிரப்பிஇள நகைஅரும்பி
நின்றாரை அங்குக் காணார். 84

1279 ஓர்உருவாய் நேர்நின்ற வணிகேசர்,
விடையின்மேல் உமையா ளோடும்
ஈர்உருவாய் முக்கண்ணும் நாற்கரமும்
அஞ்சுஅமரர் இறவா வாறு,
கார்உருவாய் எழுமிடறும் காட்டித்தம்
கோயில்புகக் கண்டார், இன்று
பார்உருவாய் நின்றவணி கேசர்இவர்
எனவேபின் பற்றிப் போவார். 85

---

1277. அகநோக்கு: திருவுளக் குறிப்பு. விஞ்சுக: ஓங்குக. செல்வநாய்கர்: சோமசுந்தரக் கடவுள். மஞ்சன்: மைந்தன். புடை: பக்கம். சொல்வார்: சொல்வாராய். (இப்பாடல் குளகம்).

1278. நவம்: புதுமை. மறி: மான்.

1279. கார்உரு: மேகநிறம்.

1280 தேன்செய்த கொன்றைநெடும் சடையார்முன்
தாழ்ந்துஎழுந்து செங்கை கூப்பி,
"யான்செய்யும் கைம்மாறுய் எம்பிராற்கு
ஒன்றுண்டோ? யானும் என்னது
ஊன்செய்உட லும்பொருளும் உயிரும்எனின்
அவையாவும் உனவே ஐயா!,
வான்செய்யும் நன்றிக்கு வையகத்தோர்
செய்யும்கைம் மாறுஒன் றுண்டோ?" 86

1281 என்றுமுன் வழுத்தல்உறும் விறல்மாறன்
கோக்கொழுந்தை, இகல்வேல் விந்தை
மன்ஆகும் இவற்கு,மனம் வாக்குஇறந்த
பூரணமா மதுரை நாதன்,
பொன்ஆரும் மணிமகுடம் சூடமணி
நல்குதலால் புவிஅ னேகம்
பன்னுளும் முறைபுரியத் தக்கதென
வாழ்த்தினர் பல்சான் றோரும். 87

1282 ஏத்திவலம் கொண்டுஇரு நான்கு இபம்தழுவப்
பெற்றுஓங்கி இருக்கும் அட்ட
மூர்த்திவிடை அருள்பெற்று, மூவா நல்
மறை,ஆசி முனிவர் கூற,
பார்த்திவன்தன் பொலன்மாட மனைபுகுத்தான்;
நிறைமணிப்பண்பு ஆயும் கேள்விச்
சாத்திரரும் மந்திரரும் மணிநோக்கி
வியப்புஅடைந்தார் சங்கை கூர்ந்தார், 88

1280. (இப்பாடல் குளகம்).

1281. வழுத்தல்: துதித்தல். விறல் மாறன்: வீரபாண்டியன். இறந்த: கடந்த

1282. இபம்: யானை. அட்டமூர்த்தி: சொக்கலிங்கப்பெருமான். மூவா: அழியாத. நிறை: இலக்கணம் நிரம்பிய சங்கை. பெருமை. (இப்பாடல் குளகம்).

1283 "வேள்என வந்த நாயகர்
சுந்தர விடங்கர் ஆனால்
நாள்களும் கோளும் பற்றி
நவமணி ஆக்கி னாரோ?
தாள்களும் தோளும் மார்பும்
தரித்தநீள் நாகம் ஈன்ற
வாள்விடு மணியோ ஈந்தார்
யாதுஎன மதிக்கற் பாலேம்," 89

1284 "இந்திரக் கடவுள் நாட்டும்
இம்மணி அரிய" என்று,
மந்திரக் கிழவர் நல்கி
மயனினும் மாண்ட கேள்வித்
தந்திரக் கனகக் கொல்லர்க்கு
உவப்பன ததும்ப வீசிச்
செந்திரு மார்பி னற்குத்
திருமணி மகுடம் செய்தார். 90

1285 மங்கல மரபால் மாலை
மணிமுடி சூட்டி, நாமம்
செங்கண்ஏறு உயர்த்த நாயகர்
செப்பிய முறைபால் வேத
புங்கவர் இசைப்ப, வீதி
வலம்செய்து, புனிதன் பாத
பங்கயம் இறைஞ்சி வேந்தன்
பல்மணிக் கோயில் எய்தா, 91

1283. வேள்: முருகவேள். (இதுவும் குளகம்)

1284. மந்திரக்கிழவர்: அமைச்சர். மாண்ட: மாட்சிமை உடைய. செந்திரு: திருமகள்

1285 நாமம்: அபிடேக பாண்டியன். எய்தா: எய்தி. (இப்பாடல் குளகம்).

1286 போர்மகட்கு உறையுள் ஆன
புயத்துஅபி டேகத் தென்னன்,
தேர்முதல் கருவித் தானைத்
தெவ்வர்நீள் முடியெ லாம்தன்
வார்கழல் கமலம் சூட,
மனுமுறை பைங்கூழ் காக்கும்
கார்என, கருணை பெய்து
வையகம் காக்கும் நாளில், 92

1287 தந்தைதன் காமக் கிழத்தியர் ஈன்ற
தனயராய், தனக்குமுன் னவராய்,
முந்தைநாள் அரசன் பொன்அறை முரித்து
முடிமுதல் பொருள்கவர்ந்து உட்கும்
சிந்தையர் ஆகி மறுபுலத்து ஒளித்த
தெவ்வரைச் சிலர்கொடு விடுப்ப,
வந்தவர் கவர்ந்த தனமெலாம் மீள
வாங்கினன் ஈர்ங்கதிர் மருமான். 93

---

1286 போர்மகள்: கொற்றவை (இப்பாடலும் குளகம்).

1287. ஈர்ங்கதிர்: குளிர்ந்த மதி.

## 18. வருணன்விட்ட கடலை வற்றச் செய்தது



நிவப்புஉற எழுந்த நான்கு மேகமும் நிமிர்ந்து வாய்விட்டு
உவர்ப்புறு கடலை வாரி உறிஞ்சின; உறிஞ்ச லோடும்
சிவப்பெரும் கடவுள் யார்க்கும் தேவுஎனத் தெளிந்தோர் ஏழு
பவப்பெரும் பௌவம் போலப் பசையற வறந்த தன்றே. 1305

# வருணன் விட்ட கடலை வற்றச் செய்த படலம்

1288 காழ்கெழு கண்டத்து அண்ணல்
கௌரியர் மகுடம் சூட
வீழ்கதிர் மணிகள் ஈந்த
வியப்பு இது; விடையோன் சென்னி
வாழ்கரு முகிலைப் போக்கி
மதுரைமேல் வருணன் விட்ட
ஆழ்கடல் வறப்பக் கண்ட
ஆடலைப் பாடல் செய்வாம். 1

1289 சித்திரை மதியில் சேர்ந்த
சித்திரை நாளில், தென்னன்
மைத்திரள் மிடற்று வெள்ளி
மன்றுஉளாற்கு அளவு மாண்ட
பத்திமை விதியில் பண்டம்
பற்பல சிறப்ப நல்கி,
புத்தியும் வீடும் நல்கும்
பூசனை நடத்தல் உற்றான். 2

1290 நறியநெய் ஆதி ஆர
நறும்குழம்பு ஈறு ஆட்டி,
வெறியகர்ப் புரநீர் ஆட்டி,
அற்புத வெள்ளம் பொங்க
இறைவனை வியந்து நோக்கி
ஏத்துவான், "எறிநீர் வைகைத்
துறைவ! நீ என்கர்ப் பூர
சுந்தரனோயோ?" என்றான். 3

---

1288 காழ்: கருமை. கெழு: பொருந்திய. அண்ணல்: சோமசுந்தரக் கடவுள். கௌரியன்: பாண்டியன்.

1289. தென்னன்: அபிடேக பாண்டியன். மை: கருமை. விதியில். ஆகம முறைப்படி.

1290. ஆதி: முதலாக ஆரம்: சந்தனம். வெறி: மணம். அற்புத வெள்ளம். அன்பின் பெருக்கு.

1291 பூசனை புரியும் எல்லை,
பொன்னகர்க்கு இறைமை பூண்ட
வாசவன் வருடம் தோறும்
பூசித்து வருவான், அன்ன
காசு அறு மனத்தான் பூசை
கழிவுறும் அளவும் தாழ்த்து,
தேசுஅமை சிறப்பால் பூசை
செய்துதன் நாடு புக்கான் 4

1292 அன்று நீர்க் கடவுள் வேள்வி
நாயகன் அவையத்து எய்தி
நின்றுஅவன் தன்நோய் தீரும்
செவ்வியின் நிகழ்ச்சி தோன்ற,
குன்றவன் சிறகுஅ ரிந்த
கொற்றவன் முகத்தை நோக்கி,
"இன்றுநீ சிறிது தேம்பி
இருத்தியால் இதுஎன்கொல்?'' என்றான். 5

1293 சிலைப்படும் முகில்ஊர் அண்ணல்
செப்புவான், "இருள்தீர் அன்பின்
வலைப்படு பெருமான் எம்மான்
மதுரைஎம் பிரானை அன்பு
தலைப்படு பூசை செய்யத்
தாழ்த்தது இன்று; அதனால் இப்போது
அலைப்படச் சிறிதுஎன் உள்ளம்
ஆகுலம் அடைந்தது உண்டால்''; 6

---

1291. பொன்னகர்: வானுலகு வாசவன்: இந்திரன் காசு: குற்றம். தேசு ஒளி.

1292 அன்று அப்பொழுது. நீர்க்கடவுள்: வருணன். வேள்விநாயகன்: இந்திரன். அரிந்த: அறுந்த.

1293. சிலை: வானவில் முகில்ஊர் அண்ணல்: இந்திரன். அலைப்பட: அலைவுற. ஆகுலம்: துன்பம்.

1294 என்ன,“அவ் இலிங்கந் தான்மா
இலிங்கமோ?” என்று முந்நீர்
மன்னவன் வினவ லோடும்,
மகபதி மொழிவான் “முன்புஎன்
தன்அரும் பழியும் வேழச்
சாபமும் தொலைத்தது அன்றோ
அன்னதை அறிந்தி லாய்கொல்?”
என்ன,நீர் அண்ணல் கூறும். 7

1295 “அற்றுஅது ஆகில், தெய்வ
மருத்துவ ராலும் தீரச்
செற்றிட அரிதாய் என்னைத்
தெறும்பெரு வயிற்று நோயை
வற்றிடு மாறு தீர்க்கும்
கொல்?”என வலாரி “ஐயம்
உற்றுநீ வினையது என்என்று”
உள்நகை அரும்பிச் சொல்வான். 8

1296 “அரிஅய ராலும் தீராப்
பிறவிநோய் அறுக்க வல்ல
பெரியவன், இந்த யாக்கைப்
பெரும்பிணி பிறவும் தீர்த்தற்கு
அரியனோ? ஐயன் செய்யும்
திருவிளை யாட்டை இன்னே
தெரியநீ சோதி” என்ன,
தெண்கடல் சேர்ப்பன் சொல்வான். 9

---

1294. மகபதி: இந்திரன். தன் அரும்பழியும் தொலைத்தது: இந்திரன் பழிதீர்த்தது. வேழச்சாபமும் தொலைத்தது: வெள்ளையானைச் சாபம் தீர்த்தது. நீர்அண்ணல்: வருணன்.

1295. தெய்வ மருத்துவர்: அச்சுவினி தேவர். தெறும்: வருத்தம். வற்றிடுமாறு: அழியுமாறு

1296. பெரியவன்: சொக்கலிங்கப்பெருமான். தெரிய: அறியும்பொருட்டு தெண்கடல் சேர்ப்பன்: வருணன்.

1297 "கல்இறகு அரிந்தோய்! இங்கு
நான்வரும் காலை வேட்டார்க்கு
எல்லையில் காமம் நல்கும்
சுரபியும் இன்பால் சோரப்
புல்லிய கன்றும் ஆற்றுப்
பட்ட;அப் போது கண்ட
நல்லசோ பனத்தால் இந்த
நன்மொழி கேட்டேன்" என்னா, 10

1298 வருணனும் ஏகி, வெள்ளி
மன்றுஉடை அடிகள் செய்யும்
திருவிளை யாடல் கண்டு
வயிற்றுநோய் தீர்ப்பான் எண்ணி,
"முரசுஅதிர் மதுரை மூதூர்
முற்றுநீ அழித்தி" என்னா,
குரைகடல் தன்னை வல்லே
கூவினான்; ஏவினானே. 11

1299 கொதித்துஎழுந்து, தருக்கள்இறக்
கொத்திஎடுத்து, எத்திசையும்
அதிர்த்துஎறிந்து, வரைகள்எலாம்
அகழ்ந்து,திசைப் புறம்செல்லப்
பிதிர்த்துஎறிந்து, மாடம்நிரை
பெயர்த்துஎறிந்து, பிரளயத்தில்
உதித்துஎழுந்து வருவதுஎன
ஓங்குதிரைக் கடல்வருமால். 12

---

1297. கல்: மலை. காமம்: விரும்பப்பட்ட பொருள்கள். சுரபி: காமதேனு. ஆற்றுப் பட்ட: வழியில் எதிர்ப்பட்டன. சோபனம்: நிமித்தம். என்னா: என்று கூறி (இப்பாடல் குளகம்).

1298. அடிகள்: சிவபெருமான்.

1299. கொதித்து எழுந்து: பொங்கி மேல் எழுந்து. தரு: மரம். கொத்தி: கல்லி. நிரை: வரிசை. பிரளயத்தில்: ஊழிக் காலத்தில்.

1300 கந்தமலர்த் தனிக்கடவுள் கற்பத்தும் அழியாத
இந்தவளம் பதிக்குஇடையூறு எய்தியது;எம் பதிக்கும்இனி
வந்ததுஎனச் சுந்தரனை வந்துஇறைஞ்சி வானவரும்
சிந்தைகலங் கினர்,வருணன் செய்தசெயல் தெளியாதார். 13

1301 சூலமோடு அழல்ஏந்தும் சொக்கர்திரு விளையாட்டின்
சீலமோ, நாம்இழைத்த தீவினையின் திறம்இதுவோ,
ஆலமோ, உலகம்எலாம் அழியவரும் பேர்ஊழிக்
காலமோ, எனக்கலங்கிக் கடிநகரம் பனிப்புஎய்த, 14

1302 மண்புதைக்க, திசைபுதைக்க, மயங்குஇருள்போல் வருநீத்தம்
விண்புதைக்க, எழுமாட வியன்நகரின் புறத்து,இரவி
கண்புதைக்க, வரும்அளவில் கண்டுஅரசன் நடுநடுங்கிப்
பெண்புதைக்கும் ஒருபாகப் பிரான்அடியே சரண்என்று, 15

1303 ஆலம்எழுந்து இமையவர்மேல் அடரவரும் பொழுதுஅஞ்சும்
மால்எனவும், தன்னுயிர்மேல் மறலிவரும் பொழுதுஅஞ்சும்
பாலன்என வும்கலங்கி, பசுபதிசே வடியில்விழுந்து,
ஓலம்என முறையிட்டான் உலகுபுகழ் உறையிட்டான். 16

1304 முறையிட்ட செழியன்எதிர் முறுவலித்துஅஞ் சலைஎன்று,
கறையிட்ட விண்புரந்த கந்தரசுந் தரக்கடவுள்,
துறையிட்டு வருகடலைச் சுவறப்போய்ப் பருகும்எனப்
பிறையிட்ட திருச்சடையில் பெயல்நான்கும் வரவிடுத்தான். 17

---

1300. கந்தம்: மணம். கடவுள் கற்பம்: பிரம்ம கற்பம்.

1301. சீலமோ: செய்கையோ. ஆலம்: கொடிய நஞ்சு. பனிப்பு. நடுக்கம். எய்த: எய்திநிற்க. (இப்பாடல் குளகம்).

1302. மண்; மண்ணுலகு நீத்தம்: வெள்ளம் (இப்பாடலும் குளகம்).

1303. ஆலம்: நஞ்சு அடர: கொல்ல. மறலி. யமன். பாலன்: மார்க்கண்டன். பசுபதி: சிவபெருமான். உலகுபுகழ் உறையிட்டான்: புகழுடைய அபிடேகப் பாண்டியன்.

1304 கந்தரம்: கழுத்து. சுவற; வற்றுமாறு. பெயல்; மேகம்.

1305 நிவப்புஉற எழுந்த நான்கு
மேகமும் நிமிர்ந்து வாய்விட்டு
உவர்ப்புறு கடலை வாரி
உறிஞ்சின; உறிஞ்ச லோடும்
சிவப்பெரும் கடவுள் யார்க்கும்
தேவுஎனத் தெளிந்துஓர் ஏழு
பவப்பெரும் பௌவம் போலப்
பசையற வறந்த தன்றே. 18

1306 அந்நிலை நகர்உ ளாரும்,
வானவர் ஆதி யோரும்,
தென்னவர் பிரானும் எந்தை
திருவிளை யாடல் நோக்கி,
பன்னரும் மகிழ்ச்சி பொங்கப்
பன்முறை புகழ்ந்து பாடி,
இன்னல்தீர் மனத்தர் ஆகி,
ஈறிலா இன்பத்து ஆழ்ந்தார். 19

---

1305. நிவப்பு: உயரம் தேவு தெய்வம். பௌவம்' கடல்.

1306. ஈறிலா இன்பம்: முடிவில்லாத பேரின்பம்.

மதுரைக்காண்டம் முற்றிற்று.

# பாட்டு முதற்குறிப்பு - அகரவரிசை

### வெ



### வே



### வை





# பிழை திருத்தம்

| செய்யுள் | உரை | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 21 | | பாநாள் | பாளுள் |
| | 21 | பாநாள் | பால்நாள் |
| 31 | | அருகால் | அறுகால் |
| 35 | | முழுங்கி | முழங்கி |
| 37 | | விழும் என | இழும் என |
| | 37 | விழும் | இழும் |
| | 40 | மேகம் | ஆறு |
| 52 | | முகத்து எழு | முகத்து எழ |
| 55 | | கருத்தும் ஆன | கருத்துமான |
| | 57 | பத்தினி | பத்மினி |
| 73 | | இடைக்கு இடை | எடைக்கு எடை |
| | 75 | சீலே | சிலே |
| 81 | | உந்தீச் | உந்திச் |
| 87 | | உரைத்துஆங்கு | உரைத்தாங்கு |
| | 93 | மதுரைமாகர் | மதுரைமாநகர் |
| | 115 | வடிபப்படை | வடிவப்படை |
| | 120 | முரன் | முரண் |
| 156 | | கததம் | கதவம் |
| 158 | | கிளர்ந்த | கிளந்த |
| 170 | | மலர் குடுமி | மலர்க்குடுமி |
| 174 | | பாலாசக்கோல் | பலாசக்கோல் |
| 177 | | அறுவைர் | அறுவையர் |
| 204 | | வேந்த | வெந்த |
| 205 | | உள்ஓளி | உள்ஒளி |
| | 209 | சந்திரக்காந்த | சந்திரகாந்த |
| 242 | | இருது, அன்னன் | இழுது, அன்னம் |
| 252 | | வைத்த தவம் | வைத்த தலம் |
| 262 | | நிருத்து | நிருத்த |
| 302 | | தீ அவாம் | தீயவாம் |
| 310 | | புரம் முறை | புரம் உறை |
| 312 | | ஐஞ்நூறு | ஐந்நூறு |
| 315 | | மெய்வ்வண்ணம் | மெய்வண்ணம் |
| ,, | 315 | மைவ்வண்ணம் | மைவண்ணம் |
| 417 | | கேட்டு ஆங்கு | கேட்டாங்கு |
| 420 | | அயர்ஒழிக்க | அயர்வுஒழிக்க |

| செய்யுள் | உரை | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 420 | | முளைத்திஅருள் | முளைத்தருள் |
| | 437 | முன்னூற்று | முந்நூற்று |
| 443 | | போதுதொன்று | போது ஒன்று |
| | | வீலுழ்ந்திடலும் | வீழ்ந்திடலும் |
| 458 | | அகன்றயின் | அகன்றபின் |
| | 467 | பிரதிட்சை | பிரதிட்டை |
| | 475 | எழுயிறப்பாகிய | எழுபிறப்பாகிய |
| 492 | | நீர்த்து | ஈர்த்து |
| 495 | | நீளல் | நீளன் |
| | 519 | அன்மை | அன்னை |
| 524 | | நிகும்ப | நிம்ப |
| | 524 | நிகும்பம் | நிம்பம் |
| 544 | | அகிலம் | அகலம் |
| ,, | | மனம் என்ற | மனம் ஒன்ற |
| 553 | | தெளிவு | தெளிவும் |
| | 606 | இசை கருவிகளின் | இசைக்கருவிகளின் |
| | 618 | எய்ப்பு | எய்ப்ப |
| 621 | | மான்தோர் | மான்தேர் |
| 626 | | நகையாள் | நகையால் |
| | 634 | கூறப்பட்டது | கூறப்பட்டன |
| | 642 | பிடரியிற் | பிடரியில் |
| | ,, | உன்கண் | உண்கண் |
| | 645 | ஆர்ப்பு | ஆர்ப்ப |
| 653 | | கலனைத் | கலனை |
| | 653 | கலன் | கலனை |
| 656 | | பாணேடு | பாணொடு |
| 657 | | மன்னர் | மன்னவர் |
| 658 | | செய்ய | செய் |
| | 659 | சபரி | சபரியை |
| 667 | | காட்டினார்கள் | கட்டினார்கள் |
| 669 | | பனிக்கு | பளிக்கு |
| 677 | | கடைகடந்தவன் | கரைகடந்தவன் |
| 679 | | ஆதியா | ஆதியாக் |
| 681 | 681 | பார் இடப்படை | பாரிடப்படை |
| | 682 | மட்டுஅரு | மட்டுஅரு |
| | 683 | பாலியர் | கபாலியர் |

| செய்யுள் | உரை | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 684 | | எழேமு | ஏழெழு |
| 685 | | வான்சுகன் | வன்சுகன் |
| 686 | | பாலநாகர் | பலநாகர் |
| 688 | | புவனம்,கள் | புவனங்கள் |
| 690 | | மணிகொங்கை | மணிக்கொங்கை |
| 690 | | அத்தம்தேர்இடை | அத்தந்து ஏர் இடை |
| 694 | | பார்த்து | பார்த்தும் |
| 700 | | புயல் | புயம் |
| | 700 | ஒருவகைதலைஅணி | ஆடையின் நுனி |
| 704 | 704 | மாயவன் | மாயையவன் |
| ,, | ,, | இருள் மலர்ப் | இருமலப் |
| 706 | 706 | அடப்பை | அடைப்பை |
| | 708 | மதிக்குறை | மதிக்குடை |
| | 714 | பெண்ணினிக்கு | பெண்ணினுக்கு |
| | 731 | உண்டதினல் | உண்டதனுல் |
| 732 | | நெஞ்சம் | நெஞ்சும் |
| 733 | | அளித்தாற் | அளித்தால் |
| 744 | | மலர்கரம் | மலர்க்கரம் |
| | 746 | கோயினுள்ளே | கோயிலினுள்ளே |
| 771 | | ஒல்கினன் | ஒல்கினள் |
| 776 | | புரந்தர்ஆதி | புரந்தராதி |
| 790 | | மானுடர் | மானிடர் |
| 805 | | பிரமமாந்திரம் | பிரமாந்திரம் |
| | 825 | நிலைபெற்ற | நிலையில்லாத |
| | 840 | பால | பால் |
| 841 | 841 | அல்சி | வல்சி |
| | 854 | தீரை | நீரை |
| | 859 | விசித்து | விரிந்தசித்து |
| 863 | | துணையொரு | துணையொடு |
| 869 | | பலி | மலி |
| 883 | | பொறுத்தம் | பொருத்தம் |
| | 891 | வானுலகு | வானுலகு |
| 902 | | தழீஇ இனனுல் | தழீஇயினனுல் |
| 903 | | ஆத்தள் | ஆத்தன் |
| 923 | | உள்நிலா | உள்நிலாவு |

| செய்யுள் | உரை | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 948 | | மிதப்பது | மிதிப்பது |
| 961 | | இரண்டு | இரண்டும் |
| 964 | | தெய்வ | தெய்வப் |
| | 1005 | மத்தகம் | மத்தகம்: |
| | | யானையின்மத்தகம் | மேற்பகுதி |
| 1008 | | நண் | தண் |
| | 1008 | தண்அளு | தண்அரு |
| 1046 | | கணைய்க்காலின் | கணைக்காலின் |
| 1056 | | பெய்விப்போன் | பெய்விப்போற் |
| 1066 | | பணிநீர் | பனிநீர் |
| 1073 | | அருக்கர் | அருகர் |
| | 1090 | மகிழ்ச்சி | வியப்பு |
| 1095 | | எள்ளு | என்னு |
| | 1128 | குறிஞ்சிப்பாறை | குறிஞ்சிப்பறை |
| | 1141 | நிமித்தம் | நிமித்து |
| 1158 | | கழிந்து அவன் | கழிந்தவன் |
| " | | சூழ்இதற்கு | சூழ்வு இதற்கு |
| | 1176 | வற்றுதல் அற்ற | சேர்தல் அருத |
| 1183 | | தலைவனுய் | தலைவனுய்ப் |
| | 1188 | வனப்பிரத்தம் | வானப்பிரத்தம் |
| | 1236 | திருமகள் | திருமகளும் சயமகளும் |
| 1249 | | போழ்வாய் | பேழ்வாய் |
| 1305 | | தெளிந்து ஓர் | தெளிந்தோர் |

# திருவிளையாடற் புராணம்

(மதுரைக் காண்டம்)



அருள்மிகு மீனாட்சி சுந்தரர் திருக்கோயில் வெளியீடு, மதுரை